E-ISSN: 2581-7140





# தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

# INTERNATIONAL JOURNAL OF TAMIL LANGUAGE AND LITERARY STUDIES (Ijtlls)

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

மற்றும்

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

## INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

இணைந்து நடத்தும்

ஒரு நாள் பன்னாட்டுக் கருத்தரங்கம்

# தொல்லியல் சான்றும் தமிழர் பண்பாடும்

# Archaeological Evidence and Tamil Culture

சிறப்பிதழ் : தொகுதி - 1 27, ஏப்ரல் 2019

SPECIAL ISSUE : VOL – 1, 27, APRIL 2019

முனைவர் கோ. விசயராகவன்/
முனைவர் நா. சுலோசனா/ திருமதி. த.மகேஸ்வரி

# கருத்தரங்க ஒருங்கிணைப்புக்குழு

## CONFERENCE ORGANIZING COMMITTEE

### கருத்தரங்கத் தலைவர்


**முனைவர் கோ. விசயராகவன்,**
இயக்குநர் (மு.கூ.பொ),
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி,
சென்னை - 600113. தமிழ்நாடு, இந்தியா.

**Dr. G. Vijayaragavan,**
The Director,
International Institute of Tamil Studies,
Chennai- 6000113, Tamil Nadu, India.


### கருத்தரங்க ஒருங்கிணைப்பாளர்கள்


**முனைவர் நா. சுலோசனா**
உதவிப்பேராசிரியர்,
தமிழ்மொழி (ம) மொழியியல் புலம்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி,
சென்னை – 600113,
தமிழ்நாடு, இந்தியா.

**த.மகேஸ்வரி**
இயக்குநர் IJTLLS,
தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு
ஆய்விதழ்,
விருதுநகர் - 626001,
தமிழ்நாடு, இந்தியா.

**Dr. N. Sulochana,**
Assistant Professor,
Department of Tamil Language and Linguistics,
International Institute of Tamil Studies,
Taramani, Chennai-600113,
Tamil Nadu, India.

**Ms. D. Maheswari,**
Director cum Editor-in Chief
International journal of Tamil Language and literary Studies,
IJTLLS, Online Journal
Virudhunagar- 626001,
Tamil Nadu, India.


### கருத்தரங்கக்குழு உறுப்பினர்கள்


**ஞா. அந்தோணி சுரேஷ்**
உதவிப்பேராசிரியர்,
சதக்கத்துல்லாஹ் அப்பா கல்லூரி,
ரஹ்மத் நகர்,
திருநெல்வேலி-11, தமிழ்நாடு, இந்தியா.

**Mr. G. Antony Suresh,**
Assistant Professor, Department of Tamil,
Sadakathullah Appa College,
Palayamkottai, Tirunelveli.
Tamil Nadu,
India

**வி.விமல்,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
மதுரைக் கல்லூரி,
மதுரை- 11, தமிழ்நாடு, இந்தியா.

**Ms. V.Vimal,**
Assistant Professor, Department of Tamil,
The Madura College, Madurai- 625011,
Tamil Nadu, India.

**சு. அய்யனார்,**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
பிஷப் ஹீபர் கல்லூரி,
திருச்சி – 17, தமிழ்நாடு, இந்தியா.

**Mr. S. Ayyanar,**
Assistant Professor of Tamil,
Bishop Huber College, Trichy-17.
Tamil Nadu, India.

**முனைவர் தி.பரிமளா,**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
மன்னர் திருமலை நாயக்கர் கல்லூரி,
மதுரை- 18, தமிழ்நாடு, இந்தியா.

**Dr. T. Parimala,**
Assistant Professor of Tamil,
Mannar Thirumalai Nayakkar College,
Madurai-18,
Tamil Nadu, India.

# EDITORIAL BOARD

## Special Issue Editors’



## Associate Editors

## Advisory Editorial Board



PUBLISHER: D. Maheswari,
3/350, Veterinary Hospital Back side,
Virudhunagar – 626001.
Mobile: 8526769556
Mail: maheswari@ijtlls.com
dmakesh88@gmail.com, ijtllsetamiljournal@gmail.com

# PUBLISHER'S MESSAGE

## Aim & Objectives

**International Journal for Tamil Language and Tamil Studies** is an online Peer-Reviewed International Journal published twice in a year on July and January, which is published by **Maheswari Publishers,** patronized by **Pandian Educational Trust, Virudhunagar, Tamil Nadu, India**. It also publishes **Literary Druid, for English Language and Literature (Online)** to foster research in the domain areas**.**

**International Journal for Tamil Language and Tamil Studies** aims to bring down Academic Research to promote research support for the academicians and scholars in the field of Tamil Language and Literature. Research through this medium is motivating in all aspects of main and inter-disciplines by consequent projects and e-publication. Making Internationalization of the research works in the globalized world aid the scholarly community to develop scholarly profile in research through the quality of publications. The audacity and vision of academic research on internet could foster green printing and open access nature in research. All of these motivate best distribution of research that produces positive outcomes for the betterment of the world.

## Disclaimer

**International Journal for Tamil Language and Tamil Studies** is committed to research Ethics and consider plagiarism as a crime. The authors are advised to adhere academic ethics with respect to acknowledgment of quotations from other works. The Publisher & Editors will not be held responsible for any lapse of the provider regarding plagiarism in their manuscripts. The submissions ought to be original, must accompany the declaration form stating your research paper as an original work, and has not been published elsewhere for any research purpose. The contributor will be the sole responsibility for such lapses on any legal issues and publication ethics.

**Contact** ijtllsetamiljournal@gmail.com for submission and other information. See www.ijtlls.com for guidelines.

**D. Maheswari**
**Publisher and Director**

## Message from the Editor-in-Chief

**International Journal for Tamil Language and Tamil Studies** is an online Peer-reviewed International Journal of Tamil Language and Literature which is committed to academic research, welcomes scholars and students all over the world who to advance their status of academic career and society by their scholarly ideas. The journal welcomes publications of quality papers on the domain area.

Research ought to be active to create a major frontier in the academic world. It must augment the neo-theoretical frame that facilitates re-evaluation and augmentation of existing practices and thoughts. In due course, this will effect in a prime discovery and lean to the knowledge acquired. Research is to establish, substantiate facts, restate previous works ant to resolve issues. An active venture to endow cogent approach to these types for educational reformations through academic research has become the central intent of the journal.

**D. Maheswari**

# அணிந்துரை

முனைவர் கோ.விசயராகவன், எம்.ஏ., எம்ஃபில்., பி.எட்., பிஎச்.டி.,
இயக்குநர் (மு.கூ.பொ.)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை – 113.



தமிழர்களின் தொன்மையான வரலாற்றையும் பண்பாட்டையும் அறிந்துகொள்ள பெரிதும் துணைநிற்பது தொல்லியல் சான்றுகளேயாகும். சங்கப் பாடல்களின் உறுதிப்பாட்டை வரலாற்று அடிப்படையில் அகழாய்வுகளின் மூலம் வெளிக்கொணர்வதே தொல்லியல் ஆய்வின் நோக்கமாகும். இந்த அடிப்படையில் வரலாற்று அறிஞர், தொல்லியல் அறிஞர், மானுடவியலாளர், மொழியியலாளர், பண்பாட்டு ஆய்வாளர், இலக்கிய ஆய்வறிஞர், கல்வெட்டியல் அறிஞர் எனப் பல்வேறு புலமை பெற்றோர்களின் ஒத்துழைப்பினாலும் துணையினாலும் தொல்லியல் ஆய்வுகள் தமிழகத்தில் நடைபெற்று வருகின்றன.

தொல்லியல் ஆய்வுகளில் கிடைத்த பொருள்களைக் கொண்டு தமிழர்களின் தொன்மை உறுதி செய்யப்படுகிறது. தொல்லியல் ஆய்வாளர்களின் ஈடுபாட்டின் காரணமாக வெளிவரும் பல்வேறு தனிக்கட்டுரைகளும், கட்டுரைத் தொகுப்புகளும், கள ஆய்வுகள் பற்றிய சிறப்பு நூல்களும், இதழ்களும் தொல்லியல் சார்ந்து புதிய கண்டுபிடிப்புகளை உடனுக்குடன் வெளியிட்டு பண்டைய மக்களின் பண்பாடுகளையும் வாழ்க்கை முறைகளையும், வாணிக முறைகளையும் நமக்குத் தெரிவிக்கும் தடயங்களாகத் திகழ்கின்றன. முப்பதுக்கும் மேற்பட்ட தொல்லியல் களங்கள் உள்ள தமிழகத்தில் ஒரு சில இடங்களில் மிகக்குறைந்த அளவே அகழாய்வுகள் நடந்தேறியுள்ளன. களங்கள் முழுவதும் அகழாய்வுகளுக்கு உட்படுத்தி அங்கு கிடைக்கும் பொருள்களைக் கால முறைப்படுத்தினால் தமிழரின் தொன்மை இன்னும் பழமையானது என்பது புலப்படும். தமிழ் மொழி (ம) மொழியியல் புலத்தின் இன்றைய காலகட்டத்திற்கு தேவைப்படும் வகையிலும் தமிழர்களின் தொன்மையையும் பண்பாட்டையும் உலகறியச் செய்யும் வகையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புலத்துடன் தமிழ் மொழி (ம) இலக்கிய பன்னாட்டு ஆய்வு இதழ் (IJTLLS) இணைந்து **‘தொல்லியல் சான்றும் தமிழர்**

**பண்பாடும்'** எனும் பொருண்மையில் பன்னாட்டுக் கருத்தரங்கம் நடத்துவது காலத்தின் தேவையாகும்.

தொல்லியல் அறிஞர்கள், தொல்லியல் கலைகள், கல்வெட்டியல், கடல் சார் ஆய்வுகள், ஓலைச்சுவடிகள், செப்பேடுகள், நாணயங்கள், அகழாய்வுகளில் கிடைத்த பொருள்கள் எனத் தமிழரின் தொன்மைக்குச் சான்றாகும் வகையில் பல்வேறு தலைப்புகளில் தொல்லியல் சார்ந்து ஆராய்ந்து கட்டுரைகள் வழங்கிய தமிழ்நாடு மற்றும் இலங்கையிலுள்ள பல்கலைக்கழகப் பேராசிரியர்கள், கல்லூரிப் பேராசிரியர்கள், தமிழாசிரியர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள் எனக் கட்டுரைகள் வழங்கிய அனைவரையும் பாராட்டுகிறேன்.

கட்டுரைகளையெல்லாம் செப்பம் செய்து ஆய்வுக்கோவை பன்னாட்டுத் தரக்குறியீட்டு எண்ணுடன் (ISSN) கருத்தரங்க நாளன்றே வெளியிடுவது உள்ளபடியே சிறப்பு. இவ் அத்தனை முயற்சிகளையும் மேற்கொண்டு பன்னாட்டுக் கருத்தரங்கம் செவ்வனே நடைபெறவும் பல்லாற்றானும் உழைத்த கருத்தரங்க ஒருங்கிணைப்பாளர்கள் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா.சுலோசனா அவர்களுக்கும் பன்னாட்டு ஆய்விதழின் ஆசிரியர் முனைவர் திருமதி மகேசுவரி அவர்களுக்கும் தமிழ்ப்பணியைச் சிறப்பாகச் செய்திட வாழ்த்துகளும் பாராட்டுகளும் காலத்திற்கேற்றார்போன்ற பொருண்மைகளில் பல்வேறு நூல்கள் வெளிவரவேண்டும் என்றும் இவர்களின் பணி மேன்மேலும் தொடரவேண்டும் எனவும் வாழ்த்துகிறேன்.

இடம்: சென்னை

இயக்குநர்

நாள்: 27.04.2019

(முனைவர் கோ. விசயராகவன்)

# வாழ்த்துரை

**முனைவர் நா. சுலோசனா**
உதவிப் பேராசிரியர்
தமிழ்மொழி (ம) மொழியியல் புலம்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை – 113.



தமிழர்களின் தொன்மைக்குச் சான்றாகச் சங்கப் பாடல்களையேக் குறிப்பிட்டு வருகிறோம். அதற்கெல்லாம் வரலாற்றுத் தரவுகளின் அடிப்படையில் தொல்லியல் அகழாய்வுகளில் கிடைத்த பொருள்கள் சங்க காலத்தையும் முந்தைய தொன்மையையும் பண்பாட்டையும் உடையது என்பதை நிரூபித்து வருகின்றன. தமிழகத்திலுள்ள தொல்லியல் களங்களில் அகழாய்வுகள் மிகக் குறைந்த அளவே நடந்திருக்கின்றன. முழுவதுமான ஆய்வுகள் நடத்தப்பெற்றால் தமிழரின் தொன்மை இன்னும் பல நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட பழமையான நாகரிகம் தமிழர்களுடையது என்பது உறுதியாகும்.

கல்வெட்டியல், செப்பேடுகள், ஓலைச்சுவடிகள், நாணயங்கள், தொல்லியல் சார்ந்த ஆய்வு நூல்கள் என இதுபோன்ற களங்களில் ஆய்வுக்கட்டுரை வரப்பெற்று **‘தொல்லியல் சான்றும் தமிழர் பண்பாடும்’** எனும் பொருண்மையில் பன்னாட்டுத்தரக் குறியீட்டு எண்ணுடன் (ISSN) ஆய்வுக்கோவை வெளிவருவது காலத்தின் தேவையாகும்.

தொடர்ந்து நாங்கள் நடத்தும் கருத்தரங்குகளுக்கு ஆய்வுக் கட்டுரை வழங்கி வரும் பல்கலைக்கழகப் பேராசிரியர்கள், கல்லூரிப் பேராசிரியர்கள், தமிழாசிரியர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள் மற்றும் ஆய்வு மாணவர்கள் என அனைவரின் ஒத்துழைப்பாலும் ஒவ்வொரு கருத்தரங்கமும் சிறப்பாக நடைபெற்றது, நடைபெற்று வருகிறது என்பதை மகிழ்வோடும் நன்றியுணர்வோடும் நினைத்துப் பார்க்கிறேன். அந்த வகையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன தமிழ்மொழி (ம) மொழியியல் புலத்துடன் இணைந்து தமிழ்மொழி (ம) இலக்கிய பன்னாட்டு ஆய்வு இதழ் (IJTLLS) இக்கருத்தரங்கை நடத்துவது உள்ளபடியே மகிழ்ச்சி.

தமிழர்களின் பண்பாட்டை உலகிற்கு எடுத்துரைக்கும் உன்னத பணியைச் செய்துவரும் தொல்லியல் அறிஞர்களின் பணியையும் தமிழரின் தொன்மைக்கு

ஆவணமாகத் திகழும் தொல்லியல் ஆய்வுகளையும் எல்லோருக்கும் கொண்டுபோய்ச் சேர்க்கும் வகையிலும் அனைவரும் தொல்லியல் களங்களையும், ஆய்வுகளையும் அறிய வேண்டும் எனும் நோக்கத்தில் இத்தகைய கருத்தரங்கம் நடத்தப்பெற்று அதற்கு ஆவணமாக ஆய்வுக்கோவையும் வெளியிட்டு உன்னதமானத் தமிழ்ப்பணியைச் செய்துவரும் ஆய்வு இதழுக்கு வாழ்த்துகள். இன்னும் இது போன்ற நல்ல தமிழ்ப்பணிகளைச் செவ்வனே செய்ய பாராட்டுகளும் வாழ்த்துகளும்.

இடம்: சென்னை

நாள்: 27.04.2019

இப்படிக்கு

(முனைவர் நா. சுலோசனா)

# பதிப்புரை மற்றும் நன்றியுரை



**திருமதி. த.மகேஸ்வரி,**
இயக்குநர் மற்றும் பதிப்பாசிரியர் - IJTLLS,
தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,
விருதுநகர் - 626 001.

தமிழ்மொழி மற்றும் இலக்கியத்திற்காக எமது **தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ் (Ijtlls)** தம் இலக்கிய மற்றும் ஆராய்ச்சி அரும்பணியை செய்து வருகின்றது.

**தொல்லியல் சான்றும் தமிழர் பண்பாடும்** என்ற பொருண்மையில் கருத்தரங்கம் நடத்த அனுமதி தந்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குனர் **முனைவர். கோ. விசயராகவன்** மற்றும் **முனைவர் நா. சுலோசனா** ஆகியோர்க்கு எனது நன்றியை உரித்தாக்குகிறேன்.

இவ்வொரு நாள் பன்னாட்டு கருத்தரங்கத்தின் ஓர் அங்கமாக **தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்** செம்மையாய் செயல்பட்டு ஆய்வுக் கட்டுரைகளை இணையத்தில் பதிப்பு செய்து உள்ளது. எதிர்காலத்தில் தமிழ் ஆராய்ச்சிகளை உலக அரங்கத்திற்கு எடுத்துச் செல்ல ஓர் ஆய்வுக்களமாக எமது இதழ் செயல்பட்டு வருகிறது. அதற்கு தமது உறுதுணை அளித்த அனைவருக்கும் நன்றி.

பன்னாட்டு கருத்தரங்கில் தமது ஆய்வை செம்மை நிறுத்தி தமிழ்மொழி, தமிழர் நாகரிகம், தமிழர் பண்பாடு மற்றும் கலாச்சாரம் போன்ற பொருண்மையில் நடந்த அகழ்வாராய்ச்சிகள் மூலமாக கிடைத்த தரவுகள் கட்டுரைகளை வழங்கி சிறப்பித்த தமிழ் பேராசிரியர்கள், ஏனைய அனைத்து துறைப் பேராசிரியர்கள், எழுத்தாளர்கள், தமிழ் ஆர்வலர்கள் மற்றும் ஆராய்ச்சி மாணவர்களை மனதார பாராட்டுகிறோம்.

நன்றி

**திருமதி. த.மகேஸ்வரி**
இயக்குநர் மற்றும் பதிப்பாசிரியர் - IJTLLS

# பொருளடக்கம்

| வ.எண் S.No | தலைப்பு / பெயர் Title / Author Name | பக்க எண் Page No |
|---|---|---|

| வ.எண் S.No | தலைப்பு / பெயர் Title / Author Name | பக்க எண் Page No |
|---|---|---|

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்


International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# நாணயங்களும் பாதுகாக்கும் வழிமுறைகளும்
# Measurements to Preserve Coins

**முனைவர்.ஞா.அந்தோணி சுரேஷ்,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, சதக்கத்துல்லாஹ் அப்பா கல்லூரி, திருநெல்வேலி.

## Abstract

*The study of the paper deals with the coins and its preservation methods. In Tamil Monarchal rule, the kings issued various types of coins. The triumvirate, Chere, Chola and The Pandian kings coined coins made up of gold, copper and other metals. They are sparsely found out by the archaeologists and preserved in many methods. Therefore, the study traces the art of numismatics and the preserving measures.*

**Keywords:** Measurements, Preserve Coins, Tamil Society, Coins, Numismatics

**முன்னுரை**

பண்டை காலத்தில் நம் இந்திய மக்கள் பண்டமாற்று முறையிலேயே பொருட்களைப் பரிமாறிக் கொண்டனர். ஏறத்தாழ கி.மு.ஆறாம் நூற்றாண்டில்தான் நம் இந்திய நாட்டில் நாணயங்கள் தோன்றியதாக அறிஞர்கள் கருதுகின்றனர். சங்ககால சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் காலத்தில் நாணயங்களின் பயன்பாடுப் பற்றி இக்கட்டுரை எடுத்துரைக்கிது.

**ஹரப்பா நாகரிகம்**

நாணயங்கள் தோன்றுவதற்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே ஹரப்பா நாகரிகம் நம் நாட்டில் வேரூன்றிவிட்டது. சிந்து நதிப்பள்ளத்தாக்கை மையமாகக் கொண்ட இந்த நாகரிகம் நாட்டின் பெரும் நிலப்பரப்பில் பரவி, இந்திய வரலாற்றில் மிகச் சிறந்த இடத்தைப் பெற்றுவிட்டது. நகரங்களில் மக்கள் மிகுதியாகக் குடியேறினர். அந்தக் கால கட்டத்தில் ஹரப்பா மக்களுக்கும், எகிப்து உட்பட்ட மேற்காசிய மக்களுக்கும் வணிகத் தொடர்பு இருந்து வந்தது. நாகரிக முதிர்ச்சி அடைந்த அவர்கள் தங்கள் பொருட்களின் உரிமையைக் குறிக்க முத்திரைகளைப் பொறித்தனர். நிறுத்தல், முகத்தல் உள்ளிட்ட அளவைகளைப் பயன்படுத்தினர். இந்த அளவை முறைகள் உள்நாட்டு வணிகத்திலும் வெளிநாட்டு வணிகத்திலும், பெரிதும் மேற்கொள்ளப்பட்டன. மிகச் சிறந்த வணிக வளர்ச்சி பெற்றிருந்தாலும் பண்டைய இந்தியர்கள் நாணயத்தைப் பயன்படுத்தியதாகத் தெரியவில்லை. அவர்கள் வணிகம் பெரும்பாலும் பண்டமாற்று முறையிலேதான் நடந்ததாகக் கருதப்படுகின்றது. உலோகத்தையும் ஒரு பண்டமாகவே இவர்கள் கருதினர். குறிப்பிட்ட எடையுள்ள ஓர் உலோகத்திற்கு நாணயத்தின் மதிப்பு வழங்கப்பட்டதாகத் தெரியவில்லை. ‘ஹரப்பா மக்கள் தானியங்களையே தங்களின் சிறந்த செல்வமாகக் கருதினர்’ என்று மார்டிமர் வீலர் கருத்துத் தெரிவித்துள்ளார். ஹரப்பா மக்களை அடுத்து நாகரிகம் அடைந்த ஆரியர் தொடக்க காலத்தில் கால்நடை மேய்ப்பவர்களாகவும் பின்னர் உழவர்களாகவும் மாறினர். அவர்கள் தொடக்கத்தில் கால்நடைச் செல்வங்களையும் தானியங்களையும் பண்டமாற்றுப் பொருட்களாகப் பயன்படுத்தினர் என்று அறிய இடமுண்டு. பண்டைக் காலத்தில் அரிசி சிறந்த பண்டமாற்றுப் பொருளாகத் திகழ்ந்தது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**சங்க இலக்கியத்தில் காசுகள்**

காசு என்பது பல்பொருள் குறித்த ஒரு சொல். சங்க நூல்களில் காசு என்பது 1.பொற்காசு 2.கலன் 3.மணி என்ற பொருட்களில் கையாளப்படுகின்றது. பண்டைத் தமிழ் மகளிர் காசுகளை மேகலையோடு சேர்த்து அணிந்திருக்கின்றனர். பண்டைத் தமிழ் மகளிர் காசுகளை மேகலையோடு சேர்த்து அணிந்திருக்கின்றனர். ஐங்குறுநூற்று உரையாசிரியர் 'பாண்டில் பொன்னால் வட்டமாகச் செய்யப்படுவதோர் அணிவகை இதைச் சுற்றி மணிகள் கோர்த்து மேகலையோடணிதல்' என்றனர் என்று கூறிப் பின்னும் 'பொன்செய் பாண்டிற் பொலங்கலம் தந்த' என்ற வரிக்குப் பொன்னாற் செய்யப்பட்ட பாண்டிலாகிய பொன்னணி நெகிழ்ந்தொழிய என்றும் உரைகூறி விட்டுப் பொலங்கலத்தை விளக்கும்போது பாண்டிலைச் சுற்றிக் கோர்க்கப்படும் பொற்காசுகள் ஈண்டுப் பொலங்கலம் எனப்பட்ட படி, பொற்கலம், பொலங்கலம் என வந்தது என்று குறிக்கின்றனர். இவற்றால், பண்டைத் தமிழ் மகளிர் காசுகளை ஒரு வகை அணிகலனாகக் கையாண்டிருக்கின்றனர் என்பது தெளிவாகிறது.

அத்தகைய காசுகள் பொன்னால் செய்யப்பட்டிருந்தன என்பதை அறியலாம். 'பொன்செய் காசு' என்று நற்றிணையம்' 'பொலங்குல ஒரு காசு, 'பொலஞ்செய் கிண்கணிக் காசு' என்று குறுந்தொகையும் 'பொலங்காசு', பொலஞ்செய் காசு' என்று அகநானூறும், காசானது பொன்னால் செய்யப்பட்டதற்கு நேரடிச் சான்று தருகின்றன.

பண்டமாற்றத்தில் தோன்றிய சிக்கல்களே நாணயக் கண்டுபிடிப்பிற்கு காரணமாயிற்று என்பது பொதுவான கருத்து. சங்க காலத்தில் நடந்த உள்நாட்டு வணிகம் பெரும்பாலும் பண்டமாற்றிலேயே நடந்திருக்கிறது. வெளிநாட்டு வணிகம் தோன்றிய போது, உள்நாட்டில் செய்தது போல் எளிதாகப் பண்டமாற்று முறைகளை மேற்கொள்ள இயலவில்லை. எனவே, முத்து மற்றும் நெல்லிக்காய் அளவிலான தங்கக் கட்டிகளைப் பரிமாறிக் கொண்டனர். பொன்னாலாகிய காசுகள் சங்க காலத்தில் வழக்கில் இருந்தன என்பதும் அவை வேப்பம் பழ வடிவிலும் நெல்லிக் காய் போன்ற உருண்டையான வடிவிலும் அமைந்திருந்தன என்பதும் இவை காசுகளாக வணிகத் தொழிலில் பயன்படுத்தப்பட்டன என்பதும் செய்திகளாக அமைகின்றன.

**சேரர் காசுகள் (முதல் வகை)**

இக் காசுகள் செம்பிலும் நீண்ட சதுர வடிவத்திலும் காணப்படுகின்றன. முன் பக்கத்தில், வலது பக்கம் நோக்கி நிற்கும் யானையும், அதற்கு மேல் பண்டைத் தமிழ் எழுத்துக்களும் பின் பக்கத்தில், சேரர்களின் இலச்சினையான வில்லும் அம்பும் கீழே அங்குசமும் காணப்படுகின்றன. கருவூரில் கிடைத்த சங்க கால சேரர் காசுகளில் எல்லாம் யானைக்கு மேலே மங்கலச் சின்னங்கள்தாம் உள்ளன. ஆனால், இந்த காசில் சில எழுத்துக்கள் தெளிவற்ற நிலையில் இருப்பதால் எந்த சேர மன்னனால் இது வெளியிடப்பட்டது என்று உறுதியாகக் கூற இயலவில்லை. இரும்பொறை மன்னர்கள் வெளியிட்ட கொல்லிப்புறைக் காசுகள் கருவூரில் கிடைத்துள்ளன. இரும்பொறை மன்னன் ஒருவரால் இந்தக் காசு வெளியிடப்பட்டிருக்கலாம்.

**மாக்கோதைக் காசு (இரண்டாம் வகை)**

அமராவதி ஆற்றுப் படுகையிலிருந்து கிடைத்தவற்றுள் ஒன்று 'சேரமான் மாக்கோதையின்' பெயருடனும் உருவத்துடனும் காணப்படுகிறது. இது, தமிழக நாணய வரலாற்றிலேயே மிகச் சிறப்பான கண்டுபிடிப்பாகும். இக்காசு கிடைக்கும் வரை, சங்க கால மன்னர்களின் பெயர்களோ, உருவங்களோ பொறித்த வெள்ளிக் காசுகள் கண்டெடுக்கப்படவில்லை. காசின் முன்புறத்தில், பண்டைத் தமிழ் எழுத்துக்களும் அதன் கீழ்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

நடுவே வலப்புறம் நோக்கிய அரசனின் மார்பளவு உருவமும் காணப்படுகின்றன. இக் காசின் பின்புறம், எவ்வித சின்னமும் இல்லாமல் உள்ளது. அரசனின் தலைக்கு மேல் 'மாக்கோதை' என்று எழுதப்பட்டுள்ளது.

'ம' என்ற எழுத்தில் குறுக்குக் கோடு சற்று வலப்புறம் நீட்டப்பட்டு இருப்பதாலும் 'த' என்ற எழுத்து வளைந்து காணப்படுவதாலும் இந்த எழுத்தின் காலம் கி.பி.முதல் நூற்றாண்டின் பிற்பகுதி என்று கொள்ளலாம். சங்க இலக்கியத்தில் சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை(புறம்-52) சேரமான் கோக்கோதை மார்பன்(அகம்-63), சேரமான் குட்டுவன் கோதை (புறம்-54) போன்ற பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இந்த வெள்ளிக் காசு மேற்கூறிய மன்னர்களுள் ஒருவரால் வெளியிடப்பட்டது எனலாம்.

**சேரர் காசுகள் (மூன்றாம வகை)**

சங்க காலச் சேர மன்னர்களின் வரலாற்றை அறிய இலக்கியச் சான்றுகள் மிகுதியாகக் கிடைக்கப் பெற்ற நூல்களுள் 'பதிற்றுப்பத்து' ஒரு கருவி நூலாக உள்ளது. அதில் முதற் பத்தும் கடைசிப் பத்தும் இப்போது கிடைக்காத காரணத்தால், முதலில் ஆட்சி செய்த சங்க காலச் சேர மன்னர் யார்? என்று வரையறுத்துக் கூற இயலவில்லை. ஆயினும், இரு வழிச் சேர மன்னர்கள் ஒரே காலத்தில் பூசல்கள் ஏதுமில்லாத நிலையில் ஆண்டு வந்தமை இந்நூலின் மூலம் அறியக் கிடைக்கின்றது. அந்துவன் சேரன் இரும்பொறை என்பவர் பொறையர் குல முதல்வன் என ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். இவரது காலம் யாது என்பது தெரியவில்லை. இரும்பொறைப் பிரிவு மன்னர்கள் பதிற்றுப் பத்தின் 7ஆம் பத்து முதல் 9ஆம் பத்து வரையில் உள்ள பாக்களின் பாட்டுடைத் தலைவர்கள். சங்க காலத்தில் இவர்களது ஆதிக்கம் கணைக்கால் இரும்பொறையின் ஆட்சியோடு முடிவடைகிறது.

இரும்பொறை மன்னர்கள் வெளியிட்டுள்ள இரு வகை நாணயங்கள் இதுவரை கிடைத்துள்ளன. அவையாவன,

கொல்லிப்பொறைக் காசு – முன்புறத்தில் தோரண வாயிலின் உள்ளே ஓர் அரசனின் நிற்கின்ற உருவம் உள்ளது. விளிம்பில், பண்டைத் தமிழ் எழுத்துக்களில் 'கொல்லிப்புறை' என்று எழுதப்பட்டுள்ளது. இதன் பின்புறம், வில்லும் அம்பும் உள்ளன. மலையின் உருவம் வளைவுகளாகக் காட்டப்பட்டுள்ளது. ஒரு சதுரத்தின் உள்ளே உள்ள உருவம் தேய்ந்து, தெளிவற்ற நிலையில் காணப்படுகிறது.

இக்காசு 'கொல்லிப் பொறையன்' என்பவரால் வெளியிடப்பட்டது என்று கருதப்படுகிறது. இக்காசின் பின்புறம் 'வில்' சிறப்பாக உள்ளது.

(ஆ) கொல்லிரும்பொறைக் காசு - இது 'கொல்லிப்புறை' என்று பெயர் பொறிக்கப்பட்ட காசினை ஒத்தது. ஆனால், இறுதியில் 'அன்' விகுதி பெற்று கொல்லிப்புறையன் என்ற பெயருடன் மற்றொரு காசு கிடைத்துள்ளது. இக்காசு வடிவமைப்பில் வட்டமாகவும் தடித்தும் சில சின்னங்களையும் தன்னகத்தே தாங்கியுள்ளது. இந்தக் காசின் முன்புறத்தில் தோரணவாயிலின் நடுவே கம்பீரமான தோற்றத்துடனும் வலது கையில் ஒரு போர் ஆயுதத்துடனும் ஓர்அரசனின் முழு உருவம் தோற்றமளிக்கிறது. மன்னனின் இடது பக்கம் நெடிய வேலியிட்ட மரம் ஒன்றும் வலது பக்கம் மூன்று மீன்கள் ஒன்றன்பின் ஒன்றாக மன்னரின் பாதங்களுக்குக் கீழாக வேலியிட்ட மரத்தை நோக்கி நீந்தும் நிலையில் காணப்படுகின்றன.

**சங்க காலச் சோழர் நாணயங்கள்**

சங்க காலச் சோழர் நாணயங்களள் மிகக் குறைந்த அளவிலேயே கிடைத்துள்ளன. சங்க காலப் பாண்டியர்களை போல சோழர்கள் மிகுதியான நாணயங்களை வெளியிட்டதாகத்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

தெரியவில்லை. சங்க கால சோழர் நாணயங்களில் எழுத்துப் பொறிப்பு எதுவும் காணப்படவில்லை. சங்க காலச் சோழர் நாணயங்களில் முன்புறம் யானை, அணி செய்யப்பட்ட குதிரைகள் பூட்டிய தேர், யானையும் குதிரையும், வேலியிட்ட மரம், விலங்கும் மரமும், குடை, வேலாயுதம் போன்ற சின்னங்கள் உள்ளன. இதன் பின்புறத்தில், புலிச் சின்னமே பெரிதும் காணப்படுகிறது. புலி தனது வலது காலைத் தூக்கி, வாயைப் பிளந்து, தலையை நிமிர்த்தி அதன் நுனி வளைந்திருக்கும் அமைப்பிலேயே காணப்படுகிறது. ஒரு சில நாணயங்களில் புலியுடன் கதிரவன் சின்னமும் காணப்படுகிறது.

சங்க காலச் சோழர் நாணயங்களில் எவ்வித எழுத்துப் பொறிப்பும் இன்மையால், அவற்றில் காணப்படும் இலச்சினைகளைக் கொண்டுதான் காலத்தைக் கணக்கிட வேண்டி உள்ளது. யஹுதேய நாணயங்களில் காணப்படும் வேலியிட்ட மரச் சின்னம் மிக முக்கியமானது. இச் சின்னம் தான் சங்க காலச் சோழர் நாணயங்களின் கால ஆராய்ச்சிக்குரிய அடிப்படைச் சான்றாக அமைகின்றது.

**சங்க காலப் பாண்டியர் நாணயங்கள்**

சங்க காலப் பாண்டியர்களுடைய நாணயம் சதுரமாக உள்ளது. ஒருபுறம் யானை பொறிக்கப்பட்டு, மறுபுறம் வெற்றிடமாக உள்ளது அல்லது இரட்டை மீன் சின்னம் அழகுற பொறிக்கப்பட்டுள்ளது. அண்மைக் காலத்தில், இராமநாதபுரம் அழகன்குளத்தில் நடந்த அகழ்வாராய்ச்சியின்போது ஏராளமாகச் சங்க காலப் பாண்டியர் நாணயங்கள் கிடைத்துள்ளன. இந் நாணயங்களில் அஷ்டமங்கலக் குறியீடுகளும் உள்ளன.

**நாணயங்களைப் பாதுகாத்தல்**

**தங்க நாணயங்கள் பாதுகாக்கும் முறை**

தங்க நாணயங்களைத் தனியாக மற்ற உலோக நாணயங்களோடு சேர்க்காமல் வைக்க வேண்டும். அவற்றினைத் தனியாகத் தாளில் பாதுகாப்பாக வைக்க வேண்டும். அவற்றில் ஏதேனும் பாசியோ, கறையோ மணல் படிந்து இருந்தாலோ அதனை நீர்த்த நைட்ரிக் அமிலம் மூலம் கவனமாகத் தூய்மை செய்ய வேண்டும்.

**செம்புக் காசுகளைத் தூய்மை செய்யும் முறை**

பச்சை படிந்த நாணயங்களைக் கீழே குறிப்பிடப்பட்டுள்ள திரவங்களுள் ஏதேனும் ஒன்றில் மூழ்க வைத்துப் பச்சை நிறம் நீங்கும் வரை தூய்மை செய்ய வேண்டும்.

**ரோச்சல் கார உப்புத் திரவம்**

50கிராம், சோடியம் ஹைடிராக்சைடை ஒரு லிட்டர் காய்ச்சி வடித்த நீரில் கரைத்து இத்துடன் 150கிராம் ரோச்சல் உப்பு எனப்படும் பொட்டாசியம் டார்ட்ரேட் கரைத்த கரைசல்

**கார கிளிசரால் திரவம்**

150 கிராம் எடையுள்ள எரிசோடாத் துணுக்குகளை ஒரு லிட்டர் காய்ச்சி வடித்த நீரில் கரைத்து 50 கிராம் கிளிசரின் சேர்க்கப்படுகிறது. இது இரண்டாம் வகைத் திரவம்.

மேலே கூறப்பட்டுள்ள திரவங்களுள் ஏதேனும் ஒன்றில் செம்பு நாணயங்களை நான்கு மணி நேரம் ஊற வைக்க வேண்டும். பின் நாணயங்களை திரவத்தில் இருந்து எடுத்து தூய்மையான நீரில் கழுவ வேண்டும். கழுவும் பொழுது மெல்லிய நைலான் துடைப்பானைக் கொண்டு தேய்க்க வேண்டும். இச்செய்முறைக்குப் பின்பும் பச்சை நிறம் தங்கி இருந்தால், நாணயங்களைப் புதிய திரவத்தில் இன்னும் நான்கு மணி நேரம் ஊற வைக்க வேண்டும். செம்பு நாணயங்களில் பச்சை முழுவதும் நீங்கும் வரை இந்த செய்முறையைத் திரும்பத் திரும்பச் செய்ய வேண்டும். பின்னர், அது நீர்த்த கந்தக அமிலத்தில் அரை மணி நேரம் ஊர வைக்கப்படுகிறது. தேய்ப்பதற்கு மெல்லிய துகிலியைப் பயன்படுத்த வேண்டும். பின்பு

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

குளிர்ந்த நீரில் கழுவிப் பாலிவினைல் அசிட்டேட் பாதுகாப்புத் திரவப் பூச்சு இருமுறை பூசிப் பாதுகாக்க வேண்டும்.

**நாணயங்களைப் பாதுகாக்கும் பொதுவான முறைகள்**

1. நாணயங்களைத் தனித் தனியாக எடுத்துச் சிறிய காகித உறைகளில் போட்டு, உறையின் மேல் நாணயத்தின் மதிப்பு, காலம், பேரரசு போன்றவற்றினை குறித்து வைக்க வேண்டும் நாணயங்களை டப்பா, பாத்திரம் போன்றவற்றில் குவியலாக ஒன்றையொன்று உரசும் படி வைக்கக்கூடாது.
2. சாய்ந்தவாறு உள்ள மேசையில் நாணயங்களை வைக்க வேண்டும். காரீய, வெள்ளீய நாணயங்களை பிளாஸ்டிக் பெட்டியில் வைக்க வேண்டும்.
3. நாணயங்களைச் சுத்தம் செய்ய புளி, எலுமிச்சை கொண்டு தூய்மை செய்யக் கூடாது. புளி, எலுமிச்சை ஆகியவற்றில் உள்ள சிட்ரிக் அமிலத்தினால் நாணயங்கள் அப்போதைக்குப் பளபளப்பாகின்றன. ஆனால், இவை செம்பின் மேற்புறத்தை நிறம் மாற்றி கருமை படிய வைத்துவிடும். எனவே புளி, எலுமிச்சை போன்றவற்றை வைத்துத் தேய்த்து நாணயங்களைத் தூய்மைப்படுத்துவதைத் தவிர்க்க வேண்டும்.
4. நாணயங்களைத் தூய்மை செய்ய அடர்ந்த கந்தக அமிலம், அடர்ந்த நைட்ரிக் அமிலம், அடர்ந்த ஹைடிரோ குளோரிக் அமிலம் போன்றவற்றைப் பயன்படுத்தக் கூடாது.
5. தூய்மையான தண்ணீரில் நாணயங்களை கழுவியவுடன் துணியினால் நன்கு துடைத்து விடுவது முக்கியமானது.

**மின்பகுப்பு முறை**

எரிசோடா கரைசலில் நாணயங்களை எதிர்மின் துருவத்திலும் இரும்பு தகடு ஒன்றினை நேர்மின் துருவத்திலும் இணைத்து, மிகக் குறைந்த நேர் மின்சாரத்தினை மின்கலம் மூலம் தொடர்ச்சியாக நாணயங்களில் உள்ள அசுத்தங்களுக்கு ஏற்றவாறு ஓடச்செய்து, பின்பு நாணயங்களைத் தூய்மையான நீரில் கழுவிப் பாலிவினைல் அசிடேட் பூச்சு கொடுத்துவிட வேண்டும். வெள்ளி நாணயங்களைத் தூய்மை செய்ய சோடாவிற்குப் பதிலாகப் பொட்டாசியம் சைனைடு கரைசலைப் பயன்படுத்த வேண்டும். இக்கரைசல் நச்சுத்தன்மை உடையது. எனவே, இதனைக் கவனமாகக் கையாள வேண்டும். ஈய நாணயங்களைத் தூய்மை செய்யச் சூடான அம்மோனியம் அசிட்டேடில் 20 நிமிடம் முதல் ஒரு மணிநேரம் வரை அவற்றை மூழ்க வைத்துச் சுத்தம் செய்து பாலிவினைல் அசிடேட் பூசலாம்.

**பார்வை நூல்கள்**

1. இரா.கிருஷ்ணமூர்த்தி, சங்க காலச்சோழர் நாணயங்கள் - தினமலர் வெளியீடு, பதிப்பு-1986.
2. இரா.கிருஷ்ணமூர்த்தி, பாண்டியர்பெருவழுதி நாணயங்கள் - தினமலர்வெளியீடு, பதிப்பு-1987.
3. நடன காசிநாதன், தமிழர் காசு இயல் - உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.
4. தொல்லியல் கருத்தரங்கு மலர், தொல்லியல்துறை வெளியீடு.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# திரு விவிலிய நற்செய்தி நூல்களின் காலக்கணிப்புமுறை
# Time Calculation of The Holy Bible

**அ.அமலி செல்வ ராணி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
ராணி அண்ணா அரசு மகளிர் கல்லூரி, திருநெல்வேலி – 8

## Abstract

*The study of the paper extends an analysis of time calculation from the evidences from the holy Bible. Middle East is the place where the Hebrews lived and their successors live. They followed certain time methods in their culture. After the New Testament was written by the Greek, Latin, and English Bible scholars, the time methods vary. The study focuses on the evidences based on it. Hence, the study helps to know the cultural ethics and informations of Tamil Culture.*

**Keywords:** Time Calculation, The Holy Bible

**முகவுரை,**

கண்ணிற்கு புலப்படாத அணுத்துகள், வைரஸ் முதல் ஆறறிவு மனிதன் வரை உலகிலுள்ள உயிருள்ள, உயிரற்றவை, விண்ணிலுள்ள கோள்கள், மண்ணிலுள்ள மண், மரம், இயற்கை என எதை எடுத்துக் கொண்டாலும் சரி ஒவ்வொன்றிற்கும் ஒரு காலம் உண்டு. தோற்றம், வளர்ச்சி, பயன்படும்காலம், ஆயுள் என காலக்கணிப்பு உள்ளதை யாராலும் மறுக்கவும் முடியாது மறைக்கவும் இயலாது. அவ்வவ் காலத்தை வைத்தே அதனதன் தொன்மை, அக்கால மக்கள், நாகரிகம், பண்பாடு, வளர்ச்சி கண்டறியப்படுகிறது. அண்டசராசரத்தின் அத்தனை அசைவுகளுக்கும் காலக்கணிப்பு அதிமுக்கியமானது. இதன்டிப்படையில் கிறிஸ்தவர்களின் புனித நூலாகிய “திருவிவிலிய நற்செய்தி நூல்களின் காலக்கணிப்பு முறை” யை இக்கட்டுரை எடுத்தியம்புகிறது. பழைய ஏற்பாடு 47 நூல்கள் + புதிய ஏற்பாடு 26 நூல்கள் என 73 நூல்களை உள்ளடக்கிய திருவிவிலியத்தில் புதிய ஏற்பாடு நூல்கள் 26ம் இயேசுவின் வாயிலிருந்து உதிர்ந்த முத்துக்களை இறைவார்த்தைகளாக (இயேசுவின் பிறப்பு, வாழ்வு, போதனை, புதுமை, இறப்பு, உயிர்ப்பு) பிரகாசிக்கின்றன. அதில் முதல் நான்கு நூல்களான மத்தேயு நற்செய்தி, லூக்கா நற்செய்தி, யோவான் நற்செய்தி ஆகியவற்றின் காலக்கணிப்பு முறையை இக்கட்டுரை எடுத்துச் சொல்கிறது. திருவிவிலியம் அதன் பிரிவுகள், நற்செய்தி நூல்கள் மலர்ந்தவிதம், மணம் பரப்பிய முறை, ஒத்தமை நற்செய்திகள், நூல்அமைப்பு முறை அவற்றின் ஆசிரியர், எழுதப்பட்ட காலம் என இங்கே விவரிக்கப்படுகிறது.

**திருவிவிலியம் ஒருசோலை**

பல்வேறு வரலாற்றுச் சூழல்களில் பலவாறாக தொகுக்கப்பட்டு ,சுருக்கப்பட்டு ,சோக்கப்பட்ட ஒரு நூல் திரட்டு திருவிவிலியம், மனித வாழ்க்கை எப்படி அமைய வேண்டும் என்பதை உலகிற்கு எடுத்துச் சொல்லும் ஒப்பற்ற அச்சுப் பிரதி திருவிவிலியம், தூய ஆவியின் ஏவுதலால் தூண்டப்பட்டு மனித ஆசிரியர்களால் எழுதப்பட்ட 73 நூல்களின் தொகுப்பு திருவிவிலியம். பல நூற்றாண்டுகளுக்கு முன் வாய்மொழியாக பேசப்பட்ட

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

இறவார்த்தைகள் எழுத்துவடிவில் உதித்த நீதிநெறி விளக்கம் திருவிவிலியம். மனம் சோர்ந்து போகின்ற வேளையில் புரட்டிய பக்கமெல்லாம் புத்தெழுச்சி தரும் நம்பிக்கை இலக்கியம் திருவிவிலியம். உலகில் அதிக மொழிகளில் (1200க்கு மேல்) மொழிபெயர்க்கப்பட்ட அதிக மக்களால் குறிப்பாக விளிம்புநிலையில் உள்ள, புறந்தள்ளப்பட்ட, வெறுத்து ஒதுக்கப்பட்ட ஏழை, எளிய மக்களின் வாழ்வின் கலங்கரை விளக்காய் ஒளிர்கின்ற உயிரோவியம் திருவிவிலியம். நிறைவாழ்வினைக் காட்டுகின்ற இலக்கியச்சுவை மிக்க மீட்பின் இரகசியம் திருவிவிலியம் என்னும் சோலையாகும்.

**இருபெரும் மலர்கள்**

திருவிவிலியம் என்னும் சோலை இருபெரும் (பழைய ஏற்காடு ,புதிய ஏற்பாடு) மலர்களாக 73 இதழ்களாக (பழைய ஏற்பாடு 46 நூல்கள் + புதிய ஏற்பாடு 27 நூல்கள்) மணம் வீசுகிறது. திருவிவிலியத்தை 70 மணி நேரத்தில் ஒருவர் படித்து முடித்து விடலாம். பைபிளில் 8,674 வித்தியாசமான எபிரேயச் சொற்களும், 5,6244 வித்தியாசமான கிரேக்கச் சொற்களும் பொதிந்துள்ளன. 1560ல் பைபிள் அதிகாரங்களாகவும் வசனங்களுக்கு எண்கள் போடப்பட்டும் முதன்முதலில் வெளிவந்தது ஜெனிவா பைபிள் பதிப்பில்தான்.

**அதிகாரங்கள், வசனங்கள் பிரிவு**

திருவிவிலியம் எழதப்பட்ட காலத்தில் ஆசிரியர்கள் தம் நூல்களை அதிகாரங்களாகவும், வசனங்களாவும் பிரித்து எழுதவில்லை. கி.பி.1238ல் “கார்டினல் ஹூகோ டி.எஸ்.கேரோ” என்பவரால் திருவிவிலியம் அதிகாரங்களாக பிரிக்கப்பட்டது. கி.பி. 1551ல் “ராபெர்ட்டஸ் ஸ்டீபெனஸ் “(Robetus Stephanus) என்பவர் வசனங்களாக பிரித்தார். காட்டிங்கம் பல்கலைக்கழகத்தில் (University of Gottingen) ஒரு பைபிள் 2,470 பனை ஓலைகளில் எழதப்பட்டுள்ளது. கி.பி.2ம் நூற்றாண்டிலேயே தாசியன் போன்றோர் பைபிளைச் சிறுசிறு பிரிவுகளாகப் பிரித்தனர். 1216ல் ஸ்டீபன் லாங்டன் என்பவர் புதிய ஏற்பாட்டு நூல்களை அதிகாரங்களாக பிரித்த முறையையே நாம் கையாள்கின்றோம். இ ப்போது நாம் பின்பற்றும் வசனப்பிரிவை உண்டாக்கியவர் “ராபர்ட் ஸ்டீபன்” 1448ல் ராபிநாத்தான் செய்த அதிகாரங்கள் மற்றும் வசனப்பிரிவு முறையையே புதிய ஏற்பாட்டில் இன்றும் கடைபிடிக்கிறோம். திருவிவிலியம் முழுவதிலும் 1189 அதிகாரங்களும், 31173 வசனங்களும் உள்ளன. மூலநூல்களின் படி (எபிரேயம், அரமேயம், கிரேக்கம்) மொத்தம் 7,73,692 சொற்களும், 35,66,480 எழுத்துக்களும் உள்ளன.

**திருவிவிலிய நூல்கள் மலர்கள், மலர்ந்தவிதம்**

ஏறத்தாழ கி.மு.1300 முதல் கிபி.100 வரை உருவான படைப்புகள் திருவிவிலியத்தில் உள்ளன. முதலில் சிறு சிறு பாடல்கள் கதைகள் உருவாகி, வாய்மொழியாக வளர்ந்து படிப்படியாக சமயம் சார்ந்த பொருள்பெற்றன. “தெபோரா”வின் பாடல்தான் மிகப்பழமையானது. (கி.மு.100 காண் நீதி 5) பின்னாளில் சிறு சிறு எழுத்தோவியங்களாக உருவெடுத்து சாலமோன் காலத்திலேயே படையல்கள் உருவாகி பின் ஏடுகளாக தொகுக்கப்பட்டு பாரம்பரியம் உருவாயின. (கி.பி.750) இப்போது நாம் காண்கின்ற வடிவத்தின்படி பழைய ஏற்பாட்டில் முதலில் எழதப்பட்ட நூல் “ஆமோஸ்” நூல் புனித யோவானின் நற்செய்தி மற்றும் திருமுகங்கள் முதல் நூற்றாண்டின் இறுதியில் காணப்பட்டது.

**மூலபாடங்களும், மொழிபெயர்ப்புகளும்**

பைபிளின் மூல நூல் கேனன் (Canon) எனப்படுகிறது. அராமிக் வடிவம் கூட மொழிபெயர்ப்பே ஆகும். மூலநூல் சாராது எழதப்படும் பகுதிகளை “அபாகிரி∴பா” (Apocrypha) என்பது மரபு. திருவிவிலியம் முதலில் மரப்பட்டைகள், களிமண், ஓடுகள்,

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

பாப்பிரஸ்தாள்கள் ஆகியவற்றில் எழுதப்பட்டன. மூல ஆசிரியர்கள் எழுதிய கைப்பிரதிகள் கிடைக்கவில்லை, மற்றவர் எடுத்த நகல்களே உள்ளன. பழமையான கைப்பிரதிகள் (வத்திக்கான் சுவடி, சீனாய்ச்சுவடி இரண்டும்) கி.பி.350 வாக்கில் எடுக்கப்பட்டவை.

**தொன்மை**

1947ல் யூதேயா பாலை நிலப்பகுதியில் சாக்கடலின் அருகே குகைகளில் பல ஏடுகள் கண்டெடுக்கப்பட்டன. இவை கி.பி.2ம் நூற்றாண்டுக்கு முற்பட்டவை. கும்ரான் குகைகளில் வாழ்ந்த துறவிகளாகிய எசேனியர் இவற்றைக் களிமண் ஜாடிகளில் பாதுகாத்து வைத்திருந்தனர். அங்கிருந்து 2001ம் ஆண்டுவரை 180 சிறுதுண்டு ஏடுகள் எடுக்கப்பட்டுள்ளன. ஏசாயா இறைவாக்கினர் நூலின் முழுவடிவமும் கிடைத்துள்ளன. புழைய ஏற்பாட்டின் பெரும்பகுதி எபிரேய மொழியில் எழுதப்பட்டுள்ளன. அந்த எபிரேயத்தில் உயிரெழுத்துக் குறியீடுகள் இல்லை. இயேசுவின் காலத்தில் யூதர்கள் அரமேய மொழியையே பேசினர்.எபிரேயமும் அரமேயமும் ஒரேவித எழுத்துக்களால ஆனாலும் இரண்டிற்கும் இலக்கண வேறுபாடு உண்டு.

**நற்செய்தி நூல்கள்**

நற்செய்தி என்பது மீட்பின் செய்தி, Euangelion என்ற கிரேக்கச்சொல்லின் மொழி பெயர்ப்பே நற்செய்தி. நற்செய்தி என்ற வார்த்தையை பவுலடியார் தன் கடிதங்களில் 19 முறை பதிவு செய்துள்ளார். இயேசுவின் பிறப்பு, வாழ்வு போதனைகள், புதுமைகள், உவமைகள் ,பாடுகள், இறப்பு, உயிர்ப்பு, கடவுள் தன் மகன் வழியாய் உலகை மீட்ட செய்தி ஆகியவற்றை உள்ளடக்கியதே நற்செய்தி நூல்கள். புதிய ஏற்பாட்டின் மூலபாடம் (செப்துவசிந்தா) என்னும் கிரேக்க விவிலியத்தில் உள்ளது. இயேசு தம் போதனைகளை அறிவிக்க திருத்தூதர்களை அனுப்பினார். வில்லியம் டைன்டேலே (William Tyndale) எபிரேயம், கிரேக்க மொழியிலிருந்த புதிய ஏற்பாட்டை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். நற்செய்தி நூல்கள்-4, திருத்தூதர் பணி-1, திருமடல்கள்-21, திருவெளிப்பாடு-1 என புதிய ஏற்பாடு 27 நூல்களையும் உள்ளடக்கியிருந்தாலும் மத்தேயு, மாற்கு லூக்கா, யோவான் ஆகிய நான்கு திருத்தூதர்கள் எழுதிய நூல்களே நற்செய்தி நூல்களாகக் கருதப்படுகின்றன. கி.பி.50ல் எபிரேயம், கிரேக்க கலாச்சாரம் நிலவிய பகுதிகளில் “கொயினே கிரேக்கத்தில்” புதிய ஏற்பாடு நூல்கள் எழுதப்பட்டன. முதல் 4 நற்செய்தி நூல்கள் யாரால், எங்கு, எப்போது எழுதப்பட்டன என்று பற்றி துல்லியமாக அறிய இயலவில்லை. திருச்சபையால் அங்கீகரிக்கப்பட்ட முதன்மையான நான்கு நற்செயதிகள் மத்தேயு, மாற்கு ,லூக்கா, யோவான் ஆகியோரால் எழுதப்பட்டவை. கத்தோலிக்கர் பயன்படுத்தம் புதிய ஏற்பாடு 1970-ல் தான் மூலமொழியாகிய கிரேக்கத்திலிருந்து தமிழாக்கம் செய்யப்பட்டது. தற்போது ஒன்றிப்பு மொழிபெயர்ப்பு செய்யப்பட்டுள்ளது.

**காலம்**

மனித வாழ்க்கையில் காலம் முக்கிய பங்கு வகிக்கிறது. காலத்தை வைத்தே அதன் தொல்லியல் தன்மை ஆய்வு செய்யப்படுகிறது. ‘காலம் பொன் போன்றது’, ‘காலத்தே பயிர்செய்’, ‘காற்றுள்ள போதே தூற்றிக்கொள்’, ‘ஆடிப்பட்டம் தேடிவிதை’, ‘இளமையில் கல்’, ‘ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது’, ‘வைகறைத் துயில் எழு’ என்பன போன்ற பல பழ மொழிகள் ஆத்திச்சூடிகள் காலத்தின் முக்கியத்துவத்தை விளக்குகின்றன. சங்ககாலம், காப்பியகாலம், நாகரீக காலம், வானிலை அடிப்படையில் காலம் என பலவாறாக காலம் பகுக்கப்படுகிறது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

"காலத்தினால் செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது"

என்று வான்புகழ் வள்ளுவர் காலத்தின் மகத்துவத்தை உணர்த்துகிறார். கிறிஸ்து பிறப்பதற்கு முன் உள்ள காலம் கி.மு என்றும் கிறிஸ்து பிறந்ததற்குப்பின் உள்ள காலம் கி.பி என்றும் பகுக்கப்பட்டு இப்போது நடை முறையில் உள்ள ஆங்கில வருடம், ஆங்கில மாதங்கள் அதன் அடிப்படையிலேயே நம்மால் பின்பற்றப்பட்டு வருகிறது. புழைய ஏற்பாட்டு சரித்திரக்காலம் கி.மு 4000 முதல் கி.மு 400 வரை ஆகும்.

**நற்செய்தி நூல்களின் காலக்கணிப்பு முறை**

கி.பி. 120-140 காலகட்டத்தைச் சார்ந்த புனித யோவானால் எழுதப்பட்ட விவிலிய கைப்பிரதியே பைபிளின் ஆகப்பழமையானது. எபிரேயர் வழக்கப்படி ஒவ்வொரு மாதத்திற்கும் 30 (அல்லது) 29 நாட்கள் உண்டு. அவர்களுக்கு வருடத்தில் 354 நாட்களே உண்டு. சுமார் மூன்று வருடங்களுக்கு ஒருமுறை 119 ஆண்டுகளில் 7 முறை 29 நாட்கள் உள்ள ஒரு சிறப்பு மாதம் 'வேதார்' என்னும் பெயரில் 'அதார்' மற்றும் நிசான் மாதங்களுக்கிடையே இணைக்கப்படும். யூதர்களின் நாள் சூரியன் அடைவதிலிருத்து மறுநாள் சூரியன் அடைவது வரை நாள் கணக்கிடப்பட்டது.

**இரவு**

முதல்காவல் -மாலை 6.00 முதல் 9.00 வரை 2-ம் காவல் -இரவு 9.00 முதல் 12.00 வரை 3-ம் காவல் -இரவு 12.00 முதல் 03.00 வரை 4.ம் காவல் - காலை 03.00 முதல் 06.00 வரை

**பகல்**

முதல் காவல் - காலை 6.00 முதல் 9.00 வரை 2-ம் காவல் -காலை 9.00 முதல் 12.00 வரை

3.ம் காவல் - காலை 12.00 முதல் 03.00 வரை 4-ம் காவல் -காலை 03.00 முதல் 06.00 வரை

மாதங்கள் ஆங்கில மாதங்களுடன் தொடர்புடையாத இருந்தன.

எ.கா. அதார்-பிப் , மார்ச-29 (அல்லது) 30 நாள் நிசான் -மார்ச, ஏப் - 30 நாள் மதக் காலண்டர் திருவிழாக்களின் அடிப்படையில் கணிக்கப்பட்டன. பாஸ்கா என்பதற்கு கடத்தல் என்பது பொருள். நிசான் மாதம் 14ல் புளியாத அப்ப திருவிழாவும் கொண்டாப்பட்டது.

**ஒத்தமை நற்செய்திகள்**

மத்தேயு, மாற்கு, லூக்கா மூன்றும் ஒன்றையொன்று ஒத்திருந்தது. எனவே அவை மூன்றும் ஒத்தமை நற்செய்திகள் எனப்பட்டது. மத்தேயு நற்செய்தியின் 1068 வசனங்கள் 28 அதிகாரங்களிலும், மாற்கு நற்செய்தியின் 661 வசனங்கள் 16 அதிகாரங்களிலும், லூக்கா நற்செய்தியின் 1149 வசனங்கள் 24 அதிகாரங்களிலும் உள்ளடக்கப்பட்டுள்ளது. மாற்கு நற்செய்தியின் 661 வசனங்களில் 600 வசனங்கள் மத்தேயுவிலும், லூக்காவிலும் உள்ளன. இம்மூன்றும் ஒன்றையொன்று ஒத்தமைத் தன்மையுடன் அமைந்துள்ளன. இப்படி அமைப்பதை கிரேக்க மொழியில் "சினாப்ஸிஸ்" என்பர். 18ம் நூற்றாண்டில் முதல் மூன்று நற்செய்திகளும் ஒத்தமை நற்செய்தி நூல்கள் (Synolptic Gospels) என பெயர் வழங்கலாயிற்று.

**மத்தேயு நற்செய்தி**

ஆவ மத்தேயு நற்செய்தி, ஆ-மத்தேயு நற்செய்திக்குரிய சிறப்பு. இயேசு கிறிஸ்து நிறுவிய இறையாட்சி பற்றிய நற்செய்தியைத் திருத்தூதா் மத்தேயு முதன்முதலில் எழதினார். அதனை அரமேய மொழியில் எழதினார் என்றும் திருச்சபை மரபு கருதுகிறது. இயேசுவைப்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

பின்பற்றிய ஒரு திருத்தூதர் தாமே நேரில் கண்ட, கேட்ட நிகழ்ச்சிகளை நூலாக தந்திருக்கிறார் என்பதை விட அவரது வழி மரபில் வந்த சீடரோ, குழுவினரோ இதனைத் தொகுந்து எழுதியிருக்க வேண்டும் என்பதே சிறப்பு மத்தேயு – மனிதன் என்று அடையாளம் காட்டினர்.

**சூழல்**

எருசலேம் கோவிலின் அழிவுக்குப் பின்னர் யூதச்சங்கங்கள் கிறிஸ்தவர்களைத் துன்புறுத்திய ஒரு காலகட்டத்தில் இந்நூல் எழதப்பட்டிருக்க வேண்டும். இயேசுவின் சீடர்கள் யூதத் தொழுகைக் கூடங்களை விட்டுவிட்டுத் திருச்சபையாகக் கூடிவர தொடங்கிவிட்ட காலக்கட்டத்தில் இந்நூல் எழதப்பட்டிருக்கலாம்.

**மாற்கு நற்செய்தி**

மாற்கு நற்செய்தி கி.பி 60-65ல் எழதப்பட்டது. மாற்கு நற்செய்தியின் ஆசிரியர் யோவான் மாற்கு என்பது திருச்சபை மரபு. மாற்குவின் தாய் பெயர் மரியா. இவர்கள் வீட்டில் தொடக்கக்கால கிறிஸ்தவர்கள் கூடி வழிபட்டு வந்தனர் (தி.ப12:12) மாற்கு 14:51,52ல் குறிப்பிடப்பட்டுள்ள இளைஞர் இவராக இருக்கலாம். பர்னபாவின் உறவினர். தொடக்கத்தில் பவுலோடு பயணம் செய்தவர். பேதுருவுக்கும் துணையாக இருந்ததால் அவரின் அறிவுரை (போதனை)ப்படி இந்நற்செய்தி எழதப்பட்டிருக்கலாம் என்பதும் கருத்து.

**சூழல்**

நற்செய்தி நூல்களில் மாற்கு நற்செய்தி நூல்தான் முதன்முதலாக எழப்பட்டிருக்க வேண்டும் என்பதற்கு பல சான்றுகள் உள்ளன. உள்ளடக்கம், பணி, இறையியல் நோக்கு அடிப்படையில் பார்த்தால் மாற்கு நற்செய்திதான் முதன்முதலாக எழதப்பட்டிருக்க வேண்டும் என்பது விவிலிய அறிஞர்களின் கருத்து. ஆமு-மாற்கு நற்செய்தி மாற்கு-சிங்கம் என்று அடையாளத்தைக் கொடுத்துள்ளனர். எருசலேம் அழிக்கப்படவிருந்த சூழலில் உரோமையரால் கிறிஸ்தவர்கள் துன்புறுத்தப்பட்டக் காலத்தில் உரோமை நகரிலிருந்த மாற்கு அதனை எழதியிருக்க வேண்டும். இந்நற்செய்தி நூல் பிற இனத்துக் கிறிஸ்தவர்களைக் குறிப்பாகக் கண்முன் கொண்டு எழதப்பட்டதாகத் தெரிகிறது. இந்நூலின் ஆசிரியர் இயேசுவைப் பற்றிய செயல்கள், உவமைகள் மற்றும் கூற்றுக்களை தமக்கே உரிய பாணியில் விறுவிறுப்பாகத் தொகுத்துள்ளார். பிற இனக் கிறிஸ்தவர்கள் வளர இந்நூல் பேருதவியாக இருந்தது.

**உள்ளடக்கம்**

கடவுளின் மகனாகிய இயேசு கிறிஸ்துவைப்பற்றிய நற்செய்தி என்னும் தொடக்கச் சொற்களே நற்செய்தி நூலுக்கு நல்ல தலைப்பாக அமைகின்றன. முதல் பகுதியில் இயேசுகிறிஸ்து மாட்சிமிக்க இறைமகன் மெசியா (1:1) என்பதையும், மனம் மாறும் மக்கள் பாவமன்னிப்புப் பெற்று இறையாட்சியில் உரிமைக் குடிமக்களாகும் தகுதி பெறுகின்றனர் என்பதை விளக்குகிறார்.

**லூக்கா நற்செய்தி**

லூக்கா நற்செய்திக்குரிய சிறப்பு. லூக்கா - மாடு என அடையாளப்படுத்துகின்றனர். புதிய ஏற்பாட்டின் 3வது நற்செய்தியை லூக்கா எழுதினார். மத்தேயுவும், லூக்காவும் மாற்கின் அமைப்பை அப்படியே பின்பற்றுகின்றனர். இந்நற்செய்தியை லூக்கா எழதியதற்கான சான்றுகள் 2ம் நூற்றாண்டில் காணப்படுகின்றன. லூக்கா நற்செய்தியின் ஆசிரியர் சிரிய நாட்டு அந்தியோக்கியாவைச் சார்ந்த கிரேக்கப் பெற்றோருக்கு பிறந்தவர். கொலோ (4:10-14) லூக்கா என்ற பெயர் லூசியஸ் என்ற இலத்தீன் பெயரின் கிரேக்க வடிவத்திலிருந்தோ, அல்லது லூக்கா என்ற பெயர் லூக்கானுஸ் என்ற இலத்தீன் பெயரிலிருந்தோ வந்திருக்க வேண்டும்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

இவர் மருத்துவம் தெரிந்தவர். இவர் ஓர் ஓவியர் என 6ம் நூற்றாண்டு சான்று கூறுகின்றன. புனித பவுலின் சீடர். நற்செய்தி ஏழை எளியவர்கட்கு அறிவிக்கப்பட வேண்டும் என்று ஆழமாய்ச் சொன்னவர். கிரேக்க நாட்டில் கி.பி 70ல் இந்நூலை எழதினார் (லூக் 1:1) லூக்கா தனக்கு முன் எழதப்பட்ட செய்திகளை நுணுகி ஆராய்ந்து பிற இனத்தவரும் இயேசுவை சரியாக அறிந்திருக்க வேண்டும் என்று இந்நூலை எழதினார்.

**சிறப்பியல்பு**

வார்த்தைகளைப் பயன்படுத்துவதில் ஒரு கலைஞன், மொழி வல்லாளர் உயர்ந்த நடை, சொல் நயமுண்டு. புதிய ஏற்பாட்டை நயமிக்க இலக்கிய உலகிற்கு இட்டுச் செல்கிறார். ஒரு நூல் அதிக அளவு பரவிட புகழ்மிக்க ஒருவர்க்கு அந்நூல் சமர்ப்பிக்கப்பட வேண்டும். அந்த வகையில் லூக்கா தனது நூலை மாண்புமிக்க தியோபிலுக்கு அர்ப்பணிக்கிறார்.

**சூழல்**

எருசலேம் நகரம், அழிக்கப்பட்டபோது நிகழ்ந்தவை சித்தரிக்கப்பட்டுள்ளதால் கி.பி. 70க்கு பின்தான் இந்நூல் எழதப்பட்டிருக்க வேண்டும் என்கின்றனர். கி.பி.60-62 ல் இந்நற்செய்தி எழதப்பட்டிருக்கலாம் என்று கூறும் காலக் கணிப்பை பலர் ஏற்றுக் கொள்ளவில்லை. தூய ஆவியின் செயல்பாடு இயேசுவின் இரக்கம், திருப்பணி, மனமாற்றம், பாவமன்னிப்பு இவற்றால் ஏற்படும் மகிழ்ச்சி ஆகியவை வலியுறுத்தப்படுகின்றன.

**மூலங்கள்**

லூக்காவின் மூலங்களில் முதன்மையானது மாற்கு நற்செய்தி. லூக்கா நற்செய்தியின் 1149 வசனங்களில் 548 வசனங்கள் அவருக்கு மட்டுமே உரியவை. மாற்குவின் 660 வசனங்களில் 450 வசனங்களை லூக்கா எடுத்தாண்டுள்ளார். 525 வசனங்கள் லூக்கா மத்தேயுவுக்கு மட்டுமே பொதுவானவை.

**யோவான் நற்செய்தி**

யோவான் - கழகு என அடையாளப்படுத்தியுள்ளனர். இறையியல் நற்செய்தி எனப்படும் இந்நூலை செபதேயுவின் மகனாகிய யோவான் எழதினார் என்பது தொன்மையான மரபு. இந்நற்செய்தி 21, அதிகாரங்களை கொண்டது. இயேசுவின் தெய்வீகத் தன்மையை வலியுறுத்தி கி.பி.95 அதாவது முதல் நூற்றாண்டிலேயே எழதப்பட்ட நூல். இதில் சொல்லப்படும் பல செய்திகளை அகழ்வாய்வுகள் நிரூபிக்கின்றன. யோவான் யேசுவால் மிகவும் நேசிக்கப்பட்ட அன்புச் சீடர் (21:24) இறுதி இரவு உணவின் போது இயேசுவின் மார்பில் சாய்ந்து இருக்கும் மகா பேறு பெற்றவர். அம்மா இதோ உன் மகன் என்று தம்தாய்க்கு விளக்கப்பட்டவர் (19:25-27) இயேசுவோடு நெருக்கம் கொண்டிருந்த மூன்று திருத்தூதர்களில் (13:22-28) (மாற் 5: 379:2˙13:3 14:33) மற்ற எல்லோரும் ஓடிவிட்ட போதிலும் இயேசுவின் சிலுவையடியில் நின்றவர். முதல் 14 அதிகாரங்கள் அடையாள நூலாகவும் 14 முதல் 21 வரை மகிமையின் (பாடுகள்) நூலாகவும் உள்ளன. 7 என்பதற்கு முக்கியத்துவம் தரப்படுகிறது. 7 என்றால் நிறைவு அல்லது முழுமை என்று பொருள். எனவே திருவருட்சாதனங்கள் - 7, திருநாட்கள் - 7, வாரங்கள் -7, நில ஓய்வு ஆண்டு (7 ஆணடுக்கு ஒருமுறை), வாரநாட்கள் - 7, புதுமைகள்- 7, விழாக்கள்- 7 என்று 7ன் முக்கியத்துவத்தை வலியுறுத்தியுள்ளார்.

**நூலின் நோக்கம்**

இயேசுவே மெசியா என்று நீங்கள் நம்பி அவர் பெயரால் வாழ்வு பெறுவதற்காகவே இந்நூல் எழதப்பட்டது. கிறிஸ்தவ நம்பிக்கையை ஆழப்படுத்தி கிறிஸ்தவ வாழ்வை வளப்படுத்துவது நற்செய்தியின் முக்கியநேரக்கம் ஏறத்தாழ கி.பி 90ம் ஆண்டில் கிரேக்க

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

மொழியில் இந்நற்செய்தி எழுதப்பட்டது. இந்நற்செய்தி ஒரு பாடல். இப்பாடல் இந்நூலின் முக்கிய செய்திகளின் சாராம்சம்.

**நிறைவாக**

தமிழகத்தில் முதன்முதலாக தமிழில் அச்சிடப்பட்ட ஒரே நூல் திருவிவிலியம். அதிக மொழிகளில் அதிக எண்ணிக்கையில் மொழி பெயர்க்கப்பட்ட நூல் திரட்டும் திருவிவிலியமே, விவிலியத்தாக்கம் சமயம், இசை, கலை, அரசியல் தத்துவம், ஓவியம், நாடகம் என பல்வேறு துறைகளில் வெளிப்படுகிறது. அத்திருவிவிலியத்தின் நற்செய்தி நூல்களின் காலக்கணிப்பு முறையை முன்னுரை தொடங்கி திருவிவிலியம்,இருபெரும், மலா்கள், அதிகாரங்கள், வசனங்கள் பிரிவு திருவிவிலிய நூல்கள் மலா்ந்த விதம் மூலபாடஙகளும், மொழிபெயா்ப்புகளும், தொன்மை நற்செய்தி நூல்கள், காலம், நற்செய்தி நூல்களின் காலக்கணிப்பு முறை, காலப்பிரிவுகள் ஒத்தமை நற்செய்திகள், மத்தேயு நற்செய்தி, மாற்கு நற்செய்தி, லூக்கா நற்செய்தி, யோவான் நற்செய்தி என பல்வேறு பிரிவுகளில் அமைப்பு, காலம், சூழல், ஆசிரியா், சிறப்பியல்புகள், தொன்மை விளக்கப்பட்டுள்ளன. ஒப்பற்ற நூலான திருவிவிலியத்தை நற்செய்தி நூல்களை படிப்பதோடு நின்றுவிடாது. ஒவ்வொருவரும் தனது வாழ்வாக்கிகனால் வன்முறையற்ற, ஊழலற்ற, அன்பு நிறைந்த தொடக்ககால கிறிஸ்தவா்களை போன்ற பகிா்வுடன் கூடிய அமைதியான உலகம் மலரும் என்பதில் ஐயமில்லை.

**துணைநின்ற நூல்கள்**

1. திருக்குறள் - திருவள்ளுவா்
2. வெற்றிச்சிந்தனைகள் - ஐயப்பன்
3. திருவிவிலியம் - பொதுமொழிபெயா்ப்பு
4. மரிய அலங்காரம், நான்கு நற்செய்திகளையும் ஒன்றிணைத்த காவியம், ஓய்வுபெற்ற ஆசிரியா் (லேட்) 27, முன்சீப் கோா்ட்முத் தெரு, சாத்தூா் - 626 203
5. ஜே.தெயோபிலஸ், வ. இரபேல், ஜா. எல்பின்ஸ்டன் (தொ.ஆ), விவிலிய இறையியல் அகராதி, செலஸ்டியல் மல்டி மீடியா, அருள்வாக்கு மன்றம், சென்னை.
6. லூக்காஸ் நற்செய்தி விளக்கவுரை, அருள்வாக்கு மன்ற வெளியீடு, திருச்சி.
7. அருள்திரு வி. இரபேல், திருவிவிலியம் ஓா் அறிமுகம், நலம் வெளியீடு, பெருவிளை - 629003.

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com



# திருவண்ணாமலை மாவட்டத்தில் காணப்பெறும் தொல்லியல் ஆதாரங்கள்
# Archaeological Evidences in Thiruvannamalai District

**முனைவர் அ.அரவிந்தன்,** வருகை விரிவுரையாளர்,
தமிழ்த்துறை, அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரி செய்யாறு– 604 407.

## Abstract

*The article has been the source of the relics found at the time of the archaeological survey, sites and the culverts in the Thiruvannamalai Temple and the caves and other places with the edicts. The origin of the Thiruvannamalai temple, the archaeological study, Polur, Sengam Sites, Mottur Urn burial sites, Urn burial culture, Pot usage, rituals, sacrifice to the dead, Mother Goddesses Cult, are evinced through this scrutiny. Many Pallava, Chola kings and the philanthrophists had done sacred service to the temple and they are still in the culverts. Hence, the study brings out the related facts.*

**Keywords:** Archaeology, Evidence, Thiruvannamalai District, Mother Godess Cult

தமிழக எல்லைப்பரப்பில் தலவரலாறு குறித்த நூல்களும், ஆய்வுகளும் தொடர்ந்து பல்வேறு எதிர்பார்ப்புகளைப் பெற்றுள்ளன. அவற்றில் இந்திய கலாச்சாரம், நாகரீகம், பண்பாடுமற்றும் பழக்கவழக்கங்கள் ஆகிய அறியப்பெறுகின்றன. இதில் தமிழகச் சூழலில் சமயங்களை அடிப்படையாகக் கொண்டு எழுந்துள்ள இறைவழிபாட்டு ஆலயங்கள் பண்பாட்டின் மிக முக்கியச் சின்னங்களாக அமைந்திருக்கின்றன. இதில் பாண்டியர், சோழர், பல்லவர், விஜயநகர நாயக்க மன்னர்கள் ஆகியோரை மையமாகக் கொண்டே சிற்பம், கட்டிடம், இசை, நடனம், ஓவியம் முதலான நுண்கலைகளுக்கான வரலாற்றுப் பின்புலங்களும் உள்ளடங்கியிருக்கிறது. இத்தன்மையில் ஆய்வு மேற்கொள்ளும் சூழலில், ஒவ்வொரு காலக்கட்டங்களிலும் ஒவ்வொரு வகையான சமயங்கள் தமிழ்ச் சமூகத்தில் நிறுவப்பட்டு, அதன் பரவல்கள் நிகழ்ந்திருப்பதை அறிய முடிகிறது. அவ்வகையில் இவ்வாய்வுக் கட்டுரை பாடல் பெற்ற தல வரலாற்றுத் தலமாக விளங்கும் திருவண்ணாமலை மாவட்டத்தில் காணலாகும் தொல்லியல் ஆதரங்களை விளக்கும் விளக்க முறை ஆய்வாக அமைக்கப்பெறுகிறது.

**திருவண்ணாமலை மாவட்டம்**

திருவண்ணாமலை, தமிழ்நாட்டு மாவட்டங்களில் ஒன்று. இதன் தலைநகரம் வேங்கிக்கால். இம்மாவட்டம் சுமார் 6191 சதுர.கி.மீ பரப்பளவுக் கொண்டது. இதன் தலைமையகம் திருவண்ணாமலை. இது கிழக்கே காஞ்சிபுரம், வடக்கே வேலூர், தெற்கே விழுப்புரம், மேற்கே தருமபுரி, கிருஷ்ணகிரி உள்ளிட்ட மாவட்டங்களால் சூழப் பெற்றுள்ளது. திருவண்ணாமலை தொண்டை நாட்டைச் சேர்ந்த பகுதியாகும். தொண்டை நாடு 24 கோட்டங்களைக் கொண்டது. அதில் ஒன்றான பல்குன்ற கோட்டத்தில் தான் திருவண்ணாமலை என்னும் பகுதி அமைந்துள்ளது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

தொண்டை மண்டலப் பகுதி சுந்தரச்சோழன் ஆட்சி முதல் அதிராஜேந்திரன் ஆட்சி காலம் வரை சோழர்களின் ஆட்சிக்கு உட்பட்ட பகுதியாக இருந்தது. சோழர்களுக்குப் பிறகு இப்பகுதியைச் சம்புவராயர்கள் என்று அழைக்கப்பட்ட குறுநில மன்னர்களால் ஆளப்பட்டது. இவர்களுக்குப்பின் இப்பகுதி விஜயநகர நாயக்கர்களால் ஆளப்பட்டது. பின்னர் ஆற்காட்டு நவாப்பின் ஆளுகையின் கீழிருந்து ஆங்கிலேயர் ஆட்சிக்குப்போனது. ஆங்கிலேயரை இந்தியர்கள் வெற்றி கண்டதற்குப் பின் (சுதந்திரத்திற்கு பிறகு) வடஆற்காடு மாவட்டமாக வேலூருடன் இணைந்திருந்து, பின்னர் 30-09-1989 முதல் இம்மாவட்டம் திருவண்ணாமலை மாவட்டமாக உருப்பெற்றது.

**திருவண்ணாமலை மாவட்டத்தின் சரித்திரச் சாசனங்கள்**

திருஅண்ணாமலை பகுதியில் திருவலம் வில்வநாதீசுவர் கோயில் மண்டபத்தின் வடக்குச் சுவரில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டில் தொடங்கி, கி.பி.849 ஆம் ஆண்டு கிடைத்திருக்கும் கல்வெட்டுகள் வரையிலானவை மிகவும் பழமை வாய்ந்த கல்வெட்டுகளாக அறியப்படுகின்றன. இக்கல்வெட்டுகள்

> “முதற்சோழர் காலத்தில்,கோயிலின் கருவறைபகுதிதான் முதன் முதலில் தோன்றியிருப்பதாகஆய்வுத் தகவல்கள் தெரிவிக்கின்றன.”1

அதேபோல, அண்ணாமலையார் கோயிலுள்ள கல்வெட்டு சாசனங்களில்,

> “தமிழ், வடமொழி, கன்னடம் உள்ளிட்ட மொழிகளும் காணப்பெறுகின்றன. சிலகல்வெட்டுகள் செய்யுள் நடையிலும் அமைந்துள்ளன”2

பொதுவாக அருணாசலேசர் கருவறை தொடங்கி, முதற் சுற்று மதில்கள், முருகன் சன்னதி, ஏகாம்பரேசுவரர், சிதம்பரரேசுவர், சன்னதி சுவர்கள், கிளி கோபுரத்தின் இருப்புறங்கள், வல்லாள கோபுரம், கிழக்கு மேற்கு கோபுரங்கள், ஆயிரம் கால் மண்டபம், உள்ளிட்ட இடங்களில் பல்வேறு சாசனங்கள் காணப் பெறுகின்றன. அவற்றில்,

> “கிருஷ்ண தேவராயர் (கி.பி.1516), திருப்பணிகள் பல்லவ மன்னனான கோப்பெருஞ்சிங்கனும், அவன் மகன் வேணாவுடையானும் பல்வேறு திருப்பணிகள்” 3

முதலான செய்திகளை அறிய முடிகிறது. இன்னும் இக்கட்வெட்டுகளின் வாயிலாக பிரமநாயனார் பெரியமடத்து முதலியார், வையந்தொழுவார், ஊருக்குப்பெரியார், திருவண்ணாமலை உடையார் ஆகியோர் திருமுற்றத்தே இராசேந்திரசோழன் சாலையினையும் காங்கேயன்மடம், அம்மை மடம் உள்ளிட்டவைகளையும் உருவாக்கப் பல வகையில் உதவியுள்ளனர் என்பதும்,

> “நெய், மிளகு, உப்பு, தயிர், அடைக்காய், வெற்றிலை, சீரகம், வாழைப்பழம், வாழையிலை முதலியன நெல்லளந்து பெறப்பட்டன”4

என்பதுமான குறிப்புகளும்

> “ஸ்ரீருத்திரர், ஸ்ரீமாகேசுரர், ஸ்ரீமாகேசுரக் கண்காணி, தானத்தார், தானபதிமாகேசுரர், தேவகன்மிகள், கோயிற்கணக்கர், ஸ்ரீகாரியஞ்செய்வார்” 5

என்னும் பெயர்கள் திருவண்ணாமலை கோயிலில் பணியாற்றிய மேலாளர்கள் (அதிகாரிகள்) குறித்தக் குறிப்புகளும் கிடைக்கின்றன.

**தொல்லியல் ஆய்வாதரங்கள்**

திருவண்ணாமலை மாவட்டத்திற்கு உட்பட்ட பகுதியில் தொல்லியல் அகழாய்வுகள் தொடர்ந்து நடத்தப் பெறுகின்றன. அதன் மூலம் மோட்டூர், ஆண்டிப்பட்டி, (செங்கம்), படவேடு (போளூர்) ஆகிய இடங்களில் பல தொல் பொருட்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

அவையாவன் திருவண்ணாமலைமாவட்டம், செங்கம் வட்டத்தில் திருவண்ணாமலையிலிருந்து தானிப்பாடி செல்லும் சாலையில் சுமார் 25.கி.மீ தொலைவில் மோட்டூர் அமைந்துள்ளது. இவ்வூர் மலையடிவாரத்தில் அமைந்திருக்கிறது. இங்கு பெருங்கற்காலச் சின்னங்கள் பெருமளவில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. மோட்டூரின் மேற்கிலுள்ள மலையடிவாரப் பகுதியில் 60-க்கும் மேற்பட்ட கல்வட்டங்கள் இருப்பதை முனைவர் பி.நரசிம்மய்யாதம் கள ஆய்வின் மூலம் கண்டெடுத்துள்ளார். இக்கல ˙வட்டங்கள் 3.5.மீட்டலிருந்து 12.மீட்டர் வரை விட்டமுடையன. வேலூர் மலை என்று கூறப்படும் இம்மலையின் கிழக்குப் பகுதி முழுவதும் ஏறக்குறைய 7 ஹெக்டேர் பரப்பளவில் இச்சின்னங்கள் காணப்படுகின்றன. இவையாவும் உள்ளூர் மக்களால் பல்வேறு காலக்கட்டத்தில் சிதைக்கப்பட்டுள்ளன. இந்திய தொல்லியல் பரப்பாய்வுத் துறையாளர் திரு.சீனிவாசன் தலைமையில் 1976–79 ஆம் ஆண்டுகளில் இவ்வாய்வுகள் நிகழ்த்தப்பெற்றுள்ளன.

> “பெருங்கற்காலச் சின்னங்களுள் இடுதுளைகள் என்னும் குழுகளில் காணப்பட்டதாகவும், அவற்றில் நான்கில் ஒன்று மட்டுமே சிதைக்கப் படாமல் இருந்ததாகவும் ஆய்வு முடிவுகள் தெரிவிக்கின்றன.”6

ஈமக் குழிகளில் பெருங்கற்காலப் பண்பாட்டினைச் சேர்ந்த மட்கலன்களும் ஈமப்பேழைகளும் இருந்திருக்கின்றன. ஈக்குழிகள் கிழக்கு மேற்கு நோக்கியவாறு புதைக்கப்பட்டிருந்ததாகவும், மூடிய தன்மையில் அமைக்கப்பட்டிருந்ததாகவும் ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர். இவற்றுடன் செம்பினாலான கிண்ணம், மானின் உருவம், வளையல்கள் போன்ற பொருட்களும் இரும்பாலான கத்திகள், உளி, குறுவாள், அரிய கல்மணிகள் முதலான ஆயுதப் பொருட்களும் கிடைத்துள்ளன.

ஈமக்குழிகளுக்குள் இருக்கும் பேழைகள் ’ஈமப்பேழைகள்’ என்று அழைக்கப்படுகின்றன. அவ்வாறு நான்காவது ஈமக்குழிக்குள் மேற்குப்பக்கத்தில் இருந்த இரண்டு ஈமப்பேழைகளில் மனித எலும்புகள் இருந்திருக்கின்றன. முதல் ஈமக்குழிகள் இருந்த சிறிய ஈமப்பேழைகளில் எதுவுமில்லை. இப்பேழைகள் குழிக்குள் நிறுத்துவதற்கு ஏற்ற கால் பகுதிகளைக் கொண்டிருப்பது சிறப்புக்குரியதாகும். இந்த ஈமப்பேழைகளின் மேற்பகுதியிலும் பக்கவாட்டிலும் மண்பானைகள் இருந்ததாகவும், அவற்றில் சில பானைகளில் இறந்த பறவைகளின் எலும்புகளும் அப்பறவைகளைக் கொல்ல பயன்படுத்தப்பட்ட கத்தி போன்ற ஆயுதங்களும் இருந்ததாக ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர்.

**ஈமக்குழிக்குள் கண்டெடுக்கப்பட்ட மண்பாண்டப் பண்பாடு**

மோட்டூர் ஈமக்குழிகளில் கண்டெடுக்கப்பட்ட மண்பானைகள் அனைத்தும் சக்கரம் கொண்டு வனையப்பட்ட பானைகளாகும். இப்பானைகள் வழவழப்பான தன்மையில் கறுப்பு, சிவப்பு, கருப்பும்-சிவப்பும் கலந்த மாற்று நிறத்திலான பானைகளாகும். அதோடு கால்பகுதி கொண்ட கூம்புவடிவத்திலான மட்கலன்கள், அகன்றவாய் பகுதியைக் கொண்டமட்கலன்கள், நீண்ட கழுத்துடைய மட்கலன்கள், தாங்கிகள், கிண்ணங்கள் போன்றவையும் வண்ண அலங்காரத்துடன் காணப்படுகின்றன. இவை நம் பழந்தமிழரின் பாரம்பரியத்தையும் பண்பாட்டையும் காட்டும் காலக்கண்ணாடிகள் எனலாம்.

**தாய்த் தெய்வக் கல்**

மோட்டூரில் காணக்கிடைத்த கல்வட்டங்களில் மனித உருவத்திலான தாய்த் தெய்வக் கல் ஒன்றையும் ‘நரசிம்மய்யா’ கண்டெடுத்துள்ளார். தாய்த் தெய்வக் கல்லைப் பற்றி ஆய்வாளர் நரசிம்மய்யா,

**E-ISSN: 2581-7140**

**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

> "ஈமச்சின்னம் 1-இல் தான் தாய்த் தெய்வ உருவக்கல் காணப்பட்டது. இது கல்வட்ட அமைப்பில் மூன்று கற்பலகைகளை வட்டமாகக் கொண்டு அமைக்கப்பட்டிருந்தது. தாய்த் தெய்வ வடிவமுடையகல், தெற்கு நோக்கிய நிலையில் நடப்பட்டிருந்தது. இது 3.25 மீட்டர் அகலமும் உயரமும் உடையது. கழுத்தற்று தோள் பட்டைகளுடன் இடையில் இறுகி, மனித உருவத்தைப் போன்று இக்கல் வடிவமைக்கப் பட்டிருந்தது. இதே போன்ற உருவக்கல் ஒன்றினைத் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை விழுப்புரம் மாவட்டம், செஞ்சி வட்டம், உடையாநத்தம் என்னும் ஊரில் கண்டுபிடித்துள்ளது. இதனை இவ்வூர் மக்கள் விசிறிக்கல் என்று அழைக்கின்றனர்." 7

என்றவாறு குறிப்பிடுகின்றார்.

அதேபோல, திருவண்ணாமலைமாவட்டம், செங்கம் வட்டத்திலிருந்து சுமார் 15.கி.மீ தொலைவில் ஆண்டிப்பட்டிஎன்னும் சிற்றூர் உள்ளது. ஆண்டிப்பட்டிக்கு அருகாமையில் இருக்கும் செங்கம், சங்ககாலத்திலிருந்தே வரலாற்றுச் சிறப்பு மிக்க ஊராகத் திகழ்கிறது. சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்படும் 45-க்கும் மேற்பட்ட நடுகற்கள் செங்கம் பகுதியில் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையினரால் இதுவரைக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இந்நடுகற்கள் பல்லவர் காலத்தில் இருந்த வரலாற்றுச் சிறப்புகளை அறிந்து கொள்ள உதவுபவைகளாகத் திகழ்கின்றன. செங்கத்திற்குச் செல்லும் கணவாய் ஒன்று ஆண்டிப்பட்டியின் வழியாகச் செல்கிறது. இது சங்ககாலத் தமிழகத்தின் மேற்குப் பகுதியினையும் கிழக்குப் பகுதியினையும் இணைக்கும் முக்கியசாலையாக இன்று அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. இக்கணவாயின் வழி பயணத்தினூடாகச் சங்க காலத்தில் செங்கம் மிக முக்கிய வணிக நகரமாக விளங்கியிருக்கிறது.

> "இதனை உறுதிப்படுத்தும் விதமாகவே ஆண்டிப்பட்டியில் 1968-ஆம் ஆண்டு கிடைத்தப் புதையலில் 143 ஈயக்காசுகள் கிடைத்தன. இப்புதையலில் கிடைத்தகாசுகள் அனைத்தும் ஒரே விதமானவைகள் ஆகும்."8

இப்பகுதியைத் தொல்லியல் துறையின் சிறப்பு ஆணையர் திரு,ஸ்ரீ.ஸ்ரீதர், திருவாளர் செல்வராஜ், மா.கலைவாணன், திருமதி.வசந்தி ஆகியோரைக் கொண்டு இங்கு 2004–05 ஆம் ஆண்டுகளில் அகழாய்வுகளை மேற்கொண்டனர். அப்பொழுது, ஆண்டிப்பட்டியில் கல்லோடை என்று அழைக்கப்படும் இந்திராநகர் குடியிருப்பில் பெருங்கற்காலச் சின்னங்கள் கண்டெடுக்கப்பட்டன. நத்தமேடு சாம்பல்காடு என்னும் பகுதிகளிலும் சங்ககாலப் பானை ஓடுகள் கண்டெடுக்கப்பட்டன. அதைத்தொடர்ந்து,

> "இப்பகுதியில் மொத்தம் 12 அகழ்வுக் குழிகள் தோண்டப்பட்டு, சுடுமண் தாய்த் தெய்வ உருவங்கள், யானைகள் அணிவகுத்துச் செல்லும் சுடுமண் தாங்கிகள், சுடுமண் காளைமாடுகள் என ஆண்டிப்பட்டியில் மொத்தமாக 655 தொல்பொருட்கள் கண்டெடுக்கப்பட்டன" 9

இவ்வகழாய்வுப் பொருட்களை அடிப்படையாகக் கொண்டு இங்கு வசித்த மக்கள் பெருங்கற்காலம் முதல் கி.பி.12-ஆம் நூற்றாண்டு வரை வாழ்ந்த மக்களாக இருக்கக்கூடும் என்ற கருத்து உறுதி செய்யப்பட்டது. மேலும் இத்தொல்பொருட்கள் இப்பகுதி மக்கள் எத்தகைய வாழ்க்கை முறையைப் பின்பற்றினார்கள் என்பதையும் கண்டு கொள்ள முடிகிறது. அதன் கீழ் இப்பகுதியில் கிடைத்துள்ள சுடுமண்ணால் ஆனவட்டச்சில்லுகளும் வட்டமான உடைந்த நிலையில் இருக்கும் சக்கரங்களும், சதுக்காய்களும் இம்மக்களின் உழைப்பில் உருவான பொழுது போக்கு மற்றும் விளையாட்டுப் பொருட்களை நமக்கு

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

நினைவுருத்துகின்றன. அதே போல் தங்கத் துண்டுகள், தங்க மோதிரங்கள், தங்க இலைகள் என தங்கத்தால் செய்யப்பட்ட பொருட்கள் மற்றும் மணிகள் ஆகியன கிடைத்திருப்பதால் இங்கு வசித்த மக்கள் செல்வச் செழிப்பினராகவும் இருந்திருக்க வாய்ப்பிருப்பது உறுதி செய்யப் பெற்றது. அதேபோல் இப்பகுதியில்,

"சூது பவளம், பச்சை, நீலநிறம், மஞ்சள், பெரில், பளிங்கு, சங்கு, சுடுமண், அரக்கு, போன்றவற்றால் செய்யப்பட்ட 194 வகையிலான அழகிய மணிகள்"10

ஆகியக் கிடைத்திருப்பதாக ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர், இதிலிருந்து இப்பகுதியில் வாழ்ந்த மக்களின் கைத்திறம் நன்கு வெளிப்படுகிறது. மேலும், வணிகத்தொடர்பிலும் இப்பகுதி முன்னிலை வகித்திருக்கிறது.

**நிறைவுரை**

திருவண்ணாமலையில் கிடைத்துள்ள கல்வெட்டுகள் பழமையானதாகவும், பல்வேறு வரலாற்றுக் குறிப்புகளைத் தாங்கியதாகவும் இடம்பெறுகின்றன. அதன் கீழ், திருவண்ணாமலையின் பெயர் காரணம் முதல் திருவண்ணாமலை பகுதியை ஆட்சி செய்த மன்னர்களின் விவரங்கள், திருவண்ணாமலை ஆலயத்திற்குப் பல்வேறு காலச் சூழலில் பல்வேறு மன்னர்கள் வழங்கிய கொடைகள் முதலியவற்றை அறிய முடிகிறது.

திருவண்ணாமலை திருத்தலத்தில் இருக்கும் கல்வெட்டுகளில் மதில் சுவர் கல்வெட்டுகள் குறிப்பிடத் தக்கதாகிறது. அதே போல திருவண்ணாமலைக்கு அருகாமையில் இருக்கும், ஆடையூர் செக்குக் கல்வெட்டுகளும், ஓடையூர் கல்வெட்டுகளும் திருவண்ணாமலை தலத்திற்கான ஆதாரங்களை அதிக அளவில் வெளிப்படுத்துகின்றன. திருவண்ணாமலை மாவட்டத்தில் அமைந்துள்ள மோட்டூர், ஆண்டிப்பட்டி, படவேடு உள்ளிட்ட இடங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ள அகழாய்வுப் பொருள்களும் அப்பொருட்களின் காலக்குறிப்புகளும் திருவண்ணாமலை மாவட்டத்தின் தொன்மையை விளக்கும் வகையில் அமைகின்றன.

**அடிக்குறிப்புகள்**

1. "இக்கல்வெட்டில் காணப்படும் இரண்டுசாசனங்கள் விஜயாலயசோழனுடையதாகும். இம்மன்னன் தான் சரித்திரரீதியாகத் தமிழகத்தைஆண்டமுற்சோழன் ஆவான். இவன் காலம் கி.பி.846 – 880."- வெ.நாராயணசாமி., திருவண்ணாமலை தல வரலாறு., ப.26.
2. மேலது., ப.20.
3. சந்திரசேகரன்., தென்னிந்தியகோயில் சாசனங்கள்., ப.125.
4. தி.வை.சதாசிவபண்டாரத்தார்., இலக்கியமும் கல்வெட்டுகளும்., ப.104.
5. ப. வெ.நாராயணசாமி., திருவண்ணாமலை தல வரலாறு., ப.30.
6. மா..சந்திரமூர்த்தி, கு.வெங்கடேசன்., திருவண்ணாமலை மாவட்டத் தடயங்கள்., திருவண்ணாமலை மாவட்டத்தில் தொல்லியல் அகழாய்வுகள் (க.இ)., ப.21).
7. மேலது., பக்.22-23.
8. மா.சந்திரமூர்த்தி, கு.வெங்கடேசன்., திருவண்ணாமலை மாவட்டத் தடயங்கள்., பக்.23-24.
9. மேலது., பக்.26-27.
10. மேலது., ப.28.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தமிழர் பண்பாட்டில் நீர்வள மேலாண்மையும், தொல்லியல் சான்றும்
# Archaeological Evidence and Water Management in Tamil Culture

**முனைவர் வே.அருட்பாமணி,** உதவிப் பேராசிரியர்,
இந்தோ அமெரிக்கன் கல்லூரி, செய்யார்.

## Abstract

*The purpose of the study has been determined to find out the water management system of Tamil society through archaeological facts. The classical antiquity of the Tamil people shows that they are keenly aware of life is without water and water is the elixir of life. They rely on agriculture and cattle rearing and built their civilizations on the banks of the famous rivers of Tamil nadu. The Tamil Triumvirate kings channeled big rivers and let them to be stored by digging ponds, lakes in the remote places to save water to get used of it when there is much scarcity of water. Thus, the water management system is highly systematic in the Tamil society and the study becomes too much important to research with objectives and that becomes the need of the present study.*

**Keywords:** Water Management, Tamil Culture, Archaeology, Facts

**முன்னுரை**

தொல்தமிழ்க்குடியினரின் வாழ்வியல் முறைகள் பெரும்பாலும் அவர்கள் வாழ்ந்த நிலப்பாங்கினைச் சார்ந்தே இருந்தன. இயற்கையோடு கூட்டுறவாக இருந்தால் அன்றி மனித வாழ்வு சிறக்க முடியாது என்பதை சங்கத்தமிழர்கள் நன்கு அறிந்திருந்தனர். அவர்கள் வாழ்வு இயற்கையுடன் இணைந்து இருந்ததுடன் அவ்வளங்களைப் பாதுகாக்கும் தொன்மைமுறையினையும் அவர்கள் நன்கு அறிந்து இருந்தனர். நகரங்கள் முதன் முதல் தோன்றியது உழவில் சிறந்த மருத நிலத்தில் தான். உழவுத் தொழிலும், நிலையான குடியிருப்பும் நாகரிகம் தோன்றுவதற்குத் துணை செய்தன. இல்வாழ்வான் என்று திருவள்ளுவராற் சிறப்பித்துச் சொல்லப் பெற்றவனும் உழவனே. நாகரிகம் என்பது திருந்திய வாழ்க்கை ஆகும். நாகரிகத்தினும் உயர்ந்த நிலையே பண்பாடு ஆகும். நாகரிகம் என்ற சொல்லையே பண்பாடு என்று ஆண்டுள்ளனர். அதனாலேயே பண்பாட்டுக்கு இடமான கண்ணோட்டத்தை நாகரிகம் என்றார் திருவள்ளுவர்.

“பெயக்கண்டும் நஞ்சுண்டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டுபவர்.” (குறள்: 580)

இங்கு திருத்திய நிலை என்ற பொதுக்கருத்தில் நாகரிகமும் பண்பாடும் ஒன்றே எனக் காண்க. மருத நிலப்பகுதிகள் பெரிதும் வளம் மிக்க ஆற்றுப்படுகைகளையும், குளம் குட்டைகளையும் ஒட்டி அமைந்தன. உணவு தேடும் வாழ்க்கையில் இருந்து உணவு உற்பத்தி என்ற நிலைக்கு மாறியதும் இங்குதான். உலகின் பழம் பெரும் நாகரிகங்கள் எல்லாம் ஆற்றங்கரையில் தான் தோன்றின. தமிழகம் இயற்கையாகவே முப்புறமும் கடலால் சூழப்பட்டது. காவிரி, தென்பெண்ணை, பாலாறு, வைகை, தண்பொருநை எனப் பல ஆறுகளின்

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

நீர்வளத்தை உடையது என்றாலும் பண்டைக் காலத்திலும் நீர்ப்பற்றாக்குறை என்ற இடையூறு சில காலங்களில் ஏற்பட்டன. ஆகையால் தான் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தமிழகத்தை ஆண்டு வந்த மன்னர்கள் குளம் தொட்டு வளம் பெருக்குவதில் பெரும் கவனம் செலுத்தி வந்தனர் என்பதை அறிய முடிகிறது. சங்ககாலச் சோழ பெருவேந்தன் கரிகாலன் காவிரிக்குக் கரைகண்டு நீர்ப்பாசனத்தை நெறிப்படுத்தினான் என்பதை இலக்கியங்களும் செப்பேடுகளும் எடுத்தியம்புகின் மேலும் வாய்க்கால்கள் வெட்டப்பட்டு ஆற்றில் இருந்து பாசனத்திற்காக நீர் பிரிக்கப்பட்டு, கால்வாய்கள் மூலமும், மதகுகள் மூலமும் நீர் குளங்களுக்கும் ஏரிகளுக்கும் கொண்டு செல்லப்பட்டது. மாறவர்மன் அரிகேசரி மதுரைக்கருகில் தம் பெயராலேயே வைகையில் ஒரு மதகு அமைத்தமை வைகைக்கரைக்கல் கல்வெட்டால் புலப்படுகிறது.

ஐம்பெரும் ஆற்றல்களில் நிலம் தான் முன்னுரிமை பெற்றுத் திகழ்கிறது. நிலம் வளம் பெற நீர் அவசியம். மருதம் நிலவளமும், நீர் வளமும் இணைந்ததே சங்க தமிழர் தம் நீர் மேலாண்மைச் சிறப்புகளும், அவர்கள் நீர் வள மேலாண்மைக்குக் கடைபிடித்த அறிவியில் சார்ந்த மிக நுட்பமான நேர்த்தியான செயல்பாடுகளையும் தொன்மை நோக்கில் இப்பதிவில் காணலாம்.

**மூவேந்தர் தம் ஆட்சியில் நீர் வளச்சான்றுகள்**

சங்க காலத்தில் சேர, சோழ, பாண்டிய நாட்டுப் பகுதிகள் மன்னர்களின் நேரடிக் கவனத்தைப் பெற்று நீர்வளம் நிரம்பியிருந்திருக்கிறது. பல்லவர்கள் காலத்தில் பெரும் ஏரிகளைக் குடி நீருக்கும், நீர்ப்பாசனத்திற்கும் ஏற்படுத்தினார்கள். மகேந்திர தடாகம், மகேந்திரவாடி, பரமேச்சுர தடாகம், கூரம், வயிரமேகத்தடாகம் போன்றவை பல்லவர்களால் அமைக்கப்பட்டது ஆகும். பல்லவர்களைப் போன்றே, பாண்டிய நாட்டில் ஆட்சி புரிந்த முற்காலப் பாண்டியர்களும் ஏரிகள் அமைத்துப் பாசனத்தைச் சீர்படுத்துவதில் பெரும் ஈடுபாடு காட்டியிருக்கின்றனர். பாண்டிய மன்னர்கள் பல்வேறு வகையான பாசன முறைகளைக் கையாண்டு இருப்பதைக் கல்வெட்டுகளும் செப்பேடுகளும் நமக்குத் தெரிவிக்கின்றன. பேராறுகள் நெறியாக ஓடும்படி அவற்றின் இருமருங்கும் கரைகள் எழுப்பப் பெற்றன. இப்பேராறுகள் பல சிறிய ஆறுகளாகப் பிரிக்கப்பட்டு அவை நீரற்ற நிலங்களை நோக்கி ஓடும்படி செய்யப்பட்டன. புதிதாக ஏரிகள் குளங்கள் தோண்டப் பெற்று அவற்றில் மடைகள் கட்டு அம்மடைகளின் வாயிலாக நீர் கழனியைச் சென்றடைந்தது. வயல்களுக்கு இடையே கிணறுகள் வெட்டப்பட்டு அவற்றிலிருந்தும் பாசனத்திற்கு நீர் எடுத்துக்கொள்ளப்பட்டது. பாண்டியன் பராந்தக வீரநாராயணனின் (கி.பி.866-611) தளவாய்ப்புரச் செப்பேட்டில் பன்னிருவர் அந்தணர்க்குத் தானமாக வழங்கப்பட்ட பிரமதேயத்தின் எல்லைகளைக் கூறுகின்ற போது பல்வேறு வகையான நீர்நிலைகளின் பெயர்கள் குறிக்கப்பட்டுள்ளன.

**நீர்ப்பாசனம் குறித்த சொற்கள்:-**

ஆறுகள் பிரிக்கப்பட்டு பேராறு, சிற்றாறு எனப்பெயர் பெற்றன. மழைக்காலத்தில் மட்டும் நீர் ஓடி வரும் பகுதி ஓடை எனப்பட்டது. நீர்நிலைகள் ஏரி, குளம், கிணறு எனப் பல்வேறு பெயர் பெற்று விளங்கின. அளவில் பெரியவை பேரேரி, பெருங்குளம், பெருங்கிணறு எனப்பெயர் பெற்றன. நீர் ஓடும் சிறிய வழிகளைக் “கால்” வாய்க்கால் சிறுகால், பெருங்கால், நீர்கோள், கண்ணாறு என்ற சொற்களால் வேறுபடுத்தினர்.

ஏரிகளிலிருந்து நீரைக் கழனிக்குள் கொண்டு செல்ல ஏரிக்கரையில் மடைகள் என்ற பெயரில் நீர் செல்ல வழி அமைக்கப்பட்டது. தளவாய்ப்புரச் செப்பேட்டிலும், கழுகுமலைக் கல்வெட்டுக்களிலும் கூறப்பட்டுள்ள வெள்ளாறு, தென் வைகை போன்ற ஆறுகள் பற்றியும்,

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

குடிநடை ஏரி, அந்தை ஏரி (ஏரியந்தை) காடனேரி, வீரநாரண ஏரி, சாத்தனேரி போன்ற ஏரிகள் பற்றியும், நடையாட்டிக் குளம், குடிநடையேரி ஓங்கிய குளம் வாரிக்கொள்ளிக்குளம், தமாணிக்குளம், ஓலைக்குளம், நற்சிங்ககுளம், வல்லாரை வென்றான் குளம் போன்ற குளங்கள் பற்றியும், ஒன்பது கிணறுகள் பற்றியும், ஊடையான குழி, கணத்தார்குழி, கூற்றன்குழி, அடிகுழி போன்ற குழிகள் பற்றியும், கூற்றன் குழிமி பற்றியும், படுகால் பற்றியும், நீர் கோள், நீர் மாற்றுத்திடல், விரால் உகள் புனல், கரைபொருகனல் போன்ற நீர் நிலைகள் பற்றியும், பருத்தி வயக்கல், கண்ணங்கீரன் வயக்கல், சோமாசி வயக்கல், சாலிவிளை வயல், கார் வயல், கன்னிக்குச்சி வயல் போன்ற வயல்கள் பற்றியும் செப்பேடுகள் கூறுகின்றன.

பத்தாம் நூற்றாண்டில் பாண்டியன் பதாந்தக வீர நாராயணன் தானம் வழங்கிய பிரமதேயத்தை தளவாய்ப்புரச் செப்பேட்டின் மூலம் அறியலாம். இதுவே திருமங்கலங்குறிச்சி என்னும் கிராமமே. செப்பேட்டில் பிரமதேயத்தின் எல்லைகளாக கூறப்பட்டுள்ள நீர் நிலைகள் அனைத்தும் பத்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இவ்வூரில் நான்கு திசைகளிலும் இருந்த நீர் நிலைகள் ஆகும். வெள்ளாறு திருவிருப்பூர் என்னும் ஊரின் அருகில் இருந்து தென்கிழக்காக ஓடுகின்றது. இச்செய்தி திருவிருப்பூர் மூழிநின்று தென்கிழக்கு நோக்கிப் போயின வெள்ளாற்றுக்கும் மேற்கு எனவும், வெள்ளாற்றுக்கும் தெற்கு எனவும் செப்பேட்டில் பொறிக்கப்பட்டுள்ளது. மேலும் பொன்வரன்றி மணி வரன்றி அகில் வரன்றி கரைபொருபுனல் தென் வைகை என்று பொன்னையும் மணியையும் அகில் கட்டைகளையும் அரித்துக் கொண்டு சென்ற செய்தி செப்பேட்டில் உள்ளது. தேன்வைகை என்ற பெயரில் தென்பாண்டி நாட்டில் ஆறொன்று சென்றதாக தளவாய்ப்புரச் செப்பேடு கூறுகிறது.

பராந்தக வீர நாராயணன் எண்ணற்ற ஏரிகளையும், குளங்களையும் நன்செய், புன்செய் நிலங்களை வெட்டு வித்தான் என்பதை,

> "எண்ணிறந்த தடாகங்களும் இருநிலத்தில்
> இயற்றுவித்தும்," என்று செப்பேட்டில் பொறிக்கப்பட்டுள்ளது.

11-ம் நூற்றாண்டைச் சேர்ந்த சுந்தரசோழ பாண்டியனின் (கிபி.1025-1040) கழுகுமலை கல்வெட்டில் சாத்தனேரி பற்றிய செய்தி உள்ளது.

**சங்க இலக்கியங்களில் தொல்லியில் தரவுகள்**

நன்செய் நிலங்கள் வளமுடன் காணப்பட்டன. புன்செய் நிலங்கள் வானம் பார்த்த பூமியாக இருந்தன. நன்செய் நிலங்கள் நதிகளால் நீர் வளம் பெற்றன. நீரைத் தேக்கி வைத்துப் பயன்படுத்துதல் நடைமுறையில் இருந்தது. மிகுதியாக வரும் வெள்ள நீரைத் தம்முள் அடக்கிக்கொள்ளக் கூடிய பெரும் ஏரிகள் இருப்பது ஒரு நாட்டிற்குச் சிறப்பு தரும் என்கிறது *நான்மணிக்கடிகை.* ஆற்றின் மிகுதி நீரை உள்வாங்கிக்கொள்ளக் கூடிய பேரேரிகள் உரிய ஆழ அகலத்துடன் இருக்குமாயின் வெள்ளக் காலங்களில் வரும் அதிகப்படியான நீர் வீணாகக் கடலில் கலக்காமல் முழுமையும். சேமித்துப் பயன்படுத்திக் கொள்ள முடியும் என்பதைச் சங்ககால மக்கள் நன்கு அறிந்திருந்தனர். பலநூறு ஆண்டுகளுக்கு முன் தமிழகத்தின் ஏரிகளிலும் குளங்களிலும் இருந்து நீர் வெளியேற்றும் மதகு அமைப்பு சுரங்கைகளாக இருந்தன. இந்த மதகு அமைப்பே குமிழித்தூம்பு ஆகும். பழந்தமிழர்களின் நீர்மேலாண்மைச் செயல்பாட்டில் இந்த குமிழித்தூம்பு அறிவியல் சார்ந்த மிகநுட்பமான நேர்த்தியான பயன்பாடுடைய படைப்பாகும். (மணிமாறன் தமிழ் ஆய்வுக்கட்டுரைகள், தொகுதி ப.எண்.16) மழைக்காலங்களில் பெய்யும் மிகுநீரை குளங்களில் தேக்குவதற்காக வலிமை உடைய கரைகளை எடுத்து நீரைத் தேக்கிக் காத்தல் மழைநீர் சேகரிப்பின் முழுபயன்பாட்டை நம் கண்முன் நிறுத்துகிறது. சங்க காலத்தில் நீரைச் சேமிக்கக் குளம், ஆறு போன்ற

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

ஆதாரங்களை ஏற்படுத்தினர். ஊருக்கு மிக அருகில் ஆறும், பொய்கையும் இருந்தது. மேலும் ஊரணி குளங்கள் இருந்ததை:

"ஊர் உண்கேணி உண்துறைத் தொக்க
பாசி ஆற்றே" (நற்.399:1-2)

என்ற வரிகள் சுட்டுகின்றன.

வேளாண்மைக்காக நீர்த்தேக்கங்களில் இருந்து புதவின் வழி பாசனத்திற்கான நீர் கொண்டு செல்லப்பட்டது. வயல்களுக்கு நீரினைத் திருப்பிவிட போக்குமடைகள் அமைக்கப்பட்டன. வேளாண் தொழிலின் உயிர்நாடியாக விளங்கும் நீரினைக்காக்க நீர் நிலைகளுக்குக் காவலர்கள் பாதுகாப்புக்கு அமர்த்தப்பட்டனர் (புறம்.24:18-19, புறம்.24:19, புறம்.176:5). நீர் நிலைகள் இலஞ்சி, கேணி, கோட்டகம், ஏரி, மலங்கண், மடு, ஓடை, வாவி, சலந்தரம், வட்டம், தடாகம், நளினி, பொய்கை, குப்பம், கிடங்கு, குளம், கண்மாய் போன்ற பெயர்களால் அழைக்கப்பட்டதை பொருநராற்றுப்படையும் (பொருந.307) பதிவுசெய்கிறது. சோழநாட்டின் சிறப்புக்கு காவிரி என்கின்ற பொன்னி ஆறு தான் காரணம். இந்த ஆறு பாயாவிட்டால் சோழநாட்டுக்குச் சிறப்பு இல்லை. அதனால் தான் பட்டினப்பாலை 5-6 காவிரியாற்றின் பெருமைகளைப் பேசுசிறது. நீர் நிலைகளை அமைத்து மழைநீரைத் தடுத்து நிறுத்தியவர்கள் எவரோ அவரே சிறந்த மன்னர்கள் என்று குடபுலவியனார் பாண்டியன் நெடுஞ்செழியனுக்குப் புறநானூற்றின் வழி விளக்குகிறார். இவ்விடத்தில் புலவர் நிலை பெற்ற புகழுக்கு அறிவுரையாக நீர்வளம் காத்தலை மையப்படுத்துகிறார்.

ஏரிகள் "எட்டாம் பிறைச்சந்திரன்" வடிவில் அமைக்கப்பட்டன. அதனால் கரையின் நீளம் குறைவாகவும் கொள்ளவு அதிகமாகவும் அமையும். நில அமைப்புகளுக்கு ஏற்பக் கரைகளின் வடிவமும் உயரமும் இருந்தன. பெரிய நீர்த்தேக்கங்களை இரு குன்றுகளை இணைத்தே உருவாக்கினர். பாரியின் நாட்டில் அரைவட்ட ஏரிகள் இருந்ததாக கபிலர் கூறுகிறார். பல்லவர்கள் ஆட்சி காலத்தில் அமைந்தது தான் தொடர்குள அமைப்பு முறை (Chain Tanks) ஆகும். அனைத்து குளங்குளும் கால்வாய்கள் வழியாக ஒன்றுடன் ஒன்று இணைக்கப்பட்டன. தமிழகத்தின் எந்த இடத்தில் மழை பெய்தாலும் அதிகப்படியான மழை நீர் இந்தக் கால்வாய்களின் வழியகாப் பாய்ந்து மழை பெய்யாத தொலைதூர மூலை முடுக்கெல்லாம் சென்றடையும்.

எனவே எல்லாக் காலங்களிலும் நிலமானது நீர் வளம் மிக்கதாக இருந்தது. இந்த குளங்கள் பாரம்பரியமிக்க செம்மாந்த வகையில் தொடர்ச்சியாக அமைந்த குளங்களின் அமைப்பு என அழைக்கப்படுகிறது. இந்த குளங்களின் கட்டமைப்பை நாம் ஆராய்ந்து பார்க்கும் போது நம் முன்னோர்கள் அறிவைக் கண்டு வியந்து நிற்கின்றோம்.

சோழர்கள் ஆட்சியின் போது காவிரி நதிப் படுகையில் இருந்து நீரினை நாட்டின் மற்ற பகுதிகளுக்கும் விநியோகிக்கக் கால்வாய்களை வெட்டினர். இக்கால்வாய்கள் கிளை ஆறுகளாகச் செயல்பட்டன. பண்டைய பாசன கட்டமைப்புகளில் மிகச்சிறந்தாக உலகமே பாராட்டுவது சோழ மன்னன் கரிகாலன் கட்டிய கல்லணை ஆகும். ஆழம் காணமுடியாத காவிரியாற்று மணற்படுகைகயில் பெரும் பெரும் கற்களைக் கொண்டு அடித்தளம் அமைத்து அதன்மேல் அணை எழுப்பி காவிரியின் நீர்ப்போக்கினைக் கழிமுகப் பாசனப் பகுதிகளுக்குத் திருப்பி அனுப்புவதே இவ்வணையின் நோக்கம் ஆகும். 2000 ஆண்டுகளுக்கு மேலாகப் பயன்பாட்டில் இருக்கும் இந்தக் கல்லணை தமிழர்தம் நுண்ணறிவை நாம் வியந்து போற்றச் செய்கிறது. பாசனப் பணிகளைச் செய்ய ஆற்றுநீரைக் கொண்டு செல்ல வாய்க்கால்கள் அமைப்பது ஆட்சியரின் கடமை என்றே புறம் கூறுகிறது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**முடிவுரை**

சுனை என்பது மலை ஊற்றினைக் குறிக்கும் "பூவமன்றன்று சுனையுமன்று" எனக் கலித்தொகை கூறுகிறது. நீருடை அளவைச் சுனை என்று செப்பேடு கூறுகிறது. எல்லாக் காலங்களிலும் நீரையுடைய சுனையாக இது வளங்கியது நம் சங்கத்தமிழர்கள் நீரின் தேவை, மற்றும் அதன்பயன்பாட்டின் மதிப்பை அறிந்து முறையாகப் பயன்படுத்தினர். அவர்கள் தம் பண்பாட்டில் நீர்வள மேலாண்மையைக் கடைபிடித்தனர். குளங்கள் சிறுகுளம், பெருங்குளம் என இருவகைப்படும். சிறுகுளத்து நீர் குடிப்பதற்கும், பெருங்குளத்து நீர் பாசனத்துக்கும் பயன்படுத்தப்பட்டது. குளம், கூவல் போன்ற நீர்த்தேக்கங்களைக் கட்டுபவன் சொர்க்கம் அடைவான் என்ற பண்பாடும் நமக்கு அறிவுறுத்தப்பட்டது. குளம் தொட்டு காவு பதித்து வழி சீத்து உளம் தொட்டு உழுவயல் ஆக்கி வளம் தொட்டுப் பாகுபடும் கிணற்றோடு என்று இவை பாற்படுத்தான் ஏகும் சுவர்க்கம் இனிது (சிறுபஞ்சம்.64). மக்கள் மகிழ்வோடும் தந்நிறைவோடும் வாழ நம் தொல்லியல் தரவுகள் அறிந்து அவற்றைப் போற்றுவோம்! நம் வாழ்வியலின் தொன்மை பண்பாட்டைப் பாதுகாப்போம்.

**பயன்மை நூல்கள்**

1. குறள்: 580.
2. நற். 399:1-2.
3. புறம். 24:18-19, புறம்.24:19, புறம்.176:5.
4. பொருந. 307
5. சிறுபஞ்சம். 64.

A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தமிழர் தொல்லியல் அகழ்வாய்வுகள்
# Tamilar Archeological Excavations

**அருணாச்சலம் வேணுகோபாலன்,**
ஆசிரியர், சென்னை.

## Abstract

*The paper culls out the details of the excavations done on the central focus on the Archeological sites of the Tamilar regions all over the world. Tamil people are a universal one and their culture are seen in many continents and in many countries. Many individual geologists and governments of various countries are doing research on it. Indian government also did many researches on the remnants of the Tamil civilization. The survey done at Eelam is also a particular one and is discussed here. Hence, the article gives out the minute details of the remnants of Tamil civilization.*

**Keywords:** Tamilar, Archeological Excavations, Eelam, Relics

மனித குலத்தின்தொல்லியல் அறிவியல் மாபெரும் வரலாற்றுப் பெருமையுடையவை. நாகரீகத் தொன்மையும் பண்பாடுகளையும் உடைய இனம் ஒன்று பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த தொல்லியல் பார்வையை இங்கே நோக்குவோம். ஒரு இனம் எப்படி வாழவேண்டும் என்ற அடிப்படைய உருவாக்கியவர்கள் இவர்கள். கிட்டத்தட்ட கி.மு 4500 வருடங்களுக்கு முன்பே ஓர் அறிவியல் சமுதாயம் வாழ்ந்து அழிந்திருக்கின்றது என்ற ஆராய்ச்சிகளின் முடிவு சோகத்தின் முகடுகளைத் தொட்டுக்கொள்கின்றன. ஆனால் அதன் தொடர்ச்சி நமது வாழ்வோடும் பண்பாட்டுக் கலைகளோடும் ஒன்றுபட்டிருக்கின்றது என்றால் அதனுடைய சிறப்பு எத்தகையது என்று நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். உலகின் எந்த மூலையில் இருந்தாலும் அதன் வரலாற்றுப் படிமங்கள் நமது கொள்கைகளோடு ஒத்திருக்குமானால் அது சிந்திக்க வேண்டியதொரு கருத்தாகும். ஆனால் மிகப்பெருமை வாய்ந்த இந்திய நாகரீகத்தின் பதிவுகளிலே மொகஞ்சதாரோ, ஹரப்பா என்ற இருபெரும் நகரங்களின் சிதைவு என்பது அளவிட்டுக் கூறமுடியாத ஆதாரங்களின் சிதைவாகிப் போனது. சிதிலமடைந்துபோன சித்திர நகரங்களின் இழப்புகளின் தொடர்ச்சி வீழ்ந்துபோன இனத்தின் விழுமியங்களாக நீண்டு கிடக்கின்றன.

இவை மிகத்தெளிவாக ஆராயப்பட்டு மிகப்பழமையான நாகரீகத்தைக்கொண்ட ஒரு இனத்தின் தொன்மங்கள் என்பதில் ஐயமில்லை என்று கூறப்படுகின்றது. இத்தகைய ஒரு வரலாறு இன்று நம்மிடையே இல்லாது போனாலும் அதுபோன்றதொரு பண்பாட்டு வாழ்வியல் நம் கண்முன்னே நகர்ந்துகொண்டிருப்பதை காணமுடிகின்றது. குறிப்பாக இந்தியாவின் பல இடங்களில் மேற்கொள்ளப்பட்ட தொல்லியல் ஆய்வுகளிலே ஆதிச்ச நல்லூர், கீழடி என்ற இரு இடங்களிலும் இதுபோன்ற ஓர் வாழ்வியல் தொன்மங்கள் கிடைப்பதாக ஆராய்ச்சியாளர்கள் சுட்டிக்காட்டுகின்றார்கள்.இதுவும் அழிந்துபோன பழம்பெரும் நகரங்களின் தொடர்ச்சியாக இருக்கலாம் என்பதும் ஆய்வாளர்களுடைய கருத்தாகும். இவை இன்றைய

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

இளைய சமுதாயத்திற்கு முன்னால் நடைபெறும் ஓர் அகழாய்வு என்பதை நாம் உணர முடிகின்றது. இருநூறுக்கும் மேற்பட்ட இடங்களின் வாழ்ந்த ஓர் இனம் இன்று இல்லாமல் போனது எப்படி என்பது மர்மமாக இருக்கின்றது.

மிகப்பழமை வாய்ந்த நாகரீகங்களின் கொள்ளிடமாக இருக்கும் கிரேக்கம், சீனம், இந்தியம், போன்ற நாடுகளின் வரிசையிலே மொகஞ்சதாரோ ஹரப்பா போன்ற நகரங்களின் நாகரீகம் இந்தியாவின் எல்லைக்கு உட்பட்டு இருக்கின்றது. ஆனால் இந்த மண்ணில் இருந்து இடப்பெயர்வு ஏற்பட்டிருந்தாலும் அவர்கள் எங்கோ ஒரு மூலையில் பலவிதமான மாற்றங்களோடு வாழலாம் என்றும் எதிர்பார்க்கப்படுகின்றது. மொகஞ்சதாரோ ஹரப்பா போன்ற நாகரீகப் பதிவுகள் இன்று வாழ்ந்து கொண்டிருக்கும் இனத்தினுடைய வாழ்வியல் பண்பாட்டு விழுமியங்களுக்கு ஏற்றாற்போல் இருப்பதாலும் அதுபோன்றதொரு தொல்லியல் கூறுகளின் பண்பாட்டு விழுமியங்கள் ஆய்வுகளில் அடியொற்றி இருப்பதாலும் இவை அந்த இனங்களின் அடையாளத்திற்குரியவை என்பதை நாம் அறிய முடிகின்றது.

இது போன்றதொரு தொல்லியல் படிமங்களை இனிவரும் காலங்களில் நாம் சந்திக்கும் பொழுது இவை விஞ்ஞானத் தொழில்நுட்பத்தின் நுண்ணாய்வுகளுக்கு உட்படுத்தப்படல் வேண்டும். ஒரு இனத்தின் வாழ்வியல் தொன்மத்தின் தொடர்ச்சிகள் வளரும் சமுதாயத்தின் பார்வைக்குள் வளரும் தொடர்ச்சிகள் ஆக்கப்பட வேண்டும் என்பதே இந்த ஆய்வின் நோக்கமாக அமைகின்றது. சங்க இலக்கியங்களும் சமயக்கருத்துகளும் உரைத்து நிற்கின்ற காவியங்களின் படிமங்களுக்குள் இவை மறைந்திருக்கும் மாணிக்கங்கள் என்பதை சுட்டிக் காட்டவேண்டும். அதற்காக அரும் பணியாற்றும் ஆய்வாளர்களும் தொல்லியல் நிபுணர்களும் பெருமதிப்புக்குரியவர்களாகக் கருதப்படுவார்கள். அது மட்டுமன்றி இது சார்ந்த படைப்புக்களாலும் தொல்லியல் ஆய்வுகளாலும் ஒரு இனத்தின் அல்லது அந்த நாடுபற்றிய தெளிவான அறிவுடைய அரசியல் தலைவர்களும் அத்துறை சார்ந்த பணியாளர்களும் போற்றுதற்கு ரியவர்கள் என்றே கருதமுடிகின்றது.

இந்த உலகம் கடவுளுடைய பரிசு என்கிறார்கள் ஆன்றோர்கள். இல்லை இரண்டு கோள்கள் மோதிக்கொண்டதனால் ஏற்றப்பட்ட வெடிப்பின் சிதறல்கள் தான் இந்த உலகம் என்கிறார்கள் சான்றோர்கள். இறைவன் மனிதன் மிருகங்கள் பறவைகள் என்ற உயிரிகளை விடவும் பல அதிசயங்களைக் கொண்டிருக்கின்றது இந்த உலகம் மனிதர்கள் இந்த உலகத்திலே பல்லாயிரம் ஆண்டுகளாக வாழ்ந்திருக்கின்றார்கள் என்பது மட்டும் உண்மையாக இருக்கின்றது. கல்வியறிவின் வளர்ச்சியும் அவை சுட்டுகின்ற காலக்கணிப்புகளும் மனித இனம் பலகாலமாக எங்கெல்லாம் வாழ்கின்றதோ அங்கெல்லாம் வாழ்வியல் சுவடுகளைப் பதித்திருக்கின்றார்கள் என்பதும் உண்மை. இந்த மனிதப் படைப்பிலும் பல மார்மங்கள் ஒளிந்திருப்பதை சில வரலாற்றுத் தொன்மங்கள் வெளிப்படுத் துகின்றன. ஆனால் அதிசயமான உலக நாகரீக வரலாற்றின் படைப்பாளர்களாக ஒரு இனம் வாழ்ந்திருக்கின்றது என்பதை நினைத்துப் பார்க்க முடியவில்லை. இந்தியாவின் இன்றைய நிலையை சீர்தூக்கிப்பார்க்கின்ற பொழுது அதன் பழமை மிகவும் பாரிய ஒரு அறிவியல் வழித்தோன்றல்களின் அடித்தளமாக இருந்திருக்க வேண்டும் என்று தான் எண்ணத் தோன்றுகிறது. அதே சமயத்தில் இந்த இனத்தின் வாழ்வியல் தொன்மத்தை நாம் இன்னமும் சரியாகக் கணக்கிட முடியாதவர்களாகவே காணப்படுகின்றோம்.

**வேதங்களும் இதிகாசங்களும் புராணங்களும் கூறும் கருத்துகள்**

நான்கு வேதங்களும் புராணங்களும் இதிகாசங்களும் கூறுவது போல இந்திய மக்கள் ஆரியக் கொள்கைகளுக்கு உட்பட்டு வாழ வேண்டியிருந்தது. ஆனால் அவற்றுக்கு மாறாக

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

வேதகாலங்களின் தொடக்க காலமே இந்தியாவின் வரலாறு என்று எண்ணிக் கொண்டிருந்த வர்களுக்கு சிந்துவெளி நாகரீகம் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியிருக்கின்றது. இந்தத் தொன்மப் புதை பொருட்களின் மீளல்கள் உலகத்தின் புருவங்களை உயர்த்தியிருக்கின்றது. இவை சமயக் கொள்கைகளை விட தொன்மங்களுக்கு துணையாக நிற்கின்றன. ஒரு இனத்தினுடைய வரலாற்று உண்மையைப் பதிவுசெய்துள்ளது. இந்திய மண்ணிலே அன்று ஏற்பட்ட காலமாற்றங்களும் பொருளாதார மாற்றங்களும் வர்க்கப் பிளவுகளும் ஆய்வியல் புலத்தில் பல பின்னடைவுகளைக் கொடுத்திருக்கலாம் என்று தான் எண்ணத்தோன்றுகிறது. அதனால் இந்த மனிதநாகரீகப் பண்பாட்டியல் என்பது வேதகாலங்களுக்கும் முற்பட்ட ஒரு வரலாற்றின் பதிவாகக் காணப்படுவதை தொல்லியல் ஆய்வுகள் தெளிவுபடுத்துகின்றன.

**இந்தியாவின் தொன்மையும் ஐரோப்பியர் வருகையும்.**

உலகவரலாற்றிலே பல நாகரீக வளர்ச்சிகளிலும் மொழியியல் வளர்ச்சிகளிலும் பல இனங்களின் தொன்மங்களுக்கும் அடித்தளமாக இந்தியா இருந்து வந்துள்ளது. ஆனால் இந்தியாவின் வரலாற்றிலே மொகஞ்சதாரோ ஹரப்பா போன்ற நகரங்களின் வெளிப்பாடு ஆராய்ந்து கண்டுபிடிக்கப்பட்ட வரலாற்றின் தொடர்ச்சி என்பதையும் அவை இன்னமும் உயிர்த்துக் கொண்டிருக்கின்றன என்பதைத் தான் நாம் பார்க்க முடிகின்றது.

இந்த மண்ணின் தொன்மங்களின் அறிவியல் கண்டு பிடிப்புக்களிலே முன்பு இருந்தவர்கள் அக்கறையற்று இருந்திருக்கலாம். அன்றைய கல்வியறிவும் விஞ்ஞானத் தொழில் நுட்பங்களின் ஆற்றல்களும் இல்லாதிருந்திருக்கலாம். சனத்தொகைப் பெருக்கமும் பொருளாதார வளர்ச்சியின்மையும் தடையாக இருந்திருக்கலாம் என்ற வாதங்களை நாம் ஏற்றுக் கொண்டாலும் காலங்கடந்த வரலாற்றின் உண்மையானது ஆரியரின் வருகைக்குப் பின்னால் எழுந்த மாற்றங்களை விட ஐரோப்பியரின் வருகையே ஆசிய நாடுகளில் எழுந்த பல புரட்சிகளுக்கும் வாழ்வியல் உண்மைகளுக்குமான போராட்டமாக மாற்றப்பட்டிருந்திருக்கின்றது என்றுதான் எண்ணத் தோன்றுகின்றது. சிந்து சமவெளி நாகரீகத்தின் அழிவு ஆரியர் வருகையினால் நடந்த ஒன்றாகவே கருதினாலும் அவை பல்லாயிரம் ஆண்டுப் பழமையானது என்பதை ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிடுகின்றார்கள். ஒட்டுமொத்த இந்திய நாகரீகத்தின் தோற்றத்துக்கும் வளர்ச்சிக்கும் அடித்தளமாக இருந்த ஒரு இனத்தின் எச்சங்கள் எவ்வாறு புதையுண்டு போனது என்பது புரியாத புதிரானதொன்றே. ஒரு வரலாற்றின் உண்மைகளை வெளியுலகத்திற்குக் கொண்டு வந்த ஐரோப்பியர் வருகை பல வரலாற்றாசிரியர்களுக்கு வழிகாட்டியாக அமைந்திருந்தாலும் அதன் உண்மைகள் சில இனங்களுக்கு கசப்பாக இருந்திருக்கலாம். கலகம் பிறக்கும் இடங்களிலே அவற்றுக்குரிய நியாயங்கள் உருவாகும் என்ற இயற்கையின் விதிகளுக்குள் உண்மைகளைத் தேடிப் பயணித்துக் கொள்வோம்.

**உலக நாகரீகங்கள்**

இன்றைய உலக அறிக்கைகளின் படிக்கு கிரேக்கம், இந்தியம், சீனம், என்ற நாடுகளின் வாழ்வியல் படிமங்களிலே இந்த மூன்று நாடுகளும் மனித நாகரீகத்தின் வளர்ச்சிகளுக்குரிய சான்றுகளைக் கொண்டிருக்கின்றன. இன்னமும் கண்டு பிடிக்கப்படாத படிமங்கள் வேறு நாடுகளில் இருந்தாலும் நாம் வியந்து போவதற்கில்லை. பழம்பெரும் நாகரீகத்தின் படிமங்களிலே நதிகரை நாகரீகப் பண்பாடுகளும், தொன்மங்களும், ஆராய்ச்சியாளர்களால் இன்னமும் ஆராயப்பட்டு வருகின்றது.

சிந்துவெளி நாகரீகத்தின் ஆய்வுகளும் ஆராய்ச்சிகளும் வாழ்வியல் படிமங்களும் தொன்மையான பதிவுகளும் ஆராய்ச்சிகளுக்குரிய தடயங்களாக்கப்பட்டிருந்தன. ஆனால்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

இறுதியாக மிகத்தொன்மையான பழங்குடியாகவும் ஆரம்ப மானிட நாகரீகத் தோன்றலுமாகவும் இருந்த ஒரு இனத்தின் தடயங்களைக் கொண்டு அது எவ்வளவு காலம் பழமையானது என்று நிர்ணயிக்க முடிகின்றது. அதற்குரிய இரசாயனப் பகுப்பாய்வுகளால் அவை நிர்ணயிக் கப்படுகின்றன. சிந்துவெளி நாகரீகத்திலே மொகஞ்சதாரோ ஹரப்பா என்ற இருபெரும் நகரகங்களிலும் பழம்பெரும் நாகரீகத்தைக் கொண்ட மக்கள் வாழ்ந்திருக்கின்றார்கள் என்பது உறுதி செய்யப்பட்டது. இங்கு வாழ்ந்தவர்கள் தங்களுடைய இல்லங்களையும் சுற்றாடலையும் மிகநேர்த்தியாக அமைத்திருந்ததும் ஒவ்வொரு இல்லங்களுக்கும் கிணறு கழிவுத் தொட்டி வாய்க்கால் என்பன அழகாக அமைக்கப்பட்டிருந்தன என்பதையும், எல்லோரும் நீராடுவதற்காக பெருங்குளம் அமைக்கப்பட்டிருப்பதையும் வெளிக் கொணர்ந்திருக்கின்றார்கள் ஆராய்ச்சியா ளர்கள். தூய்மையான நீர் உள்ளே வரவும் அழுக்கான நீர் வெளியேறவும் கூடிய முறையில் வாய்கால்களின் பொறிமுறை அமைப்புகள் அழகு செய்யப்பட்டிருந்தது. குளத்தின் இரண்டு பக்கங்களிலும் படிக்கற்கள் அமைக்கப்பட்டும், பெண்கள் ஆடைமாற்றுவதற்குரிய வசதிகளும் செய்யப்பட்டிருக்கின்றது. இது கிட்டத்தட்ட கி. மு 4500ஆண்டுகளுக்கு முற்பட்ட பழம்பெரும் நாகரீகத்தின் அடித்தளமாக இருப்பதையும் நாம் அறியமுடிகின்றது.

உலக நாடுகளின் தேடல்களுக்கும் ஆராய்ச்சிகளுக்கும் நடுவில் இந்தியாவில் ஏற்பட்டிருந்த இந்த பழம்பெரும் நகரத்தின் ஆராய்ச்சி மனித இனத்தின் தோற்றக் காலத்தையும் அளவிட்டுக் கூறியது. அதுவே சிந்துவெளி நாகரீகமாக இருக்கின்றது. மேற்கத்திய நாடுகளின் தொன்மங்களைக் காட்டிலும் ஒரு புதிய பரிமாணங்களோடு முற்றிலும் வளர்ச்சியடைந்த ஒரு இனத்தினுடைய வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டியது சிந்துவெளிக்காலம். மனிதத் தோற்றுவாயின் அடித்தளத்தை தேடிக் கொண்டிருந்த விஞ்ஞானத் தொழில் நுட்பத்தைக் காட்டிலும் ஒரு இனத்தினுடைய இருண்டு போன வரலாற்றுத் தொடர்ச்சி உலக நாகரீக வாழ்வியலுக்கு முத்திரை பதித்துக்கொண்டது. இத்தனை கால இடைவெளிக்கும் அப்பால் மனிதத்துவத்தை உலகிற்கு வெளிக் கொணர்ந்த இந்த ஆராய்ச்சி இந்திய வரலாற்றுப் பெருமையை உணர்த்தும் ஒரு தடயமாகும். எத்தனை பெரிய உண்மைகள் நிறைந்த வரலாற்றையும் இந்த தேசத்திற்கு ஒரு பெருமையையும் எடுத்துக் கூறுகின்றது சிந்துவெளி.மனித குல வரலாற்றிலே எத்தனை பெரிய வாழ்வியலையும் தொன்மத்தையும் கொண்டிருந்த இனத்தின் சிறப்பை இவை எடுத்துக் காட்டுகின்றன.

**மக்களின் வாழ்க்கையும் பொருளாதாரமும்.**

உணவு உற்பத்தியிலும் அவற்றைப் பாதுகாப்பதிலும் சிறப்பான அறிவுத்திறனைக் கொண்டிருந்தவர்கள் சிந்துவெளி சிறப்புக்குரியவர்கள். தானிய களஞ்சியங்களும் வாாழ்க்கைப் பரிமாணங்களும் சிறப்புப்பெற்றிருந்தன. ஒரு மனிதனுடைய வாழ்வுக்குப் பாத்திரங்கள் எவ்வளவு அவசியமானவை என்பதற்கும் தடயங்கள் கிடைத்துள்ளன. அவை கணிமண்ணினால் செய்யப்பட்டிருந்தன. களிமண்ணினால் செய்யப்பட்ட பானைகளையும் சட்டிகளையும் இன்றும் பார்க்கின்றபோது இதன் உண்மைத்துவத்தை ஏற்றுக்கொள்ள முடிகின்றது. ஆனால் வீடுகளைக் கட்டுகின்றபோது சுடப்பட்ட செங்கற்களால் மிக நேர்த்தியாக அமைத்திருக்கின்றார்கள். பெரும் நிலப்பரப்பைக் கொண்ட நாகரீகத் திட்டுக்களில் மக்கள் எவ்வளவு பாதுகாப்பாகவும் சுற்றுச் சூழல் பாதுகாப்போடும் மிகப் பத்திரமாக வாழ்ந்து வந்திருப்பார்கள் என்பதை அகழ்வாய்வுகள் சுட்டிக் காட்டுகின்றன. வீட்டுக் குடியிருப்புகளும் களி மண்திட்டுக்களின் மேலாக உயரமான இடங்களிலே கோட்டை போன்ற அமைப்புக்களும் காணப்பட்டிருந்தன.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**பொருத்தமான வாழ்க்கை முறைகள்.**

சிந்துவெளி நாகரீகத்தின் வாழ்வியல் ஒட்டுமொத்தமான அறிவின் முதிச்சியாகும். பொருத்தமான அழகான அமைப்புடைய வீடுகள். அவை தாளரங்களைக் கொண்டிருக் கவில்லை. மேற்குல அமைப்புக்களைப்போல சிறந்தமுறையில் அமைக்கப்பட்டிருந்தன. கழிவுத் தொட்டிகளும் நீர்வடிகால் அமைப்புக்களும் கழிவுநீரை வெளியேற்றும் கால்வாய்களாலும் இணைக்கப்பட்டிருந்தன.வீடுகளுக்கும் முற்றமும் கிணறும் இருந்தன. வெளியிலே குளிப்பதற்கு பெரும் குளங்கள் அமைக்கப்பட்டிருந்தன. இரண்டு பக்கங்களிலும் படிக்கட்டுகள், பெண்கள் ஆடைகள் மாற்றுவதற்குரிய அறைகள், நீர்கசிவு ஏற்படாமல் இருக்க சுட்டு மெழுகு பூசிய செங்கற்கள், எனப்பலவித அறிவியல் நுணுக்கங்களோடு அமைக்கப்பட்ட வீடுகளில் வாழ்ந்த ஒரு இனத்தின் வரலாறு இன்று இல்லாமல் போய்விட்டது. விளைநிலங்கள் கடின உழைப்பு கல்வியறிவு, இவை ஒவ்வொன்றையும் வைத்து ஒப்பீடு செய்து பார்க்கின்றபோது மக்கள் எவ்வளவு நிலவியல் அறிவுக் கொள்கையுள்ள சமூகமாக வாழ்ந்திருக்கின்றார்கள் என்பதை ஒவ்வொரு தடயங்களும் எடுத்துக் கூறுகின்றன. இந்த அறிவியல் சமூகத்தின் எச்சங்கள் எப்படி மறைந்து போயின என்ற கேள்விகளோடு நாம் வாழவேண்டியுள்ளது.

சரித்திரங்கள் ஒவ்வொன்றும் மனிதவாழ்வியல் கூறுகளைத் தாங்கி நிற்கின்ற தூண்களாக இருப்பதால் இவை இலகுவில் இடப்பெயர்வு கொள்ள வேண்டிய அவசியமில்லா தவை. இருந்த போதும் இந்த இனத்தின் படிமங்களும் பண்புகளும் வாழ்க்கை முறைகளும் ஒரு உலக நாகரீகத்துச் சமுதாயமொன்று அழகாக வாழந்திருக்கின்றார்கள். இவர்களுடைய வரலாற்றைச் சுட்டிக்காட்டுகின்ற வாழ்வியலனுபவங்கள் இருக்கும் வரை அவை நமது நினைவுகளோடு ஒன்றித்திருக்க வேண்டியவைகளே என்பதை யாரும் மறந்துவிட முடியாதவை. ஒருபோதும் உண்மைகள் உறங்குவதில்லை என்ற உண்மைகளை வெளியுலகத்திற்குக் கொண்டுவந்த மனித வாழ்வியற் கூறுகள். இதுபோன்ற வாழ்வியல் தடயங்கள் ஒருபோதும் பேசப்படாமல் மறைந்து விடுவதில்லை. அதற்காக எங்கோ ஒரு மூலையில் இருந்து ஓர் ஆய்வாளன் பிறந்துகொண்டே இருப்பான் என்பதே இலட்சியத்தின் வாழ்க்கைப்பாதை என்பதை நாம் உணர்ந்துகொண்டே இருக்கவேண்டும். ஒரு நாகரீக அடிப்படையைக் கொண்ட ஒரு இனம் பல ஆண்டுகளாக வரலாற்றுப் பண்புகளோடு வாழ்ந்திருக்கும் என்பது உலக ஆய்வுகளின் வெளிப்பாடாக இருக்கின்றது. ஆனால் உலகத்திலேயே மிகத் திறமை மிக்கவர்கள் சுமார் இருநூறு ஊர்களில் உணவு அரசியல் பொருளாதார வளத்துடனும் வியாபார மகத்துவத்துடனும் வாழ்ந்திருக்கின்றார்கள் என்பதை எண்ணிப் பெருமைப்பட்டுக் கொள்ளல் வேண்டும். மிகப் பழமையான தத்துவங்களையுடைய பௌத்த தத்துவத்தின் விழுமியங்களைத் தேடிக்கொண்டிருந்த ஆய்வளர் ஒருவருடைய தேடலில் கிடைத்த நகரங்களின் கூறுகளே மொகஞ்சதாரோ ஹரப்பா என்ற இருநகரங்களாகும்.

கராச்சிக்கும் லாகூருக்கும் இடையில் உருவாக்க முனைந்த றெயில்பாதைக்கு சேகரித்த கற்களின் பதிவுகளில் இருந்துதான் புதையுண்டு கிடந்த புதுமைகள் வெளிக் கொணரப்பட்டன. பழம்பெரும் நாகரிக படிமங்களைப்போல நமக்கென்றும் மிகப்பழமையான ஒரு நகர பண்பாட்டியல் வாழ்வைக் கொண்ட சமூகம் வாழ்ந்திருக்கின்றது என்பதை எண்ணிப்பார்க்கும் போது அவற்றை உள்வாங்கிக் கொள்வதிலே பெருமைக்குரியவர்கள் என்றே கருத முடிகின்றது. உலகவரலாற்று உண்மைகளில் மிகப்பழைய நாகரீகத்தை உடையவர்கள் தமிழர்கள் தான் என்ற அகழ்வாய்வுகள் சுட்டிக்கொண்டிருக்கும் இந்தக்காலத்திலே வாழ்வதும் நமக்குப் பெருமைக்குரியதாகவே இருக்கின்றனது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**அறிஞர்களின் வெளிப்பாடுகளும் தடயங்களும்**

இவற்றின் உண்மைகளை இவற்றின் அடையாளங்களை இவற்றின் மண்படிமங்களை மனிதக்கூறுகளின் வாழ்வியல் பண்பாடுகளை நமது அறிஞர்களும் ஆய்வாளர்களும் எடுத்துக்காட்டியுள்ளனர். தமிழர்கள் காலத்தால் முந்திய ஒரு பதிவுக்குரியவர்கள் என்ற உண்மையை மொழிகளை ஆராயந்து குறியீடுகளுக்கும் நமது எழுத்துக்களுக்கும் உரிய இலக்கணத்தை வெளிப்படுத்திய ஐராவதம் மகாதேவனுடைய ஆராய்ச்சிகள் ஒரு இனத்தினுடைய அடையாளத்தை உறுதிப்படுத்தியுள்ளது. கி.மு. 4500ஆண்டுகளுக்கு முன்பே மொகஞ்சதாரோ ஹரப்பா நகரங்களில் வாழ்ந்த இனம் பேசிய மொழியானது தமிழ்மொழியின் வடிவங்கள் என்பதை உலகிற்கு உணர்த்தியவர். துமிழ்கூறும் நல்லுலகத்தில் வாழும் நாமும் சிறப்புடையவர்கள் என்பதை வரலாறுகள் சுட்டிக்காட்டுகின்றன. அதே பண்பாட்டுத் தொடர் நமது வாழ்வின் பரப்புக்களிலும் நாகரீகத்தின் உச்சமாக விதைக்கப்பட்டிருக்கின்றது என்பதை நாம் இன்று காணமுடிவது பெருமைக்குரியவை.இன்று கீழடி என்றும் இடத்திலே காணப்படுகின்ற தொல்லியல் ஆய்வுகளின் தொடர்ச்சியில் மொகஞ்சதாரோவும் ஹரப்பாவும் நினைவுபடுத்தப்படுவதால் தமிழினமே இந்த உலகத்தின் மூத்த வரலாற்றுக்கு உரித்துடையவர்கள் என்ற உண்மை வெளிவரும் காலம் வெகுதொலைவில் இல்லை. இது கி.மு 4500ஆண்டுகளில் மிகச்சிறப்புடைய வரலாற்றைக்கொண்டிருந்தது என்பதற்கு பல ஆதாரங்களைச் சுட்டிக்காட்டுகின்றார்கள் அறிஞர்கள். அவ்வாறே மாபெரும் ஆராய்ச்சியாளர் ஐராவதம் மகாதேவனுடைய மாணவர்களின் ஆராய்சிகளும் கண்டுபிடிப்புகளும் பானை ஓடுகளின் அடையாளங்களும் பானைகளிலே எழுதப்பட்டிருக்கும் வாசகங்களும் மண்ணுக் கடியில் கிடைக்கப்பெற்ற தாழிகளும் தமிழர் நாகரீகத்தின் எச்சங்களே என்பது உண்மையாகி வருகின்றது.

**ஈழத்திலே தொல்பொருள் ஆய்வுகள்**

ஈழத்து மண்ணிலே கந்தோரடைப்பகுதியில் கண்டெடுக்கப்பட்ட பிராமி எழுத்துக்களை உடைய கல்வெட்டுகளும், பானை ஓடுகளும் அதனை அண்டியுள்ள இடங்களிலும் நாகதேவன் துறைபோன்ற பகுதிகளிலும் கண்டெடுக்கப்பட் தாழிகளும் சிந்து சமவெளிப்பண்பாட்டு நாகரீக விழுமியங்களின் தடயங்களோடு ஒத்திருப்பதையும் ஆய்வாளர்களால் ஒப்பீடு செய்யப்பட்டது. அதே பகுதியல் சில இடங்களிலே பௌத்த நாகரீக வளர்ச்சிக்குரிய அடையாளங்களாகக் காணப்பட்ட விகாரைகளையும் அறியக்கூடியதாக இருந்தது. ஆனால் தமிழர்கள் பௌத்தர்களாகவும் இந்தியாவிலிருந்து இலங்கை சீனா போன்ற நாடுகளுக்குப் பரம்பியிருப்பார்கள் என்ற கருத்துகளுக்கிணங்க ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டபோது அந்த ஆய்வுகளும் தேடல்களும் அரசாங்க தொல்பொருள் ஆராய்ச்சிதுறையினரால் நிறுத்தப் பட்டிருப்பதையும் நாம் அறிய முடிகின்றது. யாழ்ப்பாணத்தில் கல்வி அறிவியல் தொன்மங்களை கொண்டிருந்த பரம்பரையாக வாழ்ந்த பலர் ஏற்கனவே இந்த ஆராய்ச்சிகளின் ஆய்வுகளுக்குரிய கருதுகோள்களை வெளியிட்டிருந்தார்கள். யாழ் பல்கலைக்கழகப் பேராசிரியர்களும் மொழிப்பற்றுடைய அறிவியலாளர்களும் இவற்றிலே அதிக ஆர்வமாக இருந்தனர். பண்டிதமணி, கைலாசபதி, சிவத்தம்பி போன்றவர்களும் தொல்லியல் ஆய்வுகளுக்கு ஆதரவு வழங்கியவர்கள். ஆனால் நாட்டின் அரசியல் காரணங்களாலும் ஏற்பட்டிருந்த அமைதியின்மை காரணமாகவும் இவை தொடரமுடியாமல் போனது.

ஆனால் யாழ் மண்ணில் எழுத்தாளர் சமூகத்தினரால் எமது மண்ணின் வரலாறுகளும் தொல்லியல் ஆராய்ச்சிகளும் தேடப்பட வேண்டிய ஒன்று என்பதை வெளிப் படுத்தியிருக்கின்றார்கள். குறிப்பாக யாழ்ப்பாணத்தில் அரச அதிபராக பலகாலம் பணியாற்றிய

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

செங்கை ஆழியான் என எல்லோராலும் அழைக்கப்படுகின்ற புவியில் துறையில் சிறந்து விளங்கிய செ.குணராசா மாபெரும் படையப்பாளி ஆவார். இவர் தனது கதைகளிலே இயற்கை அமைப்புக்கள், குன்றுகள், பள்ளங்கள், அருவிகள், தீவுகள், தரைகள், போன்ற பல பகுதிகளின் புவியில்சார் மண்வளங்களைச் குறிப்பிடுகின்றபோது அதன் அமைப்புக்களுக்கேற்ற தொல்லியல் காரணங்களை மிகத்தெளிவாகச் சுட்டிக் காட்டியிருக்கின்றார். தமிழகத்திற்கும் இலங்கைக்கும் மிக நெருங்கிய தொடர்புகள் இருப்பதால் யாழ்ப்பாணம், காங்கேசன்துறை, மன்னார் திருகோணமலை, போன்ற இடங்கள் பல வணிகவியலாளர்களுக்கு இறங்கு துறைகளாக இருந்தமையாலும் இவற்றுக்கூடாக பலர் வந்திருக்க வாய்ப்புகள் உண்டு என்பதை சுட்டிக்காட்டுகின்றனர். அதேவேளை இராமயணத்தின் கதாநாயகனாக விளங்கும் இராமனையும், இலங்கையின் அதிபதியாக விளங்கிய இராவணனுக்கும் இணைப்பை வெளிப்ப டுத்துகின்ற இதிகாசமான இராமாயணமும் காலத்தால் முந்தியதாக இருந்தாலும் சமயப்பாரம் பரியங்களோடு கூடிய வாழ்வியல் பண்புகள் ஒத்தவையாகக் காணப்படுகின்றது. அதுபோலவே சம்பந்தப் பெருமானின் 316வது திருப்பதிகமாக விளங்கும் திருகோணமலைப் பதிகத்தில் நிரைகழல் அரவம் என்றுதொடங்கும் பதிகத் திருமுறையில் இலங்கையின் மாண்பு, மண்சிறப்பு அறம், தருமம், இராவணனுடைய ஆட்சியையும் குறிப்பிடப்படுகின்றது. இதுபோலவே திருக்கேதீஸ்வரமும் நாயன்மார்களால் பாடல் பெற்ற தலமாக விளங்குகின்றது. இவை காலத்தால் பிந்திய வரலாறாக இருந்தாலும் மொழியியல் பண்பாட்டுக் கூறுகளுக்கிடையே மொழியின் வளச்சியோடு தமிழர்களின் வாழ்வியல் பண்புகளை உணர்த்தப்படுவதை பார்க்க முடிகின்றது. அது மட்டுமன்றி தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும் என்ற மகாகவி பாரதியாரின் கருத்தைத் தாங்கியவர்களாக ஈழத்தமிழர்கள் மொழியையும் இலக்கியங்களையும் சைவசமயத்தையும் உலகநாடுகளிலே வளர்த்து வருகின்றார்கள். இவைகளும் வருங்கால சமுதாயத்தின் அடையாளம் மாறாத பண்புகளை வளர்க்கவும் காலமாற்றங்களால் எழுகின்ற மொழியின் வளர்ச்சியை உறுதிப்படுத்தும் காரணியங்களாகவும் இவை பார்க்கப்படுகின்றது.

**அன்றைய ஆய்வுகளின் தொடர்ச்சியும் இன்றைய ஆய்வுகளின் நீட்சியும்**

அறிவியலாளர்கள் கூறுவதைப்போல சிந்துவெளியின் பதிவுகளும் சங்ககாலத்தின் தொடர்ச்சிகளுக்கும் இன்றைய தொல்லியல் ஆய்வுகளின் நீட்சியும் சமூகவரலாற்று விழுமியங்களின் நீட்சியும் அடித்தளத்துடன் தொடர்புகள் உடையவை என்று அறியக் கிடக்கின்றது. ஒரு மொழியானது கருத்துக்கள் மாறுபடாத பரிமாணங்களோடு புதுமைகளை ஏற்றுக்கொள்கின்றது என்பதிலே நாம் கவனம் செலுத்த வேண்டும். மிகப்பழைய காலத்திலே குறியிடுகளாகவும் பிராமியாகவும் வளர்ந்து வந்த ஒரு மொழியானது கருத்துக்கள் மாறுபடாத பரிமாணங்களைக் கொண்டு வளர்ச்சியடைகின்றன என்பதை உணரும் ஒவ்வொருவருக்கும் மொழியால் அடைந்த வெற்றிகளே சான்றுகளாக இருக்கின்றன. ஆனால் தொல்லியல் காட்டும் அடையாளங்களும் கலாச்சார வாழ்வியலும் மரபுகளோடு ஒத்திருக்கின்றபோது அவை அங்குவாழுகின்ற மக்கள் சமூகத்தினால் ஏற்றுக் கொள்ளப்படுகின்றது என்று தான் கொள்ள முடிகின்றது.

ஒரு மனிதனுடைய தேவைகளை வெளிப்படுத்துபவை மொழிகளாகும். ஆனால் இங்கு பேசப்பட்ட மொழியானது தொல் தமிழ் எழுத்துக்களின் வடிவங்களை ஒத்திருக்கின்றது. இந்த மொழியைப் பேசியவர்கள் தமிழினத்தின் பரம்பரையைச் சார்ந்தவர்களாகக் காணப்பட்டனர். இவர்களும் பல கலைகளைக் கற்றுக் கொண்டவராகத் தெரிகின்றது. மெகஞ்சதாரோ ஹரப்பாவில் கண்டுபிடிக்கப்பட்ட வெண்கலத்தினால் ஆன நாட்டியப் பெண் உருவச்சிலை.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

தாடியுடைய ஒரு மனிதன் சுண்ணாம்பினால் செய்யப் பட்டிருந்தது. வசதிபடைத்த பெரியவர்கள் இறந்து போனால் அவர்களை தாழிகள் எனப்படும் பெரிய பானையில் அவர்கள் அணிந்திருந்த ஆபரணங்களோடு அடக்கம் செய்துவிடுவார்கள். கடல் வாணிகங்கள் செய்திருப்பதும் மொசப்பததேமியா எகிப்த்து சுமேரியா ஈராக் போன்ற நாடுகளுடன் வணிகத்தொடர்பு இருந்துள்ளதையும் அறிய முடிகின்றது. இந்த மாபெரும் பெருமைக்குரிய இடம் எப்படி அழிந்தன என்பது புதிரானதே.

சிந்துவெளி நாகரீகத்தின் ஆற்றுப் படுக்கைகளிலும் பள்ளத்தாக்குகளிலும் கிடைத்த இலச்சனைகளும் சின்னங்களும் சமய வழிபாட்டு முறைகளையும் அந்த வழிபாடுகளில் பெண்தெய்வ வழிபாடு காணப்படுவதையும் உறுதிப்படுத்துகின்றார்கள் தொல்லியல் ஆய்வு நிபுணர்கள். அங்கே கண்டெடுக்கப்பட்ட அடையாள முத்திரைகள். குறியீடுகள். இலச்சினைகள் சைவத்தையும் தமிழ்மொழியையும் உணர்த்துவதாகவே காணப்படுகின்றன. சிந்துவெளி நாகரீகத்தின் பரம்பலும் வாழ்வியலும் ஒரு சைவசமயத்தின் மார்க்கத்தினை உறுதிப்படுத்துவதாக அமைந்திருந்தன. இவை நமது பாடவிதானங்களுக்கு அமைவாகவும் இருந்ததை நாம் மறந்துவிட முடியாது. சிந்துவெளி நாகரீகத்தின் ஆற்றுப்படுக்கை அடையாளங்கள் முன்பு ஒரு இனம் மரபுவழிச் சமூகமாக வாழ்ந்திருக்க வேண்டும் என்ற எண்ணத்தை மொழிக்காகவும் சமயத்திற்காகவும் போராடிய தமிழ் அறிஞர்களின் ஆற்றல்களை நாம் போற்றுதல் வேண்டும். இந்த உலகம் காலத்தின் இயக்கத்துடன் இணைந்திருக்கின்றது. காலமும் இடமும் ஒரு வரலாற்றுப்பதிவாக இருக்கின்றது. இலக்குகளை நோக்கிய இயக்கங்களாக இலக்கியங்கள் நகர்ந்தாலும் வரலாற்றுப் பரிமாணங்களை எடுத்துரைக்கும் தொல்லியல் ஆராய்ச்சிகள் ஒரு காலத்தின் உண்மைகளை தாங்கி நடக்கின்றன. உலகம் இயற்கையின் சுழற்சிக்குள் நகர்ந்து கொண்டிருக்கின்றது. இங்கே பல உண்மைகளும் நம்பமுடியாத வரலாற்றுப் படிமங்களும் மனிதவாழ்வின் எச்சங்களாக வெளிப்படுகின்றபோது தான் பல அதிசயங்களையும் நாம் சந்திக்கின்றோம். அவற்றின் தடயங்கள் ஒரு இனத்தின் அடையாளமாக காணப்படுவதால் ஆராய்ச்சியாளர்களின் தேடலுக்கு தடயங்களாகிவருகின்றன.

இந்தத் தேடல்கள் ஏன் செய்யப்படவேண்டும். சரியான உண்மைகளைச் சொல்லப்படாத முடிவுகள் மனிதகுலத்திற்கு நன்மை பயக்கப் போவதில்லை. இந்த ஆய்வுகளின் படிக்கு ஒரு இனம் ஆதித் தமிழினத்தின் வரலாறுகளோடு இணையான கலாசச்சாரத்தைக் கொண்டிருந்தால் அவற்றால் நாம் அடையப்போகும் நன்மைகள் எவை என்பதையும் உலக அரங்கிலே நமக்கு ஏற்படக்கூடிய நட்புறவுக் கொள்கைகளின் அங்கீகாரமும் வளரும் தலைமுறைக்கு எவ்வகையா உரிமைகளை வழங்கப்போகின்றன என்ற தேடல்களையும் நாம் ஆராயவேண்டியவர்களாகவே இருக்கின்றோம். பழைமையான வரலாறுகளை பலர் மறந்து போகலாம். ஆனால் அவர்களுடைமய பண்பாட்டு விழுமியங்கள் அவர்களுடைய மரபியல் வாழ்வோடு இணைந்து இருக்கும். நாகரீகம் காலத்துக்காலம் பல புதிய ஆடைகளை மாற்றிக் கொண்டே இருக்கின்றது. ஆனால் மரபுவழி வந்த பண்பாடு மாறாது என்பதும் உண்மையயாகும்.

மானுட நாகரீக வளர்சச்சிக்கு ஒருபோதும் சளைத்திருக்காத தொன்மக்குடிகளின் வாழ்வியல் பண்புகளை நாம் ஆரையவேண்டிய சூழலுக்குள் இருக்கின்றோம்.

நாம் தமிழர்கள். சைவசமயத்தையும் தமிழ்மொழியையும் நம் பண்பாட்டு வாழ்வியல் விழுமியங்களின் சிகரங்களாக்கிக் கொள்ளவேண்டும். இந்திய வாழ்வியல் கலாச்சாரங்களுக்கூடாக கடைப்பிடிக்கப்படுகின்ற மதங்கள் நம்பிக்கைகளின் தொகுப்பாக இருப்பதால் நாம் அறிவார்ந்த சிந்தனைகளின் தொகுப்பாக விளங்கும் சைவத்தை பண்பாட்டின்

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com


வழியாக்கிக்கொண்டு வாழ்வதோடு நின்றுவிடாமல் மொழியே நமது இனத்தின் அடையாளம் என்பதை உறுதிப்படுத்திக் கொண்டு வாழும் போது நமது வாழ்வியல் தொன்மங்களும் பண்பாட்டின் எச்சங்களும் உயிர்புள்ள மனித நேயம் உருவாக்கும். அதனால் இன்றைய ஆதாரங்கள் நாளைய வாழ்வியலுக்கு அடித்தளங்கள் என்ற சிந்தனையோடு மொழியையும் இன அடையாளத்தையும் உறுதிப்படுத்திக் கொள்ள இதுபோன்ற தேல்களும் சிந்தனைகளும் நமக்கு என்று வழிகாட்டி நிற்கும். அதனால் வரலாறுகளை மறந்து வாழ்வது ஒரு இனத்தின் வாழ்வியலுக்கு தடைபோடுவது போலாகும். எனவே எந்த உலகத்தில் வாழ்ந்தாலும் எங்கள் வாழ்வும் எங்கள் வளமும் மங்காத புகழ் என்று சங்கே முழங்கு என்று வாழ்வோமாக.

### துணைநின்றவை


1. சேதுப்பிள்ளை.ரா.பி., தமிழகம் ஊரும் பேரும், தமிழ் நிலையம், சென்னை, 2009.
2. தாமோதரன்.கு., தொல்லியல் நோக்கில் தமிழகம், தொல்பொருள் ஆய்வுத்துறை, தமிழ்நாடு அரசு,1999.
3. திருநாவுக்கரசுக.த., சிந்துவெளித் தமிழ் வடிவங்கள், மணியகம், சென்னை, 1982.
4. நடனகாசினாதன், “தமிழக நில அகழாய்வுகள்”, உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு, ஆய்வுமலர், கோவை, 2010.
5. பவுந்துரை. இராசு, பண்டைய தமிழக வரைவுகளும் குறியீடுகளும், உலகத் தமிழாராய்சி நிறுவனம், தரமணி, சென்னை,2009.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com


# சோழ மண்டலத்தில் மராட்டியர் சார்ந்த கல்வெட்டுகளும் செப்பேடுகளும
# Culverts and Copper Platelets on the Marathas of the Chola Region

**முனைவர். எஸ்.அலமேலுமங்காள்,** உதவிப் பேராசிரியை
மீனாட்சி மகளிர் கல்லூரி, கோடம்பாக்கம், சென்னை – 600 024.

## Abstract

*The article has the plan to find out the deeds of good done by the Marathas who had succeeded the Nayaks in the Clola region after the fall of the Cholas.The culvert and plate evidences show evidently that many of the Maratha kings did dedicated efforts to the people of their occupied area. They were patrons to many schools and inns to the way of Rameswaram. They even built a hospital relied on Sidda Medicine on the time. Most probably, Shambaji is the noted of the Marathas who did many reformations. Nevertheless, the purpose of the article is to bring out the glimpses of such informations from the archaeological evidences.*

**Keywords:** Culverts and Copper Platelets, Marathas, Chola Region

பண்டைக் காலத்தில் நீண்ட காலம் அழியாதிருக்க வேண்டும் எனக் கருதப்பட்ட செய்திகள் கற்களில் வெட்டப்பட்டன. இவ்வாறு கல்லில் பொறிக்கப்பட்ட செய்தியே கல்வெட்டு எனப்படுகின்றது. பெரும்பாலும், மன்னர்களின் ஆணைகள், அவர்கள் செய்த பணிகள் போன்றவை கல்வெட்டுக்களாகப் பொறிக்கப்பட்டன. இவை தவிர வீரர்கள், பிரபுக்கள், அதிகாரிகள் போன்றோர் தொடர்பிலும், முக்கிய நிகழ்வுகள் தொடர்பிலும் கல்வெட்டுக்கள் உள்ளன.

கல்வெட்டுக்கள், பெரும்பாலும் பொதுமக்கள் பார்பதற்காக வெட்டப்படுவதால் இவை பொது இடங்களிலேயே அதிகம் காணப்படுகின்றன. கோயில்கள், குகைகள், பொது மண்டபங்கள், வெற்றித் தூண்கள், நடுகற்கள் எனப்படும் இறந்தோர் நினைவுக் கற்கள் என்பவற்றில் கல்வெட்டுக்களைக் காணலாம். கல்வெட்டுப் பொறிக்கும் வழக்கம் உலகின் பல பகுதிகளிலும் காணப்பட்டுள்ளது. தொல்லியல் ஆய்வுகள் இறந்துபட்ட அல்லது இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கின்ற பல்வேறு மொழிகளிலுமான கல்வெட்டுக்களை வெளிச்சத்துக்குக் கொண்டுவந்தள்ளன.

கல்வெட்டுக்கள் பல ஆயிரம் ஆண்டுகள் நிலைத்திருக்கக் கூடியவை ஆதலால், மிகப் பழங்கால வரலாற்றுச் செய்திகள், நிகழ்வுகளுக்கான நம்பகமான சான்றுகளாக இவை திகழ்கின்றன. பல கல்வெட்டுக்கள் ஒரு மொழியில் மட்டுமன்றி, ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகளிலும் ஒரே செய்தியைக் குறிக்கும்படி அமைந்துள்ளன. இத்தகைய கல்வெட்டுக்கள் வழக்கொழிந்து மறக்கப்பட்டுவிட்ட மொழிகள் பலவற்றை வாசித்து அறியவும் அவற்றை மீட்டுருவாக்கம் செய்யவும் உதவுகின்றன. பண்டை எகிப்திய மொழி இவ்வாறு மீட்டுருவாக்கம் செய்யப்பட்டதே. பல்வேறு காலகட்டங்களைச் சேர்ந்த கல்வெட்டுக்களை ஆய்வு செய்யவதன் மூலம் எழுத்துக்களின் படிமுறை வளர்ச்சிகளையும் அறிந்துகொள்ள முடிகிறது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

தமிழ் நாட்டின் மிகப் பழைய கல்வெட்டுக்கள் நடுகற்களில் வெட்டப்பட்டவை ஆகும். தொல்காப்பியம் முதலான பழந்தமிழ் நூல்களிலுள்ள செய்திகளும் இதற்குச் சான்றாக அமைகின்றன. தொல்காப்பியத்தில், போர்க்களத்திலே வீரச்சாவு அடைந்தோருக்குக் கல்லெடுத்தலும், அக்கல்லில் அவர்தம் வீரச் செயல்களைப் பொறித்தலும் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன.

இவ்வாறாக நடுகற்களில் தோன்றிய கல்வெட்டுக்கள் பல்லவர் காலத்தில் வேறு தேவைகளுக்கும் பயன்படத்தக்கதாக வளர்ச்சியடைந்தன. பல்லவர்களின் தொடக்ககாலக் கல்வெட்டுக்கள் பிராகிருத மொழியிலும். இடைக்காலத்தில் சமஸ்கிருதத்திலும் கி.பி ஆறாம் நூற்றாண்டு முதல், பிற்காலப் பல்லவர் காலத்தில் தமிழிலும் பொறிக்கப்பட்டன.

இவர்களுக்குப் பின்னர் சோழ மன்னரும், பாண்டியரும் கல்வெட்டுக்களைப் பொறிக்கும் வழக்கம் உடையோராக இருந்தனர். இதனால் கல்வெட்டுக்கள் பெரிதும் வளர்ச்சியுற்றன. இவ்வாறு பொறிக்கப்பட்ட ஆயிரக்கணக்கான கல்வெட்டுக்களின் மூலமே தமிழ் நாட்டின் இடைக்கால வரலாற்றின் பெரும்பகுதியை அறிந்து கொள்ள முடிந்தது.

அதிகமான செப்பேடுகள் வழங்கியவர்கள் பல்லவர்கள் க்ரந்த எழுத்து தமிழ் இரண்டும் உண்டு தொல்லியல் துறை கண்டுபிடித்த அபராஜிதவர்மனிர் வேளஞ்சேரிப் பட்டயம் சிறப்பு வாய்ந்தது கல்வெட்டு மூலம் மராட்டியர் செய்த நன்மைகள் இக் கட்டுரையின் வழி கணலாம். கி.பி. 1676-ஆம் ஆண்டில், தஞ்சை நாயக்கரிடமிருந்து மராட்டியர் கைக்கு மாறிற்று. செங்கமல தாசனை விரட்டி எக்கோஜி என்னும் வெங்காஜி தஞ்சையைக் கைப்பற்றினார். இவர் வீர சிவாஜியின் தம்பியாவார். அவருடைய வழியினர் 128 ஆண்டுகள் தஞ்சை நாட்டை ஆண்டனர். மராட்டிய மன்னர்கள் மக்கட்குச் செய்த பணிகள் பலவாகும்.

**மராட்டியர் செய்த நன்மைகள்**

மராட்டிய மன்னர்கள் பல இடங்களில் குளங்களை வெட்டினர். இதனால் ஏழைகட்குப் பிழைப்புக் கிடைத்தது நாடெங்கணும் பள்ளிகளையும் சத்திரங்களையும் நிறுவினர். மருத்துவ மனைகளை ஏற்படுத்தினர். இந்து சமயப் பற்றுடையோர். எனவே, கோயில்கட்கு நிலங்களை எழுதி வைத்தனர். அணி கலன்கள் செய்து கொடுத்தனர். கட்டிடம், சிற்பம், இசை, ஓவியம் என்னும் கலைகளை வளர்த்தனர். கலைஞர்களைப் போற்றிக்காத்தனர்.

பிரதாப்சிங் என்னும் மன்னர் தஞ்சையிலும், மணமேற்குடியிலும், நீடாமங்கலத்திலும் சத்திரங்களை நிறுவினார். இவற்றையொட்டிப் பள்ளிக் கூடங்கள் இருந்தன. ஏழை மாணவர்கள் உணவும் தலைக்கு எண்ணெயும் பெற்றுக் கல்வி கற்றனர். துல்ஜாஜி என்பவர் மீன்மிசல், தாராசுரம், அம்மா சத்திரம், இராசாமடம் ஆகிய இடங்களில் சத்திரங்களை அமைத்தார். இராசா மடத்தில் இன்றளவும் பல மாணவர்கள் கல்வி பெறுகின்றனர். சரோபோஜி மன்னர் இவர்களில் குறிப்பிடத் தக்கவராவார். இவர் ஒரத்த நாட்டில் தன் காதற் கிழத்தி முத்தம்மாளின் பெயரால் சத்திரமும் பள்ளியும் அமைத்தார். தஞ்சையில் மேனாட்டு மருந்தகம் ஒன்றும், இந்திய மருந்தகம் ஒன்றும் அமைத்தார். இவற்றுக்கு மானியங்கள் விடப்பட்டன. இவர் சிறந்த கல்வியாளர். ஆங்கிலத்திலும், பிற ஐரோப்பிய மொழிகளிலும், வட மொழியிலும் பயிற்சி மிக்கவர். அறிவியல், கலை, வான நூல், மருந்த்துவம், சோதிடம் அனைத்திலும் நாட்டமும் பயிற்சியும் மிக்கவர். இவர் வட மொழியிலும், ஆங்கிலத்திலும் ஆயிரக்கணக்கான ஏட்டுச் சுவடிகளைத் திரட்டி வைத்தார். அவை சர சுசவதி மகால் என்ற நூல் நிலையத்தில் இன்றும் உள்ளன. இலக்கியம், கணிதம். சோதிடம், வான நூல் மருத்துவம் முதலிய பல துறைகயைச் சார்ந்த ஏட்டுச் சுவடிகள் உள்ளன. ஆங்கில அரசு தமக்குக் கொடுத்த உதவித் தொகையின் பெரும் பகுதியை இதற்காகச் செலவிட்டார். கொட்டையூர் சிவக்கொழுந்து

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019
Available at: www.ijtlls.com

தேசிகரின் உதவியோடு மருத்துவ நூல்களைச் செய்யுள் வடிவில் உருவாக்கினார். சரசுவதிமகாலில் 30433 வட மொழியிலும் பிறமொழியிலும் அமைந்த ஏட்டுச் சுவடிகளும், 6,426 அச்சிட்ட நூல்களும் உள்ளன என்பர். இந்தியாவில் உள்ள கையெழுத்துச் சுவடி நூல் நிலையங்களில் குறிப்பிடத்தக்கதிதுவாகும். திருவையாற்றில் வடமொழியும் தமிழும் இசையும் கற்பிக்கும் கல்லூரியை நிறுவினார். தஞ்சை மாவட்டத்தில் இதனொடு தொடர்புடைய பல பள்ளிகள் உள்ளன.

தஞ்சைக் கோயிலில் உள்ள சில கல்வெட்டுக்களால் இவர் செய்த வேறு சில தொண்டுகளை அறியலாம் திருக்கோயிலின் வடக்குப் பிரகாரத் தளத்தில் சில பகுதிகளைச் செப்பனிட்டுள்ளார்: வடக்குப் பிரகாரத்திற்கு அருகேயுள்ள மண்டுகத்தீர்த்தம் என்னும் குளத்தைப் புதுப்பித்துக் கட்டினார் இங்குள்ள கணேசர் கோயிலின் கருவறையை அடிமுதல் முடிவரையில் புதுதுப்பித்த ததோடு, புதிய கணேசர் சிலையைச் செய்து வைத்தார். இதற்கு மகாமண்டபமும், அர்த்த மண்டபமும் கட்டிக் கொடுத்துள்ளார். வேறொரு கல்வெட்டு அவர் செய்த பல திருப்பணிகளையும் குறிப்பிட்டுள்ளது. தன்னைத் தஞ்சையின் மன்னனாக அருள் புரிந்ததற்கு நன்றியாக, பல அணிகளையும் வெள்ளிக் கலங்களையும் செய்து கொடுத்தார். இதுமட்டுமன்றி, முன்னோர்கள் செய்த அறக்கொடைகள் அனைத்தையும் உறுதி செய்தார் இராமேசுவரத்திலும், சேதுக்கரையிலும் இருந்த இரண்டு சத்திரங்களோடு முன்பே 16 சத்திரங்கள் இருந்தன. இவையனைத்தும் அரண்மனைப் பெண்டிர் பெயரால் அழைக்கப்பட்டன. தனது அன்புக் குரிய முத்தம்மாளின் நினைவாக. இராமேசுவரம் போகும் சாலையில் குளங்கள் வெட்டினார்: பெரிய அன்னச்சாலை நிறுவினார்: முத்தம்மாள் சத்திரத்திற்கு ஆண்டு தோறும் 35,000 ரூபாய் வருமானம் வந்தது. சைதம்பாள் பெயரால் மகாதேவப்பட்டணம், மல்லியம், காசாங்குளம், பஞ்சனாத மேகானாம்பாள்புரம், நெடார் முதலிய இடங்களில் சத்திர முண்டு, இவற்றுக்கு, 40,000 ஏக்கர் நிலமும் விடப்பட்டது. பல இந்துக் கோயில்கட்கு நிலமும் நகைகளும் அளித்தார். திருப்பனந்தாள் திருவாவடுதுறை, தருமபுரம் ஆகிய சைவமடங்கட்கும் உதவி செய்துள்ளார்.

1801-ஆம் ஆண்டு சனவரி 28-ஆம் நாள் இவர் அரசுக்கு எழுதிய கடிதமொன்றில் இச்சத்திரங்கள் செய்த பணிகளை விவரித்துள்ளார்; 'இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் ஆண்டு தோறும் 40,000 பக்தர்கட்கு மேல் இராமேசுவரம் செல்கின்றனர். அவர்கள் செல்லும் வழியிலேயே இச்சத்திரங்கள் மிகுதி. இப்பகுதியின் மண் வளமற்றது; இவர்கட்காகவே இச்சத்திரங்கள் ஏற்பட்டன அவற்றோடு பள்ளிக்கூடம் இணைக்கப்பட்டுள்ளது. பிராமணர் முதல் பறையர் ஈறாக அனைவரும் இங்கே புழுங்கலரிசி உணவு பெறலாம். பச்சரிசி வேண்டுவார் அதனையும் பெறலாம். நடுஇரவு வரையில் உணவு போடப்படும். தம் பயணத்தைத் தொடர்ந்து மேற் கொள்ள இயலாதவர் எவ்வளவு நாள் வேண்டுமாயினும் தங்கலாம் ஒவ்வொரு சத்ந்திரத்திலும் நான்கு வேதங்களையும் அறிந்த ஒருவரும், ஓராசிரியரும், கட்டிகள், விடம், நோய்களைக் குணப்படுத்தும் மருத்துவரும் உண்டு. அநாதைகளாக வரும் குழந்தைகள் உணவும் உறையுளும் பெற்று இங்கே படிக்கலாம். அவர்கள் கல்வி கற்றதும் திருமணமும் செய்து வைக்கப்படும்: பயணத்தின் பொழுது நோயுறுவார் மருந்தும் சத்துணவும் பெறுவர். இறந்துபோவோர் சாதி வழக்கப்படி. அடக்கம் செய்யப்படுவர். குழந்தைகட்குப் பால் வழங்கப்படும். பிரயராணிகளில் சூலுற்றவர் இருப்பின் அவர்கள் மகப்பேறு அடைய மருந்துவம் செய்யப்படும். செலவைச் சத்திரம் ஏற்கும். அவர்கள் பேறடைந்த பிறகு ஒரு திங்கள் தங்கி உதவி பெறலாம்: பூணூல் கலியாணத்திற்கும், திருமணத்திற்கும், பெற்றோர்க்குச் செய்யும்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

சடங்கிற்கும் உதவி வேண்டினால் செய்யப்படும். இவையே சரபோசி மன்னர் கடிதத்தில் குறிக்கப்பட்டவை.

**மராட்டிய மன்னர்கள் கலைஞர்கள்**

துக்கோஜி, பிரதாபசிங், ஆகியோர் சிறந்த இசைக் கலைஞர்களாவர். இவர்கள் இசை நூற்களை இயற்றியுள்ளனர். அரண்மனையில் இசைக்கு எனவே, ஓர் அழகிய மண்டபம் கட்டினர். அதில் இசையும், நாடகமும், நாட்டியமும் நிகழ்ந்தன. கலைஞர்கள் பெருஞ் சிறப்புப் பெற்றனர். இவர்கள் பட்டு நெசவைப் போற்றினர். தஞ்சை அரண்மனை இவர்களது கட்டிடக் கலையின் மாட்சியைக் காட்டும். பல பெரிய கட்டிடங்களும் இவர்கள் கட்டியனவே. நாளோலக்க மண்டபம், ஏழுநிலை மாடம், கூடகோபுரம், தொலைக்காவல் மண்டபம், கலைக்கூடம் ஆகியவை இவர்களது கட்டிடங்களே. நாளோலக்க மண்டபத்திலும், சரசுவதி மகாலின் முன் பகுதியிலும் பிற இடங்களிலும் இவர்களது அழகிய வண்ண ஓவியங்களைக் காணலாம். மன்னர் சரோபோசியின் அவையில் சிவக்கொழுந்து தேசிகர், திருவேங்கடநாத பிள்ளை, காரைக்குறிச்சி வேலாயுத உபாத்தியாயர், வேங்கடாசலம்பிள்ளை, சுப்பையக் கவிராயர் ஆகிய தமிழறிஞர்கள் இருந்தனர். 1805-ஆம் ஆண்டில் ஓர் அச்சகத்தை நிறுவினார். கலைக்கூடத்தில் அரிய காசுகள், முதலியவற்றைச் சேர்த்து வைத்தார்.

மேற்கூறிய செய்திகளால் மராட்டிய வேந்தர்கள் ஏனைய மன்னர்கட்குப் பின்பு தங்கவில்லையென்றும், கல்வியும், சமயமும், கலைகளும் இவர்களால் வாழ்வு பெற்றன என்றும் உணராலாம்.

**துணை நூல்கள்**

1. உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் பல்லவர்கள் செய்பேடுகள் முனைவர்.மு.ராஜேந்திரன். அக். 2015
2. உன்ன குரவய பாளைய செப்பேடுகள். பக் 61 – 62 6 ம் நா.குடம் சார்ந்தவை.
3. நர்சிம்மவர்மணின் “ரேவூர்” செப்பேடுகள்
   பக் 75-76
4. தமிழ் நாட்டுக் செப்பேடுகள் ச. கிருஷ்ணா மூர்த்தி மெய்யப்பன் தமிழாய்வகம் டிச.2002.
5. தஞ்சை மராட்டியர். புலவர்.செ.இராசு தமிழ் பல்கலைகழகம் தஞ்சை செ.1983
6. திருமுறை செப்பேடுகள்
7. செப்பேடுகளில் அரிய செய்திள்
8. செப்பேட்டுச் சிதறல்கள்.
9. கன்னியா குமரி மவாட்டக் கல்வெட்டுகள் நடன. காசிநாதன் 2ம் தொகுதி 1974
10. தமிழர் நாகரிகமும் பண்பாடும்
    அ. தட்சினைமூர்த்தி திரு புட்பம் கல்லூரி பூண்டி வெற்றிச் செல்வி வெளீயீட்டகம் தஞ்சை.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019
Available at: www.ijtlls.com

# தமிழகத்தில் கல்வெட்டுகள் செப்பேடுகள்
# Culverts and Copper Plates in Tamil Nadu

**சு.ஆறுமுகம்,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
பெரியார் மணியம்மை நிகர்நிலைப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் -613403.

## Abstract

*The present study deals with the idea of evincing the facts collected from the culverts and copper plates found in Tamil Nadu. It is real fact that a society's glory can be assessed through the edicts edited by the royal people of the dynasty. The edicts may show their culture, lifestyle, aesthetics, ethics, charity and society related renovations and building water ponds, lakes and the order of provincial arrangement. Here in the article, it is discussed about the Chera, Chola and the Pandian kings and the Tamil Brahmi Scripts they have used to edict their messages. Then it focuses on the Sethupathis and their title culverts and about their feats and lifestyle. Hence, the paper is a fine sort out of culture with archaeological evidences.*

**Keywords:** Culverts, Copper Plates, Tamil Nadu, Tamil Culture

### கல்வெட்டுகள் வரலாறு

தமிழகத்தில் சுமார் 150 வருட காலமாக காகிதமும் அச்சு இயந்திரமும் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளன. அச்சு இயந்திரத்தை கி.பி.16ஆம் நூற்றாண்டில் போர்ச்சுக்கீசியரும் கி.பி.18ஆம் நூற்றாண்டில் ஜெர்மன் நாட்டுப் பாதிரியார் சீசன் பால்கும், ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியாளரும் தமிழ்நாட்டிற்கு அறிமுகப்படுத்தினர். ஆனாலும் அச்சு இயந்திரங்கள் கிறிஸ்துவ வேத ஆகமங்களை வெளியிடுவதற்கும், பின்னர் ஆங்கில கிழக்கிந்திய கம்பெனியாரின் அரசு இதழ்களை அச்சிடுவதற்கும் மட்டுமே பயன்படுத்தப்பட்டு வந்தன என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

கடைச்சங்க காலத்தில் இருந்து 18ஆம் நூற்றாண்டு வரையான கால இடைவெளியில் தமிழகத்தின் அரசியலை நடத்தி வந்த சேர, சோழ, பாண்டியர்களும், பல்லவர்களும், நாயக்க மன்னர்களும் சேதுபதி மன்னர்களும் தங்களது அரசு ஆணைகளையும், கொடைகளையும் அறிவிப்பதற்குக் கல்லையும், செம்பையும் பயன்படுத்தினர். காலத்தால் அழியாது நின்று மக்களுக்கு அவை வரலாற்று ஆவணங்களாக விளங்க வேண்டும் என்பதே அவர்களது குறிக்கோள். அதனால் தங்களது அரசு ஆணைகளையும், தீர்ப்புரைகளையும், தானசாசனங்களையும், கல்லிலும், செம்பிலும் வெட்டி வைத்தனர். இவை முறையே கல்வெட்டுக்கள் என்றும் செப்புப் பட்டையங்கள் அல்லது செப்பேடுகள் என்றும் வழங்கப்பட்டன. கல்வெட்டுக்கள் பெரும்பாலும் நாட்டின் பொது இடங்களான திருக்கோயில்கள் திருமடங்கள், சத்திரங்கள் மற்றும் பொது மக்கள் கூடுகின்ற அங்காடிகள், தண்ணீர்புறவுகள் போன்ற இடங்களில் கல்லில் பொறிக்கப்பட்டன. செப்பேடுகள் இரண்டு பிரிவுகளாகச் செப்புத்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

தகடுகளில் பொறிக்கப்பட்டும் ஒன்று அதனை வழங்கிய மன்னரிடமும், மற்றொன்று அதன் தானத்தை பெற்றுக் கொண்ட அந்தணர் புலவரிடமும், மடாதிபதிகளிடமும் இருந்து வந்தன.

கல்வெட்டுக்களில் மூன்று வகையான செயல்களை பொறிக்கும் படி செய்தனர். முதலாவது மன்னரது வீரம், படையெடுப்பு, வெற்றி, போன்றவைகளைக் குறிப்பனவாகும். இவை மெய்க்கீர்த்தி எனப்படும். பிறிதொரு வகையில் நாட்டு மக்களின் நலனைக் கருதி வெளியிடப்படும் பல வகை ஆணைகளைக் கொண்ட கல்வெட்டுக்களாகும். இன்னொரு வகை கோயில்களில் நிர்வாகியாகவும், மன்றங்களில் வழக்குகளின் பேரில் நியாயம் வழங்கும் நடுவராக இருந்த பிறப்பிக்க தீர்ப்புரைகளாகும். இந்த மூன்று வகையான கல்வெட்டுக்களும் இன்றைக்கு நமது கடந்த கால அரசியல், சமுதாய சமூக நிலைகளின் வளர்ச்சிகளைப் பற்றி அறிந்து கொள்வதற்கு ஏதுவாக அமைந்துள்ள வரலாற்றுச் சான்றுகளாக விளங்கி வருகின்றன.

கோ நகரில் அரசு கட்டிலில் அமர்ந்து மன்னர் ஆட்சி செய்தாலும், நாட்டின் பல்வேறு பகுதிகளில் இயங்கி வந்த ஊர்ச் சபைகளும், கோயில் தர்மகர்த்தா குழுக்களுமே உண்மையான நிர்வாகத்தை இயக்கி வந்தனர் என்று சொன்னால் அது மிகையாகாது. இந்த ஊர் சபைகளும் கோயில் குழுக்களும், குறிப்பிட்ட நாட்களில் ஒருசேர அமர்ந்து ஊர்ப் பிரச்சனைகளைக் கலந்து பேசி நல்ல முடிவுகளைச் செய்தனர். அவை ஊரின் நலனையும், கோயில் நலனையும், உட்பொருளாகக் கொண்டு இருந்ததால் அந்த அவைகளின் தீர்ப்பு உரைகள் ஆங்காங்கு திருக்கோயில்களின் சுவர்களில் பொறிக்கப்பட்டன. இத்தகைய கல்வெட்டுக்கள் அன்றைய வழக்கிலிருந்த தமிழ் பிராமி எழுத்து வடிவிலும், வட்டெழுத்திலும் பின்னர் கரந்த எழுத்திலும் இன்றைய தமிழ் வரிவடிவிலும் பொறிக்கப்பட்டு வந்தன. இந்தக் கல்வெட்டுக்களில் வாசக வரி வடிவங்களிலிருந்து நமது தமிழ் மொழியின் மூல மொழியான தாமிழி என்றதொரு வடிவில் அமைந்து பின்னர் பிராமி, தமிழ் பிராமி, வட்டெழுத்து என கால வேறுபாடுகளினால் மொழியின் வரி வடிவ வளர்ச்சியினை அறிந்து கொள்வதற்கு உதவுகின்றன. பிராமி எழுத்துக்களாக கல்வெட்டுக்கள் கி.மு. இரண்டாம் நூற்றாண்டு முதல் மூன்றாம் நூற்றாண்டு ஆகிய காலத்தைச் சார்ந்தவை. வட்டெழுத்துக்கள் கி.பி.10ஆம் நூற்றாண்டு வரை பயன்படுத்தப்பட்டு வந்துள்ளன. குறிப்பாகப் பாண்டிய நாட்டில் தான் இந்த வட்டெழுத்துக் கல்வெட்டுக்கள் மிகுதியாக கிடைத்துள்ளன. தொண்டை நாட்டு, கொங்கு நாட்டு நடுகற்களிலும் இவை காணப்படுகின்றன. சமஸ்கிருத மொழியில் பொறிக்கப்பட்ட சில கல்வெட்டுக்களும் கிடைத்துள்ளன. இவைகளில் சிறப்பானவை எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த மாறன் சடையன் என்ற பாண்டிய மன்னரது காலத்தவை. திருப்பத்தூர் திருக்கோயிலில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுக்களில் இன்றைய தமிழ் மொழியுடன் சமஸ்கிருதச் சொற்கள் கலந்த கிரந்த எழுத்துக்கள் என்ற வகையான கல்வெட்டுக்களாக அவை காணப்படுகின்றன. இன்று கிடைத்துள்ள தமிழ்க் கல்வெட்டுக்களில் மிகவும் பழமையானது, இராமநாதபுரம் மாவட்டம் வடக்குப் பகுதியில் அமைந்துள்ள பூலாங்குறிச்சிக் குன்றில் பொறிக்கப்பட்டுள்ள கி.பி.6ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழ்க் கல்வெட்டுக்களாகும். இதனை ஒத்த தொன்மையான செப்பேடு எனக் கருதப்படுவது பராந்தக சோழன் கி.பி.10ஆம் நூற்றாண்டில் திருத்தணிகை சுப்ரமணிய சுவாமி திருக்கோயிலுக்கு வழங்கிய தான சாசனமான திருவேளஞ்சேரி செப்பேடு ஆகும். இந்தச் செப்பேட்டின் ஒரு பகுதி சமஸ்கிருத மொழியிலும், மறுபகுதி தமிழிலும் பொறிக்கப்பட்டுள்ளது. இதனைப் போன்ற விஜய நகர பேரரசரான கிருஷ்ண தேவராயரது திருமலை திருப்பதிக் கோயில் கல்வெட்டுக்கள் அனைத்தும், தமிழ், தெலுங்கு, சமஸ்கிருதம் ஆகிய மூன்று மொழிகளிலும் பொறிக்கப்பட்டவையாகும்.1 மற்றும் கி.பி.1710ல் தில்லி பேரரசரான முதலாவது பகதூர்ஷா

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

காஞ்சி சாரதா மடத்துக்கு வழங்கிய செப்பேடு தமிழ், சமஸ்கிருதம், பாரசீகம் ஆகிய மொழிகளில் வரையப்பட்டிருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது.2

பொதுவாக மேலே குறிப்பிட்ட செய்திகளிலிருந்து கல்வெட்டுக்களும் செப்பேடுகளும், அந்தந்தக் காலத்தில் தமிழகத்தில் நிலவிய ஆட்சியாளர்கள் விருப்பத்தினையும், அன்று வழக்கில் இருந்த ஆட்சி மொழியையும், சார்ந்தவையாக இருப்பதை அறிந்து கொள்கிறோம். கி.பி.1751 முதல் தென்னகத்தின் ஆட்சியாளராக அமைந்த கர்நாடக நவாப் வலாஜா முகம்மது அலி அவர்கள் வழங்கியுள்ள சுன்னத்துக்களும், பர்வானாக்களும், அரபு, பார்சி, மொழிகளில் வரையப்பட்டுள்ளது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. கி.பி.18ஆம் நூற்றாண்டில் சேதுநாட்டு பெரிய பட்டணத்தில் இஸ்லாமிய பெரியவர் ஒருவரது புகழ்ந்துரை அரபு மொழியில் வரையப்பட்டுள்ளது. இந்தக் கல்வெட்டு தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் பாதுகாக்கப்பட்டு வருகிறது. இதனைப் போலவே பெரியபட்டண கிராமத்தில் யூதர்களது மொழியானது ஹிப்ருவில் வரையப்பட்டுள்ள கல்வெட்டு ஒன்றும் கண்டுபிடிக்கப்பட்டு வெளியிடப்பட்டிருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது[3] இதுவரை தமிழ்நாட்டில் கண்டுபிடிக்கப்பட்ட ஹிப்ரு மொழி கல்வெட்டு இது ஒன்றே ஆகும். இந்தக் கல்வெட்டுக்களில் ஒரு சிலவற்றை கி.பி.1890-ல் இந்திய குறிப்பிடுவன ஆகும். இந்தத் திருப்பணியில் சோழமண்டலத்தைச் சார்ந்த நாகூர் நகரின் - கோமுட்டி செட்டியார் உதவிய செய்தியும், இந்த கல்வெட்டு வாசகங்களில் அமைந்துள்ளன. கால நீட்சியால் இந்தக் கல்வெட்டுக்கள் அழிந்து விட்டதால் அவைகளில் கண்ட முழுமையான வாசகத்தை இங்கு வெளியிட முடியவில்லை. ஆனால் இந்தக் கல்வெட்டினை ஆங்கில நாட்டு அறிஞர் பெர்கூசன் என்பவர் படியெடுத்து வெளியிட்டுள்ளார்.

**இராமேஸ்வரம் திருக்கோயில் கல்வெட்டு:**

இந்தக் கல்வெட்டும் இராமேஸ்வரம் திருக்கோயிலைச் சார்ந்ததாகும். இதனை வெட்டுவித்தவர் சின்ன உடையான் சேதுபதி என்ற மன்னராகும். இதன் காலம் கி.பி.1447. இராமேஸ்வரம் திருக்கோயிலின் பயன்பதாட்டிற்காக ஏழு கிராமங்களை இராமேஸ்வரம் திருக்கோயிலுக்குச் சர்வ மான்யமாக சேதுமன்னர் வழங்கியது பற்றிக் குறிப்பிடுவது ஆகும். இந்தக் கல்வெட்டின் வாசகமும், கடலிலிருந்து வீசும் காற்றின் உப்புத் தன்மையில் அழிந்து விட்டதால் இந்தக் கல்வெட்டின் முழு வாசகத்தையும் படித்து தெரிந்து கொள்வதற்கு இயலவில்லை. ஆனால் கி.பி.19ஆம் நூற்றாண்டில் இராமேஸ்வரம் திருக்கோயிலுக்கு வருகை தந்த வரலாற்றுப் பேராசிரியர் பெர்கூசன் என்பவர் இவைகளைப் படித்து அவைகளின் உள்ளடகத்தைத் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். அந்த அரிய முயற்சி இந்த மன்னர்களது ஆட்சிக் கால வரம்பினைச் சுட்டுவதற்கு மிகவும் பயனுள்ளதாக இருந்து வருகிறது.

கி.பி.1603–லிருந்து போகலூரை தலைமையிடமாகக் கொண்டு ஆட்சி செய்த சேதுபதி மன்னர்களில் கூத்தன் சேதுபதி இரண்டாவது மன்னர் ஆவார். இந்த மன்னரது ஆட்சிக் காலம் மிகவும் குறுகியதாகும். கி.பி.1622 முதல் 30 வரை ஒன்பது ஆண்டுகளே நீடித்த பொழுதிலும், இந்த மன்னரது இராமேஸ்வரம் திருக்கோயில் திருப்பணிகள் மிகவும் போற்றத்தக்கவை ஆகும். இராமேஸ்வரம் கோயிலின் கருவறையை ஒட்டி நிர்மாணிக்கப்பட்டுள்ள மகாமண்டபமும், அதனை அடுத்து அமையப்பெற்றுள்ள முதலாவது பிரகாரமும் இந்த மன்னரால் அமைக்கப்பட்டவை எனக் கருதப்படுகிறது. இந்தப் பிரசாரத்தின் மேற்குச் சுவரில் வெளிப்புறமாக வெட்டுவித்துள்ள கல்வெட்டே இதற்குச் சான்றாகும். இந்தக் கல்வெட்டில் ராமநாத சுவாமிக்கு நட மாளிகையையும், ஆருட மண்டபத்தையும், இந்த மன்னர் கட்டுவித்த செய்தி குறிப்பிடப்படுகிறது. இந்தக் கட்டுமானம் நிறைவடைந்த ஆண்டு உத்ரோகாரி ஆண்டு மாசி மாதம் 20ஆம் தேதி என்றும் இதற்கு சரியாக ஆங்கில ஆண்டு கி.பி.1623 ஆகும்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**இந்தக் கல்வெட்டின் முழுமையான வாசகம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது:**

1. உ சகாத்தம் 1545ன் மே
2. ற் செல்லாநின்ற உதிரோற்
3. காரிஸ்ரீ மாசி மீ29 உதிரமும் பெ
4. ற்ற நாளில் உடைய நாயனான
5. சேதுபதி காத்த தேவர் புத்திரன்
6. (கூ)த்தனான சேதுபதி காத்த தே
7. (வர்)உபயமாக ராமநநாத சு
8. (வா)மி முதற் பிரகாரம் திருநடமா
9. (ளி)கைப் பத்தி ஆரூட மண்டபமும்
10. (க)ட்டி முகிழ்பித்தான் உ

**முதலூர் கல்வெட்டு:**

கூத்தன் சேதுபதி கி.பி.1630-ல் ஆண் வாரிசு இல்லாமல் இயற்கை எய்தினார். சேது மன்னர் பதவிக்கு அவரது தம்பியும், அவரது தந்தையின் பெயரை உடையவருமான சடைக்கன் என்ற தளவாய் சேதுபதி சேது நாட்டின் மன்னரானார். இவரது ஆட்சிக்காலம் கி.பி.1630-1645 வரை ஆகும்.

தளவாய் என்பது தெலுங்கு மொழியில் சேனைத்தலைவர் என்ற பொருளைத் தருவது. முதலாவது சடைக்கன் சேதுபதி மதுரை நாயக்க மன்னர் முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கருடன் நெருக்கமான நட்பு கொண்டு இருந்ததுடன், மதுரை மண்டலத்தில் முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கருக்கு எதிரான கிளர்ச்சிகளையும், குறிப்பாகத் திருப்பத்துார் வட்டம் பட்டமங்கலம் பகுதியில் எழுந்த கிளர்ச்சியை அடக்கி ஒடுக்கினார். மேலும் அந்தப் பகுதியில் இருந்து நாயக்க மன்னருக்குச் செலுத்தப்பட வேண்டிய அரசு இறையையும் ஒழுங்காகச் செலுத்துவதற்கு ஏற்பாடு செய்தார். இந்த நடவடிக்கையினால் மகிழ்ச்சியுற்ற முத்துக்கிருஷ்ணப்ப நாயக்க மன்னர் உடையான் சடைக்கன் சேதுபதிக்கு “தளவாய்” என்ற சிறப்பு விருதினை வழங்கினார். இந்த விருது தொடர்ந்து இரண்டாவது சடைக்கண் சேதுபதியின் பெயருடன் சேர்த்து வழங்கப்பட்டுள்ளது.

நீர்பாசனப் பணிகளில் தளவாய் சேதுபதி மிகவும் அக்கறையுடன் ஈடுபட்டிருந்ததற்குச் சான்றாக அமைந்துள்ளது அவரது இந்த முதலூர்க் கண்மாய்க் கல்வெட்டாகும். இன்றைய பரமக்குடி வட்டம் முந்தைய சேது நாட்டில் செவ்விருக்கை நாட்டு மேற்குப் பகுதியில் அமைந்திருந்தது. வைகை ஆற்றின் பிரதான காலான, நாட்டார் கால் செல்லும் பகுதியில் இந்த மன்னர் ஒரு கண்மாயை அமைத்ததையும், அதில் கலுங்கு ஒன்றும், மடைகள் இரண்டும் அமைக்கப்பட்டதை இந்தக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. இதன் காலம் கி.பி.1637 ஆகும்.

கலுங்கு என்பது கண்மாயின் தாழ்வான பகுதியில் கண்மாயிலிருந்து நீரை வெளியேற்றுவதற்காக அமைக்கப்படும் கட்டுமானம் ஆகும். இந்தக் கலுங்கில் பல கண்கள் அமைக்கப்பட்டும் அவைகள் அனைத்தும் ஒரே நேரத்திலோ அல்லது தனித்தனியாகவோ அல்லது தேவைப்படும் பொழுதிலோ வேண்டிய நீரை வெளியேற்றுவதற்கும் அடைப்பதற்கும் (பெரும்பாலும் மரக்கட்டைகளால்) தடுப்பு அமைக்கப்படுவதாகும்.

இதனைப் போன்றே கண்மாயின் கரையை அடுத்துள்ள வயல்களுக்கு நீர் பாய்ச்சுவதற்கு ஏற்றவாறு அமைக்கப்படுவது மடை எனப்படும். பெரும்பாலும் இந்த அமைப்பு சுட்ட செங்கலினால் கட்டப்பட்டு வருகிறது. இதனைக் கலுங்கில் ஒரு சிறு பகுதியாகக் கொள்ளலாம். புதுக்கோட்டை சீமையில் இந்த மடை குமிழி என வழங்கப்படுகிறது. இந்த

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

மடையை ஒட்டிச் சில இடங்களில் மக்கள் குடியிருப்புகளும் அமைதல் உண்டு. சேதுபதிச் சீமையில் சக்கரக்கோட்டை கண்மாய் அடுத்துள்ள ராஜசூரிய மடை என்று ஒரு கிராமமும், ராஜ சிங்க மங்கலம் பெரிய கண்மாய் அருகில் அமைந்துள்ள இராமநாத மடை, இரகுநாத மடை என்ற மடைகளின் பெயரால் அங்கே இரு கிராமங்கள் ஏற்பட்டு இருப்பது இங்கே குறிப்பிடத்தக்கது.

"வரப்பு உயர நீர் உயரும், நீர் உயர நெல் உயரும், நெல் உயரக் குடி உயரும், குடி உயர கோல் உயரும்" என்ற பழம் பாடலுக்கு ஏற்ப நாட்டின் வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டிருந்த குடிமக்களுக்கு நீர்பாசன வசதிகளைச் செய்து கொடுப்பது சேது மன்னரது கடமையாக இருந்தது. குறிப்பாக சேது நாட்டில் வைகை, கிருதுமால், மணிமுத்தாறு, தேனாறு போன்ற சிறு நதிகள் அமைந்து இருந்தாலும், அவைகளும் கார் காலத்து மழைப் பொழிவினையை ஆதாரமாகக் கொண்டு இருந்தன. மேலும் சேதுநாட்டின் மிகப் பெரும்பாலான பரப்பு மானாவாரி (வான்மாரி என்ற சொல்லின் திரிபு) நிலமாக அமைந்திருந்தன.

இவைகளைக் கருத்தில் கொண்ட தளவாய் சேதுபதி மன்னர் தமது நாட்டின் குடிமக்களுக்கு நீர் ஆதாரங்களைப் பெருக்கும் பணியில் ஈடுபட்டார். ஆங்காங்கு ஆற்றுப் போக்கிலும் தாழ்வான பகுதிகளிலும் அணைகளை எழுப்பி மழை நீரைத் தேக்குவதற்கு ஏற்பாடுகளைச் செய்தார். இவைகள் கண்மாய்கள் என்றும், ஏந்தல்கள் என்று அழைக்கபட்டு வந்தன. இவைகளுக்கு நீரினைக் கொண்டு செல்லும் கால்வாய்கள் கால்கள் என்றும், அவைகளினால் கொண்டு சேர்க்கப்பட்ட வெள்ள நீர் மிகுதியாகத் தேங்கும் பொழுது அவைகளைக் கண்மாய்க் கரைக்கு குந்தகம் இல்லாமல் வெளியேற்றுவதற்கான ஏற்பாடாக "தான் போதிக கால்களையும்" அமைத்து உதவினார். இந்த மன்னரது தந்தையார் கூத்தன் சேதுபதி வைகை நீரினை வறண்ட முதுகுளத்தூர் பகுதிக்கு எடுத்துச் செல்ல அமைத்த நீண்ட கால்வாய் (கமுதக்குடிக்கு, அருகில் வைகை ஆற்றிலிருந்து தெற்கே பிரிந்து செல்கிறது) இந்தக் கால் "கூத்தன் கால்" என்று இன்றும் வழங்கப்பட்டு வருகிறது. இந்தக் கல்வெட்டு அமைந்துள்ள ஊர் செவ்விருக்கை நாட்டில் இருப்பதாக குறிப்பிடப்பட்டு உள்ளது குறிப்பிடத்தக்கது.

**இந்தக் கல்வெட்டு வாசகம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது:**

1. "சகாத்தம்
2. 1559 மேல்
3. நின்ற செல்லாநி
4. ன்ற ஈசுர வருஷம்
5. ஆனி மீ 30 உ
6. செவ்விருக்கை
7. நாட்டில் முத
8. லூருக் குள
9. மும் கலிங்கு
10. ம் மடைரன்
11. டும் உடைய
12. நாயன் தழவாய்
13. யான சேதுப
14. தி காத்த தே
15. வர் உபையம்"

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**சிவபுரிப்பட்டி கல்வெட்டு:**

திருப்பத்துார் வட்டம் சிவபுரிப்பட்டி அருள்மிகு தான் தோன்றிஈசுவரர் திருக்கோவிலின் தென்சுவரில் கீழே இந்தக் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. இந்த கல்வெட்டு வாசகம் கொடுக்கபட்டு இருக்கிறது.

**கல்வெட்டு:**

> "சுவஸ்தி ஸ்ரீ 1590 இதன் மேல் செல்லாநின்ற கீலக வருஷம் ஆவணி மாசத்து ஸ்ரீமது கோ விசைய இரகுநாத திருமலை காத்த தேவர் அவர்கள் கேரளசிங்க வளநாட்டு வேள்குலராம நிலையான வீரபாண்டிய நல்லூர் அம்பலத்தாடி சதுர்வேதி மங்கலத்து உடையார் சிவபுரி தான்தோன்றி ஈசுவரமுடைய நாயனார் ஆதிசண்டேசுவர தேவருக்கு.... குடுத்த சாத்தனூருக்கு எல்லையாவது கீழ்பாரக் கொல்லை இன்னாயனார் தேவதானமான சாத்தங்குடி மேலெல்லைக்கும் இந்த நாயனார் தேவதானம் சிறுத்த கண்மாய் நீர்க்கோருவைக்கும் கொண்ட செவ்வை தெக்கு நோக்கி சிவகண்மான்யத் தென்கடை வாய்காலுக்கும் வண்ணான்குண்டு செவ்வெக்கு மேற்கும் தென்னெல்லை வண்ணான் குண்டு நீர்பிடிக்கும் கண்மாய் நீர்ப்பிடிக்கும் வேலத்துார் கண்மாய்க்கும் வடக்குமெல்லை இன்னாயனார் தேவதானமாக மடையனேம்பல் கரைக்கும் தச்சன் குளக்கரைக்கும் இதற்குள் கண்மாய் மேல்கண்டக் கொம்பு பாறைக்கும் கோட்டை வேங்கைப்பட்டிப் புரவுக் கல்லுக் கிழக்கு வடபாற்க் கெல்லை இன்னாயனார் மடப்புரம் காப்புரை வயலுக்கு ...... கல்லுக்கும் குமரன் வயல் புரவுக்கும் உறப்பணிப் பாறைக்கும் இன்னாயனார் தேவதானம் கண்ணமங்கல வயல்ப்பரப்பு மடத்துப் பொட்டலுக்கு சூலக் கல்லுக்கு தெக்கும் ஆக இசைஞ்ச பெருநாள் எல்லைக்குள்பட்ட நத்தமும் பரப்பும் குளமும் கீழ் நோக்கிய கிணறும் மேல் நோக்கிய மரமும் யெப்பேர்ப்பட்ட ......... யுமிறுப்பதாக கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொடுத்தோம் கல்லும் காவேரி புல்லும் பூமி உள்ளவரைக்கும் ஆண்டு அனுபவித்துக் கொள்வாராகவும் இந்த தற்மத்துக்கு யாதாமொருத்தர் குதம் பண்ணினவர்கள் ..... பசுவைக் கொன்ற தோஷத்திலே போவாராகவும்"

இந்த கல்வெட்டினைத் திருமலை ரெகுநாத சேதுபதி மன்னர் கீலக ஆண்டு ஆவணி மாதம் 28ஆம் தேதி சிவபுரி கிராமத்தில் உள்ள தான்றோன்றி ஈசுவரர் திருக்கோயிலில் வெட்டிவித்துள்ளார். இந்த கல்வெட்டு 28.08.1668-ல் வெட்டுவித்ததாகத் தெரிகிறது. இந்தக் கல்வெட்டு அருள்மிகு தான்தோன்றி ஈசுவரர் கோயிலின் இறைவரான தான்தோன்றி ஈசுவரருக்குத் சாத்தனூர் என்ற கிராமத்தைச் சேது மன்னர் நேரில் தானம் வழங்கியதைக் குறிக்கப்பட்டுள்ளது. இந்தத்திருக்கோயில் கேரளசிங்க வளநாட்டில் வேள்குல நிலையான வீரபாண்டிய நல்லூரின் அம்பலத்தாடிச் சதுர்வேதி மங்கலத்தில் சிவபுரி என்னும் ஊரில் அமைந்திருப்பதாக விவரம் தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளது. பாண்டியர் காலத்தில் நிலப்பரப்பு, கூற்றம், வளநாடு, வாடு, ஊர் என்ற பிரிவுகளாக அமைக்கப்பட்டு இருந்தது. அதனைச் சுட்டும் வண்ணம் இந்தச் சிவபுரி கிராமம் கேரளசிங்க வளநாட்டில் அமைந்து இருப்பதாகக் குறிப்பிடப்பட்டு இருப்பதில் இருந்து கேரளாந்தகன் எனப் புகழப்பட்ட பிற்காலப் பாண்டியனான மாறவர்மன் குலசேகர பாண்டியன் என்பவரது பெயரால் இந்த வளநாடு பெயர் சூட்டப்பட்டிருந்தது. இன்றைய சிவகங்கை மாவட்டத்தின் காரைக்குடி வட்டத்தின் வடபகுதியையும் திருப்பத்துார் வட்டத்தின் முழுப்பகுதியையும் கெண்டதாக இந்த வளநாடு

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

இருந்து வந்தது. மேலும் இந்த ஊர் சிவப்பிராமணர்களுக்கு வழங்கப்பட்ட அம்பலத்தாடி சதுர்வேதிமங்கலம் ஒன்றின் ஒரு பகுதியாகவும் வேள்குல ராமநிலை என்று வழங்கப்பட்ட வீரபாண்டிய நல்லூரின் பிறிதொரு பகுதியாகவும் அமைந்திருந்ததது. ஆனால் நாளடைவில் இந்த சிவபுரம் என்ற கிராமம் பெருக்கமடைந்து இன்று சிவபுரி, கீழ்ச்சேவல்பட்டி, விராமதி என்ற மூன்ற ஊர்களாக மாறியுள்ளன. இது முந்தைய சேதுநாட்டின் வடபகுதியாகவும் திருமலை ரெகுநாத சேதுபதிக்கு முன்னர் வரை இருந்தது மற்றும் இந்தக் கல்வெட்டில் தானமாக வழங்கப்பட்ட சாத்தனூரின் பெருநான்கு எல்லைகள் மிகத் தெளிவாக விவரிக்கப்பட்டு இருப்பது குறிப்பிடத்தக்கது.

சாத்தன் என்பது இந்துச் சமயப்படி சாஸ்தா என்றும், ஐய்யனார் என்றும் அழைக்கப்படும் காவல் தெய்வத்தின் பெயராகும். மேலும் பாண்டிய நாட்டில் கி.பி7ஆம் நூற்றாண்டிற்கு முன்னர் சமண சமயம் வலுவடைந்த நிலையில் சமணர்களது தலைவரும், தீர்த்தங்கரர்களும் சாத்தன் என்றே வழங்கப்பட்டு வந்தனர். அவர்களது பள்ளிகள் சாத்தன் பள்ளிகள் என்றும் குடியிருப்புகளும் சாத்தனூர், சாத்தனேந்தல், சாத்தமங்கலம் என்றும் வழங்கப்பட்டன. இதனால் தென்னாட்டில் குறிப்பாகப் பாண்டிய நாட்டில் பல பகுதிகளில் சாத்தனூர் என்ற பெயரில் பல ஊர்கள் உள்ளன. இந்தக் காரணத்தினால் என்னவோ இந்நக் கல்வெட்டில் குறிப்பிடப்பெறும் சாத்தனூருக்கு தெளிவான நான்கு எல்லைகள் கொடுக்கப்பட்டு உள்ளன.

**இந்த நான்கு எல்லைகள் ஆவண:**

1. கீழ்பாற்க்கெல்லையாவது
2. தென்னெல்லை
3. மேற்கெல்கை
4. வடபாற் கெல்லை

இந்த எல்லைக் குறிப்புகளிலிருந்து சேதுபதிச் சீமையின் நிலம், நீர் சம்மந்தப்பட்ட பல வட்டாரச் சொற்கள் வழக்கில் இருந்ததைக் காணமுடிகிறது. குறிப்பாக கண்மாயின் தொடர்ச்சி எனப் பொருள்படும் நீர்க்கோவை, வாய்க்கால் நீரினைக் கண்மாயிலிருந்து வயலுக்கு நீரை எடுத்துச் செல்லும் கால்வாய்க்கால் எனவும், சிறிய நீர்த்தேக்கம் குண்டு எனவும், சிறிய நீர்த்தேக்கம் குளப்பரப்பு எனவும், ஊரின் எல்லையைக் குறிக்கும் பகுதி புரவு எனவும் இதனை அறுதியிட்டுக் குறிப்பிடுவதற்காக நாட்டப்பட்ட எல்லைக்கல் புரவுக்கல் எனவும் மடங்களுக்கு மன்னர்கள் வழங்கிய நிலக்கொடை மடப்புரம் எனவும், ஒரு பகுதியிலிருந்து மற்றொரு பகுதிக்குச் செல்வதற்காக இருவேறு நிலங்களுக்கு இடைப்பட்ட வழி வழிப்பாதை எனவும் பெரும்பாலும், நடந்து செல்வதற்கென்றே பயன்பட்ட பகுதி ஒற்றையடிப் பாதை எனவும் வழங்கப்பட்டு வந்தன. விசாயத்திற்கு பயன்படுத்தபடாமல் பொதுக் காரியங்களுக்குப் பயன்படுத்தப்பட்ட நிலப்பகுதி பொட்டல் எனவும், மக்கள் கூடி வாழும் குடியிருப்பு பகுதி நத்தம் எனவும், வழங்கப்பட்டு வந்தன. தேவதானம் என்பது கோயில்களுக்குத் தானமாக வழங்கப்பட்ட நிலக்கொடை ஆகும்.

**மேலும் இந்தக் கல்வெட்டில் கீழ்கண்ட ஊர்கள் குறிக்கப்பெற்றுள்ளன.**

1. சாத்தங்குடி
2. விளத்தூர்
3. மடையனேம்பல்
4. தச்சன்குளம்
5. வேங்கைப்பட்டி

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

6. அண்ணமங்கலம்
7. வேள்குலராமன் நிலை
8. வீரபாண்டிய நல்லூர்
9. அம்பலத்தாடி சதுர்வேதிமங்கலம்
10. சிவபுரி
11. பாறைக்கோட்டை

**நீா்நிலைகளின் பெயா்:**

1. சிறுத்த கண்மாய்
2. வண்ணான் குண்டு
3. தச்சன்குளம்
4. மடையனேந்தல்

**வயல்களின் பெயா்கள்:**

1. காப்புரை
2. குமரன் வயல்
3. கண்ணமங்கல வயல்

**விரையாச் சிலைக் கல்வெட்டு:**

சேதுபதிச் சீமையின் பகுதியாக விளங்கிய கானாட்டில் அமைந்திருப்பது விரையாச்சிலை என்ற ஊராகும். வீரா்களின் சிலை என்பது மருவி விரையாச்சிலை என்றாகியுள்ளது. போரில் இறந்துபட்ட வீரா்களின் நினைவாக சிலைகள் எழுப்பிப் போற்றுவது தமிழகத்தின் சங்க காலம் முதல் இருந்துவந்த வழக்காகும். இத்தகைய வீரா்களுக்கான நினைவுக்கல், நடுக்கல் எனவும், வீரக்கல் எனவும் பின்னா் வழங்கப்பட்டது. இதனைப் போன்ற நடு கல் ஒன்று முன்னா் இங்கு அமைந்திருக்க வேண்டும். இந்த ஊா் இப்பொழுது புதுக்கோட்டை மாவட்டம் திருமெய்யம் வட்டத்தில் அமைந்துள்ளது. இந்தப் பகுதி திருமலை சேதுபதியின் ஆட்சியில் கள்ளா் சீமை என்ற பெரும் பகுதியில் இந்த ஊா் அமைந்திருந்ததாகத் தெரியவருகிறது.

இங்குள்ள உலகவிடங்கேஸ்வரா் சுவாமி கோயிலுக்குத் திருமலை சேதுபதி மன்னா் சாா்பாக வழங்கப்பட்ட நிலக்கொடைச் செய்தியினை கல்வெட்டின் வாசகம் தெரிவிக்கின்றது. இந்த ஆணையைத் திருமலை ரெகுநாத சேதுபதி மன்னருக்காக அவரது பிரதான அலுவலரான சொக்கப்பன் சோ்வைக்காரா் என்பவா் வழங்கியுள்ளாா். இந்த அலுவலா் சேதுபதி மன்னரது மிக முக்கியமான அலுவலா் என்பது அவா் வழங்கியுள்ள பிற ஆவணங்களில் இருந்தும் தெரியவருகிறது. இந்த அலுவலா் கி.பி.1668-ல் இராமேஸ்வரம் திருக்கோயிலுக்காக சேதுபதி மன்னரது சிறப்பான அலுவலா் என்ற முறையில் இராமேஸ்வரம் திருக்கோயிலுக்கு திருவாடானை வட்டம் ஆனந்தூா், பாப்பாக்குடி ஆகிய ஊா்களைச் சா்வ மான்யமாக இவா் வழங்கிய செப்பேட்டினை ஏற்கனவே வெளியிடப்பட்டு இருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது. சிறப்பான நாட்களில் சுவாமியையும், அம்பாளையும் பல்லக்கில் வைத்து அலங்கரித்துக் கோயில் திருச்சுவற்றிலும், ஊரின் பிரதான வீதிகளிலும் உலா வருவதைப் பல்லக்குச்சோவை என இந்தக் கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது. சேவை என்ற வடமொழிச் சொல் இங்கு தமிழில் சோ்வை என குறிப்பிடப்படுகிறது.

பிராமண போசனம் என்பது திருவிழாக் காலங்களில் பிராமணா்களுக்கு அளிக்கப்படும் சிறப்பான விருந்து. முந்தைய சமுதாயத்தில் மக்கள் இறைவனுக்கு அடுத்தபடியாக கல்வி கேள்வியிலும் வேத வியாகரணங்களிலும் சிறப்புற்று விளங்கியவா்கள் பிராமணா்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

ஆகையினால் பிற சாதியினரைவிட பிரமாணர்கள் சிறப்பாகப் போற்றப்பட்டு கோயில் விழாக்களின் பொழுது அவர்களுக்கு முன்னுரிமையும், விருந்து உணவும் வழங்கப்பட்டு வந்தது.

தேவதாயம் (அ) தேவதானம் என்ற சொல் திருக்கோயில்களுக்குத் தானமாக வழங்கப்படும் காணிகளைக் குறிப்பதாகும். இதனைப் போன்ற பிராமணர்களுக்கு வழங்கப்பட்ட நிலங்கள் பிரம்மதேயம் எனவும் சோழ பாண்டியர்களது கல்வெட்டுகளில் காணப்படுகின்றது. இந்தக் கல்வெட்டில் குடிநீங்காத் தேவதானம் என்ற சொல் புதிதாகப் புகுத்தப்பட்டுள்ளது. ஏற்கனவே குடிகள் வாழ்ந்து வருகின்ற ஊரினை மன்னர் கோயிலுக்குத் தானமாக வழங்கும்பொழுது அந்த ஊர்களில் தொன்றுதொட்டு குடியிருந்து வரும் குடிகளது குடியிருப்பு உரிமைக்குக் குந்தகம் ஏற்படாது இருக்கும் வண்ணம் குடிகள் அந்த ஊர்களில் குடியிருந்து வரும் உரிமையை மதித்துக் கட்டளையிடப்படுவதுதான் இந்த குடிநீங்காத் தேவதானம் என்ற சொல்லுக்கு உாயி பொருளாகும். மேலும் இந்தக் கல்வெட்டின் ஐந்தாவது வரியில் கல்போட்டுக் கொடுத்து என்ற சொல் பயன்படுத்தப்பட்டு இருப்பது நோக்கத்தக்கது. ஒரு காணி அல்லது ஊரினை முழுமையாகக் கோயிலுக்குத் தானமாக வழங்கும்பொழுது அந்த நிலப் பகுதியின் பெரு நான்கு எல்லைகளையும் முழுமையாக அளவை செய்து அறுதியிட்டு அதற்கான எல்லைக் கல்லை நாட்டிக் கொடுப்பதுதான் இந்தச் சொல்லின் பொருளாகும்.

தானம் கொடுக்கப்படும் ஊர்களின் நான்கு பெரும் எல்லையைக் குறிப்பதற்காகத் தானம் பெறுகின்ற திருக்கோயில் சிவன் கோயிலாக இருந்தால் அந்த எல்லையில் சூலக் கல்லையும் (சிவபெருமானது சூலம் உருவம் பொறிக்கப்பட்ட கல்) வைணவத் திருக்கோயிலாக இருந்தால் திரு ஆழிக்கல் (மகாவிஷ்ணுவினது சக்கரத்தின் உருவம் பொறிக்கப்பட்ட கல்) நாட்டி வைப்பது வழக்கம். இத்தகைய எல்லைகளைத் தெளிவாக அறுதியிட்டுக் காண்பிப்பதற்காக ஆங்காங்கு கிராமங்களில் எல்லை விருத்தி என்ற அலுவலர் சேதுபதிகளின் ஆட்சியில் இருந்ததை இராநாதபுரம் சமஸ்தானம் மேன்யுவல் தெரிவிக்கின்றது.1

இங்கே வீரகண்டன்பட்டி எல்லையில் சூலக்கல் நாட்டி இருக்க டீவண்டும் என்பது தெரியவருகிறது. இந்த கல்வெட்டிற்கான வாசகத்தைச் சேதுபதி மன்னர் பிரதிநிதி சொக்கப்பன் சேர்வையின் ஆணைப்படி மானாமதுரையிலிருந்த சோலையாப்பிள்ளை மகன் கெங்கையாடி என்பவர் வரைந்ததை விரையாச்சிலை ஊரைச் சேர்ந்தவரான கணக்கர் சிதம்பரநாத பிச்சன் என்பவர் இதனைக் கல்வெட்டில் பொறித்தார் என்ற விவரமும் தெரியவருகிறது. மானவீரன் மதுரை என்பது சிவகங்கை மாவட்டத்தில் உள்ள ஊராகும். மானவீரன் மதுரை என குறிக்கப்பட்டுள்ள இந்த சொல் பின்னர் வானரவீர மதுரை என மருவியது. வானரவீர மதுரை புராணம் சிற்றிலக்கியம் இயற்றப்பட்டது என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

கி.பி.15, 16 ஆம் நூற்றாண்டுகளில் இந்த ஊரின் வைகை ஆற்றுக்கு வடகரையில் வானாதிராயன் என்ற குறுநில மன்னன் ஒருவன் கோட்டையினைக் கட்டி ஆட்சி செய்து வந்தான் மதுரை நாயக்க மன்னர்களுக்குக் கட்டுப்பட்டும், கட்டுபடாமலும் இயங்கி வந்த இந்த மன்னன் மீது தனிப்பாடல் ஒன்று இயற்றப்பட்டுள்ளது. அதில் மானவீர கஞ்சுகன் என்ற சிறப்புப் பெயர் குறிக்கப்பட்டிருப்பதால் இந்த மன்னன் சுந்தரத்தோன் வானாதிராயன் என்பவனைக் குறிப்பதாக உள்ளது. இந்த மானவீர கஞ்சுகன் என்ற தொடரிலிருந்து மானவீர மதுரை என்ற ஊர்ப்பெயர் உருவாகி இருக்க வேண்டும்.1 கங்கையாடி – புனிதமான கங்கை ஆற்றில் நீராடி வந்த செயலை இந்தச் சொல் குறிக்கிறது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019
Available at: www.ijtlls.com

**இந்தக் கல்வெட்டின் வாசகம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது:**

"ஸ்வஸ்திஸ்ரீ ஹ அற்பசி மாதம் 1 உ விரையாச்சிலை உலகவிட ங்கீசுவர சுவாமிக்கு பல்லக்குச் சேர்வைக்கும் பிராமன போசனத்துக்கும் திருப்பணிக்கும் நடக்கத்தக்கதாக கட்டளையிட்டது திருமலையிரகுநாத சேதுபதி காத்த தேவர் புண்ணியமாக சொக்கப்பன் சேருவைகறான் கட்டளையிட்டது. வீரகண்டன்பட்டி நஞ்சை புஞ்சை குடிநீங்கா தேவ தானமாக கட்டளையிட்டபடியிநாலே இந்தபடி கல்லிலும் செம்பிலும் வெட்டி கல்போட்டு குடுத்தபடி யினாலே சந்திராதித்தவரைக்கும் யனுபவித்துக் கொண்டு பல்லக்கு சேர்வையும் பிராமணர் போசனம் மும் திருப்பணியும் நடத்திவரக் கடவராகவும் இந்த புண்ணியத்துக்கு யுாதாம்மொருத்தர் இசைகேடு பண்ணினவன் கெங்கை கரையில் காராம்பசுவைக் கொன்ற பாவத்திலே போககடவாராகவும் இந்த கல்வெட்டு எழுதினேன் மானாராய்யன் குப்பையன் எழுத்து இப்படிக்கு வானவீரன் மதுரையிலிருக்கும் சோ லைய்யாப்பிள்ளை கெங்கையாடியர் எழுத்து விரையாச்சிலை ஊராயமைந்தவர் சொற்படிக்கு கணக்கு சிதம்பரநாத பிச்சன் எழுத்து சுபமஸ்து உ"

**செப்பேடுகள்**

தமிழக வரலாற்றை ஓரளவுக்குத் தொகுத்த எழுத உதவும் சான்றுகளாக இருப்பவை கல்வெட்டுகளும், செப்பேடுகளும் தான். ஆதியில் தமிழக அரசுகளைப் பற்றி பொதுவாகச் சொல்லப்படுகிற செய்திகள் பலவற்றை மாற்றியெழுதி, வரலாற்றில் திருப்பமாக விளங்கியவை அவற்றில் சில. திருவாலங்காட்டுச் செப்பேடுகளும் அத்தகைய ஒரு வரலாற்று ஆவணம்தான். பிற்கால சோழ வரலாற்றில் ஒரு மைல்கல் என்று இதைச் சொல்லலாம். லெய்டன் செப்பேடுகளோடு சேர்ந்து பிற்காலச் சோழர் வரலாற்றை முழுமையாக்கியதன் பெரும்பங்கு இச்செப்பேடுகளுக்கு உண்டு. வரலாற்றுச் செய்திகளைத் தவிர அக்காலச் சமூகம், அதிகாரவர்க்கம் ஆகியவற்றைப் பற்றியும்இது போன்ற செப்பேடுகளின் மூலம் அறிந்து கொள்ளமுடிகிறது. முதலாம் ராஜேந்திர சோழனால் வெளியிடப்பட்ட இந்தச் செப்பேட்டில் 31ஏடுகள் உள்ளன. அதில் முதல் 10ஏடுகள் சமஸ்கிருதத்திலும் அடுத்த 21 ஏடுகள் தமிழிலும் உள்ளன.

**பாண்டியர் செப்பேடுகள்**

பாண்டியர் செப்பேடுகள் என்பது பாண்டிய வேந்தர்கள் கொடுத்த நில தானங்களையும், தன் முன்னோர் நில தானங்களை ஆவணப்படுத்தவும் உருவாக்கப்பட்ட பட்டயங்களாகும். புாண்டியர் செப்பேடுகளில் இடைக்கால மற்றும் பிற்கால பாண்டியர்கள் காலத்தில் கொடுக்கப்பட்ட ஏழு செப்புப்பட்டயங்கள் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்ததாய் அமைந்தன. இவை கிடைக்காமல் போயிருந்தால் களப்பிரர் ஆட்சியைத் தமிழ்நாட்டில் வேரறுத்த பாண்டியர் வேந்தன் கடுங்கோன் பற்றி வரலாறு அறியாமலேயே போயிருக்கும். இடைக்கால மற்றும் பிற்கால பாண்டியர்களின் காலங்களைக் கணிப்பதற்கும், முறைப்படுத்தவதற்கும் வகையிலாமல் போயிருக்கும்.

**ஏழு முக்கியச்செப்பேடுகள்**

முற்கால மற்றும் பிற்கால் செப்பேடுகளில் ஏழு செப்பேடுகள் மிகவும் முக்கியமானவையாகக் கருதப்படுகின்றன. அவை:

1. இளையன்புதுார் செப்பேடுகள்
2. வேள்விக்குடிச் செப்பேடுகள்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

3. திருவரமங்கலத்துச் செப்பேடுகள்
4. சின்னமனூர் செப்பேடுகள் (சிறியவை)
5. சின்னமனூர் செப்பேடுகள் (பெரியவை)
6. பாண்டியன் பராந்த வீரநாராயணின் தளவாய்ப்புரச் செப்பேடுகள்
7. சிவகாசிச் செப்பேடுகள்

**செப்பேடுகளின் விவரங்கள்**

| செப்பேடுகளின் பெயர்கள் | தானம் கொடுத்த வேந்தனின் பெயர் | பாதுகாக்கப்படும் இடம் | செப்பேடுகளை வெளியிட்ட அமைப்புகள் | செப்பேடுகளின் விவரம் | செப்பேடுகள் கிடைத்த இடம் |
|---|---|---|---|---|---|
| இளையன்புதூர் | மாறவர்மன் அரிகேசரி | | ஆவணம் | 3ஏடுகள், வட்டெழுத்து, முழுமையாக உள்ளது | மதுரை |
| வேள்விக்குடி | நெடுஞ்சடையன் | பிரித்தானிய அருங்காட்சியகம் | செந்தமிழ் | 10ஏடுகள், வட்டெழுத்து, முழுமையாக உள்ளது | தெரியவில்லை |
| திருவரமங்கலம் | நெடுஞ்சடையன் | மதராசிய அருங்காட்சியகம் | இந்திய பழம்பொருளகம் | 7ஏடுகள், வட்டெழுத்து, முழுமையாக உள்ளது | தெரியவில்லை |
| சின்னமனூர் (சிறியது) | தெரியவில்லை | மத்திய தொல்லியல்துறை, மைசூர் | தென்னிந்திய கல்வெட்டுகள் | 3ஏடுகள் மட்டுமே உள்ளன, வட்டெழுத்து சில ஏடுகள் கண்டறியப்படவில்லை | சின்னமனூர், உத்தமபாளையம் வட்டம், தேனி மாவட்டம் |
| தளவாய்புரம் | பராந்தகன் வீர நாராயணன் | டி.என்.சுப்பிரமணியன் | தமிழ் வரலாற்றுக் கழகம் | 7ஏடுகள், வட்டெழுத்து, முழுமையாக உள்ளது | தளவாய்புரம், கோவில்பட்டி வட்டம், தூத்துக்குடி மாவட்டம் |
| சின்னமனூர் (பெரியது) | இராசசிம்மன் | மத்திய தொல்லியல்துறை, மைசூர் | தென்னிந்திய கல்வெட்டுகள | 7ஏடுகள் மட்டுமே உள்ளன. வட்டெழுத்து, முதலும் இறுதியுமான ஏடுகள் கிடைக்கவில்லை | சின்னமனூர், உத்தமபாளையம் வட்டம், தேனி மாவட்டம |
| சிவகாசி | வீரபாண்டியன் | மதராசிய அருங்காட்சியகம் | தமிழ் வரலாற்றுக் கழகம் | 5ஏடுகள் வட்டெழுத்து, இரண்டாம் ஐந்தாம் ஏடுகள் உடைந்து உள்ளன. | சிவகாசி, விருதுநகர் மாவட்டம் |

**சேதுபதி மன்னர் செப்பேடுகள்**

இராமநாதபுரம் சேதுபதிகளது சீமை, மறவர் சீமையை மட்டும் கொண்டதாக இல்லாமல் வடக்கிலும், வடகிழக்கிலும், சோழ மண்டலத்திற்குள்ளும் விரிந்து இருந்ததது. இந்த உண்மையை ரெகுநாத திருமலை சேதுபதி, ரெகுநாத கிழவன் சேதுபதி, முத்துவிசைய ரெகுநாத சேதுபதி மன்னர்கள், திருவாடுதுறை ஆதின கர்த்தர்களுக்கும், திருப்பெருந்துறை பண்டாரத்திற்கும், திருவாரூர் தியாகராசசுவாமி திருக்கோயிலுக்கும் வழங்கிய செப்பேடு (இந்த நூலின் தொகுப்பு எண்கள் 17,19,22,42 மற்றும் புதுக்கோட்டை சீமை வரலாறு கல்வெட்டுக்கள் வழியும் அறிய முடிகிறது.11 இதனைப் போலவே இந்த மன்னர்களது நாட்டின் கிழக்கு எல்லை இலங்கை நாட்டு மன்னர் முத்துசலாபத்துறை வரை தொடர்ந்து இருந்தது. தொன்று தொட்டு வந்துள்ள மன்னர் முத்து சலாப உரிமையினின்றும் இராமேசுவரம், திருப்புல்லாணி,

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

ஆவுடையார் கோவில்களுக்கு தங்கள் படகுகள் மூலம் மன்னர் சலாபத்தில் முத்துக்குளித்துக் கொள்வதற்கு சேதுபதிகள் அளித்துள்ள செப்பேட்டு வாசகம் சான்றாக உள்ளன. சேதுபதிகளின் சீமை தெற்கே வேம்பாற்றுவரை இருந்த தை கிழவன் சேதுபதி ஆட்சிக்காலப் பட்டயமொன்றும் செல்லமுத்து சேதுபதி கி.பி1759-ல் போகலூர் கனி சேர்வை என்பவருக்கு கன்னிராசபுரம் என்ற ஊரினைத் தானமாக வழங்கிய செப்பேடும் தெரிவிக்கின்றன.12

**நாட்டுப்பிரிவுகள்:**

சேதுபதிகளின் சீமை, முந்தைய சோழ பாண்டிய நிர்வாக அமைப்புகளைப் போன்று பலவிதமான எல்லைக் கூறுகளாகப் பிரிவினை செய்யப்பட்டு இருந்தன. (செப்பேடு எண்கள்: 15, 17, 39) இந்த மன்னர்கள் வழங்கிய சர்வ மானிய கிராமங்களுக்கு குறிப்பிடப்பட்டுள்ள நான்கு எல்லைகள் இருந்து சேது நாட்டில் கீழ்க்கண்ட நிலக்கூறுகள் முன்னர் அமைந்து இருந்தது தெரிய வருகிறது. பெரிய அளவிலான நிலக்கூறு “சீமை”“நாடு” என்றும் சிறு கூறுகள் “கூற்றம்”“பற்று” என்று வழங்கப்பட்டன. அவைகளில் சில:

**சீமைகள்**

1. திருவாரூர் சீமை
2. பட்டுக்கோட்டை சீமை
3. அறந்தாங்கி சீமை
4. சூரக்குடி சீமை
5. அஞ்சிரண்டு சீமை
6. வெள்ளாம்பற்றுச் சீமை
7. மேலமாகாணச் சீமை
8. காளையார்கோவில் சீமை
9. சிவகங்கைச் சீமை
10. கமுதைச் சீமை
11. இராமநாதபுரம் சீமை
12. திருவாடனைச் சீமை
13. புதுக்கோட்டைச் சீமை

**நாடுகள்**

1. ஆப்பனூர் நாடு
2. செவ்விருக்கை நாடு
3. கீட்செம்பி நாடு
4. கைக்கி நாடு
5. பருத்திக்குடி நாடு
6. கிடாத்திருக்கை நாடு
7. கிழக்கு வளநாடு
8. குறிச்சி நாடு
9. ஏழுர் நாடு
10. சூரக்குடி நாடு
11. தென்னாலை நாடு
12. தேர்போகி நாடு
13. முத்தத்து நாடு
14. வடதலைச் செம்பி நாடு

**கூற்றங்கள்**

1. துகவூர் கூற்றம்
2. அரும்பூர் கூற்றம்
3. நடுவில் கூற்றம்
4. மிழலைக் கூற்றம்

**பற்றுகள்**

1. சிக்கில் பற்று
2. கைக்கி நாட்டு பற்று
3. வெள்ளாம் பற்று
4. அஞ்சுகோட்டை பற்று
5. குமாரணி பற்று
6. அமரடக்கிப் பற்று

**வட்டகை**

1. கிடாரம் வட்டகை
2. கைக்கி நாட்டு வட்டகை
3. ஒரூர் வட்டகை
4. காக்கூர் வட்டகை
5. அமரடக்கி வட்டகை

**புரவு**

1. இடிகரைப் புரவு
4. சேமனூர் புரவு

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

2. கப்பலூர் புரவு
3. திருவெற்றியூர் புரவு
5. பெருங்காட்டுப் புரவு
6. குமரி ஏந்தல் புரவு

இந்த பிரிவுகளைத் தவிர, இந்தப் பிரிவுகளின் பகுதியைக் குறிப்பிடுவதற்கு வட்டாரம், வட்டகை, தட்டு என்ற சொற்களும் வழக்கில் இருந்து வந்தது தெரிய வருகிறது. இவையனைத்தும் சேதுபதிகளில் இறுதி தன்னாட்சி மன்னராக இருந்த முத்துராமலிங்க விசைய ரெகுநாத சேதுபதி ஆட்சிக் காலம் வரை நீடித்தது. அந்த மன்னரை பதவி நீக்கம் செய்து சிறையிலிட்டு ஆங்கிலேயர்கள், இந்த தன்னரசின் சிறப்பினைக் குலைத்து கி.பி.1803-ல், இராமநாதபுரத்தை ஜமினாக மாற்றம் செய்து (கி.பி.1844-ல்) புதிய நில அளவை முறையை புகுத்தியதும் இந்த நாட்டின் தொன்மையான இந்த நிலக்கூறுகளும், அவைகளை அறுதியிட்டுச் சொல்லக்கூடிய குலப்பிராமண அளவு முறையும் மறைந்து விட்டன.

**நிலங்கள்**

பொதுவாக இராமநாதபுரம் அரசுப்பகுதியில் அமைந்த பூமி, செவ்வல், கரிசல், பொட்டல், மணற்காடு, என்று இயற்கைத் தன்மையை ஒட்டி வழங்கப்பட்டது. இவைகளில் நஞ்சை, புஞ்சை, கட்டு, வயல், தோட்டம், என்ற பகுப்புகள் இருந்தன. நீர்ப்பாசன வசதி உள்ளது நஞ்சை எனவும், அவ்வித வசதி இல்லாது வானம் பார்த்த பூமி புஞ்சை என்றும் கருதப்பட்டது. சிறிய நீர் ஆதாரங்களைக் கொண்டு, விவசாயம் செய்யப்படும் நிலம் வயல், தட்டு, தேட்டு என்றும், கேணி கிணறு போன்ற சுருங்கிய நீர் வசதியுடைய விவசாயப்பகுதி தோட்டம் என்றும் வழங்கப்பட்டன. புதிதாக அமைக்கப்பட்ட தோட்டம் செய், ஆக்கல் என்ற ஊர் இருப்பது சிந்திக்கத்தக்கது. இந்த நிலங்களின் தொகுதி சீமையின் நடுப்பகுதியில் கொத்து என்றும் தென் பகுதியில் கோர்வை என்றும் வடபகுதியில் சேர்வை என்றும் பெயரிடப்பட்டிருந்தன. விளைச்சலுக்குப் பயன்படாது இயற்கையிலேயே மேடாக அமைந்த நிலத்தின் சிறுபகுதி திட்டு என்றும் பெரும் மேடு திடல் என்றும் குறிப்பிடப்பட்டன. (மயிலாடுதிடல், கானத்திடல், நரிக்குமிச்சதிடல்) விரிந்த பரப்பும் விவசாயத்திற்குப் பயன்படாததுமான பரவலான பூமி என இந்த சீமையில் பொட்டல் எனப்பட்டது.

முனியன் பொட்டல், ஓநாய் பொட்டல், காஞ்சிரடிப் பொட்டல், சிவந்தியப்பன் பொட்டல், சோசியன் பொட்டல் என்ற சொற்கள் இந்தச் செப்பேடுகளில் இடம் பெற்றுள்ளன. இவைகளுக்கு இடையில், விளைந்த தானிய மணிகளை நீக்கி ஒப்படி, சூடு அடித்தல் போன்ற செயல்களுக்கு பயன்படுத்த களம் என்ற சிறிய அளவிலான நிலப்பகுதியும் இருந்தது. விவசாயம் இல்லாத பழமரங்கள், பயன்தரும் மரங்கள் கொண்ட பகுதி தோப்பு என அழைக்கப்பட்டு வந்தது. பனை மரங்கள் மிகுதியாகவும், தொகுதியாகவும் இருந்த தோப்பு ஒன்றினைக் குறிக்க “பனங்கூடல்” என்ற சொல் ஒரு செப்பேட்டில் பயன்படுத்தப்பட்டுள்ளது.13. இங்ஙனம் பலவாறு உட்பிரிவுகளைக் கொண்டு இருந்த நிலப்பகுதியின் பொதுவான எல்லை வரம்பு, வரப்பு, புரவு, பொலி என வழக்குப் பெற்றிருந்தது. இவைகளின் பெரு எல்லைகளைக் குறிப்பிட எல்லைக்கல், சூலக்கல், குத்துக்கல், சக்கரக்கல், குழிக்கல், திருவாழிக்கல் என்பன நடப்பட்டன. சிவாலயங்களுக்கு விடப்பட்ட நிலப்பரப்பு எல்லையைக் குறிக்க “சூலக்கல்லும்” வைணவ திருக்கோயிலுக்கு வழங்கிய மானிய நில எல்லையைக் குறிப்பிட “சக்கரக்கல்”“திருவாழிக்கல்”லும் பயன்பட்டன. மற்றும் கி.பி.1781-ல் முத்துராமலிங்க விசயரெகுநாத சேதுபதி மன்னர் முத்துப்பேட்டை (இராமநாதபுரம் வட்டம்) தேவாலத்திற்கு சர்வமானியமாக வழங்கிய முத்துப்பேட்டை கிராமத்தை குறிப்பிடுவதற்கு சிலுவை பொறித்த கல் புதுமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளதும் அண்மை அகழ்வில் இருந்து தெரிய

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

வருகிறது.14 பள்ளிச்சந்தம், பள்ளிவாசல் மானிய ஊர், நிலம் எல்லையைக் குறிப்பிட நாட்டப்பட்ட கற்களுக்கு பெயர் ஏதும் இருந்ததா என்பது தெரியவில்லை.

**நீர் ஆதாரங்கள்**

இந்தச் செப்பேடுகளில் நீர்தேக்கங்கள் குறித்த கண்மாய், ஏந்தல், ஊரணி, குளம், குட்டை, குண்டு என்ற சொற்கள் பயிலப்பட்டு வந்துள்ளன. சில செப்பேடுகளில் கண்மாய் என்ற சொல் கண்வாய் என்றும் குறிக்கப்பட்டுள்ளது. இவைகளுக்கு ஆதாரமாக வைகை ஆற்றுப்பாய்ச்சல், பாண்டயாய் ஆற்றுப்பாய்ச்சல், தேனாற்றுப் பாய்ச்சல், விரிசிலை ஆற்றுப்பாய்ச்சல், குண்டாற்று பாய்ச்சல், ரெகுநாத காவேரி என்ற நீர் ஆதாரங்கள் ஆங்காங்கு குறிப்பிடப்பட்டுள்ளன. இவைகளிலிருந்து ஆற்று நீரினை கொண்டு வருவதற்கு நீண்ட குறுகிய கால்கள் வெட்டப்பட்டு இருந்தன. இவை நீர்வாங்கி, வரத்துக்கால் எனவும், வாய்க்கால் எனவும் வழங்கப்பட்டன. சில பகுதிகளில் இந்தச்சொற்கள் “வகுத்துக்கால்” என வழக்கில் இருந்தன. இவைகளின் மூலம் வரப்பெற்ற வெள்ள நீரை மிகுதியாகப் பெற்ற பொழுது இதனை வெளியேற்றுவதற்கு பிறிதொரு காலும் பயன்படுத்தப்பட்டது. அதற்கு மறுகால் எனப்பெயர். கண்மாய்களில் இருந்து நேரடியாக நீரை வெளியேற்ற பெரிய கண்களை உடைய வழி கலுங்கு என்றும் சிறிய வழி மடை என்றும் வழக்குப் பெற்றிருந்தன. சிறிய ஏந்தல் கண்மாய்களின் நீர் கொள்ளளவு குறைவாக இருப்பதால், கூடுதலாக வரும் நீரினை வெளியேற்றுவதற்கு அந்தக் கண்மாய்க் கரையின் ஒரு இடத்தில், கரை இல்லாமல் இடைவெளி விட்டு கரை அமைக்கப்பட்டு இருக்கும். இதன் வழி வெள்ளம் தானாக வழிந்து வெளியேறும். அந்தப்பகுதி “தான் போகி” எனப்பட்டது. ஆற்று நீரைத்தவிர மழைநீரைக் கொண்டு வருகிற கால் ஓடை எனப்பட்டது.

ஒரு கண்மாயின் நீண்ட கரை அடுத்த கண்மாயுடன் தொடர்ந்து இணைப்பாக அமைக்கப்பட்டு இருந்தால் அந்த இணைப்புப்பகுதி “பொருத்து” ஆகும். அந்த கண்மாயின் மூலை, தொடக்கம். அல்லது இறுதிப்பகுதி “கொம்பு, கடைக்கொம்பு” என்று குறிப்பிடப்பட்டன. இந்த கண்மாய் கரையையடுத்துள்ள கண்மாய்பகுதி “உள்வாய்” என்றும் இந்தப்பகுதியில், நீர்ப்பிடியையொட்டி இருந்த விளைநிலம் “குளம் கோர்வை” என்றும் வழங்கப்பட்டன. இந்த கரைகள் மிகுதியான வெள்ளத்தினால் அழிந்து போனால் அவை “உடைப்பு” ஆகும். கண்மாய்களில் நீர் நிரம்பிய பிறகும், கிராமபுறங்களில் நீர்ப்பிடி அல்லாத பகுதிகளிலும் அதாவது கண்மாயின் வெளிப்பகுதி தண்ணீர் தேங்கி நிற்கும் பகுதி “ காலாங்கரை” எனப்பட்டது. காலை ஒட்டிய கரை. நாளடையில் இந்தப் பகுதியின் நீர் வற்றி சகதியுமாக மாறிய ஈரப்பகுதி “வதி” இடம்பெற்றுள்ளன.

இவை போன்ற நிலம், நீர் சம்பந்தமான ஏராளமான கலைச்சொற்கள், பல நூற்றாண்டு காலமாக இந்தச் சீமையில் வழக்கில் இருந்து வருகின்றன. அவைகளில் நமக்குக் கிடைத்துள்ள செப்பேடுகளில் கையாளப்பட்டுள்ளவை மட்டும் இங்கு சுட்டிக் காட்டப்பட்டுள்ளவை.

இந்தச் செப்பேடுகளில் காணப்படும் நீர்த்தேக்கங்களின் பெயர்கள் தொகுப்பாக கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**ஆறுகள்**

1. வைகை ஆறு
2. விரிசிலை ஆறு
3. மலட்டாறு
4. பாம்பாறு
5. தேனாறு
6. குண்டாறு

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**ஏரிகள்**

1. இராமானுஜப்பேரேரி
2. இளமனேரி
3. கிழவனேரி
4. மாதவனேரி
5. மாணிக்கனேரி
6. வேளானேரி

**கண்மாய்கள்**

1. ஆத்தானூர் கண்மாய்
2. அன்னுனி கண்மாய்
3. ஆடிக்கண்மாய்
4. ஆய்க்குடி கண்மாய்
5. ஆண்டுகுடி கண்மாய்
6. இராமநாதபுரம் பெரிய கண்மாய்
7. ஏரணிக்கோட்டை கண்மாய்
8. இரைவிமங்கலம் கண்மாய்
9. கடுக்கனூர் கண்மாய்
10. கருக்காத்தி கண்மாய்
11. கருங்குடி கண்மாய்
12. கண்ணன்குடி கண்மாய்
13. கானாட்டான்குடி கண்மாய்
14. கொங்கிவயல் கண்மாய்
15. சிக்கல் கண்மாய்
16. சித்தனேந்தல் கண்மாய்
17. சிறுகானுர் கண்மாய்
18. சிறுகைக் கண்மாய்
19. சிறைக்குளம் கண்மாய்
20. சின்னாகைக் கண்மாய்
21. தவளைக்குளம் கண்மாய்
22. தேத்தாங்கால் கண்மாய்
23. தனிச்ச கண்மாய்
24. திருமண கண்மாய்
25. புல்லாக்குளம் கண்மாய்
26. புலியாத்தி கண்மாய்
27. புதுக்குடி கண்மாய்
28. பூதகுடி கண்மாய்
29. முதலூர் கண்மாய்
30. வளமாவூர் கண்மாய்
31. வலையன் கண்மாய்
32. வையை கண்மாய்
33. வெண்ணெய்குடி கண்மாய்
34. பேரா கண்மாய்

**முடிவுரை**

மேற்கண்டவாறு தமிழகத்தின் பல்வேறு பகுதிகளின் கல்வெட்டுகள் மற்றும் செப்பேடுகளில் பல அறிய தகவல்களை காணமுடிகிறது.

**துணைநூல் பட்டியல்**

1. இராமன்.கே.வி. தொல்லியியல் ஆய்வுகள்இ அகழலாய்வு,கல்வெட்டு,நாணயம் பற்றியவை நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, முதல் பதிப்பு, 2014.
2. அறிவுராஜ்.ந. தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும், பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, மூன்றாம் பதிப்பு, 2014.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies

A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019
Available at: www.ijtlls.com

# தொல்லியல் சான்றில் மிளிரும் தமிழர் பண்பாடு
# The Evidences of Tamil Culture in Archaeology

**இரா.ஆனந்தஜோதி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113

## Abstract

*The paper intends to find out the evidences of Tamil culture in Archaeology. The culture of Tamils is a noble one based on the natural life and its related principles. The Indian government through the archaeological department has conducted many surveys and site exvacuations to study on the Tamil culture. The culverts and the Kodumanal exvacation are certain examples of Tamil culture. Hence, the study helps to cull down the stance of archaeology and Tamil culture.*

**Keywords:** Evidences, Tamil Culture, Archaeology

**முன்னுரை**

தமிழர்களின் பண்பாடு மிகப் பழமையானது. நம் தமிழ் மொழி என்று தோன்றியது எனக் காலத்தை வகுக்கமுடியாத தொன்மையை உடையது என்று சான்றோர்களால் கூறப்பட்டு வருகின்றது. ஆனால் அதற்கான சான்றுகள் முழுமையாகக் கிடைக்கப் பெறவில்லை. தமிழர்களின் தொன்மையையும் பண்பாட்டையும் அறிய உதவும் சான்றுகளாக இருப்பவை கல்வெட்டுக்களும், செப்பேடுகளும் அகழ்வாராய்ச்சியில கண்டெடுக்கப்பட்ட தொல் பொருள்களும், இலக்கியங்களும் ஆகும். இலக்கியங்களைக கொண்டு தமிழர்களின் பண்பாடும் நாகரிகமும் அறியப்படுகிறது. அகழ்வாராய்ச்சியில் கண்டெடுக்கப்பட்ட தொல்பொருள்களைக் கொண்டு தமிழரின் பண்பாட்டை அறியமுடியும் என பல்வேறு ஆய்வுகள் நடத்தப்பெறுகின்றன. தொல்பொருள்களைக் கொண்டு தமிழர்களின் பண்பாட்டை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**தொல்லியல்**

காதலையும் வீரத்தையும் இரு கண்களாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் தமிழர்கள். தமிழ்நாட்டில் தொல்பொருள் ஆய்வுத்துறை 300-க்கு மேற்பட்ட நடுகற்களை வடார்காடு, தருமபுரி மாவட்டங்களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இவற்றில் பெரும்பாலானவை இன்றும் வழிபாட்டில் உள்ளது.

சங்க இலக்கியங்கள் அகழாய்வில் கண்டெடுக்கப்பட்ட நாணயங்கள், கல்வெட்டுகள் இவற்றைத் தனித்தனியாகக் கொண்டு நம் பண்பாட்டை அறிந்துகொள்ள முடியாது. அனைத்தையும் ஒருங்கிணைத்து செயல்பட்டால்தான் முழுமைபெறும். பரந்துபட்ட ஆய்வை ஒதுக்கி இவர்கள் கல்வெட்டாய்வாளர், வரலாற்று ஆய்வாளர், தொல்லியலாளர் எனப் பிரித்துப் பார்ப்பதை தவிர்க்க வேண்டும்.

தமிழகத்தில் இரண்டு வகையான அருங்காட்சியகங்கள் உண்டு.
அகழ் வைப்பகம் (அகழ்ந்து வைப்பது) - தொல்லியல் துறை

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

அருங்காட்சியகம் - அரியப் பொருள்களை வைக்கும் இடம் (வரலாறு, அறிவியல் கலந்து இருந்தல்)

அகழாய்வு செய்தப் பொருள்கள் 13 அகழ் வைப்பகத்தில் உண்டு. தருமபுரியில் நடுகல் அகழ்வைப்பகம், தொல்மாந்தர் அகழ்வைப்பகம் - பூண்டி, சுடுமண் பொம்மைகள் - கோயமுத்தூர், இராசராசன் அருங்காட்சியம் - தஞ்சை, தகடூர் வரலாற்றுப் பேரவை என்ற அமைப்பை இங்குள்ள ஆசிரியர்கள் உருவாக்கி இங்கு கிடைக்கும் பொருள்களை இங்கு கொண்டுவந்து சேர்த்தார்கள். பல ஆண்டுகளுக்குப்பின் தொல்லியல் துறைக்கு கொடுத்துவிட்டார்கள்.

**கல்வெட்டுகள்**

இந்தியாவில் கிடைத்த கல்வெட்டுகளில் அதிகம் தமிழ் மொழியில்தான் கிடைத்தது தமிழ் மொழியில்தான். நம் முன்னோர்கள், சாசனம், தனம், தானம் இவற்றை கல்லில் எழுதிவைத்து இருக்கிறார்கள். ஏனென்றால் காலங்காலமாக நிலைபெற்று இருக்க வேண்டும் என்பதற்காக கல்லில் எழுதினார்கள். செப்புத் தகடுகளிலும், தாமிரத் தகடுகளிலும் எழுதியிருக்கின்றார்கள். இவற்றின் மூலம் நம் முன்னோர்களின் வாழ்வியலை அறிந்துகொள்ள முடிகின்றது. உண்மையான வரலாற்றை மீட்டுக் கொடுக்கவேண்டும் என்ற நன் நோக்கத்துடன் தொல்லியல் துறை செயல்பட்டு வருகின்றது. “தொழு மீட்டுப்பட்டான்” என்று கல்வெட்டில் இருக்கிறது. இதன் பொருள் ஆநிரை மீட்க சென்றபோது இறந்தான் என்பதாகும்.

கல்வெட்டுகளின் நோக்கமே செய்திகள் மக்களை சென்று சேரவேண்டும் என்பதாகும். பூலான்குறிச்சிக் கல்வெட்டு தமிழ் மரபுப்படி எழுத்துக்கள் உள்ளன. கல்வெட்டுகள் பெரும்பாலும் ஆவணங்களை பதிவு செய்வதாக உள்ளது. ஆவணங்களைக் கல்லிலும் செம்பிலும் எழுதியிருக்கிறார்கள். ‘இராஜகீயம்’, ‘ஜானபாதம்’ என ஆவணங்கள் இருவகைப்படும். ‘இராஜகீயம்’ என்பது அரசன், அமைச்சர்கள் செய்துகொள்ளும் ஆவணமாகும். ‘ஜானபாதம்’ என்பது பொதுமக்கள் எழுதிக்கொள்ளும் ஆவணமாகும். ‘சாசனம்’ என்பது ஓர் அரசன் அளிக்கும் நிலக்கொடை அல்லது பொருள்தானம் கொடுப்பது பற்றி அறிந்துகொள்ளப்படுவது ஆகும். ‘ஜெயபத்ரம்’ என்பது நீதிமுறையைப் பற்றி விளக்குவதாகும். ‘ஆக்ஞாபத்ரம்’ என்பது அரசாங்க அதிகாரிகளுக்கு அளிக்கும் ஆணையைக் குறிப்பதாகும். ‘பிரக்ஞாபத்ரம்’ என்பது அரசு வழங்கும் சலுகைகளை குறிப்பதாகும். இவ்வாறு நமது பண்பாட்டையும் பழக்கவழக்கங்களையும் கல்லிலும், செப்புப்பட்டையத்திலும் எழுதிச் சென்றுள்ளார்கள். இதன்மூலம் அக்கால வாழ்க்கை முறையை நாம் அறிந்துகொள்ள முடிகின்றது.

1882 - இல் உத்திரமேரூர் கல்வெட்டில் குடவோலை பறித்துக் கொள்வாரும், கரை பறித்துக்கொள்வாரும். கரை என்பது எல்லையைக் குறிக்கும்.

**கொடுமணல் அகழாய்வு**

சங்க காலத்தைக் கால வரையறை செய்ய கொடுமணல் அகழாய்வுகள் பல சான்றுகளைத் தந்துள்ளதாகவும் இப்பகுதி மக்கள் தொழில்துறையில் முன்னேறி இருந்தார்கள் என்பதையும் உறுதிப்படுத்தும் விதமாக கொடுமணல் அகழாய்வு திகழ்கின்றது என இந்நூலின் பதிப்பாசிரியர் தி.ஸ்ரீ.ஸ்ரீதர் அவர்கள் குறிப்பிட்டுள்ளார். ஈரோடு மாவட்டம் பெருந்துறை வட்டம் நொய்யலாற்றின் வடகரையில் நொய்யல் காவிரி ஆற்றின் துணையாறு ஆகும். நெசவுத் தொழிலில் புகழ்பெற்ற சென்னிமலைக்கு மேற்கில் கொடுமணல் பண்டைக் காலத்தில் கைவினைத் தொழிலுக்குப் புகழ்பெற்ற ஊர் என்பதனை கொடுமணல் அகழாய்வின் வழி தெரிந்து கொள்ளமுடிகின்றது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

புகழ்பெற்ற சங்கப் புலவர்களாகிய கபிலரும், அரிசில்கிழாரும் கொடுமணலின் சிறப்புப் பற்றிப் பாடியுள்ளார்கள். பதிற்றுப்பத்தில் 4 இடங்களில் இவ்வூரைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. "கொடுமணம் பட்டவினை மாண் நன்கலம்" (பதிற்றுப்பத்து 67) என்று கபிலர் பாடியுள்ளார். கொடுமணலில் செய்யப்பட்ட அழகிய கல்மணிகளைப் பற்றிய செய்திகளை இன்று அறியமுடிகின்றது. தமிழர்கள் பழங்காலத்திலேயே பண்பாட்டு நாகரிகத்தில் மிகச் சிறந்து விளங்கியிருக்கிறார்கள் என்பதனை அகழ்வாராய்ச்சி சான்று பகர்கின்றன. கொங்குச் சோழக் கல்வெட்டுகளில் வெள்ளலூர் என அழைக்கப்பெறும் ஊரில் ஒப்பிலிமேடு என்றொரு மேடு உள்ளது என்றும் அம்மேட்டில் செங்காவிபானை ஓடு, முற்காலச் செங்காவிப் பானை ஓடு, கருஞ்சிவப்பு பானை ஓடு ஆகியவை மேற்பரப்பாய்வில் கண்டெடுக்கப்பட்டிருக்கின்றன என்று கொடுமணல் ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர்.

வெள்ளலூர் எனப்படும் ஊரில் மூன்றுமுறை (1842, 1891, 1932) ரோமானியக் காசுகள் புதையலாகக் கிடைத்தன என்றும் அவை பொன், வெள்ளி ஆகிய உலோகங்களால் கிடைத்தது என்றும் கி.மு.முதல் நூற்றாண்டிலிருந்து கி.பி.4 – ஆம் நூற்றாண்டுவரை வெளியிடப்பெற்றவை என்றும், பத்துக்கும் மேற்பட்ட பொன் அணிகலன்கள், சூதுபவள மணிகள் (Carnelian Beads) ஆகியவை அகழ்ந்தெடுக்கப்பட்டன என்ற செய்திகள் நூலில் இடம் பெற்றிருக்கின்றன. இவ்வாய்வின் வழி தமிழர்கள் கி.மு.முதலாம் நூற்றாண்டிலேயே சிறந்த வேலைப்பாடுடைய பொன் நகைகளை அணிந்திருக்கிறார்கள் என்றும் பவள மணிகளை அணியக்கூடிய நாகரிகப் பண்பாட்டினை உடையவர்களாகத் தமிழர்கள் திகழ்ந்திருக்கின்றார்கள் என்பதை இவ்வாய்வுகள் வழி அறியமுடிகின்றது.

தமிழர்களின் பண்பாட்டை கொடுமணல் அகழாய்வில் பண்பாட்டுக் கலங்கள் என்ற நிலையில் குறிப்பிட்டு விளக்கிக் கூறியுள்ளார்கள் கல்வெட்டாய்வாளர்கள்.

**முதல் பண்பாட்டுக் காலம்**

முதல் பண்பாட்டுக் காலமாக கி.மு. 300 கி.பி.100 இந்த முதலாம் பண்பாட்டுக் காலம் அகழாய்வுக் குழியின் கீழ்மட்டத்தில் உள்ள 3-வது மண்ணடுக்கில் சராசரியாக 30 செ.மீ. தடிப்பில் மண்ணடுக்கு குழிகள் உள்ளது. இக்காலத்தில் இரும்பை உருக்க பயன்படுத்தப்பட்ட உலையின் பகுதிகள் மற்றும் இரும்பு சிட்டங்கள் போன்றவை கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவற்றுடன் இரும்பு வாள், இரும்பிலான அம்பு முனைகள் போன்ற ஆயுதங்களும் செப்பு உலோகத்தால் ஆன வடித்தட்டின் பகுதியும் சேகரிக்கபட்டுள்ளன. இரண்டு புறமும் வெட்டும் விளிம்பைக் கொண்ட கோடாரியும் குறிப்பிடத்தக்க ஆயுதமாகும். இக்காலத்தில் நேர்த்தியாகவும் பளபளப்பாகவும் செய்யப்பட்ட மட்கலங்களை பயன்படுத்தியுள்ளனர். அதில் தமிழ் பிராமி கீறல் எழுத்துக்கள் காணப்படுகின்றன. இவற்றிலிருந்து அக்கால தமிழர்கள் இரும்பின் பயன்பாட்டையும் எழுத்தறிவும் பெற்றிருக்கிறார்கள் என்பதனை அறியமுடிகின்றது.

கொடுமணல் ஆய்வின் வழியாக தமிழ் மக்கள் இரும்பு ஆணிகள், இரும்பால் செய்யப்பட்ட பொருளை ஆண்டிருக்கிறார்கள். கற்களால் ஆன கல்மணிகளையும், சங்கு வலையல்களையும் அணிந்திருக்கின்றார்கள் என்ற பண்பாட்டுச் செய்திகள் அறியமுடிகின்றது. இரண்டாவது பண்பாட்டுக் காலத்தில் மக்கள் வீட்டின் தரைப்பகுதியில் களிமண் மற்றும் கொரம்பு மண்ணைக் கொண்டு கலந்த கெட்டிப்படுத்தி தரைப்பகுதி அமைக்கப்பட்டிருப்பது தெரியவருகின்றது. இந்நிலை கிராமங்களில் பொங்கல் விழாவிற்கு வாசலில் கோலம் போடுவதற்கு திட்டாணி என்ற அமைப்பில் இன்றும் மெலுகிக் கோலமிடுவதைக் காணலாம்.

சொறசொறப்பான சிவப்பு நிற மட்கலங்களும் சிவப்பு வண்ண பூச்சு பூசப்பட்ட தடித்த மட்கலங்களும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இக்காலத்தில் தானியங்கள் சேமித்து

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

வைக்க பயன்படுத்தப்பட்ட "தானியக்குழி" ஒன்றும் கிடைத்துள்ளது. எனவே இக்கால மக்கள் விவசாயத்தில் சிறந்து விளங்கியிருக்கின்றார்கள், கூரை வேய்ந்த வீடுகளில் வாழ்ந்திருக்கிறார்கள். இந்த ஆய்வுகளின் அடிபபடையில் தமிழர் பண்பாடு மிகத் தொன்மையானது என்பதை அறியமுடிகின்றது. கீறல் குறியீடு மற்றும் தமிழ்ப் பிராமி எழுத்துக்கள் பொறித்த மட்கலங்களின் ஓடுகளும், கூரையின் ஓடுகளும், எலும்பு, கல்மணிகள், சுடுமண் பொருட்கள் கிடைத்துள்ளது. இவற்றிலிருந்து பழந்தமிழ் மக்கள் கூரை வேய்ந்த வீடுகளில் வாழ்ந்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

கொடுமணல் அகழாய்வில் 15 அகழாய்வுக் குழிகள் வழியாக தமிழர்களின் நாகரிகப் பண்பாட்டை தற்காலத்தில் நாம் அறிந்து கொள்ளும் வகையில் பல்வேறு பொருட்கள் கிடைக்கப் பெற்றிருக்கின்றன. கிடைக்கப்பெற்ற அரிய பொருள்களைக் கொண்டு தமிழர்களின் பண்பாட்டுக் காலத்தை ஆய்வாளர்ப் பெருமக்கள் பகுப்பாய்வு செய்து இளந்தலைமுறைகள் அறிந்துகொள்ளவும். தமிழர்களின் தொன்மையான பண்பாட்டைப் பாதுகாக்கவும் பெரிதும் உழைத்துச் சேகரித்துத் தந்துள்ளார்கள். அவர்களின் வழியில் தொல்பொருள் பண்பாட்டினைக் கண்ணுற்றுப் பேணிப் பாதுகாக்கும் பணியினைச் செவ்வனே செய்ய தமிழர்களாகிய அனைவரும் முயலவேண்டும் என்பதே ஆராய்ச்சியாளர்களின் விருப்பமாகும். தூத்துக்குடி மாவட்டம் ஆதிச்சநல்லூரில் கண்டெடுக்கப்பட்ட பொருள்கள் கிறிஸ்து பிறப்பதற்கு முற்பட்ட காலத்தைச் சேர்ந்தவை என தற்போது உறுதி செய்யப்பட்டுள்ளது. அதாவது சுமார் 3,000 ஆண்டு பழமையானது எனத் தெரியவருகிறது. ஆதிச்சநல்லூர் அகழாய்வுப் பணிகள் முழுமையாக நடைபெறவில்லை. இங்கே கண்டெடுக்கப்பட்ட இரண்டு பொருள்கள் கார்பன் பரிசோதனை செய்ததில் ஒரு பொருள் கி.மு.905-ஆம் ஆண்டைச் சேர்ந்தது. மற்றொன்று கி.மு.791 – ஆம் ஆண்டைச் சேர்ந்தது. இதிலிருந்து தமிழர் நாகரிகம் சுமார் 3,000 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்பது தெரிகிறது. இதனை உலகம் முழுவதும் வாழும் தமிழர்கள் சமூக ஊடகங்கள் வழியாக கொண்டாடி வருகின்றனர்.

**முடிவுரை**

இதுவரை 25 இடங்களில் அகழ்வாராய்ச்சி நடைபெற்றிருக்கின்றது. இவை அனைத்தும் முழுமையான ஆராய்ச்சியாக நடைபெறும் போதுதான் தமிழர்களின் பண்பாட்டை முழுமையாக அறியமுடியும். தமிழர்களின் பண்பாட்டு நாகரிகம் எத்தனை ஆண்டுகள் பழமையானது என்பதனை அகழ்வாராய்ச்சியின் வழிதான் தக்க சான்றுகளுடன் நிறுவமுடியும். எனவே புதைந்து கிடக்கும் தமிழர்களின் நாகரிகத்தை மீட்டெடுக்க அகழ்வாராய்ச்சிகள் மிக முதன்மை பங்கு வகிக்கின்றன என்பதில் சிறிதும் ஐயமில்லை என்பது இக்கட்டுரையின் வழி அறியமுடிகின்றது.

**பார்வை நூல்கள்**

1. ஸ்ரீ.ஸ்ரீதர் - இ.ஆ.ப., தொல்லியல் துறை, கொடுமணல் அகழாய்வு.
2. முனைவர் பெ.அர்த்தநாரீஸ்வரர், கல்வெட்டு வழி பண்பாட்டியல்.
3. க.ப.அறவாணன், தமிழ் சமுதாய வரலாறு.
4. கல்வெட்டுப் பயிலரங்கம் (2017), உலகத் தமிழராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தொல்லியல் காலக்கணிப்பு முறைகள்
# Calculating Methods in Archaeology

**முனைவர். இரா. இந்துபாலா,** உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
திருவள்ளுவர் கல்லூரி, பாபநாசம் - 627 425.

## Abstract

*The study deals with a close analysis on the archaeological survey methods to evaluate the artefacts found in the archaeological sites. The discussion explains about the types of methods in the estimation of the relics. These methods help exactly in their phases to know the real facts of the evidences. Hence, the brief study aids to understand the assessing process of archaeology.*

**Keywords:** Calculation Methods, Archaeology, Civilization

**முன்னுரை**

மனித இனத்தின் வளர்ச்சியையும், அதன் பலதரப்பட்ட இயல்புகளையும் அறிந்து கொள்ள தொல்லியல் பயன்படுகிறது. பண்டைய மனிதர்களின் நாகரிக வளர்ச்சி படிநிலைகளை விளக்குகிறது. மக்களின் பாரம்பரிய பெருமையையும், பண்பாட்டையும், பழக்க வழக்கங்களையும் பறைசாற்றுவதாக தொல்லியல் ஆய்வுகள் அமைகின்றன. தொல்லியல் ஆய்வுகள் மூலம் கிடைக்கும் சான்றுகள் நம்பகத் தன்மை கொண்டனவாக உள்ளன. இவ்வாய்வுகள் ஒரு நாட்டின் நாகரிக வளர்ச்சியை, பிற நாட்டு நாகரிக வளர்ச்சியுடன் ஒப்பிட்டுப் பார்க்க முடிகிறது. வரலாற்றை அறிந்து கொள்ள மூலதாராமாக விளங்கும் தொல்லியல் துறையில், அகழாய்வில் கிடைக்கும் நாணயங்கள், கல்வெட்டுகள், பயன்படுத்திய பொருட்கள், புதை படிவங்கள் இவற்றின் வயதைக் கணக்கிட பலதரப்பட்ட காலக்கணிப்பு முறைகளை ஆய்வாளர்கள் பின்பற்றுகின்றனர். அவற்றைப் பற்றி விரிவாக இக்கட்டுரையில் காணலாம்.

**உத்தேச மதிப்பு காலவரையறை (Relative Dating)**

வரலாற்றுக்கு முற்பட்ட காலம் பற்றிய செய்திகளை அறிந்து கொள்ள தொல்லியல் ஆய்வாளர்களால் பயன்படுத்தப்படும் எளியமுறை இம்முறை ஆகும். கண்டெடுக்கப்பட்ட புராதனப் பொருள்களின் வடிவம், அமைப்பு, அளவு, வண்ணம் போன்றவை இந்த முறையில் முக்கியத்துவம் பெறுகிறது. மேற்குறிப்பிட்ட அம்சங்களில் ஒத்திருக்கும் புராதனப்பொருட்கள் ஒன்றாகத் திரட்டப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட காலத்தில் உருவாக்கப்பட்ட கருவிகள் மற்றும் மட்பாண்டங்கள் ஒரேவிதமான தன்மையைக் கொண்டுள்ளன. இவ்வாறு ஒரே விதமான தன்மைகளைக் கொண்ட புராதனப் பொருட்களைக் கொண்டு கண்டெடுக்கப்பட்ட அல்லது தோண்டி எடுக்கப்பட்ட புராதனப் பொருட்களின் காலத்தைக் கணிக்கலாம்.

ஓரிடத்தில் நடைபெறும் அகழாய்வில் பலவகையான மட்கலன்கள், காசுகள், எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட ஓடுகள், சிற்பங்கள் முதலியவை கிடைக்குமென்றால் அவற்றை உத்தேச மதிப்பு முறையில் காலவரையறை செய்யலாம். உதாரணமாக ஓர் ஆய்வுக் குழியில் எட்டு மண்ணடுக்குகள் இருப்பதாக வைத்துக் கொள்வோம். இவற்றுள் முதலாவது

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019
Available at: www.ijtlls.com

மண்ணடுக்கில் விஜயநகர அரசர்களின் காசுகளும், ஐந்தாவது மண்ணடுக்கில் பல்லவர்களது காசுகளும் கிடைப்பதாக வைத்துக்கொள்வோம் அப்படியென்றால் முதலாவதிலிருந்து ஐந்தாவது வரையுள்ள மண்ணடுக்களின் காலம் ஏறத்தாழ கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து கி.பி.பதினாறாம் நூற்றாண்டு வரை என்று கூற முடியும். இது போன்று ஐந்தாவது மண்ணடுக்கிற்கு கீழாக உள்ள மண்ணடுக்குகள் கி.பி.ஏழாம் நூற்றாண்டுக்கு முற்பட்டவை என்பதும் தெளிவாகும்.

இதே போன்று ஒவ்வொரு காலகட்டத்திலும் சிற்பங்கள் அந்தந்த காலக் கலைப்பாணியில் செய்யப்பட்டிருப்பது அனைவரும் அறிந்த ஒன்று. இந்த சிற்பங்கள் மண்ணடுக்களில் கிடைத்தால் கலைப்பாணியை அடிப்படையாக வைத்தே அச்சிற்பங்களின் காலத்தை மண்ணடுக்குகளுக்கு வழங்கலாம். இதே போலவே சுடுமண் உருவங்கள், ஆடை அலங்காரம் முதலியவற்றைக் கொண்டும் காலத்தைக் கணக்கிடலாம்.

**கார்பன் - 14 அல்லது ரேடியோ கார்பன்முறை (Radio active C-14 dating)**

அகழாய்வில் கிடைக்கும் மரத்துண்டுகள், கரித்துண்டுகள், எலும்புகள், சாம்பல் முதலியவற்றிலுள்ள கரித்தன்மையை அடிப்படையாகக் கொண்டு காலநிர்ணயம் செய்வதே கார்பன்-14 முறையாகும். தொல்லியல் துறையில் பயன்படும் முக்கிய தொழில்நுட்பமாக இதனைக் குறிப்பிடலாம். சிக்காகோ நகரைச் சேர்ந்த வில்லர்ட் லிபி (Willard Libby) என்பவர் இந்த காலக்கணிப்பு முறையை 1949-ல் உருவாக்கினார். இந்த ஆய்வுக்காக அவருக்கு 1960-ம் ஆண்டு நோபல் பரிசு வழங்கப்பட்டது.

எல்லா உயிர் வாழ்வனவற்றிலும் கரி என்னும் தனிமம் நிறைந்துள்ளது. உடல் வளர்ச்சிக்கு இன்றியமையாத பொருளாக அமைவது கரியாகும். தாவரங்களிலும், விலங்குகளிலும் ஒருபுறம் பழைய கரி அணுக்கள் வெளியேறிக் கொண்டிருக்க மறுபுறம் புதிய கரி அணுக்கள் நுழைந்த வண்ணம் உள்ளன. இவை காற்றிலிருந்து கார்பண்டை ஆக்ஸைடு வாயுவை உள்வாங்குகின்றன. அதில் கரியை (Carbon) தன் வசப்படுத்திக் கொண்டு அதிகமாக இருக்கும் ஆக்சிஜனை வெளியேற்றுகின்றன. இந்த தாவரங்களை விலங்குகளும் மனிதர்களும் உட்கொள்ளவே அவற்றின் உடலிலும் கரியணுக்கள் சேர்கின்றன. இவை உயிரிகளின் வளர்சசிக்கு உறுதுணையாக உள்ளன.

வளிமண்டலத்திலுள்ள கார்பன் டை ஆக்ஸைடு வாயுவில் C-12, C-13, C-14 ஆகிய மூன்று கரி அணுக்கள் இருக்கின்றன. இயல்பில் கரி C-12 வகை அணுக்களால் ஆனது. வளிமண்டலத்தின் உயர் அடுக்குகளிலுள்ள நைட்டரஜன் அணுக்கள் மீது அண்டக்கதிர்கள் (Cosmic rays) மோதுவதால் C-14 அணுக்கள் உருவாகின்றன. சற்றே நிறை கூடிய இந்த கரி அணுக்கள் எண்ணிக்கையில் குறைவாக இருந்தாலும், உயிரினங்களின் உடலில் நுழைந்துவிடுகின்றன. இந்த அணுக்கள் கதிரியக்கத்தன்மை (radio activity) பெற்றதாக உள்ளது. இவை சிதையும் போது பின்னேற்றத்துகள்கள் வெளிப்படுகின்றன. C-14 அணுக்கள் நம் உடல் திசுவிலும் இடம் பெற்றிருப்பதால் நாமும் ஒருவகையில் கதிரியக்கம் கொண்டவர்களே ஆகும்.

ஒரு தாவரமோ, உயிரியோ மடியும் போது அவற்றுள் உட்கொள்ளப்படும் கரியின் அளவு முற்றிலும் தடைபடுகிறது. அதாவது கார்பன் அணுக்களின் நுழைவு நின்றுபோகிறது. அவை காலப்போக்கில் மின்னேற்றம் கொண்ட துகள்களை வெளியிட்டு இயல்பான கார்பன்-12 வகை அணுக்களாக மாறுகின்றன. இதை சிதைவுறும் வேகத்தை அரை – ஆயுள் (Half life) என்று குறிப்பிடுகின்றனர். அதாவது ஒரு பொருளின் கதிரியக்கம் அதன் தொடக்க

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

நிலையிலிருந்ததைக் காட்டிலும் பாதியாகக் குறைவதற்கு எடுத்துக் கொள்ளும் காலத்தை அரை ஆயுள் என்று அழைக்கின்றனர்.

கார்பன் 14 அணுக்களின் அரை ஆயுள் காலம் 5568 ஆண்டுகள் என்று மதிப்பிடப்பட்டுள்ளது. அதாவது 5568 ஆண்டுகளுக்கு முன்பு ஒரு மரம் வீழத்தப்படடிருந்தால் அதிலிருந்து வெளிப்படும் கதிரியக்கத்தின் அளவு இன்று வெட்டப்படும் மரத்திலிருந்து வெளியாகும் கதிரியக்கத்தின் அளவில் சரிபாதியாக இருக்கும். கதிரியக்கத்தால் வெளிப்படும் துகள்களை எண்ணுவதற்கு கைகர் எ்ணணி (Geiger counter) என்ற கருவி பயன்படுத்தப்படுகிறது.

வில்லர்ட் லிபி கண்டு பிடித்த இந்த C-14 காலக் கணிப்பு முறை தொல்லியல் துறையில் ஒரு புரட்சியை ஏற்படுத்தி விட்டது. மக்கிப்போன மரம், எரிந்து கரியான மரம், மக்கிப் போகாமல் இருக்கும் எலும்பு நிலக்கரி, தோல்பொருட்கள், துணித்துண்டுகள், ரோமம் போன்றவைகளும் C-14 காலக்கணிப்பிற்கு உகந்தவைகளாக உள்ளன. இந்தப் பொருட்கள் கவனமாகச் சேகரிக்கப்பட்டு வேதியல் சோதனைச் சாலையில் எரிக்கப்பட்டு அதிலிருந்து வரும் கார்பனின் அளவையும், அதன் கதிரியக்கச் செயல்பாட்டையும் அளவிட்டு அதன் காலம் கணிக்கப்படுகிறது. இம்முறையில் கணிக்கப்படும் பொருள்களின் காலம் 320 ஆண்டுகள் கூடுதலாகவோ அல்லது குறைவாகவோ இருக்க இடமுண்டு.

C-14 வழிமுறையில் புராதனப் பொருட்களின் காலத்தைக் கணிக்கும் வசதிகள் அமெரிக்காவில் பென்சில்வேனியா பல்கலைக்கழகத்திலும், இங்கிலாந்தில் அருங்காட்சி சோதனைச் சாலையிலும் உள்ளன. இந்தியாவில் மும்பையிலுள்ள டாடா அடிப்படை ஆய்வு நிறுவனம் லக்னோவில் உள்ள பீர்பால் சானி (Birbal Sahni) நிறுவனம், அகமதாபாத்திலுள்ள இயற்பியல் சோதனைச் சாலை ஆகிய இடங்களில் C-14 முறையைப் பயன்படுத்தும் வசதிகளைப் பெற்றுள்ளன.

**காந்தவியல் கணிப்பு முறை**

கற்கள் மற்றும் களிமண் பொருட்களில் அமைந்துள்ள காந்தசக்தியின் அடிப்படையில் இந்த முறை அமைந்துள்ளது. பூமிக்குள் புதைந்திருக்கும் கற்கள், களிமண் அடுக்குகள் முதலியவற்றுள் இரும்பு ஆக்சைடு (Iron Oxide) என்ற தாது உள்ளது. இது காந்த சக்தியை பெற்றுள்ளது. செங்கற்சூளைகளும், அடுப்புகளும் சில சமயங்களில் காந்தசக்தி உடையதாக உள்ளன. இவற்றிலுள்ள காந்தசக்தியை அறிந்து வரைபடம் தயாரிக்கப்படுகிறது. இந்த காந்தசக்தியையும் பூமியில் இயற்கையாக உள்ள காந்த சக்தியையும் ஒப்பிட்டுப் பார்த்து காலத்தை கணிக்க முடிகிறது.

இந்த காந்த சக்தி முறையைப் பயன்படுத்தி இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு உட்பட்ட செங்கற்கள், சூளைகள் அடுப்புகள் ஆகியவற்றின் காலத்தைக் கணிக்க முடியும். பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்த செல்லியர் என்பவர் இந்த முறையைப் பயன்படுத்தினார். இங்கிலாந்தில் குக், அயட்கென் ஆகிய ஆய்வாளர்கள் இந்த முறையைப் பயன்படுத்தினர்.

**தெர்மோ லூமினிசென்ஸ் முறை**

இது இயற்பியல் சார்ந்த வெப்ப ஒளி உமிழ் காலக் கணிப்பு முறை என்று அழைக்கப்படுகிறது. இது அண்மைக் காலங்களில் அதிகமாகப் பயன்படுத்தப்படும் முறை ஆகும். அகழாய்வில் கண்டெடுக்கப்படும் மட்பாண்டங்களின் காலத்தைக் கணக்கிட இந்தமுறை பயன்படுகிறது. இந்த தெர்மோ லூமினிசென்ஸ் முறை 1953-ல் டேனியல்ஸ், பாய்ட், சாண்டர்ஸ் ஆகியோரால் அறிமுகம் செய்யப்பட்டது. பின்னர் கென்னடி, நாப் ஆகியோர் இந்த முறையை சிலமாற்றங்களுடன் பயன்படுத்தினார்கள்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

மட்கலன்களை ஒருகுறிப்பிட்ட அளவுக்கு அதிகமாகச் சூடாக்கும்போது அவற்றிலிருந்து தெர்மோ லுமினிசென்ஸ் என்ற ஒளி வெளிப்படும். இதன் அளவைக் கண்டறிந்து காலத்தைக் கணிப்பது தான் இந்த முறையின் முக்கிய அம்சமாகும்.

களிமண்ணைப் பயன்படுத்தி செய்யப்பட்டுள்ள மண்பாண்டங்களில் எலக்ட்ரான் என்ற அணுக்கள் காலப்போக்கில் தானாகச் சேர்ந்து கொண்டே இருக்கும். இந்த எலக்ட்ரான்கள் அடங்கிய மண்பாண்டங்களை $360^0$ சென்டிகிரேட் அளவுக்கு சூடேற்ற வேண்டும். அப்போது அவற்றிலிருந்து மெல்லிய நீலநிறமுடைய ஒளி ஒன்று வெளிப்படும். இந்த ஒளி நேரடியாக கண்ணுக்குப்புலப்படாது. எனவே சக்தி வாய்ந்த நிழற்படக் கருவி மூலம் கண்டறிந்து ஒளியின் அளவு கணக்கிடப்படுகிறது. இந்த ஒளியின் அதிக அளவு அல்லது குறைந்த அளவைக் கொண்டு காலத்தைக் கணக்கிடலாம். மிகவும் பழமையான பாண்டங்களிலிருந்து அதிக ஒளியும், அண்மைக்கால பாண்டங்களிலிருந்து குறைவான ஒளியும், அண்மைக்கால பாண்டங்களிலிருந்து குறைவான ஒளியும் உருவாகும். இந்த முறையில் மட்பாண்டங்கள் செங்கற்கள், சுடுசெம்மண் பொருட்கள் ஆகியவை ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்படுகின்றன.

**வேதியியல் பகுத்தாய்வு கணிப்பு முறை**

C-14 காலக் கணிப்புமுறை மூலம் எழுபதாயிரம் ஆண்டுகளுக்குட்பட்ட பொருட்கள் தொடர்பான காலக்கணிப்பு மட்டுமே செய்யமுடியும். ஆனால் வேதியல் பகுத்தாய்வு முறையில் அக்கால எல்லைக்கும் மேற்பட்ட புராதனப் பொருட்களின் காலத்தையும் கணிக்க முடியும்.

இறந்த மண்ணோடு மண்ணாகிவிட்ட விலங்கு மற்றும் மனிதர்களின் எலும்புகளில் புளோரின் என்ற உலோகம் சாரா வேதியற் பொருள் அதிகரிக்கிறது. நிலத்தடி நீரில் அமையும் புளோரினின் அளவின் அடிப்படையில் எலும்புத்துண்டுகள் ஏற்றுக்கொள்ளும் புளோரினின் அளவு அமைகிறது. மண்ணுக்கடியில் எலும்புத்துண்டுகள் எவ்வளவு காலம் புதைந்து கிடக்கின்றனவோ அதற்கேற்ப புளோரின் அளவு அதிகமாக உள்ளது. வேதியல் பகுத்தாய்வு மூலம் க்ணடெடுக்கப்பட்ட எலும்புத் துண்டுகளில் உறிஞ்சப்பட்டுள்ள புளோரின் அளவு மதிப்பிடப்படுகிறது. இதன் மூலம் அதிகமான புளோரின் உள்ள எலும்புகள் காலத்தால் முந்தியவை என்று கணக்கிடப்படுகிறது.

இதேபோல புராதன எலும்புத் துண்டுகளில் பொதிந்துள்ள நைட்ரஜன் அளவைக் கொண்டும் காலக் கணிப்பைக் செய்யலாம். மேலும் கண்டெடுக்கப்பட்ட எலும்புத் துண்டுகளில் பொதிந்துள்ள இரும்பு மற்றும் பாஸ்பரஸ் ஆகியவற்றை வேதியற் பகுப்பாய்வு செய்வதன் மூலம் காலக்கணிப்பு செய்யப்படுகிறது.

**பொட்டாசியம் ஆர்கான் காலக்கணிப்பு முறை**

புவியியல் சார்ந்த காலத்தைக் கணக்கிட இது பயன்படுகிறது. மலை, பாறை ஆகியவற்றில் பொட்டாசியம் என்ற ரசாயனப் பொருள் அதிகமாகக் காணப்படும். பொட்டாசியத்திலுள்ள ரேடியோ ஆக்டிவ் ஐசடோப் (K-40) ஆனது காலம் போக்கில் ஆர்கன்-40 எனப்படும் ஆவியாக மாறிக்கொண்டே வரும். இந்த பொட்டாசியம் ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஒரு குறிப்பிட்ட அளவு ஆவியாக மாறும் என்று கணக்கிடப்பட்டுள்ளது. இதன் அடிப்படையில் Spectra Meter என்ற கருவியைப் பயன்படுத்தி ஒரு பாறையில் எவ்வளவு பொட்டாசியம் காலப்போக்கில் ஆர்கான் ஆவியாக மாறி உள்ளது என்பதை கண்டுபிடித்து அந்தப்பாறை எந்தக் காலத்தைச் சேர்ந்தது என்று கணக்கிடுவது வழக்கமாகும். பொதுவாக இந்தமுறையில் காலக்கணிப்பு செய்வது புவியியல் ஆய்வுக்கு மட்டுமே பொருத்தமாக

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

உள்ளது. மண்ணடுக்குள், அரும்பொருட்களில் காலத்தை இம்முறை மூலம் துல்லியமாகக் கணக்கிட முடியாது.

**எரிமலை சாம்பல் படிவக் கணக்கீட்டு முறை**

எரிமலை பீறிட்டு வெடித்துச் சிதறும் போது லாவா என்ற எரிமலைக் குழம்புடன் தெப்ரா என்ற ஒருவகையான சாம்பலும் வெளிப்படும். இந்தச்சாம்பல் பூமியிலும், கட்டிடங்கள், வயல்வெளிகள் ஆகியவற்றிலும் படியும். இவற்றைக் கண்டுபிடித்து அறிவியல் முறையில் ஆய்வு செய்து காலத்தைக் கணக்கிடுவதே இந்த முறையின் அம்சமாகும். இதன் மூலம் மண்ணடுக்கள் மற்றும் கட்டிட இடிபாடுகளின் காலத்தைக் கணக்கிடலாம். எரிமலைகள் இல்லாத இடத்தில் இந்த ஆய்வு முறையை செயல்படுத்த முடியாது. ஐஸ்லாந்தில் S.தோராய்ன்சைன் என்பவர் மக்கள் வாழ்ந்து மறைந்த பகுதிகளில் நடத்தப்பட்ட அகழாய்வுகளில் ஏராளமான தெப்ரா சாம்பல் படிவங்கள் காணப்பட்டன. இதனை இவர் ஆய்வு செய்து அங்கு வாழ்ந்த மக்களின் காலத்தையும், மண்ணடுக்குகளின் காலத்தையும் வரையறை செய்து உலகிற்குத் தெரிவித்தார்.

**மரவளையக் காலக் கணிப்பு முறை**

பண்டைக்கால மரங்களில் உள்ள அதன் குறுக்கு வெட்டில் காணப்படும் வளையங்களைக் கண்டறிந்து அவற்றை நன்றாகக் காலம் தெரிந்த மரத்தின் வளையங்களோடு ஒப்பீடு செய்து முந்திய மரங்களின் காலத்தைக் கணக்கீடு செய்வதே மரவளையக் கணக்கீடு முறையாகும். இது ஆங்கிலத்தில் Dendro Chronology என்று அழைக்கப்படுகிறது. ஆனால் இந்த முறை மூலம் கடந்த மூவாயிரம் ஆண்டுகளுக்கு உட்பட்ட மரப்பொருட்களின் காலத்தை மட்டுமே கணக்கிட முடியும்.

ஒரே மரத்தண்டின் குறுக்கு வெட்டுத் தோற்றத்தைப் பார்த்தால் அதில் பொதுமையம் கொண்ட வளையங்கள் (rings) பல இருப்பதைக் காணலாம். தாவரத்தின் வளர்ச்சியில் ஒவ்வொரு ஆண்டும் ஒரு புதிய வளையம் தோன்றுகிறது. இவ்வளையங்களை எண்ணிப்பார்த்து ஓடு மரத்தின் வயதைக் கூறிவிட முடியும். இந்த வளையங்களுக்கு ஒரு குறிப்பிட்ட பருமன் இருக்கிறது. இந்த பருமன் வளையங்களுக்கு வளையம் சற்று வேறுபடுகிறது. ஈரமான வசந்தகாலம் தடிமனான வளையத்தையும், உஷ்ணமான கோடைகாலம் மெல்லிய வளையத்தையும் உருவாக்குகின்றன. அதாவது ஒவ்வொரு ஆண்டும் நிலவும் தட்பவெப்ப நிலக்கு ஏற்ப மரவளையங்களின் பருமன் அமைகிறது. இந்த பண்பே மரவளையங்களின் அடர்த்தியில் வானிலைத் தகவல் பதிவாகியிருப்பதை அறிய உதவுகிறது.

இம்முறையில் மரங்களின் ஆயுட்காலத்தை துல்லியமாகக் கணிக்கமுடிகிறது. காலத்தைக் கணிப்பதற்கு மட்டுமல்லாமல் ஒரு இடத்தில் நிலவிய பண்டைக்கால தட்பவெப்ப நிலையை அறிவதற்கும் இந்த முறை பயன்படுகிறது. தொல்லியல் ஆய்வாளர்களுக்கு இந்த தகவல் மிகவும் பயனளிப்பதாக உள்ளது.

மரத்தில் காணப்படும் வளையங்களைக் கொண்டு காலத்தைக் கணிக்க இயலும் என்பதை சார்லஸ் பபேஜ் என்ற கணிதவியல் அறிஞர் 1837-ல் உலகிற்கு அறிவித்தார். கணிப்பொறியின் தந்தை என்று அழைக்கப்படுபவரும் இவரே ஆவார். மரவளையக் காலக்கணிப்பை மேலும் செழுமைப்படுத்த உருவாக்கி 1929-ல் உலகிற்கு உணர்த்தியவர் டக்லஸ் என்ற அமெரிக்க வானியல் அறிஞர் ஆவார்.

கலிபோர்னியாவிலுள்ள வெள்ளைக்கிரி பகுதியில் மிகப் பழமையான ஊசிஇலை மரங்கள் ஏராளமாக உள்ளன. மரவளையக் காலக்கணிப்பு கொண்டு அங்கு இன்றும்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

மடியாமல் இருக்கும் ஒரு மரத்தைச் சோதனையிட்டபோது அதன் வயது 4600 ஆண்டுகள் என்று தெரியவந்தது. மேலும் கார்பன்-14 கணிப்பு முறையின் நம்பகத் தன்மையைச் சரிபார்க்கவும் இந்த மரவளையக் காலக்கணிப்பு முறை உதவியாக உள்ளது.

**மகரந்தத்தூள் கணிப்பு முறை**

பழங்கால மரங்களிலிருந்து விழுந்த மகரந்தப் பொடிகளை அடிப்படையாக வைத்து காலத்தைக் கணக்கிடுவதே இந்த முறையின் முக்கிய அம்சமாகும். மகரந்தப் பொடியின் உதவியால் காலத்தைக் கணிக்க முடியும் என்று முதன் முதலில் 1916-ல் உணர்த்திக் காட்டியவா லேனார் வான்போஸ் என்ற அறிஞர் ஆவார்.

தாவரங்கள் அனைத்துமே தட்பவெப்ப நிலை மாறுதல்களுக்கேற்ப மாற்றங்களுக்கு உள்ளாகும் தன்மையுடையவை ஆகும். அவ்வாறு ஏற்படு மாற்றங்கள் அவற்றின் மகரந்தத்தூள் மாற்றத்திற்கும் காரணமாக உள்ளது. அமிலங்கள் மற்றும் ஈரமான நிலப்பரப்புகளில் அவை பாதுகாப்புடன் இருக்கும். ஐரோப்பாவில் காற்றோட்ட மில்லாத களிமண்ணாலான பூமியில் மகரந்தத்தூள் பாதுகாக்கப்படுகிறது. அகழாய்வு செய்யும் போது மண்ணடுக்குகளில் மட்கிப் போன மரம் செடிகளின் திசுக்களுடன் மகரந்தப் பொடிகளும் கிடைக்கப் பெறலாம். அவற்றை நுண்ணோக்கியின் மூலம் பரிசோதனை செய்யும்போது எந்த வகையைச் சார்ந்த மரத்தின் மகரந்தப் பொடிகள் என்பதைக் கண்டறிய முடியும். பின்னர் அவற்றின் காலத்தை அதே இன மரத்தைச் சார்ந்த நன்கு காலம் தெரிந்த மகரந்தப்பொடிகளுடன் ஒப்பிட்டு காலத்தைக் கணிக்க முடியும்.

ஆனால் மகரந்ததூள் ஆய்வின் மூலம் காலத்தை துல்லியமாகக் கண்டுபிடிக்க முடியாது. அது ஒரு உத்தேசக் கணிப்பாகவே அமையும். மேலும் அகழாய்வுகளில் மகரந்தப் பொடிகளை எளிதில் கண்டுபிடிக்க முடிவதில்லை. அப்படி கண்டுபிடிக்கபட்டாலும் அவற்றை மிகவும் பாதுகாப்பாக வைத்தால் தான் ஆய்வு செய்ய வசதியாக இருக்கும். தொல்லியிர் படிம மகரந்தங்களைப் பற்றி ராபர்ட் பொடோனி என்பவர் ஆய்வு செய்து பல முடிவுகளை வெளியிட்டுள்ளார். ரோஜர்வுட் ஹவுஸ் என்பவரும் இந்த மகரந்ததூள் ஆய்வில் ஈடுபட்டுள்ளார். 1944-ல் ஸ்வீடனில் உள்ள ஸ்டாக் ஹோம் நகரில் மகரந்தத்தூள் ஆய்வுக்கூடம் நிறுவப்பட்டது. இந்த ஆய்வுக்கூடத்தில் மகரந்தத் தூள் ஆய்வின் அடிப்படையில் பலதாவர இனங்கள் கண்டறியப்பட்டன.

**ஒலி அதிர்வுக் காலக்கணிப்பு முறை**

ஒளியில் ஏற்படும் அதிர்வினை ஆய்வு செய்யும் முறை அதிர்வாய்வு எனப்படும். இதனைப் பயன்படுத்தியும் தொல்லியல் ஆய்வாளர்கள் காலக்கணிப்பு செய்ய முடியும். இந்த முறையை ஸ்பெச்ட், பெர்க் ஆகியோர் பயன்படுத்தி வழிகாட்டியுள்ளனர். காலத்தின் தன்மைக்கு ஏற்ப எலும்புத் துண்டுகளில் ஒலி அதிர்வு குறைகிறது என்ற உண்மையின் அடிப்படையில் இந்த காலக்கணிப்பு செய்யப்படுகிறது.

இன்று உள்ள எலும்புத்துண்டில் ஏற்படும் ஒலி அலைகளின் விசையைவிட ஐநூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட எலும்புத்துண்டு மீது ஏற்படும் ஒலி அலைகளின் விசைபாதியாக இருக்கும். ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட எலும்புத்துண்டின் மீது ஏற்படும் ஒலியின் விசை கால்பங்குதான் இருக்கும். இம்முறையினால் உத்தேசமான காலக் கண்கீடு தான் செய்யமுடியும்.

**ஆப்சிடியன் படிவகணிப்பு முறை**

ஆப்சிடியன் என்பது பாறைக்கற்களில் காணப்படும் ஒரு வகையான தாதுப்பொருளாகும். இது ஈரப்பதத்தை உறிஞ்சும் தன்மையுடையதாகவும் எளிதில் அழிந்து போகாத

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

தன்மையுடையதுமாக உள்ளது, ஒரு குறிப்பிட்ட ஈரத்தை உறிஞ்சி படிவங்களாக கல்லில் படியும். இந்தப் படிவுகளைக் கணக்கிட்டு காலத்தைக் கணிப்பதே இந்த முறையின் சிறப்பு அம்சமாகும்.

கற்கால மனிதர்கள் கைக்கோடாரி போன்ற ஆயுதங்களைச் செய்வதற்காக மூலக்கல்லிலிருந்து தேவையற்றவைகளை உடைத்து எடுத்துவிட்டு எஞ்சியுள்ளவற்றை சீர் செய்து கருவிகளாகப் பயன்படுத்தினர். இவ்வாறு செய்யப்பட்ட கற்கருவியின் பரப்பில் உள்ள ஆப்டிசியன் தாது ஈரத்தன்மையை உறிஞ்சி படிவங்களை ஏற்படுத்தும். இந்த படிவங்களை கணக்கிட்டு அந்தக் கருவி எப்போது செய்யப்பட்டது என்பதைக் கூற முடியும். ஆனால் இந்த முறையினை ஆப்சிடியன் தாது இல்லாத பாறைகளில் பயன்படுத்த முடியாது.

**முடிவுரை**

மேலே கூறப்பட்டுள்ள பல்வேறு காலக்கணிப்பு வழிமுறைகள் வெவ்வேறு சூழ்நிலைகளுக்கேற்ப பயன்படுத்தப்படுகின்றன. தொல்லியல் ஆய்வில் காலக்கணிப்பு மிகவும் முககியமானதாகும். பொருட்களின் காலத்தை தெரிந்து கொள்ளவில்லை என்றால் வரலாற்றை முழுமையாக அறிய முடியாது. அதே போல் காலக்கணிப்பு இல்லையென்றால் தொல்லியல் ஆய்வும பயனற்றதாகிவிடும்.

**துணை நூல்கள்**

1. பேராசிரியர் ஜே. தர்மராஜ், டாக்டர் த. எபிஜேம்ஸ், கல்வெட்டியல், டென்சி பப்ளிகேஷன்ஸ், சிவகாசி, ஐந்தாம் பதிப்பு – 2014.
2. முனைவர். சுப்புராயலு, தமிழ்க் கல்வெட்டியலும் அதன் வரலாறும், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், முதற்பதிப்பு - 2001.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தொல்லியல் மெய்ப்பிக்கும் பூம்புகார்
# Poombukar as revealed by Archaeology

**முனைவர் ப. இராதா,** உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
எஸ்.டி.என்.பி. மகளிர் வைணவக் கல்லூரி, சென்னை - 600044.

**Abstract**

*Two thousand years ago 'PoogarNagaram' left an indelible marble in the field of sea trade and it was specified in ancient literature elaborately. Such resourceful Nagaram was submerged in the sea due to a natural disaster and this claim was proven by archaeological department. Tamil clan is a prishne and the ancient one. According to Archaeology department, Tamil is the first and fore most clan in the world and it is comprechensive to accept that 'PoogarNagaram' is an ancient city in the world. The paper discloses the facts related to the evidences of Archaeology.*

**Keywords:** Poombukar, Archaeology, Tamil Culture

2000-ம் ஆண்டுகளுக்கு முன்பாகவேதமிழர் நாகரிகத்திலும் கடல் வாணிகத்திலும் சிறப்புற்றுவிளங்கிய'புகார் நகரம் தமிழ்ச் செவ்விலக்கியங்களில் மிகுதியாகப் பேசப்படுகின்றன. அத்தகு சிறப்பு வாய்ந்த புகார் நகரம் இயற்கையின் சீற்றத்தால் கடல் நீருக்குள் மூழ்கடிக்கப்பட்டுள்ளது என்பதை அகழாய்வுகளின் அடிப்படையிலும், கடலாய்வுகளின் வாயிலாகவும் அறியமுடிகின்றது. இன்று 'கல்தோன்றி மண் தோன்றா காலத்தே வாளொடுமுன் தோன்றிய மூத்தக்குடி நம் தமிழ்க்குடி' என்பதைத் தொல்லியல் ஆய்வுகள் வழித் திரட்டப்படும் சான்றுகள் நிருபித்து வருகின்றன. இந்நிலையில் சங்க இலக்கியங்களில் காணப்படும் புகார் நகரின் சிறப்பும், அமைப்பும் தற்கால தொல்லியல் ஆய்வுகளின் வாயிலாக மெய்ப்பிக்கப்பட்டு வருகின்ற செய்திகள் ஈண்டு ஆய்வுக்குட் படுத்தப்படுகின்றன.

**காவிரிப் பூம்பட்டினம் (பூம்புகார்)**

பழந்தமிழகத்தில் சோழர்களின் தலைநகரமாகவும் முக்கியத் துறைமுகங்களில் ஒன்றாகவும் திகழ்ந்த ஊர் காவிரிப்பூம்பட்டினம் ஆகும். இதனை "பூம்புகார், காவிரிப்பூம்பட்டினம், காகந்தி, சம்பாபதி, பல்புகழ்மூதூர், மண்ணகத்து வான்பதி, சோழப்பட்டினம், கபேரிஸ் எம்போரியம், கோலப்பட்டினம்"[1] எனவும் பல்வேறுபெயர்களால் அழைக்கப்படுகின்றது. செவ்விலக்கியங்களான பட்டினப்பாலை, சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற இலக்கியங்கள் பூம்புகார் நகரின் சிறப்பையும் ஆட்சி சிறப்பையும் எடுத்தியம்புகின்றன.

"பூம்புகாரில் 1910-ஆம் ஆண்டு முதலே ஆய்வுப்பணிகள் தொடங்கப்பட்டன. 1963-64ம் ஆண்டில் மத்திய தொல்லியல் துறையைச் சார்ந்தவர்களும் சென்னைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் டாக்டர்.கே.வி. இராமன் அவர்கள் மேற்பார்வையிலும் அகழாய்வுப் பணிகள் மேற்கொள்ளப்பட்டன."[2] அதனடிப்படையில் "இங்கே கண்டுபிடிக்கப்பட்டுள்ள புத்தவிகாரம், நீர்த்தேக்கம், முன்துறை, சோழப் பெருமன்னர்கள் வெளியிட்டகாசுகள், ரோமாபுரியைச் சேர்ந்தநாணயங்கள், பானைஓடுகள் போன்ற இன்னபிறவெல்லாம் காவிரிப்பூம்பட்டினத்தின்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

தொன்மையையும், கீர்த்திமிகு மேன்மையையும் எடுத்துக்காட்டுகின்றன"[3] என்பதை தொல்லியல் ஆய்வாளர் கருத்துகள் வழி அறியலாம்.

**துறைமுகம்**

பூம்புகார் துறைமுகத்தில் அழகிய நாவாய்களும், ஏற்றுமதி இறக்குமதிப் பண்டங்களின் குவியல்களும், அயல் நாட்டிலிருந்து வந்திறங்கிய குதிரைகளும் காணப்பட்டன என்றும், பலமொழிகள் பேசும் மக்களும் அங்கு இருந்தனர் என்பதை கடியலூர் உருத்திரங்கண்ணனார் அழகுறப் பாடியுள்ளார். கண்ணுக்கினிய புகார் துறைமுகத்தில் ஆடிக்கொண்டே நின்ற மரக்கலங்களின் கூம்பின் மேல் கட்டப்பட்டிருந்த கொடிகள் அசைந்து கொண்டிருந்தன என்பதை,

"தீம்புகார்த் திரைமுன்துறைத்
தூங்குநாவாய் துவன்றிருக்கை
மிசை கூம்பின் அசைகொடியும்" (பட்டினப்பாலை, 173-175)

என்ற வரிகள் உணர்த்த, "கடற்கரையிலிருந்து மேற்கில் உள்ள கீழையூரில் சிறிய படகுகளை நிறுத்தி, சரக்குகளை இறக்குமதி ஏற்றுமதி செய்வதற்கான சிறிய முன் துறை (Brick-jetty) ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இந்தச் சுவரில் அங்குமிங்கும் மரக்கம்பங்கள் பொருத்தப்பட்டிருப்பது நன்கு தெரிகின்றது."[4] என்ற தொல்லியளாளர் கருத்து படகுத்துறை இருந்ததை மெய்ப்பிக்கிறது. மேலும், மரக்கலங்களில் வந்த பண்டங்கள் கரையில் இறக்கப்பட்டன. நிலத்திலிருந்து கொண்டு வரப்பட்ட பண்டங்கள் கலங்களில் ஏற்றப்பட்டன. அளப்பரிய இப்பண்டங்களின் மீது இலச்சினை இடுவோர் சோழமன்னனின் புலி இலச்சினையைப் பதித்தனர் என்பதை,

"நீரினின்றுநிலத்தேற்றவும்
நிலத்தினின்றுநீர்ப்பரப்பவும்
அளந்தறியாப் பலபண்டம்
வலியுடைவல்லணங்கினோன்
புலிபொறித்துப் புறம்போக்கி" (பட்டடினப்பாலை:129-135)

இவ்வறு புகார் துறைமுகத்தில் பண்டமாற்று நிகழ்ந்ததைப் பட்டினப்பாலையின் வாயிலாக அறியலாம். அதற்கு ஆதாரமாக அகழாய்வுகளின் வாயிலாகக் கிடைக்கும் பொருட்களில் இதுபோன்ற இலச்சினைப் பொறிக்கப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது.

**பூம்புகாரின் சிறப்பு**

கடலில் மரக்கலத்தே வந்த குதிரைகளும், நிலத்திலிருந்து வண்டிகளில் வந்த கரியமிளகுப் பொதிகளும், மேருவிலே பிறந்த மாணிக்கமணியும், பொன்னும், குடகுமலையிற் பிறந்த சந்தனமும், அகில் மரமும், தென்திசைக்கடலில் பிறந்த முத்தும், கீழ்த் திசைக்கடலில் பிறந்த பவளமும், கங்கையாற்றில் பிறந்த பொருள்களும், ஈழத்தே தோன்றிய பொருள்களும், கடாரத்துப் பொருள்களும் இன்னபிற அரியபெரிய பொருள்களும் குவிந்துக் கிடக்கும் தெருவினையுடையது புகார் நகரம் என்பதை,

"நீரின் வந்தநிமிர்பரிப் புரவியும்
காலின் வந்தகருங்கறி மூட்டையும்
...அரியவும் பெரியவும் நெரியஈண்டி
வளந்தலைமயங்கியநனந்தலைமறுகின்"

எனும் பட்டினப்பாலையின் வரிகளின் மூலம் புகார் நகரத்துச் சிறப்பினையும், வாணிபம் சிறப்புற்று இருந்ததையும் அறியமுடிகின்றது. இத்துணைச் சிறப்புமிகுப் புகாரின் துறை ஒட்டிய

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

பகுதிகளில் பலநாடுகளுக்கும் சென்று அம்மொழிகளை எல்லாம் பேசுகின்ற பிறநாட்டு வணிகர் மகிழ்ந்து உறைந்தனர் என்பதையும் (பட்டினப்பாலை. 216-219) வரிகள் தெளிவுபடுத்துகின்றன. பூம்புகாரின் கடற்கரை ஓரம் வாணிபத்தின் பொருட்டுச் சோனகர், சீனர், சாவகர் முதலிய பலநாட்டாரும் விடுதிகளை அமைத்துக் கொண்டு வாழ்ந்தனர். அவர்களுடன் உள்நாட்டு மக்களும் கலந்து உறவாடினர். இருதிறத்தாரும் மனமொத்து வாழ்க்கை நடத்தினர். பௌத்த, சமண, வைதிக சமயமக்களும் பண்டைத் தமிழரோடு அமைதியுடைய வாழ்க்கையை வாழ்ந்து வந்தனர் என்பதற்குச் சோழனின் செங்கோற் சிறப்பே காரணமாகும். இன்று ஆழ்கடல் ஆய்வுகளின் வாயிலாக புத்த படிமங்கள் கிடைக்கப்பெறுவது இதற்குச் சான்றாகும்.

**பூம்புகாரின் ஆற்றுமுகம்**

பூம்புகாரின் ஆற்றுமுகம் சிறப்பான தொழில்நுட்பத்துடன் அமைக்கப்பட்டிருந்தது என்பதை புறநானூறு தெளிவாகக் குறிப்பிட்டுள்ளது. பெரும்பாலும், ஆற்றுமுகம் என்பது கடல்துறையைக் காட்டிலும் ஆழமும் அகலமும் குறைவானதாக இருக்கும். எனவே கடலில் வந்த பெருங்கலம் ஆற்று முகத்தில் புகும்போது கலத்தின் விரைவாலும், பாரத்தாலும் தரைதட்டும். அதனால் கலத்தின் மேலே கூம்பொடு விரிக்கப்பட்ட பாயினைக் களைதலும் கலத்தில் ஏற்றி வந்த பொருட்களின் பாரத்தைக் குறைத்தலும் செய்வர். ஆனால் இவ்வாறு செய்யாமல் பூம்புகார் ஆற்றுமுகம் ஆழமும் அகலமும் மிகுந்திருந்தது. எனவே பெரும் மரக்கலங்கள் விரைவாக பாரத்துடன் செல்லும் போது தரைதட்டாது செல்லும் அளவிற்குத் தொழில் நுட்பத்தில் சிறந்தவர்களாக விளங்கினர் என்பதையும், மரக்கலங்கள் கரையோரத்திற்கே வரக்கூடிய தன்மை உடையது என்பதை,

"………………கூம்பொடு
மீப்பாய் களையாது,மிசைப்பரம் தோண்டாது,
புகாஅர்ப் புகுந்தபெருங்கலம் தகாஅர்
இடைப்புல் பெருவழிச் சொரியும்" (புறம்.30: 11-14)

புறநானூற்றின் வாயிலாக அறியமுடிகின்றது. மேலும், தன்னாட்டு மரக்கலங்களும், அயல்நாட்டினரையும் இரவில் திசைமாறிச் சென்று விடாமல் தடுக்க கலங்கரை விளக்கமும் அமைத்திருந்தனர் என்பதை சிலப்பதிகாரம் "இலங்குநீர் வரைப்பின் கலங்கரை விளக்கமும்" (6:41) என்பதன் வாயிலாக தொழில் நுட்பஅறிவு பெற்றவர்களாகத் திகழ்ந்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

**ஏரிகுளம்**

கரிகாலன் காவிரியாற்றை ஒழுங்குபடுத்தியதோடு அல்லாமல் பலகுளங்களைப் புதியனவாக தோற்றம் பெறச் செய்யவும், கோவில்களையும், கோட்டைக் கொத்தளங்களையும் ஆங்காங்கே அமைத்துள்ளான் என்பதை,

"காடுகொன்றுநாடாக்கிக்
குளம் தொட்டு வளம் பெருக்கிப்
பிறங்குநிலைமாடத்துஉறந்தைபோக்கிக்
கோயிலொடுகுடிநிறீஇ
வாயிலொடுபுழையமைத்து
ஞாயில் தொறும் புதைநிறீஇப்" (பட்டினப்பாலை: 83-288)

பகர்கின்றது. மேலும், காவிரி கடலோடு கலக்கும் இடமாகிய சங்கமுகத் துறையில் அமைந்திருந்த நெய்தலங்கானல் என்ற சோலையில் காமவேள் கோட்டம் இருந்தது என்பதை (பட்.35-38) எடுத்துரைக்கின்றது. அந்தக் காமவேள் கோட்டத்துடன் இணைந்தனவாகச்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

சோமகுண்டம், சூரியகுண்டம் என்னும் பெயருடைய இரண்டு தீர்த்தங்கள் இருந்தன என்பதை சிலப்பதிகாரம் 9: 59-60 விளக்குகின்றது. இவை இரண்டும் தீர்த்தங்கள் என்றே அடியார்க்குநல்லாரும் தமது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

**கடல்கோள்**

மணிமேகலை வஞ்சிமாநகரில் சமயக் கணக்கர்களிடம் பல்வேறு சமயநெறிகளைக் கேட்டறிந்து கொண்டிருந்த காலத்தில் புகார் நகரம் கடலால் உட்கொள்ளப்பட்டது. (இன்றைய காலத்தில் சுனாமி என்கிறோம்.) அப்போது பௌத்ததுறவி அறவணஅடிகள், பௌத்ததுறவறம் மேற்கொண்டிருந்த மாதவி முதலானோர் தப்பிப்பிழைத்து, காஞ்சிபுரம் வந்து சேர்ந்தனர் என்பதை,

“மாநகர் கடல்கொளஅறவணரடிகளும் தாயரும் ஆங்குவிட்டு
இறவாது இப்பதிப் புகுந்ததுகேட்டதும்” மணிமேகலை: 80-81

என்ற வரிகளின் வாயிலாக கடல்கோள் குறித்த செய்தி இடம் பெற்றுள்ளதை அறியமுடிகின்றது. இதன் காரணமாக கடல் அகழாய்வுகளின் வாயிலாக நாகரிகத்தில் சிறந்த நாகரிகமாக புகார் நகரம் இருந்ததற்கான சான்றுகள் கண்டெடுக்கப் பட்டுவருகின்றன.

**ஓவியம்**

பூம்புகார் பட்டினத்துச் சோழர் அரண்மனையில் வெளிப்புறத்துச் சுவர்களின் மீது ஓவியங்கள் தீட்டப்பட்டிருந்தன என்றும், அதன் வழியே சாலையில் சென்ற தேர்களால் சேறும் தூசியும் அந்த ஓவியங்களின் மீது படிந்திருந்தன. இதனால் வெண்மைநிற அரண்மனைச் சுவர்கள் சாம்பலில் புரண்ட ஆண் யானை போன்று தோன்றியது என்று ஓவியத்தின் சிறப்பைப் பட்டினப்பாலை கூறுகின்றது.

“தேரோடத் துகள்கெழுமி
நீராடியகளிறுபோல
வேறுபட்டவினையோவத்து
வெண்கோயில் மாசூட்டும்” (பட்டினப்பாலை. 47-50)

மேலும், மணிமேகலையில் சுடு மண்ணால் கட்டப்பட்டவீடுகளின் வெளிப்புறத்தில் பூசப்பட்டவெண் சுதையில் ஓவியங்கள் வரையப்பட்டிருந்தன. இவற்றில் வானவர் முதலிய பல்வகை உயிர்களின் உருவங்கள் ஓவியமாகத் தீட்டப்பட்டிருந்தது. அதனை அவ்வழியே செல்லும் மக்கள் கண்டு மகிழ்ந்தனர் என்பதை,

“வம்பமாக்கள் கம்பலை மூதூர்ச்
சுடுமண் ஓங்கியநெடுநிலைமனைதொறும்
மையறுபடிவத்துவானவர் முதலா
எவ்வகைஉயிர்களும் உவமங் காட்டி
வெண்சுதைவிளக்கத்துவித்தகர் இயற்றிய
கண்கவர் ஓவியங் கண்டுநிற் குநரும்” (மணி. 3:126-131)

மணிமேகலைக் குறிப்பிடுகின்றது. இவற்றின் வாயிலாக,தொல் தமிழ் மக்கள் தம் உள்ளக் கருத்தை இலக்கியங்களின் வாயிலாகவும், தம் எண்ணங்களை ஓவியங்களின் (சித்திரம்) வாயிலாகவும் வெளிப்படுத்தினர். இதனைத் தொல்பொருள் ஆய்வுகளாலும் இலக்கியச் சான்றுகளின் வாயிலாகவும் அறியமுடிகின்றது.

**E-ISSN: 2581-7140**

**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

**அடிக்குறிப்பு**

1. ப.ஆ.முனைவர் க.அருள்மொழி,பூம்புகார் ஆழ்கடல் அகழ்வைப்பகக் கையேடு, ப.2
2. ப.ஆ.முனைவர் க.அருள்மொழி,பூம்புகார் ஆழ்கடல் அகழ்வைப்பகக் கையேடு, ப.7
3. கே.வி.இராமன்,தொல்லியல் ஆய்வுகள், ப.25
4. கே.வி.இராமன்,தொல்லியல் ஆய்வுகள், ப.23

**E-ISSN: 2581-7140**
**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

# நடுகல் வழிபாட்டு முறையில் வாழ்வியல் பதிவுகள்
## Social Life Registration from Stonehenge Worship

**முனைவர் வை.இராமராஜ பாண்டியன்,** பேராசிரியர் மற்றும் புலத்தலைவர்,
**க.கருப்பசாமி,** முனைவர்பட்ட ஆய்வாளர், தமிழியற்புலம், இக்கால இலக்கியத்துறை,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை - 21

**Abstract**

*The article focuses that anthropologists are the first to know the oldest living standards. In the field of humanity, the culture, liturgical methods rituals ought to be done in the original idea to extract evidences. Tamil people are a classic set of people who had the tradition of Stonehenge worship. They erected stones for the brave and chivalrous men. That shows the social life of the Tamil people. Moreover their tradition, and cultural rituals are understood through authentic evidences. Hence the study gives informations from the culverts.*

**Keywords:** Social Life, Registration, Stonehenge Worship

**முன்னுரை**

இந்தியாவில் மக்கள் எப்படி வாழ்ந்தார்கள் என்பதைக் கண்டறிந்து கொள்ள தொல்லியல் சான்றுகள் பெரிதும் துணை புரிகின்றன. மனிதன் புவியுலகில் தோன்றிய காலம் முதல் இன்று வரை வரலாற்றை அறிந்து கொள்ள தொல்லியல் உதவுகிறது. தொல்லியலுக்கும், வரலாற்றுக்கும் பண்டைத் தமிழர்களின் பண்பாடு, நாகரிகம், வீரம், பெருமை, புகழ், முன்னேற்றம், பரிணாம வளர்ச்சிப் பாதை போன்றவற்றை அறிந்து கொள்வதில் அதிக ஒற்றுமை உள்ளது. அந்த வகையில் நடுகல் வழிபாடானது மக்களிடையே வாழ்வியல் பதிவுகளாக உள்ளதைக் காணும் வகையில் இக்கட்டுரை அமைகிறது

**நடுகல் வழக்கம்**

தொல்காப்பியர் நடுகல் வழக்கத்தை,

"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தல் என்று
இருமூன்று மரபில் கல்லொடு புணர"[1] (தொல்.பொருள்.இளம்.63)

என்னும் நூற்பாவில் கூறுகிறார். மேலும், பகைவரே! என்னுடைய தலைவர் முன் எதிர்த்து நிற்காதீர்கள், என்னுடைய தலைவர் முன் எதிர்த்து நின்று கல் வடிவாய் பலர் நின்றுள்ளதை,

"என்ஐ நில்லன்மின் தெவ்விர் பலர்என்ஐ
முன்நின்று கல்நின் றவர்"[2] (குறள்.771)

என்ற குறள் மூலம் நடுகல் வைக்கும் வழக்கத்தைத் திருவள்ளுவர் குறிப்பிடுகிறார்.

நடுகல் எழுப்பக் காரணம்,

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

"நடுகற்கள் பொதுவாக அரசனுக்காகப் போர் செய்து உயிர் நீத்தவர்களுக்கு எழுப்பட்டுள்ளன. குறிஞ்சி, முல்லை போன்ற நிலங்களில் நடுகற்கள் அதிகம் காணப்படுகின்றன. இப்பகுதியின் இடையே வாழ்ந்த மக்கள் பிரிதொரு குழுவைச் சேர்ந்த மக்களின் கால்நடைகளைக் கவர்ந்து சென்றனர். அவற்றை மீட்பதற்கு ஏற்பட்ட பூசல்களில் உயிர் நீத்த வீரர்களுக்கு நடுகல் எடுத்தனர். இதனை ஆநிரை கவர்தல், ஆநிரை மீட்டல் என இலக்கியங்கள் நவில்கின்றன. கொடிய விலங்கோடு போராடி உயிர் நீத்தவர்களுக்கும் நடுகல் எடுக்கப்பட்டுள்ளது. வீரர்களுக்கு தேவலோக மகளிரால் வரவேற்கப்பட்டு அழைத்துச் செல்லப்படும் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன"[3] என்று தி.மனோன்மணி அவர்கள் நடுகல் எடுக்கும் காரணத்தைக் கூறுகிறார்.

**நடுகல் வழிபாடு**

"பூ நான்கு, உணவு நான்கு, குடி நான்கு என்று பட்டியல் இட்டுக் காட்டும் நடுகல் வழிபாட்டை,

"ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி
ஒளிறுஏந்து மருப்பில் களிறுஎறிந்து வீழ்ந்தெனக்
கல்லே பரவின் அல்லது,
நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே" (புறப்பாடல்.335: 9-12)

என்னும் பாடல் மூலம் விளக்குகிறார். நெல் உகுத்துப் பரவத்தக்க கடவுளாக நடுகல் ஒன்றை மட்டுமே காட்டுகிறார் மாங்குடி மருதனார். இதன் மூலம் சங்ககாலத்து மக்கள் நடுகல்லைத் தெய்வமாக வழிபட்டுள்ளனர்"[4] என்று வே.மகாதேவன் கூறுகின்றார்.

"இறந்த வீரனுடைய பெருமையை உணர்த்தும் வகையில் அவனுக்கு நடுகல் நட்டு வழிபாடு செய்யும் முறையும், போரில் வீரமரணம் அடைந்த மன்னனுக்கு நடுகல் நட்டு அதனைச் சுற்றி மதில் அமைத்துக் கோயில் வழிபாடு செய்கின்ற முறையும் ஆகிய இருவேறு முறைகள் இருந்தன என்றும், அவற்றுள் மன்னனுக்கு கோயில் 'பெரும்படைக் கோட்டம்'"[5] என்று வழங்கப்பட்டது என்று மயிலை சீனி வேங்கடசாமி கூறுகின்றார்.

நடுகல்லானது செங்குத்தாக நடப்பட்டிருக்கிறது. அதில் ஓர் உருவம் செதுக்கப்பட்டுள்ளது. போரில் மாண்ட வீரனைப் பற்றி இக்கல்லில் குறிப்பு உள்ளது. காலப்போக்கில் வீரனின் பெயர், அவன் வீழ்த்தப்பட்ட சூழல் போன்றவை அக்கல்லில் பொறிக்கப்பட்டுள்ளது. நடுகல்லின் மீது மயில் தோகை மாலைபோல சூடப்பட்டுள்ளது. ஒவ்வொரு நடுகல்லின் முன்பும் வேல் ஊன்றி அவ்வேலின் மேல் கேடயப் பலகை சார்த்தப்பட்டுள்ளது. வீரனும் வேலும் கேடயமுமாகக் காட்சி தரும் இவ்விடமானது, போர்க்களக்காட்சி போல் பயம் தரக்கூடியதாக உள்ளதை,

"நட்ட போலும் நடாஅ நெடுங்கல்
ஆகலிடம் குயின்ற பல்பெயர் மண்ணி
நறுவிரை மஞ்சள் ஈர்ம்புறம் பொலிய
அம்புகொண்டு அறுத்த ஆர்நார் உரிவையின்" (அகம்.269: 7-10)

என்னும் அகநானூற்றுப் பாடல் வழி அறிய முடிகின்றது.

**சான்றோர்க்கு நடுகல்**

வீரமும், வள்ளண்மையும், அருளோடும் பலர்க்கு நிழலாக நின்று உலகம் போற்றும் வகையில் வாழ்ந்தவர் கோப்பெருஞ்சோழன். அவர் வடக்கிருந்து உயிர் நீத்தார். இதுபோன்று உயிர் துறந்த சான்றோர்களுக்கு நடுகல் வைக்கின்ற வழக்கம் இருந்துள்ளதை,

"பலர்க்கு நிழலாகி உலகமீக் கூறித்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

தலைப்போ கன்மையில் சிறுவழி மடங்கி
நிலைபெறு நடுகல் ஆகியக் கண்ணும்
இடம் கொடுத்து அளிப்ப'' (புறம்.223: 2-4)

என்னும் பாடலின் மூலம் காணமுடிகிறது.

**சிற்றரசர் பற்றிய குறிப்பு**

போரில் வீரமரணம் அடைந்து நடுகல்லாகிவிட்ட பெரிய வள்ளலும், சிற்றரசனுமாகிய அதியமான் நெடுமான் அஞ்சியை,

''இல்லா கியரோ காலை மாலை
அல்லா கியர்யான் வாழும் நாளே
நடுகல் பீலி சூட்டி நாரரி
சிறுகலத் துஉகுப்பவும் கொள்வன் கொல்லோ!'' (புறம்.232: 2-4)

என்னும் பாடல் மூலம், அதியமான் இல்லாத காலையும், மாலையும் எனக்கு இல்லை யாகுக! என் வாழ் நாளும் முடியும்!. அவனது நடுகல்லில் மயில் பீலியை சூட்டி, நாரால் அரித்து வடிகட்டப் பெற்ற மதுவைச் சிறிய கலத்தில் ஊற்றி, அவனது நடுகல்லின் முன்பு வைத்தால், அதை அவன் எடுத்துப் பருகுவானோ?, மாட்டானோ? என்கிறார் ஔவையார். இதன் மூலம் நடுகல்லின் முன்பு மது போன்ற பொருள்களை வைத்து படைக்கும் மரபு இருந்துள்ளதை அறிய முடிகிறது.

**மக்களின் நம்பிக்கைகள்**

''நடுகல்லை வழிபடுகின்ற வழக்கத்தின் தோற்றம் மற்றும் வளர்ச்சியை அறிய இனக்குழு மக்களிடம் இருந்து பண்பாட்டு நம்பிக்கைகளை தெரிந்து கொள்ள வேண்டியுள்ளது. இனக்குழு மக்களிடையே இறந்தவர்களின் ஆன்மா, சக்தி பற்றிய நம்பிக்கைகள் இருந்தன. இத்தகைய நம்பிக்கை தமிழகத்தில் மட்டுமல்லாது உலக நாடுகளிலும் இருந்துள்ளதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இறந்தவர்களின் ஆன்மாவிற்கு ஆற்றல் அதிகம் உள்ளதால், ஆக்க சக்திகளாகவும், அழிக்கும் சக்திகளாகவும் பயன்படும். அதற்குச் சடங்குகள், வழிபாடுகள், சாந்திகள் ஆகியன செய்தால் மகிழ்ந்து, ஆற்றலை அளிக்கும், எதிரிகளுடன் போரிட உதவும், ஆடு, மாடுகளைப் பாதுகாக்கும், வயல்களில் விளைச்சல்கள் அதிகப்படுத்தும் என்று மக்கள் நம்பிக்கை வைத்துள்ளனர்''[6] என்று தி.சுப்பிரமணியன் கூறுகிறார்.

**படையல் வழிபாட்டு முறை**

நடுகல்லை வழிபடுவதற்கு அதில் மாற்றோரைகளைச் சூடி துடியை அடித்து, நெல்லாக்கிய கள்ளோடு செம்மறிக் குட்டியைப் பலி கொடுத்துள்ளதை,

''நல்அமர்க் கடந்த நாணுடை மறவர்
பெயரும் பீடும் எழுதி, அதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்'' (அகம்.67: 8-10)

என்னும் பாடல் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது. மேலும்,

''நடுகல் பீலி சூட்டி, துடிப்படுத்து,
தோப்பிக் கள்ளோடு துரூஉப்பலி கொடுக்கும்'' (அகம்.35: 8-9)

என்னும் பாடலானது நடுகல்லின் வழிபாடு பற்றி எடுத்தியம்புகிறது.

சிற்றூரின் அருகாமையிலுள்ள நடுகல்லானது தினந்தோறும் மாசுபடாத நீரால் தூய்மை செய்யப்பட்டு, அதிகாலைப் பொழுதில் பலி உணவு படைக்கப்படுகிறது. நெய் விளக்கு

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

ஏற்றப்படுகிறது. அந்நெய் விளக்கின் புகை, மேகக் கூட்டம போல் மேலெழுந்து தெரு வெல்லாம் நறுமணம் வீசுகிறது.

"இல்அடு கள்ளின் சில்குடிச் சிறூர்ப்
புடைநடு கல்லின் நாட்பலி ஊட்டி,
நன்னீர் ஆட்டி, நெய்ந்நறைக் கொளீஇய
மங்குல் மாப்புகை மறுகுடன் கமழும்" (புறம்.329: 2-4)

என்னும் பாடல் மூலம், கோயில்களில் கடவுள் சிலையை நீராட்டி, நெய்விளக்கு ஏற்றி, உணவு படைக்கும் வழக்கம், அக்கால நடுகல் வழிபாட்டிலிலேயே தொடக்கம் பெற்று விட்டதை கண்டறிய முடிகிறது. பெண்ணானவள் நாளும் தவறாது நடுகல்லைக் கையால் தொழுது வழிபட்டுள்ளதை,

"அரிதுஉண் கூவல் அங்குடிச் சீறூர்
ஒலிமென் கூந்தல் ஒள்நுதல் அரிவை
நடுகல் கைதொழுது பரவும் ஒடியாது" (புறம்.306: 2-4)

என்னும் பாடல் மூலம் தெரிந்து கொள்ள முடிகிறது.

**சமூக நிலைப் போக்கு**

வீரன் போரில் வீரமரணம் அடைந்து நடுகல்லாகி ஆகிவிட்டதால், வீரனுடைய மனைவியானவள், அணிகலன்களையும், கூந்தலையும் களைத்து மொட்டைத் தலையுடன் கைம்மை நோன்பு மேற்கொண்டுள்ளதை,

"..............................நடுகல் ஆகிய
வெல்வேல் விடலை இன்மையில் புலம்பிக்
கொய்ம் மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய
கழிகல மகடூஉ..." (புறம்.261: 15-18)

என்னும் புறநானூற்றுப் பாடல்வழி அறிய முடிகிறது.

**ஓயாத பூசல்**

"பண்டைய காலத்தில் வேட்டைத் தொழில், கால்நடைகளை வளர்ப்பது முக்கியத் தொழிலாக இருந்தது. மக்கள் தங்களுடைய கால்நடைகளை மிகப்பெரிய சொத்தாகக் கருதினர். இதனால் கால்நடைகளைக் கவர்வதிலும், மீட்பதிலும் அதீதக் கவனம் செலுத்தினர். கால்நடைகளுக்குத் தேவையான இயற்கைச் சூழல் நிறைந்த சமவெளிப் பரப்புகள் தங்களுடைய கட்டுப்பாட்டிற்குக் கீழ் இருக்க வேண்டும் என்று பூசல்கள் ஏற்பட்டன. இத்தகையப் போர் முறைகளைத் தொல்காப்பியம், புறநானூறு, புறப்பொருள் வெண்பாமாலை போன்ற நூல்கள் திணைகளாக வகைப்படுத்திக் கூறியுள்ளன"[7] என்று தி.சுப்பிரமணியன் கூறுகிறார்.

யானை ஒன்று நடுகல்லை ஆள் என்று எண்ணி மோதியதால் நகம் உடைந்து வருந்தியதை,

"அத்த நடுகல் ஆள்என உதைத்த
கூன யானைக் கதுவாய் வள்ளுகிர்
இரும்பனை இதக்கையின் ஒடியும் ஆங்கண்" (அகம்.365, 4-6)

என்னும் பாடல் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

பாலை நிலத்தில் ஆண் நாய், பெண் நாயுடன் நடுகல்லின் பிம்ப நிழலில் தங்கியுள்ளதை,

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

"எழுத்துடை நடுகல் இன்நிழல் வதியும்
அருஞ்சுரக் கவலை" (அகம்.53, 11-12)

நிழலின் 'அருமை வெயிலில் தெரியும்' என்னும் பழமொழிக் கேற்ப, பாலை நிலத்தில் நடுகல்லின் நிழல் இனிமையாக இருந்ததை மேற்கண்ட அடியின் மூலம் உணரலாம்.

**முடிவுரை**

பண்டைய காலத்தில் போரில் வீரமரணம் அடைந்த வீரர்களுக்கும், பெருஞ்செயலாற்றல் புரிந்த மன்னர்களுக்கும் நடுகல் எடுக்கப்பட்டது. நடுகல் வழக்கம், நடுகல் எழுப்பக்காரணம், சிற்றசர்கள் பற்றி குறிப்பு, படையல் வழிபாட்டு முறை, நடுகல் மீதுள்ள மக்களின் நம்பிக்கைகள் போன்றவற்றை சங்க இலக்கியக் பாடல்களின் வழி அறிய முடிகிறது.

**முதன்மை நூல்**

1. தமிழண்ணல், சங்க இலக்கிய மக்கள் பதிப்பு வரிசை, கோவிலூர் மடாலயம், கோவிலூர், முதற்பதிப்பு-செப்டம்பர்-2004

**துணைமை நூல்கள்**

1 தமிழண்ணல், தொல்கப்பியம் (மூலமும் கருத்துரையும்), மீனாட்சி புத்தக நிலையம், மதுரை. ஐந்தாம் பதிப்பு-ஆகஸ்ட் 2017.
2 இரா.நெடுஞ்செழியன், திருக்குறள் தெளிவுரை, நாவலர் நெடுஞ்செழியள் கல்வி அறக்கட்டளை, சென்னை. ஐந்தாம் பதிப்பு-2011.
3 தி.மனோன்மணி, தொல்லியல், நியூ செஞ்சரி புக் ஹவுஸ், அம்பத்தூர், சென்னை. முதற்பதிப்பு -ஆகஸ்ட், 2010. பக்.159.
4 வே.மகாதேவன், கல்வெட்டுத் தேன்துளிகள், சேகர் பதிப்பகம், சென்னை. முதற்பதிப்பு-2009. பக்.106.
5 மயிலை சீனி வேங்கடசாமி, சங்ககாலத் தமிழர் வரலாற்றில் சில செய்திகள், ப.119.
6 தி.சுப்பிரமணியன், தமிழகத் தொல்லியலும் வரலாறும், நியூ செஞ்சரி புக் ஹவுஸ், அம்பத்தூர், சென்னை. முதற்பதிப்பு -மே, 2009. பக்.162.
7 தி.சுப்பிரமணியன், தமிழகத் தொல்லியலும் வரலாறும், நியூ செஞ்சரி புக் ஹவுஸ், அம்பத்தூர், சென்னை. முதற்பதிப்பு -மே, 2009. பக்.142.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com


# சங்க இலக்கியங்களில் தமிழர் தொல்மானிடவியல்

## Tamil Classical Society in Sangam Literature

**அ.இராஜேஸ்வரி,** முனைவர் பட்டஆய்வாளர் (தமிழ்)
மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக் கழகம், திருநெல்வேலி.

**Abstract**

*The article focuses on the facts on classical evidences of the Tamil society through the resources recorded in the Sangam Literature.The documents show that the society is highly traditional and ethical. The quqlities of the society are recorded in the classical works such as "Nattrinai" and "Kurunthokai". These works were originally got in the palm leaflets and now available in all forms of technological advancement. The people of the sangam times gave more importance to moral ethics above all social values.These traits are seen naturally now in the common personality of the Tamil people. Hence, this study focuses to decipher the real facts in sangam Literature.*

**Keywords:** Tamils, Tamil Society, Classical antiqueness, Sangam Literature

**முன்னுரை**

தொல்மானிடம் எனக் கூறப்படும் பழங்காலத் தமிழ்ச் சமூகம் தனது பண்பட்ட பழக்கவழக்கத்தோடு அறவழியில் வாழ்தலையே வாழ்வின் நோக்கமாகக் கருதியது. தனிமனிதன், குடும்பம், சமூகஅமைப்பு, அரசியல், பொருளியல், சமயம் எனப் பல நிலைகளிலும் அறத்திற்கு முன்னுரிமை தரப்பட்டது. மேலும்,செம்மையான நெறிமுறைகளே சமுதாயப் பண்புகளாகவும் நற்பழக்கவழக்கங்களாகவும் அமைந்தன. நம் தொன்மக்கள் நற்பழக்கங்களோடு கூடிய அறப்பண்புகளைக் கடைபிடித்து வாழ்ந்தனர். இந்நிலையே மன்னர், மக்கள், அறிஞர் முதலிய பலதரத்தினரிடமும் உள்ளுணர்வாக ஊடுருவி மக்கள் வாழ்வைப் பொற்காலம் ஆக்கியது.

**சங்க இலக்கியங்கள்**

சங்க இலக்கியங்கள் தமிழ் இலக்கியக் கருத்துக் கருவூலகங்கள். அகத்தேதோன்றும் அக உணர்ச்சியையும் புறத்தே தோன்றும் காட்சிகளையும் வெளிப்படுத்தி நிற்கும் நந்தாவிளக்குகள். இவ்விலக்கியங்கள் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தமிழர் வாழ்ந்த வாழ்க்கை நெறியினைப் புலப்படுத்தி நிற்கும் சொல்லோவியங்களாகத் திகழ்கின்றன. அவற்றைக் கொண்டு பழந்தமிழரின் பழக்கவழக்கங்களையும் அற வாழ்க்கையினையும் அறிய முடியும்.

**பழந்தமிழரின் பழக்கவழக்கங்கள்**

பழந்தமிழரின் பண்பட்ட பழக்கவழக்கங்கள் அவர்களுடைய நடை, உடை, நம்பிக்கை, பிறப்பு, இறப்புச் சடங்குகள், பூப்புச் சடங்குகள், சமயம், தாலாட்டு, ஒப்பாரி என அனைத்துத் துறைகளிலும் நிகழ்வதைக் காணலாம். இம்முறையில் நற்றிணையில் இரவுக் காவலர்கள் மணியடித்தல், கட்டுக்குறி கேட்டல், காக்கைக்குபலியிடுதல், இரவிலும் விருந்துபேணல்,மகளிர்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

தைநீராடல்,மகளிர் மாலையில் விளக்கேற்றுதல், தயிர்ப் பானைகளில் விளாம்பழம் இட்டு வைத்தல், சகுனம் பார்த்தல், பல்லி சொல் அறிதல், தாழியிலிட்டுப் பிணங்களைப் புதைத்தல் போன்ற சமுதாயப் பழக்க வழக்கங்கள் நற்றிணையில் விரவிக் கிடப்பதைக் காணலாம்.

**இரவுக் காவலர்கள் மணியடித்தல்**

சங்ககாலத்தில் இரவுக் காவலர்கள் இரவில் அரண்மனையின் முன்புற வாயில்களைப் பாதுகாக்கும் பொருட்டு மணியடித்து எச்சரிக்கை செய்யும் பழக்கமுள்ளவர்களாக இருந்தனர என்பதை நற்றிணை நூலில் காணலாம்.

“காப்புடைவாயில்போற்று
ஓ என்னும் யாமம் கொள்பவர் நெடுநாஒண்மணி
ஒன்றுஏறிபாணியின் இரட்டும்” 1

**கட்டுக்குறிகேட்டல்**

தலைவனின் பிரிவால், தலைவியின் மேனியழகு பசலை நோயால் மாறுபடக் கண்ட அன்னை, இந்நோய் தெய்வத்தால் ஏற்பட்டது எனத் தவறாகக் கருதி, கட்டுவிச்சியரை அழைத்து, முறத்தில் நெல்லைப் பரப்பி கட்டுக்குறி கேட்கும் பழக்கம் அக்காலத்தில் இருந்துள்ளது.

“நன்னுதல் பரந்தபசலைகண்டன்னை
செம்முதுபெண்டிரொடுநெல்முன் நிறீஇ
கட்டிற் கேட்குமாயின்” 2

**காக்கைக்குபலியிடுதல்**

நீண்ட விழுதுகளைக் கொண்ட ஆலமரத்தில் உறையும் கடவுளுக்கு அக்காலத்தில் பலியுணவைப் படையலாக வைக்கும் வழக்கம் உள்ளது. அப் பலியுணவை காக்கைகள் தின்றன. இக்கருத்தை வலியுறுத்தும் பாடல் பின்வருமாறு:

“நெடுவீழ் இட்டகடவுள் ஆலத்து
உகுபலிஅருந்திய தொகுவிரற்காக்கை” 3

பலி தின்னும் கருநிறக் காக்கை மழையால் நனைந்து உடல் வருந்திய சமயத்தும் ஊனொடு கலந்து இடப்படுகின்ற பெரிய சோற்றை தின்னக் கருதி காத்திருக்கும் என்பதை நற்றிணைப் பாடல் உணர்த்தும்.

**இரவிலும் விரு ந்துபேணல்**

இரவில் விருந்தினர் வந்தாலும் மனைவி கணவனுடன் சேர்ந்து, மகிழ்ச்சியுடன் அவர்களை வரவேற்று, அவர்களுக்கு இறைச்சியில் நிறைய நெய்யை விட்டு விருந்து படைத்துள்ளனர்.

“எல்லிவந்தநல்லிசைவிருந்திற்கு
கிளர் இழைஅரிவைநெய் துழந்துஅட்ட
விளர் ஊன் அம்புகைஎறிந்த நெற்றி4
அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்
முல்லைசான்றகற்பின் மெல்லியல்” 5

**மகளிர் தை நீராடல்**

தை மாதத்தின் விடியற்காலையில் நீராடிய பெண்கள் நோன்பு இருப்பர். தாம் விரும்பிய ஆடவனைக் கணவனாக அடைய, இவ்வாறு நோன்பு இருப்பதை வழக்கமாகக் கொண்டுள்ளனர் என்பதை இப்பாடல் வாயிலாக அறியலாம்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

"தைஇத் திங்கள் தண்தயம் படியும்
பெருந்தோட் குறுமகள்" **6**

**மகளிர் மாலையில் விளக்கேற்றுதல்**

மாலைக் காலத்தில் மகளிர் தம்மைச் சீர் செய்து கொண்டு விளக்குகளை வீடுகள் தோறும் ஏற்றி வைக்கும் பழக்கத்தை மேற்கொண்டிருந்தனர் என்பதை நற்றிணைப் பாடல் நவிலுவதைக் காணலாம்.

"………….. இனியோள்
மனைமான் சுடரொடுபடர்பொழுது எனவே" **7**

**தயிர்ப் பானைகளில் விளாம்பழம் இட்டுவைத்தல்**

தயிர்ப் பானையிலுள்ள முடைநாற்றம் நீங்கும் படி அக்காலத்தில், மணம் கமழக் கூடிய விளாம்பழத்தைப் பானைகளில் வைக்கும் பழக்கம் உள்ளவராக இருந்துள்ளனர்.

"விளம்பழ் கமழும் கமஞ்சூழ் குழிசிப்
பாசம் தின்றதேய்கால் மத்தம்" **8**

**சகுனம் பார்த்தல்**

ஒருசெயலைத் தொடங்கும் போது சகுனம் பார்க்கும் வழக்கம் அக்காலத்தே இருந்துள்ளது. மேற்கொள்ளும் செயல் நல்லபடியாக முடியும் அல்லது தடைபட்டு விடும் என்பதை முன்கூட்டியே தெரிந்து கொள்ளும் படி நிகழ்வதாக நம்பப்படும் ஓர் அறிகுறியாகும். இவற்றில் ஒன்று விரிச்சிகேட்டல் ஆகும் ஒரு செயலை மேற்கொண்டவர் அச்செயல் முட்டின்றி முடிவுபெறுமோ, இடையில் தடையுறுமோ என்று ஐயுற்று ஊர்ப்புறத்திலுள்ள கோயிலை அடைந்து இறைவனை வழிபடுவர். வழியில் செல்வோர் பேசும் பேச்சு நன்மையாக இருப்பின் தாம் மேற்கொண்ட செயல் நன்மையாக முடியும் என்றும், தீமையாக இருப்பின் தீமையாக முடியும் என நம்புவர். இச்சொல்லே விரிச்சி எனப்படும்.

"……………. ஒருசார்
திருந்திழைமகளிர் விரிச்சி நிற்ப" **9**

**பல்லிசொல் அறிதல்**

நாம் ஒன்றை நினைக்கும் போதோ அல்லது பேசும் போதோ பல்லி ஒலித்தால் அது நமக்கு நன்மையைத் தரும் என்று நம்பும் பழக்கம் உள்ளவராக இருந்தனர் என்பதை நற்றிணைப் பாடல் பின்வருமாறு சுட்டும்.

"……ஒண் கவர்ப் பொருந்தி
நயவருகுரலபல்லி
நள்ளென் யாமத்துஉள்ளுதொறும் படுமே" **10**

**தாழியிலிட்டுப் பிணங்களைப் புதைத்தல்**

இறந்தவரை அக்காலத்தில் தாழியில் இட்டுப் புதைக்கும் வழக்கம் உள்ளதை நற்றிணைப் பாடல் சுடடுவதைக் காணலாம்.

"மாஇருந்தாழிகவிப்ப
தா இன்றுகழிகளற்கொள்ளாக் கூற்றே" **11**

இதையே, "அன்னோற் கவிக்கும் கண்ணகன் தாழி" **12** என்கிறது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**இல்லறநெறிகள்**

சமுதாயக் கூட்டமைப்பின் அறக்கூடமாக அமைவது இல்வாழ்க்கை. பண்டைத் தமிழர்கள் அறத்தொடு பொருந்திய வாழ்வினை மேற்கொண்டனர். கணவனும் மனைவியும் அறம் பலபுரிந்தும், பலஅறங்களைப் போற்றியும் வாழ்ந்தனர் எனபதைத் தொல்காப்பியர்,

"காமஞ் சான்றகடைகோட் காலை
ஏமஞ் சான்றமக்களொடுதுவன்றி
அறம்புரிசுறறமொடுகிழவனும் கிழத்தியும்
சிறந்ததுபயிற்றல் இறந்ததென் பயனே" **13**

என்ற நூற்பாவின் மூலம் விளக்குகிறார்.

**மனைமாட்சி**

மனைமாட்சி இல்லாள் கண் இருக்க வேண்டும் என்று வள்ளுவர் வலியுறுத்துகின்றார். முனைவி கணவனின் இன்பத்தில் நாட்டம் மிக்கவளாகவும் சமைத்தல், விருந்தோம்பலில் விருப்பம் உடையவளாகவும் அன்பு, அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு மிக்கவர்களாகவும் இருத்தல் வேண்டும் என்கிறார்.

குறுந்தொகைத் தலைவி தன் கணவனுக்கும் புளிக்குழம்பு வைக்கும் போது கடும் துயரம் அடைகிறாள். காந்தள் மலர் போன்ற மென்மையான விரல்கள் மூலம் தயிரைப் பிசைவதால் கைகள் சிவந்து போயின என்பதை,

"முளிதயிர் பிசைந்தகாந்தள் மெல்விரல்
கழுவுறுகலிங்கம் கழாஅதுஉடீஇக்
குவளைஉண்கண் குய்ப்புகைகமழத்
தான்துழந்துஅட்டதீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்றுஒண்ணுதல் முகனே"**14**

என்ற பாடல் மூலம் அறியலாம். இவ்வாறு இன்றைக்கும் இல்லத்தில் விருந்தோம்பல் இனிய முறையில் நடைபெற்றால் வாழ்வு மலரும் என்பதில் ஐயமில்லை.

**முடிவுரை**

அரசு, சமூகநிலை, குடும்பம், திருமணமுறை, சமயநெறிமுறைகள் இவை போன்ற வாழ்வியல் நிகழ்வுகளில் உயரிய நெறிமுறைகளைக் கருவாகக் கொண்ட சங்க இலக்கியங்கள் அம்மக்களை நயத்தக்க நாகரிகத்தின் நல்லோர்களாகக் காட்டுகிறது. சங்ககாலத்தில் தமிழர் குடும்ப வாழ்வு பற்றி மிகவும் உயர்ந்த கொள்கைகளைக் கொண்டிருந்ததனால், அறம் என்பது வாழ்க்கையின் ஒருபகுதியன்று, வாழ்வு முழுவதுமே அறம் என்று கருதினர். எனவே தான் குடும்ப வாழ்க்கையை இல்லறம் என்றனர். பண்டைத் தமிழர்களின் உயரிய நெறிமுறைகளை இன்றைய சமூகமும் மேற்கொள்வதாலேயே தமிழர் பெருமை மேம்படும் என்பதில் ஐயமில்லை.

**அடிக்குறிப்புகள்**

1. நற். பா.132 : 8 – 10
2. நற். பா.288 : 5 – 7
3. நற். பா.343 : 4 – 5
4. நற். பா.41 : 7 – 9

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

5. நற். பா.142 : 9 – 10
6. நற். பா.80 : 7 – 8
7. நற். பா.33 : 6 – 7
8. புறம்., பா.121
9. புறம்., பா.40
10. நற். பா.333
11. நற். பா.271 : 11 – 12
12. புறம்., பா.228
13. தொல்,பொ.140
14. குறுந்., பா.271

**துணைநூற்பட்டியல்**

1. நற்றிணை–நாராயணசாமி அய்யர்
2. புறநானூறு மூலமும் பழைய உரையும்
3. தொல்காப்பியம் தெளிவுரை
4. குறுந்தொகை மூலமும் உரையும் - உ.வே.சாமிநாதய்யர்

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019
Available at: www.ijtlls.com


# திருக்கட்டளை சுந்தரேசுவரா் கோயில் வரலாறு மற்றும் கலை
# Art and History of Thirukattalai Sundareswara Temple

**கோ. இளையராஜா,** முனைவா் பட்ட ஆய்வாளா்,
சிற்பத்துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

**Abstract**

*The paper focuses on the art and historical state of Thirukattalai Sundereswara Temple. This is a temple that is near tp Pudukkottai. The temple was built at the times of the Chola king Aadita Cholan. The architecture of the temple is discussed with the structures of the temple. The deities and festivals related to the temple are discussed in the paper.*

**Keywords:** Art, History, Thirukattalai, Sundareswara Temple, Pudukkottai District

முன்னுரை

புதுக்கோட்டை நகரத்திற்கு கிழக்கில் 2 கிலோமீட்டர் தொலைவில் அடுத்துள்ள திருக்கட்டளை என்ற வரலாற்று சிறப்புமிக்க ஊர் அமைந்துள்ளது. திருக்கட்டளை என்பது திருக்கற்றளியில் இருந்து மருவி வந்த சொல் ஆகும். வடக்கில் புதுக்கோட்டை ஆலங்குடி, மணிப்பல்லவச் சாலையும், தெற்கில் புதுக்கோட்டை ஆலங்குடி பெருவழி திருவரங்குளம் சாலையும் அமைந்துள்ளது. புதுக்கோட்டை நகர் எல்லையும் நடுநாயகமாக இத்திருக்கட்டளை ஊரில் சிறப்பு மிகு சுந்தரேசுவரா் கோயில் 9-ம் நூற்றாண்டில் ஆதித்த சோழன் காலத்தில் கி.பி. 871-907-ல் கட்டப்பட்டது என்று கல்வெட்டில் மூலமாக அறிகின்றோம்.[1] கண்ணனூர் பாலசுப்பிரமணிய ஆலயமும் ஆதித்த சோழனின் காலத்தில் கட்டப்பட்டது என்று கல்வெட்டு சான்றுகள் கூறுகிறது.

விசயாலய சோழன் கி.பி. 881-இல் இறந்தவுடன் அவனது மகன் ஆதித்த சோழன் சோழநாட்டில் முடிசூடி அதன் ஆட்சியை ஏற்றுக்கொண்டான். இவன் இராசகேசரி என்ற பட்டம் புனைந்து கொண்டு அரசாண்டான். இவனுக்குக் கோதண்டராமன் என்ற மற்றொரு பெயரும் உண்டு. இவன் பல்லவ மன்னனாகிய அபராதிவா்மனை வென்று தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றிக் கொண்டான் என்று திருவாலங்காட்டுச் செப்பேடுகள் கூறுகின்றன.

ஆதித்தசோழன் காவிரியாற்றின் இருமருங்கும் பல சிவாலயங்களை கற்றளிகளாக எடுப்பித்தான் என்று அன்பிற் செப்பேடுகள் புகழ்ந்து கூறுகின்றன.[2]

திருக்கட்டளை என்பது திருக்கற்றளி (கற்கோயில்) என்பதன் மருவாகி முற்காலச்சோழா் கல்வெட்டில் இவ்வூா் காா்குறிச்சி திருக்கற்றளி என்றும் இறைவனின் பெயா் கற்குறிச்சி கற்றளிப்பெருமானடிகள் என்று கல்வெட்டில் குறிப்பிடுகிறது.

15-ஆம் நூற்றாண்டு கல்வெட்டில் திருக்கட்டளை ஈஸ்வரமுடையாா் என்று குறிப்பிடப்படுகிறது பிற்காலத்தில் சுந்தரேஸ்வரா் என்றும் அழைக்கப்படுகிறது. இக்கோவில் கிழக்கு முகமாக அமைந்துள்ளது இதன் தனிச்சிறப்பாகும்.

**வரலாறு**

திருக்கட்டளை என்பது திருக்கற்றளி கற்கோயில் என்பதன் மருவாகி.[3] முற்காலச்சோழா் கல்வெட்டில் இவ்வூா் காா்குறிச்சி என்றும் இறைவனின் பெயா் காா்குறிச்சி

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கற்றளிப்பெருமானடிகள் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. பிறகு விஜய நகர காலத்தில் கல்வெட்டு ஒன்றில் ஈஸ்வரமுடையார் என்றும் கூறப்பட்டுள்ளது. பின்பு பிற்காலத்தில் சுந்தரேஸ்வரர் என்றும் கல்வெட்டில் தெளிவாக கூறப்பட்டிருக்கிறது.[4]

கோயிலின் சுவறில் உள்ள கல்வெட்டு ஒன்றில் இக்கல்வெட்டு முதலாம் பராந்தகச் சோழனின் கி.பி.(907-953) காலத்தில் 35வது ஆட்சியாண்டில் அதாவது கி.பி.942-ல் வெட்டப்பட்டுள்ளது என்றும் இக்கோவிலுக்கு திருவிழா நடத்தப்பட்டதற்கான செலவிற்காக நிலக்கொடையளித்ததை விளக்குகிறது.

முதலாம் பராந்தகச் சோழ மன்னன் கி.பி 907-953 வரை 46 ஆம் ஆட்சியாண்டில் இவனுக்கு மதுரை பாண்டியரை வெற்றி கண்ட கோப்பரகேசரி என்ற பட்டப்பெயர் உண்டு. இவன் தனது 35-வது ஆட்சியாண்டில் கற்குறிச்சி என்று வழங்கப்பட்ட திருக்கட்டளையில் எழுந்தருளியுள்ள சுவாமியை “கற்றளி பெருமானடிகள்” என்று குறிப்பிடுகிறது.[5]

சுந்தரேஸ்வரர் தென்புறச்சுவரில் விக்கிரமச் சோழனின் கல்வெட்டு ஒன்று 9வது ஆட்சியாண்டில் கி.பி.1131-ல் வெட்டப்பட்டுள்ளது. இவ்வூரைச் சேர்ந்த சிங்கன் கொற்றனுக்காக வேண்டிக்கொண்டு அவனது தம்பிமார்கள் கண்டன் கொற்றன், கண்டன் சேமாக்கி, கண்டன் நம்பனும் ஆகிய மூவரும் விளக்கு ஒன்று வைத்துள்ளனர். இந்த நிலை விளக்கை எரிக்க காசு 1-ம் கொடுத்துள்ளனர். இந்த விளக்கு சந்திர, சூரியர் உள்ளவரைக்கும் எரிக்க வேண்டுமென்றும் சிங்கன் கொற்றன் நலமாக இருக்கவேண்டி இத்தருமம் செய்துள்ளனர் என்று கல்வெட்டில் சொல்லப்பட்டிருக்கிறது. இக்கோயிலில் மொத்தம் 12-கல்வெட்டுகள் உள்ளன. அதில் 8 கல்வெட்டுகள் சோழர்கள் பற்றிகூறுகின்றது. 1-ம் கல்வெட்டு பாண்டியர்கள் பற்றிகூறுகின்றது. 2-ம் கல்வெட்டுகள் விஜயநகரத்தைப் பற்றியும் தெளிவாக ஞ.சு. பாலசுப்பிரமணியன் அவர்கள் கூறியிருக்கிறார்.[6]

கோவிலின் தென்புறச்சுவரில் ஸ்ரீவீரப்பிறதாபன் மல்லிகார்ச்சுனராயர் மகன் தேவராய மகாராயரின் ஆட்சிகாலமான சகாப்தம் 1403-க்கு கி.பி.1481-ல் சார்வரி வருடம் ஆவணி மாதம் 25ந்தேதி புதன்கிழமை இரொபாதியும் சதுத்தியும் கொண்ட நாளில் இக்கல்வெட்டு வெட்டப்பட்டது. இக்கோயிலில் பல்லவன் சந்தி நடைபெற ஆட்டாங்குடி வயலில் நிலம் விடப்பட்டுள்ளது.[7] இந்த நிலத்தின் வருவாயைக் கொண்டு பூசை, திருப்பணிகளைச் செய்து வரும்படி கல்லிலும் செப்பேட்டிலும் வெட்டிக் கொடுத்துள்ளான். அக்காலத்திலேயே புதுக்கோட்டை மாவட்டத்தில் ஆட்டாங்குடியருகே தென்வடலாக மதுரைக்கு இராசராசன் பெயரில் பெருவழி இருந்துள்ளதையும் தெரிவிக்கிறது.

திருக்கட்டளை புதுக்கோட்டைப் பகுதியில் காலத்தால் முற்பட்ட வரலாற்றுப் பெருமையுடைய ஊர்களுள் ஒன்றாகும். சுந்தரேஸ்வரர் கோயிலுக்குச் செல்லும் வழியில் தற்போது கலசக்காடு என்று அழைக்கப்படும் பகுதியில் பெருங்கற்கால புதை குழிகள் நிறையக் காணப்படுகின்றது. இங்கு அகழாய்வு செய்யப்பட்டு கிடைக்கப்பெற்ற இரும்பு ஆயுதங்கள், மணிகள், மட்பாண்டங்கள் ஆகியன புதுக்கோட்டை அருங்காட்சியத்தில் வைக்கப்பட்டுள்ளது.

சுந்தரேஸ்வரர் கோயிலின் தென்புறச் சுவரில் உள்ள கல்வெட்டுச் செய்தி, மல்லிக்காற்சுனராயரின் இக்கோயிலில் கல்வெட்டாகவும், தாமிர சாதனப் பட்டையமாகவும் கொடுத்துள்ளனர். இக்கோயிலில் நித்திய பூசை அமுதுக்கும் படிக்குமான செலவினங்களுக்கு திருநாமத்துக் காணியாக நஞ்சை, புஞ்சையிலிருந்து அரசுக்கு வசூலிக்கும் 10-ல் 5 பங்குக்கு உண்டான நெல், தானியம், பொன் ஆகியவற்றை இவ்வூரிலிருக்கும் காணியாளர், பலகுடிமக்கள் பரதேசி (போக்குவரத்து உள்ளவர்கள்) உண்டான குடிகள் அனைவரும் கொடுக்கும் வரியிலிருந்தும் குற்றம் தெண்டம் மூலம் வசூலிக்கப்படும். கோயில் பூசை திருப்பணிகளைச் செய்துவரும்படி கூறி கல்வெட்டில் உள்ளது. கவிநாட்டு நாட்டினுடைய படைகள் திருக்கட்டளையில் இருந்ததை கிருஷ்ணதேவராயரின் வம்சத்து மல்லிகார்ச்சுணராயரின் ஆட்சியில் கி.பி.1462-ல் வெட்டப்பட்டுள்ளது என்று கல்வெட்டு மூலம் அறிய முடிகிறது.”[8]

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**கட்டடக்கலை**

இங்குள்ள சுந்தரேஸ்வரர் கோயில் கிழக்குதிசை நோக்கியுள்ளது. கோவில் கருவறையும் அதனை ஒட்டிய மண்டபத்தையும் கொண்டதாகும். இதனை சுற்றி பரிவார ஏழு ஆலயங்கள் அமைந்துள்ளன. கட்டிடக்கலை அமைப்பில் இது முன்னதிலிருந்து மாறுபடுகின்றன. கருவறை சுவற்றில் உள்ள காலத்தால் முற்பட்ட கல்வெட்டு முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் சேர்ந்ததாக கி.பி.1070-1110 ஆம் ஆண்டில் உள்ளதாகவும் கூறப்பட்டுள்ளது.[9]

கோயில் விமானம் இரண்டு அடுக்குகளைக் கொண்டதாகும். விமானம் சதுர வடிவமாகவும் அதாவது, அதிட்டானம் முதல் கலசம் வரை சதுரவடிவமாகவும் கருங்கற்கலால் அமைந்துள்ளன. கருவறை மேற்குதிசை சுவரில் அதிட்டானம் முதல் தொடங்கி பிரஸ்தரத்தில் பூதாகனவரிகளும் தோரணவரிசையும் மனித தலை கொண்ட உருவமும் பொறிக்கப்பட்டது. விமானத்தில் இரண்டாவது அடுக்கில் நான்கு திசையிலும் நந்திகள் உள்ளன. கருவரை வெளிசுவரில் தெற்கு திசையில் திரிபுராந்தக மூர்த்தியும், மேற்கு திசையில் லிங்கோபத் மூர்த்தியும், வடக்கு திசையில் பிரம்மாவின் சிற்பமே உள்ளன. கிழக்கு திசையில் ஆலயத்தில் நுழைவாயில் உள்ளே அர்த்தமண்டபத்தின் வெளி வாயில் இரண்டு துவாரபாலகர் சிற்பங்கள் காவல் தெய்வமாக காட்சியளிக்கின்றனர். பொதுவாகச் சிவன் கோயில்களில் கருவறையின் தெற்கு தேவகோர்'ட்டத்தில் தெட்சிணாமூர்த்தியின் சிற்பமே இருக்கும் இக்கோயிலில் தெற்கு மாடத்தில் இருக்கும் சிற்பம் வில்லையும் அம்பையும் பிடித்திருப்பதைக் கொண்டு இது திரிபுராந்தகமூர்த்தி என்று ளு.சு.பாலசுப்பிரமணியம் அவர் சுட்டி காண்பித்திருக்கிறார்.[10] இது மற்ற கோயில்களில் காண முடியாததொரு சிறப்பாகும்.

கோயிலைச் சுற்றியும் பரிவாரதெய்வங்களுக்கு தனித்தனி ஆலயமும் அமைந்திருக்கிறது.

1. சூரியன் 2. சப்த மாதர்கள் 3. கணபதி 4. சுப்பிரமணியர் 5. ஜேஷ்ட்டாதேவி (மூதேவி) 6. சந்திரன் 7. சண்டிகேஸ்வரர்

போன்ற ஏழு பரிவார தெய்வங்களுக்கு தனி ஆலயமும் அமைந்துள்ளன. இக்கற்கோயில் அளவில் சிறியதாக இருந்தாலும் தஞ்சையில் சோழப்பேரரசன் ராஜராஜன் அமைத்த பெரியகோவிலுக்கு இக்கோயிலும் ஒரு முக்கிய மாதிரியாக விளங்குவதாகச் சொல்லப்படுகிறது.[11]

சிவலிங்கம் உள்ள கருவறை மீது எடுப்பிக்கப்பட்டுள்ள 50 அடி கோபுரத்தின் விமானம் மேல் தட்டில் நான்கு திசைகளிலும் நான்கு நந்திகள் வைக்கப்பட்டிருக்கிறது இதுபோன்ற தஞ்சைப் பெரிய கோயிலில் மூலவர் வீற்றிருக்ககும் கருவறை மீது கட்டப்பட்டிருக்கும் விமானத்தின் மேல் தட்டிலும் நந்தி திருவுருவங்களே காட்சியளிக்கின்றன. இதன் கர்ப்பகிரகம் உள்வெளி 6 அடியாகவும் வெளிபக்கத்தில் 12 அடியாகவும் இதன் கற்களை ஒன்றுடன் ஒன்று பின்னிதான் கற்களை கட்டியுள்ளனர்.[12] சுந்தரேஸ்வரர் கோயில்கிழக்கு திசையில் அமைந்திருக்கிறது. தெற்கு திசை பார்த்த நிலையில் அம்மன் ஆலயமும் கருகற்கலால் அமைந்திருக்கிறது.

**சிற்பக்கலை**

இக்கோயிலின் கருவறைக்குள் லிங்கவடிவத்தில் சுந்தரேஸ்வரர் கிழக்கு திசையில் ஆவுடையமைப்பில் காட்சியளிக்கிறது. இது தரையிலிருந்து 3.7 அடி உயரத்தில் காட்சியளிக்கின்றது.

**லிங்கோத்பவர்**

இக்கோயிலின் கருவறை வெளிசுவரில் மேற்கு திசையில் (லிங்கோத்பவர்) தேவகோர்'ட்டத்தில் நின்ற நிலையிலும் இரு கரங்கள் இடது கரங்கள் அபயஹஸ்தம் நிலையிலும் வலது கரங்கள் இடுப்பில் வைத்தபடியும் கழுத்து பகுதியில் ஆபரணமும் தலையில் கேசபந்தம் அணிந்தும் இருகாதில் குண்டலமும் இடுப்பில் ஆபரணமும் அணிந்தும்[13] காலில் காப்பு அணிந்து கணுக்காலுக்கு மேல் உடை இடுப்புவரைக்கும் அணிந்தும் நின்ற நிலையில் காட்சியளிக்கின்றார்.

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**பிரம்மன்**

இக்கோயிலின் கருவறை வெளிசுவரில் வடக்கு திசையில் உள்ள தேவகோ'ட்டத்தில் நின்ற நிலையில் நான்கு கரங்கள் உள்ளன இடது மேல் கரங்களில் உத்திராட்ச மாலையும், கீழ் கரங்கள் அபயஹஸ்தம் நிலையிலும், வலது இருகரங்கள் மேல் கரத்தில் உடுக்கும் வைத்தபடியும், கீழ்வலது கரத்தில் இடுப்பில் வைத்த நிலையிலும் காட்சியளிக்கின்றது. தலையில் ஜடாமகுடம் அணிந்து நான்கு தலைகள் உள்ளன பிரமனுக்கு ஐந்து தலைகள் இருந்தன அதில் ஒன்று சிவனால் வெட்டப்பட்டுவிட்டதாக கூறப்படுகிறது. இப்புராண நிகழ்வு பிரம்மாசிரச்சேதமூர்த்தி என்று கூறப்படுகிறது. நான்கு தலைகள் நான்கு யுகங்களைத் திரேதா, கிரேதா, துவாபர கலியுகத்தைக் குறிப்பதாகும். மேலும் கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு நான்கு திசைகளையும் குறிக்கின்ற வகையில் நின்ற நிலையில் காட்சியளிக்கின்றனர். கழுத்து பகுதியில் ஆபரணம் அணிந்தும் காதில் மகரகுண்டலமும் இடுப்பில் ஆபணரமும் அணிந்தபடியும் காலில் காப்பு அணிந்து நின்ற நிலையில் பிரம்மன் காட்சியளிக்கின்றனர்.

**தெட்சிணாமூர்த்தி**

இக்கோயிலின் கருவறை வெளிச்சுவரில் தெற்கு திசையில் உள்ள தேவகோட்டத்தில் நின்ற நிலையில் நான்கு கரங்கள் உள்ளது இடது கரங்களின் மேல் கரத்தில் உத்திராட்ச மாலையும் கீழ்கரத்தில் சூசிஹஸ்தத்தில் அம்பு வைத்த நிலையிலும் வலது கரங்களில் மேல் கரத்தில் உத்திராட்சமாலையும்[14] கீழ்கரத்தில் வில் வைத்த நிலையிலும் தலையில் ஜடாமகுடம் அணிந்தும் இரு காதில் குண்டலமும் கழுத்தில் ஆபரணங்களும் இடுப்பில் ஆடையுடன் ஆபரணங்களும் அணிந்து நின்ற நிலையில் தெற்கு திசையில் காட்சியளிக்கிறது. காலில் காப்பு அணிந்துள்ளது தட்சிணம் என்ற சொல்லுக்கு ஞானம் என்று பொருள் வேதம், ஆகம, சிற்பசாஸ்திரம், இசை, தத்துவம், நாட்டியசாஸ்திரம் ஆகிய அனைத்தும்[15] சாஸ்திரங்களையும் விரித்து உபதேசமளித்தவர் என்று தெட்சிணாமூர்த்தி போற்றப்படுகிறார். இவர் ஆலமரத்தின் அடியில் அமர்ந்து இருக்கும் நிலையில் உள்ளதால் இவருக்கு ‘‘ஆலமர் செல்வன்’’ என்று இலக்கியங்கள் இவரைப் போற்றுகின்றன. இவரை தர்மவியாக்கியான தெட்சிணாமூர்த்தி, வீணாதர தெட்சிணாமூர்த்தி, ஞானதெட்சிணாமூர்த்தி, யோகதெட்சிணாமூர்த்தி என்ற பெயர்களில் அழைக்கப்படுகிறார். இங்கு தெட்சிணாமூர்த்தி வில் அம்பு வைத்த நிலையில் இருப்பது சோழர் காலத்திலேயே சுந்தரேஸ்வரர் ஆலயத்தில் இருப்பது இதன் தனிச் சிறப்பாகவும் ளு.சு.பாலசுப்பிரமணியன் குறிப்பிடுகிறார். ஆனால் வில் அம்பு வைத்திருப்பதைப் பார்க்கும்பொழுது திரிபுராந்தகமூர்த்தி என்ற சிற்பம் போலவும் தெரிகிறது என்று *Early Cholas* நூலில் குறிப்பிட்டு இருக்கிறார்.

**துவார பாலகர் சிற்பம்**

அர்த்த மண்டபத்தின் கருவறை முகப்பில் இரண்டு துவராபாலகர் நின்ற நிலையில் காட்சிதருகின்றனர்.[15] இடதுகை சூசிஹஸ்தம் வலதுகை வரதஹஸ்தம் தலையில் கீரிடம் காதில் குண்டலமும் கழுத்தில் ஆபரணமும் இடுப்பில் ஆபரணமும் கண்டகாலில் காப்பு அணிந்து ஆலிட நிலையில் கருவறை முகப்பில் இடது பக்கத்தில் காட்சியளிக்கின்றது. துவராபாலகர் ஆலிட நிலையில் இடது கையில் பல்லவ ஹஸ்தம் வலதுகை இடதுபக்கத்தில் வைத்தபடி ஆலிட நிலையில் காட்சியளிக்கின்றனர்.[16]

சுந்தரேஸ்வரர் ஆலயம் கிழக்குதிசை பார்த்தவன்னத்தில் அமைந்திருக்கிறது. அம்மன் ஆலயம் தெற்கு திசையை பார்த்து அமைந்திருக்கிறது. நான்கு கரங்கள் உள்ளது. இடதுகையில் முன்கையில் தாமரைமொட்டு பின்கையில் வரதஹஸ்தம் வலது கையில் தாமரைமொட்டும், பின்கையில் வரதஹஸ்தம் நிலையிலும் தலையில் ஜடாமகுடம் காதில் குண்டலமும் கழுத்தில் ஆபரணமும் நின்ற நிலையில் அம்மன் காட்சியளிக்கின்றது. சுந்தரேஸ்வரர் ஆலயத்தை சுற்றி வழிபடும் பொழுது கிழக்கு திசையில் அமைந்துள்ள

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

அம்மன் ஆலயத்தையும் வழிபடும் முறையை சோழர் காலத்தில் பின்பற்றப்படுகின்றது என்று கல்வெட்டில் சொல்லப்படுகின்றது.

**விமானம்**

ஆலயத்தின் விமானத்தில் திரிதள அடுக்கு முறையில் இவ்வாலயத்தில் அமைந்துள்ளது. விமானத்தின் முதல்தள அடுக்கில் தெற்குதிசையில் பிட்சாடனர்மூர்த்தி, மேற்கு திசையில் விஷ்ணு,[17] வடக்கு திசையில் பிரம்மன் விமானத்தின் சிறு சிற்பங்களாக செதுக்கப்பட்டுள்ளது. சிகரத்தின் கிரீவ பகுதியில் தெற்கு திசையில் தட்சிணாமூர்த்தி, மேற்கு திசையில் வராகமூர்த்தி, வடக்கு திசையில் பிரம்மன் கிழக்கு திசையில் இந்திரன் இவ்வாலயத்தில் கிரீவ பகுதியில் சிறு சிற்பங்களாக காட்சியளிக்கின்றது. விமானத்தில் 50 அடி கோபுரத்தின் மேல் தளத்தில் நான்கு திசைகளிலும் நான்கு நந்திகள் வைக்கப்பட்டிருக்கின்றது.

அதன் மேல் தளத்தில் வடக்கு திசையில் தோரண தேவகோ'டத்தில் சிங்கதலையும் அதன் சிகரத்தின் மேல் நான்கு பக்க திசையை காட்டுகின்ற வகையில் இதன் கலசம் அதாவது (சதுரவடிவில்) கருங்கல்லால் அமைந்துள்ளது. தெட்சிணாமூர்த்தி, வீராடனமூர்த்தி, பிட்சாடனமூர்த்தி ஆகிய மூன்று மூர்த்திகளும் இங்கு அமைந்துள்ளன. இதுபோல் மூன்று அவதாரங்கள் ஒரே இடத்தில் இருப்பது சிறப்பு வாய்ந்தது.

**பரிவார ஆலயங்கள்**

இவ்வாலயத்தில் சுற்றிலும் வெளிப்பிரகாரத்தில் மதில் சுவரில் ஏழு ஆலயங்கள் தனித்தனி ஆலயமாக பரிவார ஆலயங்கள் அமைந்துள்ளன.[18]

1. சூரியன்
2. சப்தமாதர்கள்
3. கணபதி
4. சுப்ரமண்யர்
5. ஜே'டாதேவி
6. சந்திரன்
7. சண்டிகேஸ்வரர்

இதில் ஜேஸ்டாதேவி தன்னுடைய குழந்தைகளான மாந்தி குளிகன் ஆகியோரை கையில் ஏந்தியபடி உள்ளார் என்பதை சுந்தரேஸ்வரர் ஆலயத்தில் இருப்பது தனி சிறப்பாகும். சூரியன் சிற்பம் கவனிக்கத்தக்கது. தாமரை மொட்டுக்களை (வழக்கமாக உள்ளது போல்) இரண்டு கைகளிலும் பிடித்திருப்பதற்கு பதிலாக இடது கை இடுப்பில் பொருந்தியிருக்க, வலது கை அபய முத்திரையை காட்டிக்கொண்டிருக்கிறது. இது ஒரு சிறப்பு அம்சமாகும். மேலும், பரிவாரதேவதைகள் எட்டுக்குப் பதிலாக ஏழுக்கு மட்டுமே கோயிலமைப்பு முற்கால சோழர் கலைப்பணியாகும் என்பதையும் இங்கு தெரிந்து கொள்கிறோம்.

**விழாக்கள்**

மாதந்தோறும் தேய்பிறை அஷ்டமியில் அபிஷேகம் நடைபெறுகிறது. பங்குனி மாதத்தில் நேரடியாக சூரியனின் ஒளி சிவலிங்கம் மீது படும்போது சிறப்பு அபிஷேகம் நடைபெறும். ஆருத்ராதரிசனம் மகாசிவராத்திரி பிரதோஷம், கார்த்திகை சோமவாரம் போன்ற விழாக்கள் இங்கு சிறப்பாக கொண்டாடப்படுகின்றன.

**முடிவுரை**

புதுக்கோட்டை மாவட்டத்தில் சோழர்காலத்தில் முதலாம் ஆதித்த சோழனால் (கி.பி.871-907) கட்டப்பட்டுள்ள கற்கோயிலாகும். கண்ணனூர் முருகன் கோயிலும்,

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

திருக்கட்டளையில் அமைந்துள்ள சுந்தரேஸ்வரர் கோயிலும் ஒரே காலத்தில் கட்டப்பட்டவை என்று கல்வெட்டு மூலமாக அறிகிறோம். அதிட்டானம் முதல் கலசம் வரைக்கும் கற்கலால் கலை நயத்துடன் செதுக்கப்பட்டவை. பராந்தகச் சோழன் காலத்தில் நிலத்தை கொடையளித்ததை விளக்குகின்ற செய்தியும், முதலாம் குலோத்துங்க சோழனின் பல போர் புரிந்து நாட்டு மக்களுக்கு நன்மையளித்த செய்தியும் இக்கல்வெட்டு மூலம் சொல்லப்பட்ட செய்தியும், மிலட்டூரில் நடந்த போரில் இறந்துவிட்ட சிங்கப்பேரரையன் அவனது தம்பி அணுக்கனும் 25 ஆடுகளைக் கொடையாக கொடுத்த செய்தியும், கல்வெட்டுகள் மூலம் அறிந்தோம். விக்கிரமச் சோழன் காலத்தில் நிலை விளக்கு எரிக்க 1 காசு கொடையாக கொடுத்து சூரியன் உள்ளவரைக்கும் எரிக்க வேண்டுமென்ற செய்தியும் கி.பி.1403 மல்லிகார்ச்சுணராயர் மகன் தேவராயர் ஆட்சி காலத்தில் ஆட்டாங்குடி வயலில் நிலம் விடப்பட்டுள்ளது. அந்த நிலத்தின் வருவாயைக் கொண்டு பூசை, திருப்பணிகளைச் செய்து வரும் கல்வெட்டில் தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது. மணிபல்லம், கலசமங்கலம், திருக்கட்டளை மக்கள் சுந்தரேஸ்வரர் திருத்தலத்தை வழிபட்டு வந்தனர். நிலதானம் போன்ற விளைச்சலில் நெல், தானியம் முதற் படை வைத்து வழிபட்டு இருந்திருக்கின்றனர். இன்றைக்கு பழமையை உணர்த்துகின்ற வகையில் கலை நயத்துடனும் இறை நம்பிக்கையை உணர்த்தும் வகையில் இன்றும் காணப்படுகின்றது.



**சுந்தரேஸ்வரரின் கோயிலின் தெற்குத்திசை தோற்றம்**



**கருவறையில் உள்ள லிங்கம்**



**சுந்தரேஸ்வரர் கோயிலின் தெற்குத் திசையில் நின்ற நிலையில் தெட்சிணாமூர்த்தி**



**தெற்குச் சுவரில் உள்ள கல்வெட்டு**

**நூற்பட்டியல்**

1. S.R. Balasubrahmanyam, Early Chola Art, Madras, 1966, ப.89.
2. கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி, *சோழர்கள்*, Vol-I, சென்னை, 1989 ப.151.
3. Chronological List of Inscriptions The Pudukkottai State, Govt. Museum, Chennai, 2002, CLI, 38, ப.4.
4. மேலது, CLI, 51, ப.8.

**E-ISSN: 2581-7140**

**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

5. INSCRIPTIONS (Texts) of the Pudukkottai State Arranged According to Dynasties, Govt of TamilNadu – 2002, IPS NO, 81, ப.30.
6. மேலது, IPS, NO,51, ப.22.
7. மேலது, IPS, NO,714, ப.492.
8. மேலது, IPS, NO,711, ப.490.
9. K.R. Venkatarama Ayyar, Manual of the Pudukkottai, Vol.II, Commissioner of Museum, Govt of Tamilnadu, 2002, ப.998.
10. மேலது, ப.999.
11. S.R. Balasubrahmanyam, *Early Chola Art*, Madras, 1966, ப.90.
12. மேலது, ப.91.
13. R. Srinivasan, *The Indian Temple Art and Architecture*, Mysore 1982, ப.80.
14. மேலது, ப.87.
15. எஸ்.ஆர். பாலசுப்ரமணியம், *சோழர் கலைப்பாணி*, சென்னை, 1966. பு.79.
16. மேலது, ப.80.
17. ஆர்.வெங்கட்ராமன், *இந்தியக்கோயில் கட்டிடக் கலை வரலாறு*, மதுரை, 1983.ப.94.
18. Dr.அம்மை மணிவண்ணன், *கோயில் ஆய்வும் நெறிமுறைகளும்*, மதுரை, 2014, ப.145.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019
Available at: www.ijtlls.com

# சோழர் கால கோயில்களின் தனித்தன்மைகள்

The Individuality of the Temples of the Chola Period

**ச.உமாதேவி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
இராஜ நந்திவர்மன் கலை அறிவியல் கல்லூரி, தெள்ளாறு – 604406.

## Abstract

*The article enunciates the Tamil Chola kings and their dedication in building temples. Chola regime is noted for it massive growth in all sorts of administration from the time of the graet Parantaka Cholan to the world famed Raja Raja Cholan then to his son Rajendra Cholan. It is a fact that Raja Raja, originally named Arul Mozhi Varman built Thousand Temples. His elder sister Kundavai also a keen devotee of Saiva religion donated gold, silver and land to the temples. The facts on the temples of Tanjore, Tarasuram, Gangaikonda Cholapuram, Tiripuvanam and Sun Temples are discussed. Hence, the paper tries to bring out the culvert, plates and literary sources to get the information related to the temples in the times of Chola Kingdom.*

**Keywords:** Gradual Development, Water Management, Agriculture, Tamil Nadu

**முன்னுரை**

"சோழ நாடு சோறுடைத்து" என்பதற்கேற்ப நெல் இயற்கையாகவோ, மிகுதியாகவோ விளைந்த நாடு சோழ நாடெனப்பட்டது. சோழர் என்பவர் பழந்தமிழ்நாட்டை ஆண்ட மூவேந்தர்களுள் ஒரு குலத்தவராவர். "சோறுடைத்த நாடு சோறநாடு" ஆகிப் பின் சோழ நாடாகியது என்பர். சோழர் குலம் வளம் பொருந்திய காவிரி ஆற்றுப்படுக்கைப் பகுதியிலேயே தோற்றம் பெற்றது. சோழர் தமிழ்நாட்டில் வலிமை பெற்றிருந்த கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கம் முதல் பன்னிரெண்டாம் நூற்றாண்டு வரை சோழர் கால கட்டிடக்கலை வளர்ச்சி பெற்றிருந்தது. சோழர் கால கட்டிட வளர்ச்சியை ஆரம்ப காலம், மத்திய காலம், பிற்காலம் என்று வகைப்படுத்தி அறியலாம்.

இயந்திரங்களின் ஆதிக்கம் இல்லாத காலக்கட்டத்தில் பல்லவர்களும் பாண்டியர்களும் போற்றி வளர்த்த கலை மரபை, அவர்களுக்குப் பின்வந்த சோழர்கள் தொடர்ந்து ஆதரித்து மேன்மேலும் வளர்ச்சியடையச் செய்தார்கள். கல்கோயில்களை தமிழ்நாடெங்கும் பரப்பிய பெருமை சோழர்களுக்கே உரியது. அவ்வாறு கட்டப்பட்ட சோழர்கால கோயில்கள் சிலவற்றின் தனித்தன்மைகளை இக்கட்டுரை மூலம் அறியலாம்.

**கோயில்களின் தொடக்க நிலை**

"சிற்பக் கலையில் பல்லவர்கள் மேம்பட்ட நிலையை அடைந்தனர். ஏனைய துறைகளைவிட கட்டடக்கலையிலேயே சோழர்கள் வல்லவராகத் திகழ்ந்தனர். எளிமையும் பெருமையும் கலந்த ஓர் அமைப்பு முறையை அவர்கள் தங்களுக்கென்று வகுத்துக் கொண்டார்கள்" - என்கிறார் பிரெஞ்சு நாட்டு அறிஞர் ஜி.மூவே தூப்ராய்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

தென்னதிந்திய கோயில் உண்டான வகைகள் பல. "ஸ்தல விருட்சங்களாக பல காலமாக மக்களால் பயபக்தியுடன் வழிபட்டு வந்தனர். அதன்பின் கற்கோயில்கள் தோன்றின. கி.பி.850-1250 ஆண்டுகளில் தமிழ்நாடு முழுவதிலும் நிறைய கற்கோயில்கள் கட்டப்பெற்றன. அடித்தளம் முதல் உச்சியிலுள்ள கவர்ச்சியான பகுதிவரை (உபாநாதி ஸ்தூபி பரியந்தம்) கோயில் முழுவதும் கல்லாலேயே கட்டப்படுமாயின், அதற்குக் "கற்றளி" என்பர். கற்றளிகளைக் கட்டுவதை பெருமையாக கருதப்பட்டது.

சோழர் கோயில்கள் என்று இப்போது குறிப்பிடப்படும் பெரும்பாலான கோயில்கள் முதலாம் பராந்தகன் காலம் முதல் முதலாம் இராஜராஜன் காலம் வரை ஏற்பட்டன. இராஜராஜன் காலத்திலும் அவன் மகனான இராஜேந்திர சோழன் காலத்திலும், தஞ்சைப் பெரிய கோயில் மற்றும் கங்கை கொண்ட சோழபுரம் கோயில் போன்ற அளவிற் பெரிய கோயில்கள் தோன்ற ஆரம்பித்தன.

**தஞ்சாவூர் - பெருவுடையார் கோயில்**

தஞ்சைப் பெருவுடையார் கோயில் என்றும் தஞ்சை பிரகதீசுவரர் கோயில் என்றும் தஞ்சை பெரிய கோயில் என்றும் போற்றப்படும் இக்கோயில் தமிழரின் பாரம்பரியச் சின்னம் ஆகும். சோழப் பேரரசின் விரிந்துவரும் பரப்பிற்கும் வளர்ந்துவரும் வசதிக்கும் ஓங்கிவரும் அதிகாரத்திற்கும் பொருத்தமாகக் கட்டடக் கலையில் தமிழருடைய சாதனையாக இந்த பெரிய கோயிலை நிலைநாட்ட விரும்பினான்போலும். தஞ்சைப் பெரிய கோயிலே அக்காலத்துக் கோயில்களுள் செல்வத்தால் முதலிடம் வகித்தது.

இக்கோயிலின் கம்பீரமான தோற்றம், அதிலுள்ள சிற்ப அழகு, அழகான ஓவிய வேலைப்பாடுகள் இவையனைத்தும் மக்கள் மனதைக் கொள்ளைக்கொண்டுள்ளன. மிகப்பிரம்மாண்டமான விமானம் எகிப்தியப் பிரமிடுகளைப் போல கூர்நுனிக் கோபுரமாக அமைந்து கர்ப்பக்கிரகத்திலிருந்து 190 அடி உயரத்திற்கு ஓங்கி வளர்ந்திருக்கிறது. அக்காலத்தில் புவனேஸ்வரத்தில் கட்டப்பட்ட லிங்கராஜர் கோயிலின் உயரம் 160 அடி, இராஜராஜேஸ்வரம் அதையும் மிஞ்சிவிட்டமை குறிப்பிடத்தக்கது.

துணை சார்ந்த மண்டபங்களும் விமானமும் அர்த்த மண்டபமும் மகாமண்டபமும் பெரிய நந்தியும் அவற்றிற்கேற்ற பொருத்தமான அளவுகளுடைய ஒரு சுற்றுச்சுவருக்குள் அடங்கியிருக்கின்றன. 35 உட்கோயில்களை இணைக்கும் நீண்ட மண்டபம் உள்ளது. தஞ்சைப் பெரியகோவிலில் உள்ள பெரிய நந்தி ஒரே கல்லால் செய்யப்பட்டது. விமானச் சுவர்களில் பல தேவகோட்டங்கள் அமைக்கப்பட்டு, அதில் எழிலார்ந்த தெய்வீகச் சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன. சிங்கங்களும் அவற்றின் மீது சிங்கங்களை ஒட்டுபவர்களுடன் உருவத்தில் காட்டப்பட்டிருக்கின்றன. மகரங்களும் போர் வீரர்களும் வாயைப் பிளந்து கொண்டிருக்கும் குதிரைகளும் அவற்றின் மீதேறிச் சவாரி செய்பவர்களின் உருவங்களும் உள்ளன.

எல்லா மாடக்குழிகளிலும் மாடங்களிலும் கற்சிற்பங்கள் கவர்ச்சியான உருவங்களுடன் திகழ்கின்றன. கட்டடக் கலைப்பாணியும் ஆபரண அமைப்பும் அவை சோழர்களின் தனித் தன்மைகளைப் பிரதிபலிக்கின்றன. இங்கு அமைந்துள்ள மிகப்பெரிய சிவலிங்கமும் அதன் பீடமும் கர்ப்பக்கிரகத்தின் (வெளியே இருந்து பார்க்கும்போது) இரண்டு மாடி உயரத்திற்கு இருக்கின்றன.

"இறுதியாக, உச்சியிலுள்ள வட்டமான வளைவான கல் மண்டபமும், அதற்கு மாறுபட்ட மனநிலையை, பார்ப்பவர்களிடம் உண்டாக்குவதற்காக நான்கு பக்கங்களிலும் ஏற்படுத்தப்பட்ட இறக்கைகளுடன் கூடிய மாடக்குழிகளும் உள்ளன. பிரமிடுபோல விமானத்தை அமைத்திருப்பதால், அடித்தளம் உறுதியாக இருக்கிறது என்ற எண்ணம் எல்லோருக்கும்

**E-ISSN: 2581-7140**
**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.. திராவிடக் கலைஞர்களின் மிகச் சிறந்த படைப்பு இதுவே.. தஞ்சாவூர் விமானம், பொதுவாக இந்தியக் கட்டிடக் கலை முழுமைக்குமே உரைகல்லாகும்" - என்கிறார் பெர்சி பிரவுன்.

இராஜராஜனின் அக்காள் குந்தவை. 10,000 கழஞ்சு எடையுள்ள தங்கத்தையும், 18,000 கழஞ்சு மதிப்புள்ள வெள்ளிப் பாத்திரங்களையும் இந்தக் கோயிலுக்கு வழங்கியிருக்கிறார். அரசிகள், உயர்அதிகாரிகள், படைத்தலைவர்கள் இன்னும் ஏனையோரும் எவ்வளவோ நன்கொடைகள் கொடுத்திருப்பதைக் கோயில் சுவர்களும், தூண்களும் சொல்லுகின்றன.

தலைநகரத்தின் பொருளாதாரத்திலும் பேரரசின் பொருளாதாரத்திலும் தஞ்சைப் பெரிய கோயில் ஈடும் எடுப்பும் இன்றி பெரிய இடம் பெற்றிருந்ததால், அதை எவ்வளவு சிறப்பித்துச் சொன்னாலும் அது உண்மையே. பல ஆண்டுகளுக்கு இக்கோயில் கட்டும் வேலை நடைபெற்றது. பல புராணக் கதைகள் முதலியவற்றை விளக்கும் திருமேனிகள் இக்கோயிலில் உள்ளன.

**தாராசுரம் - ஐராவதீஸ்வரர் கோயில்**

தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள இக்கோயில், இதைக் கட்டியபோது ஆட்சி செய்த இரண்டாம் இராஜராஜன் பெயரால் கல்வெட்டுகளில் இராஜராஜேஸ்வரம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், மூன்றாம் குலோத்துங்கச் சோழனும் இந்தக் கோயிலில் புதிதாக பல திருப்பணிகளைச் செய்திருப்பதையும் ஆய்வுகள் வெளிப்படுத்துகின்றன. ஆரம்பத்தில் பல கோபுரங்களுடன் கூடிய பிரகாரங்கள் இருந்ததாக தெரிகிறது. ஆனால் இப்பொழுது கோபுரத்துடன் கூடிய ஒரே ஒரு பிரகாரம் மட்டுமே இருக்கிறது. இங்குள்ள "இராஜகம்பீரம் திருமண மண்டபம்" தேர்க்கால்களை உடைய ஒரு ரதத்தை யானைகள் இழுப்பதுபோல் கட்டப்பட்டுள்ளது.

இந்தக் கோயில், ஒவ்வொரு பகுதியிலும் கற்சிற்ப வேலையில் உருவங்கள் அமைப்பதிலும் அளவு கடந்த பணமும் நேரமும் செலவிடப்பட்டு, கலைஞர்களின் திறமை வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. பெரியபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கும் நிகழ்ச்சிகளைச் சித்தரிப்பதை முக்கியமாக இங்கே எடுத்துச் சொல்லலாம். இந்தச் சித்திரங்களைச் தூண்களின் பகுதிகளிலும் யாளி உருவத்திற்கு மேற்பட்ட பகுதியில் கர்ப்பக்கிரகத்தின் சுவர்களிலும் பார்க்கலாம். சுந்தரர் வாழ்க்கை நிகழ்ச்சி இந்தக் கோயிலின் கல்லில் செதுக்கப்பட்டிருப்பதும் தஞ்சாவூரில் வண்ண ஓவியங்களாக சுவரில் எழுதப்பட்டிருப்பதும் ஒரே மாதிரி இருக்கின்றன. நாயன்மார்களின் வாழ்க்கையைப் புராணமாக சேக்கிழார் பாடியது மக்களின் மனதில் ஆழமாக பதிந்து, அவர்களுடைய ஒழுக்கங்களை உருவாக்க உதவிற்று என்பதை இவ்வகையான சிற்பங்கள் மற்றும் ஓவியங்கள் மூலம் அறியமுடிகிறது.

தஞ்சாவூரிலும் கங்கைகொண்ட சோழபுரத்திலும் சோழர்களுடைய கோயில் கட்டடப்பாணி முழுவடிவம் பெற்று சீருடனும் சிறப்புடனும் விளங்கிய காலத்திற்குச் சோழர்களுடைய பிற்காலத்தில் ஏற்பட்ட பெரிய கோயில் தொகுதிகளுக்கும் இடைப்பட்ட காலத்தில் நிலவிய பாணிக்கு குறிப்பிடத்தக்க எடுத்துக்காட்டாக தாராசுரம் கோயிலைக் கருதலாம்.

**கங்கைகொண்ட சோழபுரம்**

அரியலூர் மாவட்டத்தில் அமைந்துள்ளது கங்கை கொண்ட சோழபுரம். கங்கைகொண்ட சோழபுரத்திற்கு கங்காபுரி, கங்கைமாநகர் கங்காபுரம் போன்ற பெயர்களும் உள்ளன. இக்கோயில் இராசேந்திர சோழனால் கட்டப்பட்டது. கங்கைஆறு வரை படையெடுத்துச் சென்று வெற்றி பெற்றதன் நினைவாக கங்கை கொண்ட சோழபுரம் என்ற

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

நகரத்தை முதலாம் இராசேந்திரன் அமைத்து அங்கு இக்கோவிலை கட்டினான். இக்கோவில், ஐராவதேஸ்வரர் கோயில், பெருவுடையார் கோயில் ஆகிய மூன்றும் சேர்ந்து அழியாத சோழர் பெருங்கோயில்கள் எனப்படுகின்றன.

தஞ்சைப் பெரிய கோயில் கட்டி முடிக்கப்பட்டு இருபது ஆண்டுகளில் கட்டப்பட்ட கங்கை கொண்ட சோழபுரம் கோயில் தஞ்சைக் கோயில் பிரதானமான அல்லது மிக முக்கியமான இயல்புகளை ஆனால் அந்த இயல்புகளை வேறு ஒருவகை உணர்ச்சியுடன், வெளிப்படுத்துகிறது. தஞ்சைப் பெரிய கோயிலில் ஆண்மையின் மிடுக்கும் வீரமும் பொங்கி வழிகிறது என்றால், கங்கை கொண்ட சோழபுரக் கோயிலில் பெண்மையின் மென்மையும் அழகும் உள்ளத்தைக் கவருகிறது என்பர். பொதுவாகத் தஞ்சாவூரைவிட இங்குப் பொலிவுபடுத்துவதில் அக்கறை காட்டப்பட்டிருப்பதும் குறிப்பிடத்தக்கது. 340 அடி நீளமும் 100 அடி அகலமும் கொண்டுள்ள இக்கோயிலில் 175 அடியும் 95 அடியும் நீள அகலங்கள் உடைய மண்டபமும் ஒவ்வொரு பக்கத்திலும் 100 அடி உடைய கர்ப்பக்கிரகமும் உள்ளன. மண்டபத்தையும் கர்ப்பக்கிரகத்தையும் இணைக்க ஓர் இடைவழி இருக்கிறது. அழகான வேலைபாடுகளுள்ள கதவுகளுடன், கண்ணையும் கருத்தையும் கவரும் துவார பாலகர்களுடனும் படிகட்டுகளுடன் மிளிர்கின்றன.

மெய்சிலிக்கக்கூடிய வகையில் கட்டடக் கலையையும் சிற்பக் கலையையும் பிரம்மாண்டமான உருவத்தில் வடித்து, கவர்ச்சியான பெரியதொரு கோட்டை வாயில்போல, மண்டபத்தின் கிழக்கு மூலையில் பிரதான வாயில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. 1987ல் பெருவுடையார் கோவில் யுனெஸ்கோ அமைப்பால் உலகப்பாரம்பரியச் சின்னமாக அறிவிக்கப்பட்டது. பின்னர், 2004-ல் கங்கைகொண்ட சோழீஸ்வரர் கோயிலும் மற்றும் ஐராவதேஸ்வரர் கோயிலும் உலகப்பாரம்பரியச் சின்னங்களாக அறிவிக்கப்பட்டன. 12ஆம் நூற்றாண்டுகளில் வெவ்வேறு மூன்று சோழ அரசர்களால் கட்டப்பட்ட இம்மூன்று கோயில்களும் அதிகளவிலான ஒற்றுமையமைவுகளைக் கொண்டுள்ளன.

சோழர்களின் உயர்தரமான கலை மற்றும் கட்டிடக்கலைக்கு சிறந்த சான்றாக திகழும் இந்தக் கோயில் சோழர்களால் கட்டப்பட்டதற்காக மட்டுமல்லாமல், தென்னிந்தியாவிலேயே மிகப்பெரிய சிவலிங்கத்தைப் பெற்றிருப்பதற்காகவும் புகழ் பெற்றுள்ளது. மேலும், கங்கை கொண்ட சோழபுரத்தில் இறைவன் கோயில், அம்மன் கோயில் இரண்டுமே ஒரே காலத்தில் கட்டப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

**திரிபுவனம் - ஸ்ரீ கம்பஹேரேஸ்வரர் ஆலயம்**

கும்பகோணத்திற்கு அருகில் உள்ள திருபுவனம் என்னும் கிராமத்தில் ஸ்ரீ கம்பஹேரேஸ்வரர் ஆலயம் அமைந்துள்ளது. திரிபுவனத்து, கம்பஹேரேஸ்வரர் கோயில் கல்வெட்டுகளில் திரிபுவன ஈஸ்வரம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. கர்ப்பகிரகம், கோபுரம் ஆகியவற்றின் சுவர்களில் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. சோழ அரசன் ஒருவன், ஒரு பிராமணனைக் கொன்ற பாவத்தால் துன்பப்பட்டு அவனுடைய உடம்பு முழுவதும் ஆடிக்கொண்டிருந்ததாம். அந்த நடுக்கம் அல்லது கம்பத்தைக் கடவுள் போக்கியதால் அந்த இறைவனுக்கு கம்பஹேரேஸ்வரர் என்று பெயர் உண்டானதாக மரபுக்கதை வழங்கி வருகின்றன.

அக்ரமண்டபம், நுழைவாயிலிலுள்ள தாழ்வாரம் ஆகியவை உள்பட, தாராசுரம் கோயிலுக்கும் பல ஒற்றுமைகள் உண்டு. விமானம் மேலே செல்லச் செல்லச் சுருங்கும் ஆறு தளங்களை உடையது. தாராசுரத்திலும் தஞ்சாவூரிலும் போல, இங்கேயும் கீழ் இருநிலை மாடங்களும் அர்த்த மண்டபத்தின் உயரத்திற்கு உள்ளன. அக்ர மண்டபத்திற்குத்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

தெற்கேயுள்ள தாழ்வாரம் ஐராவதீஸ்வரர் கோயிலில் இருப்பது போன்றதே, சிங்கம், யானை ஆகியவற்றை அடித்தளமாகக் கொண்ட தூண்களுக்குப் பதிலாக எளிய முறையிலான தூண்கள் உள்ளன. தாழ்வாரமே, பல சக்கரங்களுடன் கூடிய தேர் வடிவமானது. பலவகை சிலைகள் நிறைந்த கலைக்கூடமாக இந்தக் கோயில் விளங்குகிறது. பெரிய விமானமுடைய சோழர் பாணியிலமைந்த கோயில்களுள் இக்கோயிலே இறுதியானது என்றே கூறலாம். சோழர்களால் புதுப்பிக்கப்பட்ட கடைசிகோவில் இதுவென வரலாற்றாசிரியர்கள் கருதுகின்றனர்.

**சூரியனார் கோயில்**

தமிழ்நாட்டில் தஞ்சாவூர் மாவட்டம் கும்பகோணத்துக்கு அருகில் அமைந்துள்ளது சூரியனார் கோவில். இந்த கோவில் ஒன்பது நவக்கிரக் கோயில்களில் முதன்மையானதாகும். இக்கோவில் குலோத்துங்கச் சோழரின் ஆட்சிக்காலத்தில் கட்டப்பட்டுள்ளது என்பது அக்கோவிலில் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டின் மூலம் அறிந்து கொள்ளலாம். இக்கோயில் நான்கு பிரகாரங்களுடன் கூடிய சுற்று சுவருடன் நடுவே ராஜகோபுரத்துடன் எழும்பி கம்பீரமாகக் காட்சித்தருகிறது.

சூரியனுக்கு இந்தியாவில் இரண்டே இரண்டு இடத்தில் மட்டுமே கோயில் உள்ளது. வடக்கே கோனார் கோயில், தெற்கே இந்த சூரியனார் கோயில். கோயில் கோனார்க்கில் உருவ வழிபாடு இல்லை. ஆனால் நம் தமிழ்நாட்டில் உள்ள இந்த சூரியனார் கோயிலில் உருவ வழிபாடு உள்ளது.

**முடிவுரை**

சோழர் கால வனப்பு மிக்க கட்டடக் கோயில்கள் இன்றும் சிறந்து விளங்குகின்றன. இக்காலக் கோயில் விமானச் சுவர்களில் பல தேவகோட்டங்கள் அமைக்கப்பட்டு, அதில் எழிலார்ந்த தெய்வீகச் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. சுமார் 250 ஆண்டுகள் தமிழகத்தின் பெரும்பகுதியைச் சோழர்கள் ஆண்டனர். சோழர் காலத்தில் விஜயாலயன் காலம் தொடங்கி இராஜராஜன் காலம் வரை கோயிற்கலையில் ஒரு குறிப்பிட்ட கட்டம் எனலாம். இக்காலமே தமிழக கோயில் வரலாற்றில் பொற்காலம் என்பதை சோழர்கால கோயில்களின் தனித்தன்மைகள் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.

**பார்வை நூல்கள்**

1. பேராசிரியர் கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி. தமிழாக்கம் கே.வி. ராமன், *சோழர்கள்* (புத்தகம் - 2), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட்., சென்னை. 2010.
2. கலைமணி தொ.மு.பாஸ்கர தொண்டைமான். *வேங்கடம் முதல் குமரி வரை* வர்த்தமானன் பதிப்பகம், சென்னை. 2018.
3. முனைவர். சீ. வசந்தி (பதிப்பாசிரியர்). *தமிழகக் கோயிற் கலைகள்*, தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை வெளியீடு, சென்னை. 2014.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தொல்பொருள் பண்பாட்டில் சமய நம்பிக்கைகள்
# Religious Beliefs in Archaic Culture

**முனைவர் க.உ.மாராணி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
சீதாலட்சுமி இராமசுவாமி கல்லூரி, திருச்சிராப்பள்ளி-02.

## Abstract

*The article has been culled out by the inspiration to extract the* Religious Beliefs in Archaic Culture. The religious traits tell of the beliefe of the Tamil people through the archaic remnants of the Tamil culture. *Nevertheless, the purpose of it is to bring out the glimpses from the archaeological evidences of the religious beliefs.*

**Keywords:** Religious, Beliefs, Archaic Culture

சமய நம்பிக்கைகள் முன் வரலாற்றுக் காலந் தொடங்கி இன்று வரை மனித சமுதாயம் எங்கெல்லாம் வாழ்ந்து வந்துள்ளதோ அங்கெல்லாம் மனித வாழ்வியலோடு மிகவும் வேரூன்றியுள்ளன. எந்தெந்தச் சமுதாயங்களில் எவ்வகையான சமய நம்பிக்கைகள் உள்ளன என்பது பற்றிய ஆய்வுகள் செனோ.்.பான்ஸ், ஹெரோடாட்டஸ் காலம் தொடங்கி இன்று வரை தொடர்ந்து மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. முன் வரலாற்றுக் காலத்தில் வாழ்ந்த மனித மூதாதையர்களான **நியாண்டர்தால் மனிதன் (Neanderthal man)** காலத்திலேயே சமய நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது என மானிடவியல் ஆய்வுத்தரவுகள் கூறுகின்றன. மனித ஆற்றலுக்கப்பாற்பட்ட ஆற்றல் ஒன்றுள்ளது என்ற தொன்மை மக்களின் நம்பிக்கையே சமயம் தோன்றுவதற்குக் காரணமாக அமைந்தது. தொன்மை மக்களின் அந்நம்பிக்கை பல படிநிலைகளில் மலர்ச்சி அடைந்த நிலையில் பல சமயப் பிரிவுகளாக வளர்ச்சி பெற்றது. தொல்பொருள் பண்பாட்டில் காணப்படும் சமய நம்பிக்கைகளை இவண் காண்போம்.

**சமயம்:**

சமயம் என்பது புனிதமான ஒன்றைப் (Sacred thing) பற்றிய நம்பிக்கைகளும், செயல்முறைகளும் அடங்கிய ஓர் ஒழுங்கமைந்த முறையாகும் என்பார் எமிலி தர்கைம்.[1] இக்கருத்தை மேலும் பரந்த பொருளுடையதாக மாற்றி ஓடியா என்பவர் பகுத்தறிவிற்கு எட்டாததும் (Non-rational) செயலறிவிற்கு உட்படாததுமான (Non-empirical) ஓர் உலகத்துடன் தொடர்பு கொள்ள மக்கள் ஏற்படுத்திக்கொண்ட முறையே சமயம் என வரையறை செய்கிறார்.[2]

**சமய நம்பிக்கையின் அடித்தளம்:**

முன் வரலாற்றுக்கால மக்களின் குகைகளில் வரையப்பட்டுள்ள ஓவியங்கள் அவர்களின் நம்பிக்கை முறைகளை ஊகிப்பதற்கு உதவுகின்றன. பெரும்பாலான ஓவியங்கள் வேட்டை நிகழ்ச்சிகளைச் சித்தரிக்கின்றன. வேட்டையில் எவ்வகையான விலங்கினை எவ்வாறு வேட்டையாட வேண்டுமென விரும்பினார்களோ அந்த வகையில் ஓவியங்களைத் தீட்டியுள்ளார்கள். அவை அவர்களுக்கு வேட்டையாடும் மன வலிமையையும், வேட்டையில் வெற்றி பெறலாம் என்ற எண்ணத்தையும் கொடுத்தன. இவ்வகையான எண்ணங்கள் சமய நம்பிக்கைகளுக்கு அடித்தளமாக அமைந்தன.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

தென்கிழக்காசிய நாடுகளிலும், மத்திய கிழக்கு நாடுகளின் பல பகுதிகளிலும், ஐரோப்பா முழுவதிலும் முன்வரலாற்றுக் கால மக்கள் இறந்தவர்களைப் புதைத்த இடங்களில் நினைவிற்காகப் பெருங்கற்களை (Megaliths) நட்டு வைத்தனர். அவ்விடங்களை அகழாய்வு செய்த போது பல சடங்குப்பொருள்கள் கிடைத்தன. அப்பொருள்கள் இறந்தவர்களின் ஆவியை நினைவுபடுத்தவோ இயல்பிறந்த இயற்கையின் ஆற்றடலுடன; (Super-nature power) தொடர்பு கொள்ளவோ இறந்தவர்களின் உதவியைப் பெறவோ வைத்திருக்க வேண்டும். அவ்விடங்களில் வைக்கப்பட்டிருந்த பொருள்கள் நியாண்டர்தால் மனிதனின் நம்பிக்கையைக் காட்டிலும் மேலும் கூடுதலான சமய நம்பிக்கையை வெளிப்படுத்துவனவாக உள்ளன.

**மனித வாழ்வில் சமயத்தின் பங்கு:**

மனித இனத்தின் வளர்ச்சியில் சமய நம்பிக்கை ஆவியுலக வழிபாட்டில் தொடங்கி ஒரு கடவுள் வழிபாடு வரை பல நிலைகளாகப் படிமலர்ச்சியடைந்து வந்துள்ளது. இருப்பினும் அனைத்து நிலைகளிலும் சமய நம்பிக்கையானது மக்கள் வாழ்வில் மிகவும் ஆழமாக வேரூன்றியுள்ள நிலையே காணப்படுகிறது. வாழ்வின் எதிர்காலம் எப்படியிருக்கும் என கணிக்க இயலாத நிலையில் தோன்றும் ஒரு பயம் கலந்த எதிர்பார்ப்பு உணர்வுகளைத் தேற்றிக் கொண்டு அதன் மூலம் ஒரு வகையான நம்பிக்கையைப் பெற்று வாழ்க்கை நடத்துவதில் சமயம் பெரும்பங்காற்றுகிறது. இவ்வுலக வாழ்வில் அடுத்து என்ன நடக்கும் என்பது யாருக்கும் தெரியாததாகையால் ஒவ்வொருவரும் தமக்கு எவ்வித இடையூறும், தொல்லையும் ஏற்படக்கூடாது என விரும்புகின்றனர். மற்றவரிடம் இனிமையாகப் பேசவும், பழகவும் செய்யவேண்டுமென்றும் அதுவே மறுமைக்கும் இன்பம் தருமென்பதை,

சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பம் தரும் (குறள்- 98)

வள்ளுவம் கூறுகிறது. இதற்கடுத்து, ஏறக்குறைய எல்லா சமயங்களுமே இயல்பிறந்த இயற்கை அல்லது இயற்கைக்கப்பாற்பட்ட உலகம் (Supernature) ஒன்று உண்டு என வரையறை செய்து இறப்புக்குப் பின் மனிதனுக்கு அவ்வுலகத்தில் மீண்டும் ஒரு வாழ்வு உள்ளது எனக் கூறுவதால், புரிந்து கொள்ளவியலாத வருங்கால வாழ்வில் சிக்கல்களின்றி எதிர்கொள்ள விரும்பி சமய வாழ்வை ஏற்றுக்கொண்டு அதன் நடைமுறைகளைப் பின்பற்றுகின்றனர்.

**தமிழர் பண்பாட்டில் சமய நம்பிக்கை:**

சங்ககாலத் தமிழர் பண்பாட்டிலும் பல தகுதிப்பெயர்ச்சி நிலைகள் பிரிக்கப்பட்டுள்ளன. குறிப்பாக, குழந்தைப்பருவத்தை காப்பு, செங்கீரை, தாளப்பருவம், சப்பாணி, முத்தப்பருவம், வருகை, அம்மானை, சிறுவரை, சிற்றில், சிறுதேர் எனப் பகுத்துள்ளமை தகுதிப்பெயர்வு என்னும் கருத்தாக்கத்தைக் கொண்டவையேயாகும். அவ்வாறே, பெண்களின் வாழும் காலத்தை பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்னும் தகுதிநிலைகளாகப் பகுத்துள்ளதும் மேற்கூறிய கருத்தாக்கத்தின் அடிப்படையிலேயே ஆகும். அவற்றோடு பெயர் சூட்டுச்சடங்கு, காதுகுத்துதல், பூநூல் திருமணம், மஞ்சள் நீராட்டுவிழா, திருமணம், வளைகாப்பு, அறுபதாம் கல்யாணம், காரியம் செய்தல், தெவசம் கொடுத்தல் போன்றவையும் தகுதிப்பெயர்ச்சிச் சடங்குகள் என்னும் கருத்தாக்கத்தைக் கொண்டதாகும்.

தமிழர்களின் சமயநம்பிக்கை புனிதமானதற்கும் அதனோடு தொடர்புடைய சடங்குகளுக்கும் இடையேயுள்ள உறவைச் சுட்டிக் காட்டுகிறது. மக்கள் அவற்றோடு தொடர்பு கொள்ளுவதால் ஏற்படும் பலனைச் சுட்டிக் காட்டுகிறது. அவ்வாறு தொடர்புடையதாக செய்யப்படும் சடங்குகளின் பொருளைச் சுட்டிக்காட்டுகிறது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

சான்றாக,
இந்துக்கள் கோயிலுக்குச் செல்லும் போது குளித்துவிட்டுச் செல்ல வேண்டுமென்பது சமயநம்பிக்கை.

புறத்தூய்மை நீரான் அமையும் அகத்தூய்மை
வாய்மையால் அறியப் படும் (குறள் 298)

என்கிறார் வள்ளுவர். எனினும், உடலளவில் தூய்மையாக இருப்பதென்பது மனதளவிலும் தூய்மையாக இருப்பதன் குறியீடாக அமைகிறது. உடலளவிலும், மனதளவிலும் தூய்மையாக கடவுளை அணுக வேண்டும் என்பதே இந்துக்களின் சமயநம்பிக்கையாக உள்ளது.

**வாழ்வியல் விழுமியங்களை உணர்த்தும் சமயநம்பிக்கை:**

ஒரு சமுதாயத்தின் உறுப்பினர்கள் அவர்களுடைய சமுதாயம் சுட்டிக்காட்டும் நெறிமுறைகளையும் (Norms) விழுமியங்களையும் (Values) முறையாகப் பின்பற்றி நடப்பதால் மட்டுமே அச்சமுதாயம் நிலைபெற முடியும். இந்நிலையில் நெறிமுறைகளும், விழுமியங்களும் சமுதாய வாழ்விற்கு மிகவும் முக்கியமானது என சுட்டிக்காட்டுவதோடு அதனைக் கண்டிப்புடன் ஏற்றுச் செயல்பட வைப்பதிலும் சமயம் பெரும்பங்காற்றுகிறது. மக்கள் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகள், விழுமியங்கள் ஆகியவற்றுள் பெரும்பாலானவற்றைச் சமயம் ஒழுக்கம் சார்ந்ததாக (Moral) அறிவுறுத்தி அதற்குத் தனிமதிப்பை ஏற்படுத்துகிறது. இவற்றுள்ளும் சிலவற்றை புனிதத்தன்மையாக்க (Sacred) அதற்குச் சிறப்பிடம் கொடுக்கிறது. இவ்வாறு சமயத்தின் சிறப்பம்சங்களோடு கூடிய நெறிமுறைகளையும், விழுமியங்களையும் பின்பற்றுவோருக்குச் சமயம் ஆதரவளிக்கிறது என்ற கருத்தாக்கத்தைச் சமயங்கள் கற்பிக்கின்றன.

பெற்றோருக்கு மதிப்பளிக்க வேண்டும் என்ற நெறிமுறை வீட்டிலும், பள்ளியிலும் கற்பிக்கப்படுகின்றது. பெற்றோரை மதிப்பவனும், வழிபடுபவனும் இறைவனை மதிப்பதற்கும், வழிபடுவதற்கும் சமம் என்ற கருத்து இந்நெறிமுறையின் ஆழ்நிலைக்கருத்தாக அமைவதால் ஒவ்வொருவரும் இந்நெறிமுறையைக் கடைபிடிக்காமல் தப்பித்துச் செயல்பட விரும்புவதில்லை.

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்
தாயிற் சிறந்த கோயிலுமில்லை
தந்தை சொல்மிக்க மந்திரமில்லை,,,,,,,,,,

போன்ற வரிகள் இதற்கு சான்றாகின்றன.

**சமூகத்தை ஒன்றிணைக்கும் சமய நம்பிக்கை:**

மனிதர்கள் அனைவரும் சமம் என்னும் கருத்தை அனைத்துச் சமயங்களும் வலியுறுத்துகின்றன. அதோடு அன்பு, கருணை, சகோதரத்துவம், நாட்டுப்பற்று போன்ற பண்புகளையும் வலியுறுத்துவதால் இவை தனிமனிதர்களை ஒன்றிணைக்கின்றன. சமுதாய அமைப்பில் முன்பின் தெரியாதவர்களாக இருந்தாலும் அவர்களுக்கிடைய பிணைப்பை ஏற்படுத்துகின்றன. சான்றாக, இந்து சமயத்தில் சைவ, வைணவப் பிரிவுகளும், கிறித்தவத்தில் புராட்டஸ்டாண்டு, கத்தோலிக்கப் பிரிவுகளும், பிற சமயங்களில் இதுபோன்ற உட்பிரிவுகளும் உள்ளன. இப்பிரிவினர்கள் ஒருவருக்கொருவர் உறவினராக இல்லாமலிருப்பினும் பொதுவாழ்விலோ, பிற இடங்களிலோ பழக வாய்ப்பேற்படும்போது பற்றுடையவராகவும், அன்பு செலுத்துபவராகவும், உதவி செய்பவராகவும் பழகுவர்.

எல்லோரும் ஓர் குலம்: எல்லோரும் ஓர் இனம்:
எல்லோரும் இந்திய மக்கள்
எல்லோரும் ஓர் நிறை: எல்லோரும் ஓர் விலை

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com


எல்லோரும் இந்நாட்டு மன்னர்,,,,

என்ற பாரதியின் வரிகள் நினைவு கூறத்தக்கன. இவ்வாறான உணர்வுகளுடன் சமூகத்தில் அனைவரையும் பிணைக்கும் ஆற்றல் மற்ற எல்லா நிறுவனங்களைக் காட்டிலும் சமயமே மிகுதியாகக் கொண்டுள்ளது.

இவ்வாறாக, தனிமனிதர் தம் வாழ்வியலில் எதிர்கொள்ளும் உடலியல், உளவியல், வாழ்வியல் சிக்கல்களையும், மாற்றங்களையும் தாங்கிக் கொள்ளும் திறனை சமயம் கொடுக்கிறது. மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட செயல்களுக்கு விளக்கம் காண்பதில் சமயமே துணைநிற்கிறது. எனவே சமயம் மக்களின் வாழ்வை நெறிப்படுத்தும் ஓர் உயிரோட்டமுள்ள உணர்வாகத் திகழ்கின்றது.

**அடிக்குறிப்புகள்:**

1.Emile Durkheim, The Elementary Forms of Religious Life (New York: Free press 1965), P.62.

2.Thomas F.O'Dear, The Sociology of Religion (Engle-wood Cliffs, N.J.:Prentice-Hall, 1966), PP.1-2

**பார்வை நூல்கள்:**


1.பண்பாட்டு மானிடவியல்-சீ.பக்தவத்சல பாரதி

2.திருக்குறள் -தெளிவுரை

3.பாரதியார் கவிதைகள்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# கல்வெட்டு செப்பேடுகளில் அறியலாகும் புறநானூற்று மன்னர்கள்
# The Kings of *Purananooru* from the Culverts and Bronze Plates

**வ.கணபதிராமன்,** உதவிப்பேராசிரியர்,
தமிழியல்துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர் - 608002.

## Abstract

*The article has been culled out by the inspiration to extract the glorious kings glorified in the poetic verses of 'Purananooru'. The evidences from the culverts, copper plates and literary sources scops of the feats of some of the kings in a far-fetched manner. Kings such as Pandian Palyagasalai Mudhukudumbi Peruvazhudhi, Pandian Nedunchelian, Vel Aai, Adhiyaman Newdumananji are famed through the Sangam poems. The article delves deep to scrutinize the facts related to it. Nevertheless, the purpose of it is to bring out the glimpses from the archaeological evidences of the Purananooru kings.*

**Keywords:** Kings, *Purananooru*, Culverts, Bronze Plates

## முன்னுரை

தமிழர்கள் பெருமித வாழ்வுக்கு பெயர் பெற்றவர்கள். விரமும் ஈரமும் விளைந்த நெஞ்சமும், அறமும் திறமும் அமைந்த பண்பும், உரிமையும் பெருமையும் உலவும் உள்ளமும் தமிழர்களுக்கே உரியனவாகும். அத்தகு வீர வாழ்க்கையைப் புலவர்கள் கவிதைகளாகவும், காவியங்களாகவும் வடித்துத் தந்திருக்கிறார்கள். அத்தகு கவிதை தொகுப்பில் ஒன்று தான் *புறநானூறு*. புறம் சார்ந்த கருத்துகள் எண்ணற்றவை இருந்தாலும் அதனூடே மன்னர்கள், புலவர்கள், இவர்கள் சார்ந்த ஊர்கள் என அனைத்தும் அதில் பதிவாகியுள்ளன. இங்கு குறிப்பிடப்படும் செய்திகள் உண்மையானவையா என அறிவற்கு கல்வெட்டுகளும், செப்பேடுகளும் பெரிதும் உதவுகின்றன. அவ்வகையில் புறநானூற்றில் குறிப்பிடப்படும் ஒரு சில மன்னர்கள் சார்ந்த பிற செய்திகளும் கல்வெட்டுசெப்பேடு மூலம் அறிவதாகவே இவ்வாய்வு அமைகிறது.

பழங்காலத்தில் அரசரின் ஆணைகளை அனைவரும் தெரிந்து கொள்ளும் வண்ணம் பாறைகளில் செதுக்கிப் பதிவு செய்யும் வழக்கம் இருந்தது. கற்களில் உளி கொண்டு வெட்டிப் பதிதல்,'கல்வெட்டு' என்றானது. தமிழ்மொழி வரலாறு அறிய இன்றியமையாதவை கல்வெட்டுகள். கல்லில் செதுக்கப்பட்டதால் அடித்தல், திருத்தல், மாற்றி எழுதுதல், அழித்தல், புதிதாக ஒன்றைச் சேர்த்து எழுதுதல் என்பவற்றுக்கு எல்லாம் இங்கு இடமே இல்லை. என்று எப்படி எழுதப்பட்டதோ, அதே நிலையில், சிறிதும் மாற்றமின்றி இன்றும் கிடைப்பது கல்வெட்டுகளின் தனிச்சிறப்பு ஆகும். கல்வெட்டுச் சான்றுகள் முதன்மைச் சான்றுகளாக வரலாற்றில் ஏற்றுக் கொள்ளப்படுகிறது. கல்லெழுத்துக் கலையாக கல்வெட்டுகள் தமிழ்நாட்டில் பரிணமித்துள்ளன. இந்தியாவில் உள்ள கல்வெட்டுகளில் 50 விழுக்காடு கல்வெட்டுகள் தமிழ்நாட்டில் கிடைக்கின்றன. எண்ணிக்கையில் அதிகமான கல்வெட்டுகளும் தமிழகத்திலேயே உள்ளன.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

தமிழ்க் கல்வெட்டுகளில் கி.பி. மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்த பிராமிக் கல்வெட்டுகள் மிகப் பழமையானவை. இவை குகைகளில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. பஞ்சபாண்டவர் மலை, மறுகால்தலை, திருப்பரங்குன்றம், கழுகுமலை, சித்தன்னவாசல் ஆகிய இடங்களில் இக் கல்வெட்டுகளைக் காணலாம். பிராமி எழுத்துகளில் எழுதப்பட்டுள்ளதால் இவை 'பிராமிக் கல்வெட்டுகள்' என்று வழங்கப்படுகின்றன. 'குகைக் கல்வெட்டுகள்' என்றும் அழைப்பர்.

**கல்வெட்டுகள்**

தமிழர்களின் பெருமைமிக்க வரலாற்றுக்குச் சான்றாக இருப்பவை, கல்வெட்டுகள் மற்றும் செப்பேடுகளும் ஆகும். இவை கோயில்கள் மலைகள் என எங்கெல்லாம் தமிழ் மன்னர்கள் கால் பதித்தனரோ, அங்கெல்லாம் கல்வெட்டுகளை வெட்டிப் பொதித்து வைத்துள்ளனர். இதுவரை பல ஆயிரம் கல்வெட்டுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. பெரும்பாலானவை படிக்கப்பட்டு அச்சாக்கமும் செய்யப்பட்டுள்ளன. இன்னும் ஆயிரக்கணக்கான கல்வெட்டுகள் படிக்கப்படவில்லை என்பர். இன்னும் பல்லாயிரக்கணக்கான கல்வெட்டுகள் கண்டுபிடிக்கபடவில்லை என்று அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். பெரும்பாலான கல்வெட்டுகள் பிராமி எழுத்து, வட்டெழுத்து பழங்காலத் தமிழ் எழுத்துகளில் உள்ளது என்பர் 'கல்வெட்டுகள் என்பன கோயில்களிலுள்ள சுவர்கள், கற்பாறைகள், மலைக்குகைகள், வெற்றித்தூண்கள் மண்டபங்கள், படிமங்கள், நடுகற்கள் முதலானவற்றில் வரையப் பெற்றிருக்கும் கல்லெழுத்துகளேயாகும். செப்பேடுகளையும் கல்வெட்டுகள் என்ற தலைப்பின் கீழ் அடக்கிக் கொள்வது பொருந்தும். கல்வெட்டுகளில் காணப்படும் செய்திகள் அல்ல. அவையனைத்தும்நம் முன்னோர்களுடைய உண்மை வரலாறுகனை யுணர்த்தும் பழைய வெளியீடுகளே' என்று கல்வெட்டறிஞர் தி.வை. சதாசிவபண்டாரத்தார் கூறுகிறார்.

**புறநானூற்றால் அறியப்படும் மன்னர்கள்**

1. பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி
2. பாண்டியன் நெடுஞ்செழியன்
3. வேள் ஆய்
4. அதியமான் நெடுமானஞ்சி

**பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி**

முதுகுடுமி அரசர்க்குரிய பலவேள்விகள் செய்து சிறப்பு பெற்றவன் என்பது, இவன் இயற்பெயருக்கு பின்னருள்ள பல்யாகசாலை என்ற அடைமொழி பின்வரும் பாடலில் 'அன்ன சீற்றத்து அனையை' என்பது வரை வழுதியின் போராற்றலை நெட்டிமையார் புகழ்கிறார். அடுத்து வசைபட வாழ்ந்தோர் பலர்கொல் என்பது வரை போர் இகழப்படும் செயல் என்கிறார். அடுத்து யூபம் நட்ட வியன்களம் பலகொல் என்பது வரை வேதநெறியால் யாது பயன் எனப் பெற வைக்கிறார். இறுதியில் பாடினி பாடும் வஞ்சிக்கு நாடல் சான்றவன் எனக் குறிப்பிட்டு மக்களை மகிழ்விப்பதே நெறி என்னும் அறத்தை நிலைநாட்டுகிறார்

"கடுந் தேர் குழித்த ஞெள்ளல் ஆங்கண்,
...வெள் வாய்க் கழுதைப் புல் ,னம் பூட்டி,
அருஞ் சீர்த்திப் பெருங் கண்ணுறை
நெய்ம் மலி ஆவுதி பொங்க, பல் மாண்
வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி,
யூபம் நட்ட வியன் களம் பலகொல்?
யா பலகொல்லோ? பெரும! வார் உற்று

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

விசி பிணிக்கொண்ட மண் கனை முழவின்
பாடினி பாடும் வஞ்சிக்கு
நாடல் சான்ற மைந்தினோய்! நினக்கே.'' (புறம் -15 )

புலவர் மன்னனைக் வினவுகிறார்.பகைவரை அறிந்து வசைபாட வாழ்ந்தவர் பலரா,,ல்லை, தூண் நட்டு வேள்வி செய்து புகழ் பெற்றவர் பலரா? நீ சினம் மிக்கவன். அதனால் பகைவர் நாட்டில் தேர் நடத்தினாய். அந்தத் தேர்க்கால் பள்ளத்தில் கழுதை-ஏர் பூட்டி உழுதாய். அவரது கோட்டைகளை அழித்தாய். பறவைகள் மேயும் விளை வயல்கள் உன் குதிரைக் குளம்புகளால் மிதிபடத் தேரோட்டினாய்.நடை பயில்வதும், பருத்த முதுகுக் கொட்டேறியும், பரந்த காலடியும், அழிக்கும் பார்வையும், ஒளி வீசும் கொம்புகளையும் கொண்டதுமான உன் யானைகளை ஊர்மக்கள் குடிப்பதற்காகப் பாதுகாக்கப்பட்ட குளத்தில் குளித்துத் திளைக்கும்படி செய்தாய். இப்படிப்பட்ட சீற்றம் கொண்டவன் நீ. பொன்-கேடயமும் வேலும் ஏந்தி பகைவர் நடத்திய காலாள் படையை வெல்லும் ஆசையோடு போரிட்டும், ஏமாந்தும் மக்கள் வசை பாட வாழ்ந்தவர் பலரா? அல்லது நால்வேதச் சிறப்புக் குழியில் நெய் ஊற்றி ஆவி பொங்க வேள்வி செய்து தூண் நட்டுச் சிறப்பெய்தியவர் பலரா? கனை-முழவினை முழக்கிக்கொண்டு உன்னைப் பாடும் பாடினியின் வஞ்சிப் பாடலை விரும்பும் வலிமை மிக்கவனே! உனக்கு யார் பலர்? (இருவரும் இல்லை.)

பல்யாக முதுகுடுமிப் பெருவழுதியெனும் பாண்டியாதிராசனால் நாகமா மலைச்சோலை நளிர்சினைமிசை வண்டலம்பும் பாகனூர் கூற்றமென்னும் பழனகிடக்கை நீர்நாட்டுச் சொற்கணளர் சொல்லப்பட்ட சுருதி மார்க்கம் பிழையாது கொற்கை கிழான் நற்கொற்றன் கொன்று வேள்வி முற்றுவிக்கக் கேள்வியந்தணளர் முன்பு கேட்க வென்றெடுத்துரைத்து வேள்விச்சாலை முன்பு நின்று வேள்விக்குடியென்றப்பதியைச் சீரோடு திருவளர்ச் செய்தார் வேந்தனப் பொழுதே நீரோட்டிக் கொடுத்தமையால் நீடு புக்தி துய்த்த பின் என்ற வேள்விக்குடி செப்பேட்டுப் பகுதியினால் அறிய முடிகிறது என்று தி.வை. சதாசிவபண்டாரத்தார் கூறுகிறார்.

**பாண்டியன் நெடுஞ்செழியன்**

கடைச்சங்க நாளில் விளங்கிய பாண்டிய நெடுஞ்செழியன் என்பவன், சோழன் பெருநற்கிள்ளி, சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இளம்பொறை என்ற பேரரசர் இருவரையும் குறுநில மன்னர் ஐவரையும் தலையானங்கனத்தில் வென்ற செயல் பின்வரும் புறப்பாட்டுக்களால் உணரப்படுகின்றது.

“தமிழ் கடல் வளைஇய ஈண்டு அகன் கிடக்கை,
தமிழ் தலைமயங்கிய தலையாலங்கானத்து,
மன் உயிர்ப் பன்மையும், கூற்றத்து ஒருமையும்,
……அம்பு சென்று இறுத்த அரும் புண் யானைத்
தூம்புடைத் தடக் கை வாயொடு துமிந்து,
நாஞ்சில் ஒப்ப, நிலம் மிசைப் புரள,
எறிந்து களம் படுத்த ஏந்து வாள் வலத்தர்''(புறம் -19)

வெற்றிவேல் கொண்ட செழியனே! தமிழரோடு தமிழர் மோதிக்கொண்ட தலையாலங்கானப் போரில் நீ தனியொருவனாகவே பல உயிர்களை மாய்த்திருக்கிறாய். இது எமன் தனியனாகச் செய்யும் செயல் போன்றது. பெரிய கல் அடித்து விழும்படி வேட்டுவன் புலிக்குப் பொறி வைப்பான். (புலி தானே வரும் போது அந்தக் கல்லில் அடிபட்டு விழும்) நீ அந்தப் பெருங்கல் அடார் போன்றவன் நீ. (தானே வந்து பகைவர் விழக் கொல்பவன் நீ) எனவே உன் மார்பை மழங்கித் தழுவினேன். நீ உன்னை எதிர்த்த ஏழு அரசர்களைத்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

தலையாலங்கானப் போரில் வென்றவன். அந்தப் போரில் என் கணவனும் புதல்வரும் மாண்டனர். இனி நமக்கு என்ன இருக்கிறது என்ற மகளிர் கசிந்து அழுவதைப் பார்த்துக் கூற்றுவனே இரங்கிய போர்க்களம் அது. அந்தப் போர்க்களத்தில் அம்புகள் குருவிக்கூட்டம் போல யானைமீது பாய்ந்தன. புண்பட்ட யானையின் துதிக்கையும் வாயும் துண்டிக்கப்பட்டு உழும் கலப்பை போல நிலத்தில் கிடந்தது. இப்படி வென்ற கவசமும் ஆரமும் தாங்கிய உன் மார்பைத் தழுவினேன், பாதுகாப்பாயாக.

மேலும், நெடுஞ்செழியன் தலையாலங்கானப் போரில் வென்று அழித்த பகைவர் நாட்டின் அழிவைப் பற்றிக் கல்லாடனார் கூறும் பாடல் இது.

“வெளிறு இல் நோன் காழ்ப் பணை நிலை முனை,,
களிறு படிந்து உண்டென, கலங்கிய துறையும்
……பூளை நீடிய வெருவரு பறந்தலை
வேளை வெண் பூக் கறிக்கும்
ஆள் இல் அத்தம் ஆகிய காடே”.(புறம் -23)

கொட்டகையில் (வெளிறு இல்லில்) கட்டப்பட்டிருப்பதை வெறுத்த யானை கலக்கிய நீர்த்துறை. நெடுஞ்செழியனின் படை கடம்பு சூடிப் போரிட்ட முருகனின் கூளியர் படை போல பகைநாட்டில் வேண்டிய அளவு உண்டது போக வீசி எறிந்திருக்கும் நிலம். படை கோடாரியால் வெட்டிச் சாய்த்த காட்டரண், படை எரி ஊட்டிய நகர்ப் பகுதிவற்றையெல்லாம் அந்த நாட்டு அரசர்கள் பார்த்து நாணி, நம்மால் நெருங்க முடியாத அந்தத் துணிவாளன் உலகம் நெளியக்கூடிய பெருபடையை நடத்தி இன்னும் வந்து இன்னது செய்வான் என நடுங்கும் நாட்டைக் கண்டு வந்தேன். ஆண்மான் புலிவாயில் பட்டதை எண்ணிப் பெண்மான் பூளாப் பூ நிறைந்த காட்டில் வேளைச் செடியின் வெள்ளைப் பூக்களைக் கறிக்கும் நாடாக இப்போது அவர்களின் நாடு உள்ளது.

இப்போர் நிகழ்ச்சி கி.பி பத்தாம் நூற்றாண்டில் வரையப்பட்ட சின்னமன்னூர் செப்பேட்டில்,

“தலையானங் கானத்திற் றன்னெக்கு
மிருவேந்தரைக் கொலைவாளிற் றலைதுமித்துக்
குறைத்தலையின் கூத்தொழித்தும்”

என்று சொல்லப்பட்டிருப்பதாக தி.வை. சதாசிவபண்டாரத்தார் விளம்புகிறார்.

**வேள் ஆய்**

கடையெழு வள்ளல்களுள் ஒருவனும் ஆகிய ஆய்வேள் என்பான் பொதியில் மலையைச் சார்ந்த வேணாட்டை ஆட்சிபுரிந்த குறுநிலமன்னன் என்பதைப் புறநானூற்றுப் பாடல் வரி மூலம் அறியமுடிகிறது.

“முன் உள்ளுவோனைப் பின் உள்ளினேனே!
…….தென் திசை ஆஅய் குடி இன்றாயின்,
பிறழ்வது மன்னோ, இம் மலர் தலை உலகே.”(புறம் -132)

வடதிசையில் உள்ள இமயமலையில் கவரிமான்கள் வாழும். அவை நரந்தம் புல்லை மேய்ந்த பின், குவளை பூத்திருக்கும் குளத்து நீரைப் பருகி, தகர மரத்து நிழலில் உறங்கும். தென்திசையில் ஆய்-குடும்பம் இல்லை எனின் இமயமலையின் எடைப்பெருமையால் உலகம் பிறண்டு விடும். இப்படிக் கூறுவது ஒருவகை மொழிநயம். வடதிசையில் உள்ள இமயமலையின் பெருமைக்கு ஈடாகத் திகழ்வது தென்திசையில் உள்ள ‘ஆய்’ மன்னின் குடிமரபு என்கிறது இந்தப் பாடல். இப்படிப்பட்ட ஆய் அரசனை முதலிலேயே பார்த்து என்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

நறுமையாப் போக்கிக்கொள்ளாமல் காலம் போன கடைசியில் பார்க்கிறேனே!அதனால் என் உள்ளம் மூழ்கி அழியட்டும். இப்போது பாடும் என் நாக்கு பிளந்துபோகட்டும். அவன் புகழைக் காலம் தாழ்ந்து கேட்கும் என் காது பாழ்ங்கிணறு போலத் தூர்ந்துபோகட்டும்.

பாண்டி நாட்டிற்குத் தென்மேற்கில் பேரியாற்றுக்கும் குமரி முனைக்கும் திருவாங்கூர் இராச்சியத்தின் தென்பகுதிக்கு முற்காலத்தில் வேணாடு என்ற பெயர் இருந்தது என்பது பல கல்வெட்டுக்களால் புலப்படுகின்றது. வேள் ஆயின் மரபினர் கி.பி ஏழாம் எட்டாம் நூற்றாண்டுகளிலும் அங்கு அரசாண்டனர் என்பதும் அன்னோர் கோச்சடைநன் பராந்தகன் என்ற பாண்டிய வேந்தர்களால் வென்று அடைக்கப்பட்டனர் என்பதும் வேள்விக்குடிச் செப்பேடுகளால் அறியப்படுகின்றது. இச்செய்திகளை,

“பொருதூருங் கடற்றனையை மருதூருள் மாண்பழித்து
ஆய்வேளை யகப்படவே யென்னாமை யெறிந்தழித்து”

எனவும்

“தீவார அயிலேந்தித் திளைத்தெதிரே வந்திறுத்த
ஆய்வேளையுங் குறும்பரையும் அடலமருள் அழித்தோட்டி”

எனவும் போதரும் வேள்விக்குடிச் செப்பேட்டுப் பகுதிகளால் உணரமுடிகிறது என்று தி.வை. சதாசிவபண்டாரத்தார் கூறுகிறார்.

**அதியமான் நெடுமானஞ்சி**

அதியமானிடம் பரிசில் வேண்டும் புலவர் தன் நெஞ்சுக்குத் தானே சொல்லிக்கொள்வது போன்று அதியமானுக்குத் தெரிவிக்கிறார்.

“ஒரு நாள் செல்லலம் இரு நாள் செல்லலம்
பல நாள் பயின்று, பலரொடு செல்லினும்,
தலை நாள் போன்ற விருப்பினன்மாதோ
…கையகத்தது அது பொய் ஆகாதே
அருந்த ஏமாந்த நெஞ்சம்!
வருந்த வேண்டா் வாழ்க, அவன் தாளே!” (புறம் -101)

ஒருநாள், இருநாள் அன்று. பலநாள் பலரோடு சென்று பரிசில் வேண்டினாலும் முதல் நாள் விருப்பத்துடன் வழங்கியது போலவே எல்லா நாளும் எல்லாருக்கும் விருப்பத்தோடு வழங்குவான்.

அவன் அணிகலன் பூண்ட யானைமேல் வரும் ‘அஞ்சி அதியமான்’. அவனிடம் பரிசில் பெறுவதற்குக் காலம் தாழ்ந்தாலும், தாழாவிட்டாலும் களிறு தன் தந்தங்களுக்கு இடையில் வைத்துக்கொண்ட சோற்றுக் கவளம் அதற்குப் பயன்படுவது போல அவன் பரிசில் நமக்கு உதவும். உண்ண ஏமாந்திருக்கும் நெஞ்சமே! வருந்த வேண்டா. அவன் தாள் வாழ்க என்று ஔவையார் மனமுருகிப் பாடுகிறார்.

வட ஆர்க்காடு கோட்டத் திருமலையில் காணப்படும் கல்வெட்டொன்று அதியமான் நெடுமான் அஞ்சியைக் குறிப்பிடுகின்றது. செய்யுள் வடிவத்தில் உள்ள அக்கல்வெட்டு,

‘வஞ்சியர் குலபதி யெழினி
வகுத்த வியக்க ரியக்கியரோ
டெஞ்சியவழிவு திருத்தி
யெண்குண விறைவனை மலைவைத்தான்
அஞ்சிதன் வழிவருமவன்முத
லிகதிகன வானநூல்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

விஞ்சையர் தகைமையர் காவலன்
விடுகாதழிகிய பெருமாளே'

என்று உள்ளதாக தி.வை. சதாசிவபண்டாரத்தார் கூறுகிறார். மேலும் இதில் கூறப்படும் விடுகாதழகிய பெருமாள் என்பவன் அதியமான் நெடுமானஞ்சியின் வழித்தோன்றல் என்பதும் கி.பி பதின்மூன்றாம் நூற்றாண்டிலிருந்த ஒரு குறுநில மன்னன் என்பதும் ஈண்டு உணரத்தக்கது.

**முடிவுரை**

பன்னெடுங்கால தமிழ்ச்சமுதாயத்தின் வரலாற்றின் ஆவணமாக விளங்குபவை சங்க இலக்கியங்கள் ஆகும். இவற்றைப் பற்றிய ஆய்வு இலக்கியத்தளத்தில் மட்டுமே ஆராயப்பட்ட நிலை மாறி அவற்றைக் கல்வெட்டு தொல்லியல் சான்றுகள், நாணவியல் ஆதாரங்கள், மொழியியல் சான்றுகள், இந்திய வரலாற்றியல் சான்றுகள் எனும் பல ஆதாரங்களின் அடிப்படையில் பரவலான தளத்தில் ஆராயும் சூழல் இன்று உருவாகியுள்ளது. இந்த ஆய்வு போக்குகள் பண்டைய தமிழ்ச் சமுதாயத்தின் வெளிப்படுத்தப்படாத பரிமாணங்களை வெளிக்கொணரவும் சங்க இலக்கியத்தின் பழமை வாய்ந்த காலத்தை நிர்ணயிக்கவும் பேரளவில் உதவுகின்றன என்பர். அந்த வகையில் புறநானூற்றில் கூறப்படும் மன்னர்களைப் பற்றிசெப்பேடு மற்றும் கல்வெட்டுச் செய்திகள் மூலம் ஆராயப்பட்டது.

**ஆய்வுக்கு பயன்பட்ட நூல்கள்**

1. தி.வை. சதாசிவபண்டாரத்தார், இலக்கிய ஆராய்ச்சிகளும் கல்வெட்டுகளும்.
2. பெ.அர்த்தநாரிஸ்வரன், கல்வெட்டு வழி பண்பாட்டியல்.
3. தலை சிறந்த பாண்டிய மன்னர்கள், அ.கி. பரந்தாமனார்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# ஆதிச்சநல்லூர் அகழ்வாய்வும் இரும்பின் பயன்பாடுகள்
# Iron Usage in Aathichanallur Antique Excavations

**முனைவர் மு.கல்பனா,** உதவிப் பேராசியர்,
தமிழ்த்துறை, அறிஞர் அண்ணா அரசு மகளிர் கலைக்கல்லுரி, வேலுர் மாவட்டம்.

## Abstract

*The article discloses about the use of iron in the antique excavations of Aathichanallur. The people belonged to the civilization are highly developed in the melting of iron ore and creating many objects out of it. They are mainly kitchen utensils and warfare weapons. These evidences show clearly that the Tamil people who lived in this area had contacts with the foreign traders from Greece and Rome. Hence the study extract the informations from the relics and documents for a clear disclosure.*

**Keywords:** Iron Usage, Aathichanallur, Antique Excavations

### முன்னுரை

உலகின் தொன்மையான பழங்கால ஆதாரங்கள் கிடைக்கும் தமிழகத்தின் தென்பகுதியை **"நாகரிகத்தின் தொட்டில்"** என்று கருதுவர். இந்தியாவிலேயே முதன் முதலாக ஆகழ்வாராய்ச்சி நடத்தபட்ட இடம் என்ற வரலாற்றுப் பெருமைக்குரிய இடம் ஆதிச்சநல்லூர் ஆகும். ஆதிச்சநல்லூரின் நாகரீகம் சுமேரியா நாகரீகத்துக்கு ஒப்பானது. ஆதிச்சநல்லூரின் நாகரீகம் கி.மு.8 முதல் கி.மு.10 ஆயிரம் ஆண்டுகள் பழைமை வாய்ந்தது. இங்குக் காணப்படும் பரம்பில் 3000 ஆண்டுகளுக்கு முன் இப்பகுதியில் மக்கள் வாழ்ந்ததற்கான அடையாளங்கள் காணப்படுகின்றன.

### இரும்பின் பயன்பாடு

இரும்பு மனிதனுக்குச் சேவை புரியத் தொடங்கியது வரலாற்றில் புரட்சிக்கரமான பாத்திரம் வகித்த கச்சாப் பொருட்களில் கடைசியில் வந்தில் அதிமுக்கியமானது இரும்பு வயல் விவசாயத்தை முன்னிலும் பெருமளவில் நடத்துவதையும் விரிந்த காட்டுப் பிரதேசங்களைச் சாகுபாடிக்காகத் தரிசாக்குவதையும் சாத்தியப்படுத்தியது. எந்தக் கல்லும் அப்போது அறிந்துள்ள எந்த உலோகமும் எதிர்நிற்க முடியாத அளவுக்குக் கடினமும் கூர்மையும் பெற்ற கருவிகளை அதுதொழில் செய்வோனுக்குத் தந்தது. அவையெல்லாம் படிப்படியாகத்தான் நடந்தன. கல்லாயுதங்கள் மெல்லமெல்ல மறைந்தன என்பார் எங்கல்ஸ் (எங்கல்ஸ் ப.202) இரும்பு என்னும் உலோகப் பொருளின் மூலம் பல உழைப்புக் கருவிகள் தோன்றின. இரும்பைக் கொண்டு கருவிகயைச் செய்பவர் கொல்லர் என அழைக்கப்பட்டனர். இதனைத் *தொல்காப்பியம்,*

"நெல்லும் செல்லும் கொல்லும் சொல்லும்
அல்லதுகிளப்பினும் வேற்றுமையியல" (தொல்.எழுத்து.புள்ளி - 371)

என்றவரிகள் குறிப்பிடுகின்றது. இதில் கொல் என்பது கொல்லத் தொழில் என உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

சமூகத்தில் ஒவ்வொருவரின் கடமைகளைவரையறுத்துக் கூறும் போது, "வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக்கடனே" (புறம் 312 : 3) என கொல்லனுக்கு உரிய கடமையைப் புறநானூறு கூறுகிறது. உலோகம் கொண்டு வேறு கருவிகளும் உருவாக்கப்பட்டன என்பதை

"கருங்கைக் கொல்லன் அரம்செய் அவ்வாய்
நெருங்கைநவியம் பாய்தலின் நிலைஅழிந்து
வீகமழ் நெடுஞ்சினைபுலம்ப,காவுதொறும்" (புறம் 36 : 6 - 8)

புறநானூற்றுப் பாடல் வழி அறியலாகின்றது. போர்கள் நிறைந்த அக்காலத்தில் வாளும்,வேலும் பல போர்க் கருவிகளும் செய்ய எண்ணற்ற கொல்லர்கள் இருந்துள்ளனர்.

**ஆதிச்சநல்லூரில் இரும்பின் பயன்பாடு**

2500 ஆண்டுகளுக்கு முன்பே மக்கள் நாகரீகத்துடன் வாழ்ந்து இருந்ததை உள்ளன. ஆலெக்சாண்டர் இரியா என்பவர் ஆதிச்சநல்லூரில் மேற்கொண்ட அகழ்வாய்வில் ஏராளமானபழம் பொருட்களைக் கண்டெடுத்தார். ஆதிச்சிநல்லூரில் கண்டெடுக்கப்பட்ட தாழிகளுக்கள் சிறியவாள்கள், கோடரிகள், கத்திகள் போன்ற இரும்புக் கருவிகள் போடப்பட்டுமேலே ஒரு தட்டுபோன்ற மூடியால் முடிப் புதைத்து வைக்கப்பட்டிருந்தன.

ஆதிச்சிநல்லூர் அகழ்வாராய்ச்சியின் போது கண்டெக்கப்பட்ட பொருட்களும். நகைகளும், பொட்டிகளும், பார்க்கருவிகளும், பாத்திரங்களும் சென்னை எழும்பூர் அரசு பொருட்காட்சிக் கூடத்தில் வைக்கப்பட்டடுள்ளது. ஆதிச்சிநல்லூரில் கிடைத்த வெண்கலம், இரும்பு, தங்கம் முதலியவற்றால் இம்மக்களின் உலோகத்தில் கிண்ணம், சட்டி, பானை, குடம், அகப்பை, குவளை, பூக்கிண்ணம் போன்றவற்றைப் பயன்படுத்தியதையும் அறியமுடிகின்றது. கி.மு.1200இல் தென்கிழக்கு ஆசியநாடுகள் மநற்றும் மேலைநாடுகளுக்கு இரும்பு ஏற்றுமதி செய்ததையும் ஆய்வாளர்கள் சுட்டிக் காட்டியுள்ளனர்.

**உலைக் களங்கள்**

தென்னிந்தியாவில் ஏராளமான இரும்புத்தாது கிடைக்கப் பெற்றதால், தென்னகத்தில் இரும்பின் பயன்பாடு அன்றைய காலகட்டத்தில் அதிகரித்து இருந்தது என குறிப்பிடலாம். சேரநாட்டிலிருந்து ரோமநாட்டிற்குப் பெருமளவில் இரும்புப் பொருட்கள் இறக்குமதி செய்ததை நேச்சுரல் ஹிஸ்டரிஎன்ற நூலில் பிளினி அவர்கள் குறிப்பிட்டுள்ளார். இரும்புத் தாதுவிலிருந்து இரும்பை உருக்கி எடுக்கும் உலைக்களங்கள் இரும்பை உருக்கிஎடுக்கும் உலைக்களங்கள் தமிழகத்தில் அதிகஅளவில் காணப்பட்டன.

கொல்லத் தொழில் புரிவோரின் உலைக் கூடத்தில் நெருப்பை தூண்டுவதற்கு உலை இருக்கும். இரும்பைக் காய்ச்சி அடிக்கும் கூடம், சூடான பொருளைப் பற்றி எடுப்பதற்குரிய கொடிறு (இடுக்கி), இரும்பை வைத்து அடித்தற்குரியபட்டடை, வெம்மையை ஆற்றுவதற்குரிய நீர்த்தொட்டி முதலியன அமைந்திருக்கும். காய்ச்சி அடித்த இரும்பினது வெம்மையை நீக்குவதற்கு நீர்த்தொட்டியிலிருந்து நீரைமடலால் எடுத்துத் தெளிப்பதை,

"இரும்புசெய் கொல்லன் வெல் உலைத்தெளித்த
தோய் மடற் சில் நீர்" (நற்,133: 9-10)

என்ற வரிகளின் மூலம் அறியலாகின்றது.

காய்ச்சிய இரும்பை அடிக்கும் போது சூட்டிரும்பிலிருந்தும், உலைநெருப்பிலிருந்தும், சிறுசிறு நெருப்புப் பிதிர்வுகள் தெறிப்பதை,

"கொல்லன்
ஏறிபொற் பிதிரின் சிறுபலகாஅய" (நற்,13: 5-6)
"கொல்லன்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

குருகு ஊது மிதிஉலைப் பிதிர்வின் பொங்கி" (அகம், 202 : 5-6)

ஆகிய பாடல் வரிகள் மூலம் அறியப்படுகிறது. மேலும் இவ்வகை உலைகள் மிதித்தும், ஊதியும் இயக்கப்பட்டன என்பதினை

"கொல்லன்
ஊது உலைக் குருகின் உள் உயிர்த்துஅகமும்" (நற்,125: 3-4)
"மிதிஉலைக் கொல்லன் முறிகொடிற்றுஅன்ன
கவைத்தாள் அலவன் அளற்று அளை சிதைய" (பெரும்பாண், 207-208)

என்றபாடல் வரிகள் எடுத்துக் காட்டுகின்றன

உலைக் களம் ஊரின் இடையே இருந்தது என்பதற்குச் சான்றாக உலைக் கூடத்தில் இருந்து இரும்பு அடிக்கும் ஓசையால் அச்சமடைந்த புறாக்கள் அருகில் உள்ள இல்லங்களின் மாடங்களில் சென்று தங்கின என்ற பெரும்பாணாற்றுப்படையின் கீழ்க்கண்டவரிகள் சான்றுப் பகர்கின்றது

"கருங்கைக் கொல்லன் இருப்புவிசைத்து எறிந்த,
கூடத் திண் இசைவெரீ இ மாடத்து
இறைஉறை புறவின் செங்காற் சேவல்,
இன்துயில் இரியும் பொன்துஞ்சுவியல் நகர்" (பெரும்பாண், 436-439)

**இரும்பு ஏற்றுமதி**

ஒப்பற்ற எஃகுப் பயன்பாட்டை வளர்த்ததலை சிறந்த நாகரிகம் பெற்றவர்கள் தமிழர்கள் என்பதை சங்க இலக்கியப் பாடல்கள் வழியாக நாம் அறியமுடிகின்றது. மேலும் இரும்பைக் கண்டறிந்தது மட்டுமின்றி ஏற்றுமதியும் செய்து வந்தனர் என்பதனை ஆதிச்சநல்லூர் அகழ்வாராய்ச்சி நமக்கு உணர்த்துகின்றது.

சுமேரியா, எகிப்து, கிரேக்கம் போன்ற நாடுகளுக்கு இரும்புப் பொருட்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன என்பதனை மு.இராகவன் அவர்கள் தன்னுடைய நூலில் குறிப்பிட்டுள்ளார். இவர்கள் இரும்புப் பொருட்களை ஏற்றுமதி செய்தது மட்டுமின்றி வெளிநாடுகளில் இவ்வாணிபத்தின் பொருட்டு குடியேறி வாழ்ந்தும் வந்தனர் என்பதனை பாலஸ்தீனம், சிரியா, இலங்கை, பிலப்பைன்ஸ் தீவு போன்ற நாடுகளில் இன்றும் கடைப்பிடிக்கப்பட்டு வரும் முருக வழிபாட்டின் மூலம் அறிய இயலுகின்றது இவ்வழிபாட்டுமுறை ஆதிச்சநல்லூரில் வாழ்ந்த மக்களால் பரப்பப்பட்டது என்பதை இதன் வாயில் நம்மால் உணரமுடிகின்றது.

**ஆதிச்சநல்லூரில் பயன்படுத்தப்பட்ட இரும்பு பொருட்கள்:**

ஆதிச்சநல்லூர் மக்களின் பண்பாடு இரும்புக்காலம் எனக் கருதப்பட்டாலும் பொன், செம்பு, வெண்கலம், ஈயம் போன்ற அனைத்து உலோகங்களையும் நேர்த்தியான முறையில் தொழில் நுட்பத்துடன் இம்மக்கள் பயன்படுத்தியுள்ளமை புலனாகின்றது. இம்மக்கள் கிணற்றின் மூலம் நீர் இறைத்து பாசனம் செய்யும் வழக்கத்தைக் கொண்டிருந்த செய்தியை இங்குக்கிடைத்த பாராளக் கரண்டி என்னும் பொருள் மூலம் அறியலாகின்றது.

ஆதிச்சநல்லூர் அகழ்வாய்வில் கண்டறிப்பட்ட பொருட்களும்,அவற்றின் பயன்பாடுகளும் உலக அளவில் தமிழரின் பெருமையைப் பறைசாற்றப் பெருந்துணைபுரிந்தன. கிண்ணம், பானை, சட்டி, குட்டாலபோணி, பானைமூடி, தாழி, குதிர், கலயம், மரவை, செம்பு, போனி, குண்டா, குண்டாசொம்பு, தம்ளர் மூக்குகிண்ணம், தாலம், பாலி, சுரைக்காய் லோட்டா, குடம், கூசா, தோண்டி, தவலை, சந்தனப்பேழை, அகல், குவளை, வாணலிகுதில், தோசைக்கல், பணியாரச் சட்டி, முக்களிச்சட்டி, வட்டில், பொங்கல் படிபானை, சோற்றுப் பானை, குழம்புசட்டி

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

போன்றவை இங்கு கண்டறியப்பட்ட அக்காலமக்கள் பயன்படுத்திய பொருட்கள் எனஅலெக்சாண்டர் இரியா கூறுவார்.

**ஆதிச்சநல்லூரில் கண்டெடுக்கப்பட்ட ஆயுதங்கள்**

எரிவேல், ஈட்டி, குத்துவாள், அம்பு, திரிசூலம், கூரியஅம்புத்தலை, கூர்மையானவாள், கைகோடாரி, வளைந்தகத்தி, கொக்கித்தடி, பலிவாள், வேலாயுதம், சூலாயுதம், கேடயம், உடைவாள், கத்தி, ஈட்டி போன்றவை இங்கே வாழ்ந்த மக்கள் பயன்படுத்திய ஆயதங்கள் ஆகும்.

**முடிவுரை**

ஆதிச்சநல்லூரில் சாகோர், அலெக்சாண்டர் போன்ற ஐரோப்பிய ஆய்வாளர்கள் மேற்கொண்ட ஆய்வின் காரணமாக தமிழர் பண்பாடு உலகறியப்பட்டது ஆதிச்சநல்லூர் அகழ்வாய்வின் மூலம் கண்டுபிடித்த பொருட்களும், வெளிக்கொணர்ந்த செய்திகளும், தமிழரின் பண்பாட்டுவளமைக்கும், வரலாற்றுத் தொன்மைக்கும் சான்றாக விளங்குகின்றன. இரும்புத் தொழிலில் பழந்தமிழர் பிற நாட்டினரோடு தொடர்பு கொண்டிருந்தமையும், பழந்தமிழகத்தில் பயன்படுத்தப்பட்ட, கொல்லர்கள் பற்றிய செய்தியும், இரும்பு கிடைத்த இடங்கள் ஆகியவற்றையும் தொல் பொருள் ஆராய்ச்சியின் வழியாக அறியமுடியும் என்பதை ஆதிச்சநல்லூரின் அகழ்வாய்வு நமக்கு உணர்த்துவது திண்ணம்.

**பார்வை நூல்கள்**

1. தமிழகவரலாறும் பண்பாடும் - கே.கே.பிள்ளை
2. தமிழகமொழி-இலக்கியவரலாறு சங்ககாலம் - டாக்டர்.மா.இராசமாணிக்கனார்
3. தொல்லியல் நோக்கில் சங்ககாலம் - முனைவர் கா. ராஜன்
4. தொல்காப்பியம் - எழுத்ததிகாரம் - கழகவெளியீடு
5. நற்றிணை, அகநானூறு, புறநானூறு, பெரும்பாணாற்றுப்படை - நியூ செஞ்சரி புக் ஹவுஸ் வெளியீடு
6. பண்டைய இந்தியா - டி.டி. கோசாம்பி
7. முப்பதுகல்வெட்டுக்கள் - வித்துவான் வை. சுந்தரேசவாண்டையா

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தமிழ் எழுத்தின் பழமையும் செவ்வியல் இலக்கியங்களும்
# The Antiqueness of Tamil Language and Classical Literatures

**முனைவர்.செ.கலாராணி,** உதவிப்பேராசிரியர் வரலாற்றுத்துறை,
நா.ம.ச.ச.வெள்ளைச்சாமி நாடார் கல்லூரி, நாகமலை, மதுரை – 19.

## Abstract

*The paper deals with the antiqueness of the Tamil language. It is considered the oldest language spoken in many parts of the world, scholars of linguistics like Noam Chomsky, Alex Collier and Clyde Winters are in the idea that the oldest language is the Tamil language. The Proto Language of all the Dravidian languages is the Tamil Language. The Bhrami Script and the Round inscriptions of Tamil languages prove that it is the oldest one. The classical literature of the Sangamn age is also very important to consider for the language's antiqueness. Therefore, the revise traces the antiqueness of Tamil language and literature.*

**Keywords:** Antiqueness, Tamil Language, Classical Literatures

தமிழ்மொழியும் அதன் இலக்கியங்களும் மிகப் பழமையானது என்பதற்கு அதன் 'தமிழி' எழுத்துத் தோன்றிய காலத்தை அறிதலே போதுமானது. தமிழகத்தில் பழனி அருகே உள்ள பொருந்தல் என்ற இடத்தில் நடந்த அகழாய்வின்போது கிடைத்த மட்பாண்டங்களில் இருந்த இருநெல் மாதிரிகள் அமெரிக்காவில் உள்ள பீட்டா ஆய்வு நிலையத்தில், அறிவியல் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டு, அவைகளின் காலம் கி.மு.490, கி.மு. 450 எனக் கணிக்கப்பட்டுள்ளது. இந்த இரண்டு நெல் மாதிரிகளுமே, பொருந்தல் அகழாய்வில் கிடைத்த, இரு வெவ்வேறு மட்பாண்டங்களிலிருந்து எடுக்கப்பட்டவைகளாகும். இந்த மட்பண்டங்களில் தமிழி எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளது. இதன் அகழாய்வு இயக்குநர் பாண்டிச்சேரிப் பல்கலைக்கழகப் பேராசிரியர், முனைவர் கா.இராசன் அவர்கள், இந்தக்காலக் கணிப்புகளின்படி, தமிழ் பிராமியின் (தமிழி) காலம் கி.மு. 5ஆம் நூற்றாண்டு என்கிறார்.

**கொற்கையில் தமிழி எழுத்துக்கள்**

1970ல் நடந்த கொற்கை அகழாய்வில் மௌரியர் காலத்து மட்பாண்டங்கள் கிடைத்தன. அத்துடன் தமிழி எழுத்துக்களைக் கொண்ட மட்பாண்டங்களும் கிடைத்தன. அவைகளின் காலம் கி.மு. 3ஆம் 2ஆம் நூற்றாண்டு என ஆய்வாளர் திரு ஆர். நாகசுவாமி அவர்கள் குறிப்பிட்டுள்ளார். அவருடைய அறிக்கை அத்துடன் அதன் அடியாழத்தில் அதாவது 2.69 மீட்டர் ஆழத்தில் 'கேஆர்கே-4' என்கிற குழியில் கரித்துண்டு மாதிரிகள் கிடைத்தன எனவும் அதனை கார்பன்-14 ஆய்வுக்கு உட்படுத்தி அதன் காலம் கி.மு. 850க்கும் 660க்கும் இடையே கி.மு. 755 என கண்டறியப் பட்டது எனவும் தெரிவிக்கிறது. மேலும் அதே குழியில் தமிழி எழுத்துப் பொறிப்புகளுடன் கூடிய மட்பாண்ட ஓடுகள் கிடைத்துள்ளன. ஆதலால் ஆய்வுக்கு அனுப்பப்பட்ட கரித்துண்டின் காலம்தான் இந்த எழுத்துப் பொறிப்பின் காலம்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

என்பதால், கொற்கை அகழாய்வின் அடியாழத்தில் கிடைத்த எழுத்துப் பொறிப்பின் காலம் கி.மு. 755, அதாவது கி.மு.8 ஆம் நூற்றாண்டு என ஆகிறது.

**ஆதிச்சநல்லூர்-தமிழி எழுத்து**

ஆதிச்சநல்லூரில் நடைபெற்ற அகழாய்வின் இயக்குநர் சத்தியமூர்த்தி அவர்கள், அங்கு கிடைத்தத் தமிழி எழுத்துப் பொறிப்பின் காலம், அறிவியல் ஆய்வின் படி, கி.மு.1500 முதல் கி.மு.500 வரை எனவும், குறைந்த பட்சம் கி.மு.500 க்கும் முற்பட்டதாக இருக்க வேண்டும் எனவும் கூறுகிறார்-(4). அதே ஆதிச்ச நல்லூரில் நடைபெற்ற அகழாய்விடல் கி.மு 800ஆம் ஆண்டு தமிழி எழுத்துப் பொறிப்பு கிடைத்ததாக 26.5.2004 இந்து நாளிதழ் தெரிவித்துள்ளது-(5). ஆகவே இந்த ஆதிச்சநல்லூர் தமிழி எழுத்துப் பொறிப்பின் காலத்தைக் குறைந்தபட்சம் கி.மு.800 எனக் கொள்ளலாம். ஆதிச்சநல்லூரில் முழுமையான ஆய்வுகள் இதுவரை மேற்கொள்ளப்படவில்லை. ஒரு விழுக்காட்டிற்கும் குறைவான ஆய்வுகளே அங்கு மேற்கொள்ளப்பட்டுள்ளது. ஆதிச்சநல்லூரில் முழுமையான ஆய்வுகள் மேற்கொள்ளப்படும் பொழுது தமிழி எழுத்துப் பொறிப்புகளின் காலம் கி.மு. 800 அல்லது அதற்கும் முன் கொண்டு செல்லப்படும் என்பது உறுதி.

**நடன காசிநாதன்**

பொருந்தல் அகழாய்வு, ஆதிச்சநல்லூர் அகழாய்வு போன்ற ஆய்வுகளுக்கு முன்னரே தமிழி எழுத்துக்கள் அசோகன் பிராமிக்கு முற்பட்டது எனப் பல ஆய்வாளர்கள் குறிப்பிட்டுள்ளனர். "தமிழ்பிராமி பற்றி அண்மைக்காலம்வரை வெளிவந்துள்ள பல்வேறு ஆய்வுக்கருத்துக்களை ஒப்பிட்டு ஆராய்ந்து, தமிழ்பிராமிக் கல்வெட்டுக்கள் தமிழுக்கே உரியவை என்றும் இவ்வெழுத்து அசோகன் பிராமியிலிருந்து கடனாகப் பெறப்பட்டது அல்ல என்றும், இது கி.மு. 6ஆம், 5ஆம் நூற்றாண்டுகளுக்கு உரியது என்றும் 2004ஆம் ஆண்டிலேயே முன்னாள் அகழாய்வு இயக்குநர் நடன காசிநாதன் அவர்கள் தெரிவித்துள்ளார்-.

**டாக்டர் கிப்ட் சிரோமணி**

டாக்டர் கிப்ட் சிரோமணி அவர்கள் 1983 வாக்கிலேயே தமிழி எழுத்து அசோகன் எழுத்துக்கு முந்தையதாக இருக்க வேண்டும் என்கிற கருத்தை வெளியிட்டுள்ளார். ஐராவதம் மகாதேவன் அவர்கள் தமிழி(தமிழ் பிராமி) எழுத்தை மூன்று நிலைகளாகப் பிரித்துள்ளார் எனவும் பட்டிப்பொருளு என்பது இன்னொரு வகை எனவும் இந்த நான்கும் இல்லாத வேறொரு வகைதான் அசோகன்பிராமி எனவும் அவர் குறிப்பிடுகிறார். அசோகன் பிராமியில் ஒரேநிலைதான் இருக்கிறது எனவும், தமிழியில் பலநிலைகள் இருக்கிறது எனவும் ஆதலால் தமிழி எழுத்து தான் முதலில் தோன்றியிருக்க வேண்டும் எனவும் முதல்நிலை தமிழி எழுத்து அசோகன் பிராமிக்கு முற்பட்டது எனவும் அவர் குறிப்பிட்டுள்ளார். ஒன்று புதிதாகத் தோன்றுகிற போது பல நிலைகளை கடந்த பின்னரே புதியதாக உருவாகும். தமிழி தமிழகத்தில் தோன்றியதால்தான் இங்கு தமிழியில் பல நிலை எழுத்து வகைகள் இருக்கின்றன. அசோகன் பிராமி புதியதாகத் தோன்றியதல்ல. அது மற்றதைப் பார்த்து உருவாக்கப்பட்டது என்பதால் அங்கு பல நிலைகள் இல்லை என்பதே டாக்டர் கிப்ட் சிரோமணி அவர்களின் அடிப்படை வாதமாகும். இந்தக் கருத்து ஏற்றுக்கொள்ளக் கூடியதும் சரியானதுமாகும்.

சம்பை கல்வெட்டில் உள்ள 'சதியபுதோ' என்கிற சொல்லில் உள்ள எழுத்துகளும் அசோகன் கல்வெட்டில் உள்ள 'சதியபுதோ' என்கிற சொல்லில் உள்ள எழுத்துகளும் எந்தவித வேறுபாடும் இன்றி ஒரே மாதிரி உள்ளன என்கிறார் அவர். ஆதலால் சேரன் செங்குட்டுவன், அதியமான் போன்றவர்கள் அசோகனின் சமகாலத்தவர்களா அல்லது

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

400வருடங்களுக்குப் பிறகு வந்தவர்களா என்கிற அடிப்படையான கேள்வியை 1983 வாக்கிலேயே டாக்டர் கிப்ட் சிரோமணி அவர்கள் எழுப்பியுள்ளார். சேரன் செங்குட்டுவன், அதியமான் போன்றவர்களின் காலம் கி.பி. 2ஆம் நூற்றாண்டு என தற்போதைய வரலாற்று மாணவன் கருதுகிறான். அது உண்மையானால் சம்பை கல்வெட்டின் காலம் கி.பி. 2ஆம் நூற்றாண்டு என ஆகிறது. ஆனால் கி.பி. 2ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த புகழ்பெற்ற சாதவ கன்ன அரசன் சதகர்ணியின் நாணயங்களில் உள்ள தமிழி எழுத்துகளுக்கும் சம்பை கல்வெட்டு எழுத்துகளுக்கும் இடையே மிகப்பெரிய வேறுபாடு இருக்கிறது.

தற்பொழுது தமிழி எழுத்தின் அடிப்படையில் தரப்படும் காலத்திற்கு வலிமையான அடிப்படை எதுவும் இல்லை. ஆதலால் மாங்குளம், சம்பை ஆகிய கல்வெட்டுகளிலுள்ள தமிழி எழுத்தின் அடிப்படையில் பாண்டியன் நெடுஞ்செழியன், அதியமான் ஆகியவர்களுக்கு தற்போது தரப்பட்டிருக்கும் காலத்தை மறு பரிசீலனை செய்யவேண்டும் என்கிறார் அவர். அவருடைய கருத்துப்படி அசோகனும், அதியமானும், சேரன் செங்குட்டுவனும் சம காலத்தவர்கள். தற்போது அவர்களிடையே இருக்கும் 400 ஆண்டுகள் இடைவெளி நீக்கப்படவேண்டும் என 1983 லேயே அவர் வேண்டுகோள் விடுத்துள்ளார்-(8). நமது ஆய்வு அதனைத்தான் செய்துள்ளது. அதியமானும் சேரன் செங்குட்டுவனும் நமது கணிப்புப்படி கி.மு. 3ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள், அதாவது அசோகன் காலத்தைச் சேர்ந்தவர்கள்.

தொல்லியல், கல்வெட்டியல், நாணயவியல், மொழியியல் போன்ற பல்வேறு சான்றுகளின் அடிப்படையில் தமிழி எழுத்து அசோகன் பிராமிக்கு முற்பட்டது என்பது உறுதி செய்யப்பட்டுள்ளது. அசோகன் பிராமிக்கு சுமார் 500 ஆண்டுகள் முந்தைய தமிழி எழுத்தை அசோகன் பிராமியில் இருந்து உருவானது என இன்றும் சில அறிஞர்கள் சொல்லி வருகின்றனர். இது குறித்து "தமிழகத்தில் சுமார் 500 ஆண்டுகளுக்கும் மேலாக வழக்கில் இருந்த ஒரு வரிவடிவம் அசோகர் காலத்திற்குப் பின்பு, சமணர்களால் அல்லது சமண வணிகர்களால் தமிழகத்தில் புகுத்தப்பட்டது போன்ற கருதுகோள்களை உரசிப்பார்க்க வேண்டியதுள்ளது" என்கிறார் முனைவர் கா. இராசன்-(9)

**சங்கச் செவ்வியல் இலக்கியம்**

சங்ககாலச் செவ்விலக்கியம் கி.மு 6ஆம் நூற்றாண்டு முதல் கி.மு. முதல் நூற்றாண்டு வரை (கி.மு. 550-50) படைக்கப்பட்டு வந்துள்ளது எனத் தற்போதைய நமது கணிப்பு வெளிப்படுத்துகிறது. இந்த சங்ககாலச் செவ்விலக்கிய படைப்பாக்க காலத்திற்கு இரண்டு மூன்று நூற்றாண்டுகளுக்கு முற்பட்டதாகத் தமிழி எழுத்தின் தொடக்க காலம் இருந்திருக்கவேண்டும். அதன் அடிப்படையில் தமிழி எழுத்தின் தொடக்ககாலத்தை கி.மு 8ஆம் நூற்றாண்டு எனக் கணிக்கலாம். பொருந்தல் அகழாய்வு, கொற்கை அகழாய்வு, ஆதிச்சநல்லூர் அகழாய்வு ஆகிய மூன்று அகழாய்வு இடங்களிலும் கிடைத்த தமிழி எழுத்துப் பொறிப்புகளின் காலம் அறிவியல் ஆய்வு முடிவுகளின்படி கி.மு. 8ஆம் நூற்றாண்டு எனக் கண்டறியப்பட்டுள்ளது.

**குறியீடுகள்**

தமிழகத்தின் புதிய கற்கால கட்டத்திலும் அதற்குப் பிந்தைய முதுமக்கள் தாழி மற்றும் பெருங்கற்படை காலகட்டத்திலும் உருவான ஓவிய வரைவுகளில், மட்பாண்டங்களில், காசுகளில், அணிகளில், முத்திரைகளில், கல்வெட்டுகளில் இறுதியாகத் தமிழ் எழுத்துகள் இடையேயும் கூட 'குறியீடுகள்' இடம்பெற்றுள்ளன. தமிழகக் குறியீடுகளில் பல, பண்டைக்கால சுமேரிய, எகிப்திய, சீன, கிரேக்க, யப்பான் நாட்டுக் குறியீடுகளோடும், முக்கியமாகச் சிந்து வெளிக் குறியீடுகளோடும் ஒப்புமை உடையனவாக உள்ளன.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**குறியீடுகள்-எழுத்து வரி வடிவம்**

அகழாய்வுகளின், கீழ் அடுக்கில் உள்ள மட்பாண்டங்களில், அதிக அளவு குறியீடுகளும், குறைந்த அளவு தமிழி எழுத்துக்களும் உள்ளன. அதே சமயம் மேல் அடுக்குகளில் உள்ள மட்பாண்டங்களில், அதிக அளவு தமிழி எழுத்துகளும் குறைந்த அளவு குறியீடுகளும் உள்ளன. அதாவது அகழாய்வுகளில் தமிழி எழுத்துகள் கிடைக்கத் தொடங்கியவுடன் குறியீடுகளின் எண்ணிக்கை குறையத் தொடங்குகிறது எனலாம். இதன் காரணமாகவும், தமிழி எழுத்துகள் இடையே இக்குறியீடுகள் இடம்பெறும் தன்மை காரணமாகவும், தமிழி எழுத்து பயன்பாட்டுக்கு வருவதற்கு முன்பு, கருத்துப் பரிமாற்றத்திற்கான வரி வடிவமாக, தமிழர்களால் இக்குறியீடுகள் பயன்படுத்தப்பட்டன எனலாம். “தமிழகத்தில் அகழாய்வு செய்யப்பட்ட அனைத்து இடங்களிலும் இக்குறியீடுகள் கிடைப்பதாலும், தமிழ் வரிவடிவங்களைப் போன்றே இவையும் இடமிருந்து வலமாக எழுதப்பட்டுள்ளதாலும், தமிழ் பிராமி (தமிழி) வரி வடிவம் வழக்கில் வந்தவுடன் இக்குறியீடுகளின் பயன்பாடு குறைந்து வருவதாலும், பானை ஓடுகள், நாணயங்கள், கல்வெட்டுகள் மற்றும் மோதிரங்கள் என எண்ணற்ற ஊடகங்களின் வாயிலாக இவை வெளிப்படுவதாலும், சங்க காலத்திற்கு முன்பிருந்தே அதாவது சிந்து சமவெளிப் பண்பாடு தொட்டு, சில வடிவ மாற்றங்களுடன் தொடர்ந்து இவை இருந்து வந்துள்ளதாலும், தமிழ் பிராமி (தமிழி) வரி வடிவம் தமிழகத்தில் பயன்பாட்டிற்கு வருவதற்கு முன்பாக இக்குறியீடுகள் சங்ககால மக்களின் எண்ணங்கள் அல்லது கருத்துப் பரிமாற்றத்திற்குப் பயன்படுத்தப்பட்ட ஒருவகை வரிவடிவமே என எடுத்துக் கொள்ள வேண்டியுள்ளது” என்கிறார் முனைவர் கா.இராசன் அவர்கள் தனது ‘பண்டையத் தமிழக வரைவுகளும் குறியீடுகளும்’ என்கிற நூலில் “குறியீடுகளின் எண்ணிக்கைகளும் பயன்பாடும் மிகுதியாக இருக்கும் காலத்தில் எழுத்துகளின் பொறிப்புக் குறைவாகவும், எழுத்துப் பொறிப்பு மிகுதியாகும் பொழுது குறியீடுகளின் பொறிப்புக் குறைந்தும் அமைகின்றன என்பது இந்த ஆய்வால் உறுதி செய்யப்படுகின்றது. இந்த ஆய்வு முடிவினைக் காணும் பொழுது குறியீடுகளை முதலில் ஒலி எழுத்துகளாகவோ, பொருள் வெளிப்பாட்டு வரைவுகளாகவோ அக்காலத்தில் பயன்படுத்தி வந்துள்ளனர் எனக் கருதலாம்“ என்கிறார் முனைவர் இராசு.பவுன்துரை அவர்கள்-(14)

**தமிழகமும் அகழாய்வும்**

சங்ககால நூலான பதிற்றுப்பத்துக் குறிப்பிடும் கொடுமணல் குறித்துப் பல தரவுகள் வெளிவந்துள்ளது. கொடுமணம் (கொடுமணல்) அகழாய்வில் இருநூற்றிற்கும் மேற்பட்ட எழுத்துப்பொறிப்புப் பெற்ற பானை ஓடுகளும், வெள்ளி முத்திரை நாணயங்களும், இரும்பு, எஃகு செய்வதற்கான உலைக்கலங்களும், இரும்பு ஆயுதங்களும், வைடூரியம், சூதுபவளம், பளிங்கு, நீலக்கல், பச்சைக்கல் போன்ற அரியமணிக்கற்களில் செய்யப்பட்ட ஏராளமான மணிகளும், குறியீடுகளும், நெய்யப்பட்ட துணியும், அவை நெய்வதற்கு பயன்படுத்தப்பட்ட தக்களிகளும் என ஏராளமானத் தரவுகள் வெளிக்கொணரப் பட்டுள்ளன. கொடுமணலில் உள்ள 70 ஏக்கர் பரப்பில் ஒரு ஏக்கருக்கும் குறைவான பகுதியில் மட்டுமே அகழாய்வு செய்யப்பட்டுள்ளது. அங்குள்ள நூற்றுக்கணக்கான பெருங்கற்படைச் சின்னங்களில் 13 மட்டுமே தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறையால் அகழ் ஆய்வுக்குட்படுத்தப்பட்டுள்ளது. அங்கு இதுவரை மேற்கொள்ளப்பட்ட மொத்த அகழாய்வின்அளவு என்பது ஒரு விழுக்காட்டிற்கும் குறைவானது.

ஒரு விழுக்காட்டு அகழாய்வில் மேலே குறிப்பிட்ட பல்வேறு வகையான தரவுகள் அதிக அளவில் கிடைக்கின்றன எனில் மீதமுள்ள 99 விழுக்காட்டுப் பகுதிகளை அகழாய்வு

**E-ISSN: 2581-7140**
**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

செய்யும்பொழுது மேலும் பன்மடங்கு செய்திகள் அல்லது தொல்பொருட்கள் வெளிவரும் என்பது உறுதி. சங்ககாலப் புலவர்களால் பெரிதும் பேசப்படாத சங்ககால ஊரான கொடுமணலில் மேற்கொள்ளப்பட்ட ஒரு விழுக்காடு அகழாய்வில் மட்டுமே இவ்வளவு தொல்பொருட்கள் கிடைக்கின்றன எனில் சங்க இலக்கியங்களில் வியந்து பேசப்படுகின்ற மதுரை, கொற்கை, பூம்புகார், முசிறி, கரூர், உறையூர் போன்ற இடங்களில் அகழாய்வு செய்யப்படும் பொழுது மிக அதிக அளவு தொல்பொருட்களும் தரவுகளும் வெளிவரும் என்பதை நினைக்கும் பொழுது அது பெருவியப்பைத் தோற்றுவிக்கிறது எனலாம்.

தமிழகத்தில் 10 மாவட்டங்களில் மேற்கொண்ட கள ஆய்வில் மட்டும் 2000க்கும் மேற்பட்ட சங்ககால எச்சங்கள் கொண்ட ஊர்கள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. தமிழகத்தில் மீதமுள்ள மாவட்டங்களில் கள ஆய்வு செய்யப்படும்பொழுது இந்த எண்ணிக்கை அதிகளவு பெருகும் எனவும், இந்த ஊர்கள் அனைத்தையும் முழுமையாக அகழாய்வு செய்யப்படும்பொழுது மட்டுமே சங்ககாலத் தமிழர்களின் பண்பாட்டை முழுமையாக அறியவும், அவர்கள் குறித்த ஒரு தெளிவான முடிவுக்கு வரவும் முடியும் என்கிறார் முனைவர் கா.இராசன்.

மனிதனின் கடந்த காலத்தைப்பற்றி எழுதப்பட்ட ஆவணங்களை அடிப்படையாகக் கொண்டு அமைவது வரலாறு. ஆனால் தொல்லியல் என்பது எழுதப்பட்ட ஆவணங்களின் தரவுகளை உறுதிப்படுத்தவும் நெறிப்படுத்தவும் பயன்படும் என்பதோடு, எழுதப்பட்ட வரலாற்றுக் காலத்தையும் தாண்டி, வரலாற்றிற்கு முந்தைய காலத்தைப் பற்றியும் இருப்பதை இருப்பது போலவே அறிவிப்பதாகும். இவை பற்றி கார்டன் சைல்டு(புழசனழெ ஊாடைனந) என்கிற அறிஞர், “புவியின் வரலாற்றில் எழுதப்பட்ட ஆவணங்களால் நிரப்பப்படும் வரலாற்றைவிட தொல்லியல் சான்றுகளால் நிரப்பப்படும் வரலாறு நூறு மடங்கு அதிகமாகும்” என்கிறார். இன்னொரு அறிஞரோ, “வரலாற்றில் ஒரு சதவிகிதத்தைபற்றி மட்டுமே எழுதப்பட்ட ஆவணங்களின் மூலம் அறிய இயலும். ஆனால் மீதமுள்ள தொன்னூற்று ஒன்பது சதவிகித வரலாற்றை அறிய தொல்லியல் மட்டுமே உதவுகிறது” என்கிறார்-(25). ஆகவே நமது குமரி நிலப்பரப்பு - மதிரை நகர்:

இறையனார் அகப்பொருள் உரையிலும், இலங்கையின் பாலி வரலாற்று நூலாகிய மகாவம்சத்திலும் மதுரை நகரம் குறித்த சில தகவல்கள் உள்ளன. அதன்படி பாண்டியருடைய ஆட்சிபீடமான மதிரை நகரம் கடலருகே இருந்ததாகவும், கடல்கோளால் அந்நகரம் அழிந்து போனதால், அதன்பின் கபாடபுரம் (பெருவாயில் உடைய நகரம்) என்ற சமற்கிருத பெயர் பெற்ற கடலருகே இருந்த இன்னொரு நகரத்திற்கு தங்கள் ஆட்சிபீடத்தை பாண்டியர்கள் மாற்றிக்கொண்டனர் எனவும் தகவல்கள் உள்ளன. சமற்கிருத நூல்களாகிய மகாபாரதமும், அர்த்த சாத்திரமும் இக்கபாடபுரம் குறித்த குறிப்புகளைக் கொண்டுள்ளன. இந்த இரண்டாவது நகரமும் கடல் கோளால் அழிந்துபோன பின், பாண்டியர்கள் உள்நாட்டில் வைகை நதியில் உள்ள மதிரை என்ற நகரத்தைத் தங்கள் தலைநகராக ஆக்கிக்கொண்டனர். மறைந்துபோன முதலாவது மதிரை நகரை அவர்கள் “தென்மதிரை” என அழைத்தனர். பாலி மரபுக் கதைகளில் இந்நகர் ‘தக்கிண மதுரம்’ எனப் பெயரிடப்பட்டுள்ளது-

**குமரி நிலம்**

வால்மீகி இராமாயணத்தில் பாண்டியர்களின் தலைநகர் கபாடபுரம் எனவும், வியாசரின் மகாபாரதத்தில் கபாடா எனவும் சொல்லப்பட்டுள்ளது. கி.பி. 6ஆம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்ட ஆகமங்கள் குமரி நிலப்பரப்பு குறித்து விரிவாகப் பேசுகின்றன. கிரான ஆகமம் ஞானபாதத்தில் எட்டாம் இயலில், 69-74 வரையிலுள்ள பாடல் அடிகளும், சுப்ரபேத

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

ஆகமம் ஞானபாதத்தில் மூன்றாம் இயலில் 125-135 வரையிலுள்ள பாடல் அடிகளும், மிருகேந்திர ஆகமம் ஞானபாதத்தில் பதிமூன்றாம் இயலில் 93-97 வரையிலுள்ள பாடல் அடிகளும் குமரி நிலப்பரப்பு குறித்துப் பேசுகின்றன. ஆனால் சந்திர ஞான ஆகமம் தனது 14ஆவது இயலில், 165-272 வரையிலுள்ள பாடல் அடிகளில் புவனத்துவ பாலா என்கிற தலைப்பில் குமரி நிலப்பரப்பு குறித்து விரிவாகப் பேசுகிறது. 28 முதன்மை ஆகமங்களில் சந்திர ஞான ஆகமம் 19ஆவது ஆகமம் ஆகும். அதன் 14ஆவது இயல் மொத்தம் 298 பாடல் அடிகளைக்கொண்டது ஆகும். அதில் 108 பாடல் அடிகள் குமரி நிலப்பரப்பு குறித்துப் பேசுகின்றன.

குமரி நிலம், குப்சா, கேதா, கார்வதா, பட்டணா என்கிற நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. குப்சா பகுதியின் தெற்கே குமரி ஆறும், வடக்கே பஃறுளி ஆறும் ஓடிக்கொண்டிருந்தன. தென்கிழக்கே குமரிக்கடலின் அலைகள் குமரி மலை அடிவாரத்தைத் தழுவிச் செல்லும் இடத்தில் தலைநகர் கபாடபுரம் அமைந்திருந்தது. அங்கே ஒரு துறைமுகமும் மறைவான போர்க்கருவிகள் வைக்கப்பட்டிருந்த நீர்க்கோட்டையும் இருந்தன. விண்ணைத்தொடும் குமரிமலையின் உச்சியில் சிகரக்கோட்டையும், பள்ளத்தாக்கில் துரோனிக்கோட்டையும், தெற்குச்சரிவில் கடகக் கோட்டையும் இருந்தன. கேதாப்பிரிவில், சப்த நாளிகா, சப்த தளா, சப்த கைரிகா, சப்த மதுரா, சப்த பூர்வசாலா, சப்த அபாரசாலா, சப்த பிரசித்திரா ஆகிய ஏழு நகரங்கள் இருந்தன. குப்சா பிரிவின் மேற்கில் கார்வதா பிரிவும், குமரி நிலப்பரப்பின் வடக்கில் பட்டணா பிரிவும் இருந்தன. கேதாப்பிரிவின் நடுவில் மேற்கு நோக்கிக் கந்தன் கோயிலும், கார்வதாப் பிரிவின் நடுவில் கிழக்கு நோக்கித் திருமால் கோயிலும் கட்டப்பட்டிருந்தது. இவை அனைத்தும் சந்திர ஞான ஆகமத்தில் சொல்லப்பட்ட தகவல்களாகும். இக்குமரி நிலத்தில் இருந்த நகர அமைப்புகள் குறித்தும் இந்த ஆகமம் விரிவாகப் பேசுகிறது.

சங்க இலக்கியத்தில் முதுகுடுமிப் பெருவழுதி குறித்துப்பாடிய நெட்டிமையார், நிலந்தரு திருவிற் பாண்டியன் என்கிற நெடியோன் குறித்தும் அவனது நாட்டில் இருந்த பஃறுளி ஆறு குறித்தும் பாடியுள்ளார்(புறம்-9). இந்தப் பாண்டியன் நெடியோன் குறித்து 2ஆம் பதிற்றுப்பத்தில் குமட்டூர் கண்ணனாரும், மதுரைக் காஞ்சியில் மாங்குடி மருதனாரும் பாடியுள்ளனர். சங்ககால ஆதார இலக்கிய நூல்களில் இவைகளைத்தவிர வேறு தரவுகள் இல்லை. பஃறுளி ஆறும், குமரி மலைத்தொடரும் கடலில் மூழ்கியது குறித்துச் சிலப்பதிகாரம் குறிப்பிட்டுள்ளது. சா. குருமூர்த்தி அவர்கள் நிலவியல் அறிவியலாளர்கள் கருத்துப்படி கி.மு. 9500, கி.மு. 3000, கி.மு. 1500 ஆகிய மூன்று காலகட்டங்களில் கடற்கோள் பேரழிவுகள் நடந்துள்ளன என்கிறார். இடோப்பா (ETOPO) செயற்கைக்கோள், குமரி நிலப்பரப்பானது தமிழகத்தின் தென் பகுதியில் கி.மு. 15000 வாக்கில் சுமார் 25000 ச.கி.மீ பரப்பும், கி.மு. 8000 வாக்கில் சுமார் 5000 ச.கி.மீ பரப்பும் கி.மு. 2000 வாக்கில் சுமார் 1000 ச.கி.மீ பரப்பும் கொண்டதாக இருந்துள்ளது எனக்காட்டுகிறது. ஆதலால் சா.குருமூர்த்தி அவர்களின் நிலவியல் அறிவியலாளர்கள் கருத்தையும், நவீன இடோப்பா செயற்கைக்கோள் கணக்கீட்டையும், இறையனார் அகப்பொருள் உரையையும் ஒருங்கிணைத்து, கி.மு. 3000 வாக்கில் தென்மதுரையும், அதன்பின் கி.மு. 1500 வாக்கில் கபாடபுரமும் கடற்கோள்களால் அழிந்து போயின எனக் கருதலாம் என்கிறார் முனைவர் இராமசாமி அவர்கள் (32).

இன்றைய தமிழகத்தின் பரப்பு 1,30,000 ச.கி.மீ, பண்டைய தமிழகத்தின் பரப்போ இதைவிட மூன்று மடங்கு அதிகம்(4,00,000 ச.கி.மீ). ஆனால் தென்மதுரை கடற்கோளால் அழியும்முன் கி.மு. 3000 வரை, 5000 ச.கி.மீ. பரப்பு குமரி நிலப்பரப்பாக இருந்துள்ளது. கி.மு.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

3000க்குப்பின் அது 1000 ச.கி.மீ. பரப்பாகக் குறைந்து போயுள்ளது. கிரீசு வாழ்ந்த வரலாறு என்கிற தனது நூலில், பண்டைய ஏதென்சு நகர அரசின் பரப்பளவு என்பது சுமார் 1000 ச,கி.மீ. தான் என்கிறார் வெ. சாமிநாத சர்மா அவர்கள். ஆதலால் கடல்கோள்களால் அழிந்துபோன பகுதி மிகச்சிறிய பரப்புதான் எனினும் அங்கு தென்மதுரை, கபாடபுரம் போன்ற தலைநகரங்களும், பிற முக்கிய நகரங்களும் இருந்து நாகரிக வளர்ச்சியும் அங்கு அதிகமாக இருந்ததால் அவைகளின் இழப்பு பெரிதுபடுத்தப் பட்டிருக்கவேண்டும். கடற்கோள்களால் பாண்டிய வேந்தன் தென்மதுரையில் இருந்து கபாடபுரத்திற்கும், கபாடபுரத்திலிருந்து மதுரைக்கும் தனது வேந்தர் ஆட்சியை மாற்றிகொண்டு வந்திருக்கவேண்டும். ஆனால் ஆரம்ப காலத்தில் இருந்தே மதுரை, கொற்கை முதலியன பிற பாண்டியக் கிளை அரசுகளால் ஆளப்பட்டு வந்திருக்க வேண்டும்.

தமிழ்ச் சமூகத்தின், தமிழ் மொழியின் பழமை குறித்து இறுதியாகச் சங்கப்பாடல்களில் இருந்து இரு சான்றினை வழங்க விரும்புகிறேன். கி.மு. 3ஆம் நூற்றாண்டு காலத்தைச் சேர்ந்த ஒல்லையூர் தந்தப் பூதப்பாண்டியன் ஒரு பாண்டியக் கிளை அரசன் ஆவான். அவன் தனது புறம் 71ஆம் பாடலில் தனது பாண்டியர்குடியை நீண்டகாலமாக இருந்துவரும் குடி என்று பாடுகிறான். அது போன்றே கி.மு. 2ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சங்ககாலச் சோழர்பகுதிப் புலவனான காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் என்பவர் தனது புறம் 58ஆம் பாடலில் சோழ, பாண்டிய வேந்தர்கள் ஒன்றாக இருந்த அவையில் பாண்டியர் குடியை "நல்லிசை முதுகுடி" எனப் பாடியுள்ளார்.

தமிழகத்தில் கிடைக்கும் தொல்லியல், கல்வெட்டியல், நாணயவியல், மொழியியல் தரவுகளின் அடிப்படையிலும், மண்ணடுக்கு ஆய்வின் அடிப்படையிலும், தமிழகத்தில் கிடைக்கின்ற பல்வேறு வகைப்பட்ட பண்பாட்டுக்கூறுகளின் தோற்றம், வளர்ச்சி, பரவல் ஆகியவற்றின் அடிப்படையிலும், குறியீடுகளின் அமைப்பு, எழுதும்முறை, எண்ணிக்கை, பரவல் ஆகியவற்றின் அடிப்படையிலும், தமிழகத்திற்கும் பிற பகுதிகளுக்கும் இடையே காணப்படுகின்ற பண்பாட்டு உறவுகளின் அடிப்படையிலும் தமிழகத்தில் கிடைக்கும் பழந்தமிழ் வரிவடிவங்களான தமிழ்பிராமிக் கல்வெட்டுகள் அசோகர் காலத்திற்கும் முற்பட்டவை என்பதில் எவ்வித ஐயப்பாடும் இல்லை என்கிறார் முனைவர் க.இராசன் அவர்கள்-(10). இக்குறியீடுகளின் வளர்ச்சி தந்த பங்களிப்பு தான், எழுத்துருவாக்கமும் மொழியாக்கமும் என்பதோடு, தமிழகப் பெருங்கற் காலத்து மட்பாண்டக் குறியீடுகள், தமிழி அல்லது பிராமி எழுத்துத் தோற்றத்தையும் அதன் வளர்ச்சிக் கூறுகளையும் அறிய உதவும் அடிப்படைச் சான்றுகளாகவும் உள்ளன என்கிறார் அவர். இறுதியாக "தமிழ் மொழியின் வளர்ச்சியில், குறியீடுகளின் பங்களிப்பு தனிச் சிறப்பிற்குரியதாகவும், எழுத்துச் சான்றுகளாக மாற்றம் பெறுவதற்கு முன்னர் வலுவான வரைவுடன் கூடிய தகவல் தொடர்புச் சாதனமாகவும், குறியீடுகள் திகழ்ந்தன எனக் கருதலாம்" என்கிறார் முனைவர் திரு. பவுன்துரை அவர்கள்-(15).

**மதிப்பீடு**

அகழாய்வுகளை அதிகப்படுத்தி, விரைவுபடுத்தி செயல்படுத்துவதன் மூலமும், வெளிக்கொண்டுவரப்படும் தரவுகளை முறையாக ஆவணப் படுத்துவதன் மூலமும் மட்டுமே நமது வரலாற்றை நன்கு அறிந்து கொள்ள இயலும். 99 விழுக்காட்டு வரலாற்றை அகழாய்வின் மூலம் மட்டுமே அறிய முடியும் என்பது தமிழகத்தின் வரலாற்றுக்கு மிகமிக பொருந்தும் எனலாம். 2000 வருடங்களுக்கு முந்தைய சங்க காலத்திலேயே பாண்டியர் குடி ஒரு முதுகுடியாக, ஒரு மிகப்பழமையான புகழ்பெற்ற குடியாகத் தமிழ் மக்களால் கருதப்பட்டு

**E-ISSN: 2581-7140**

**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

வந்துள்ளது. பாண்டியர்குடியின் பழமை என்பது தமிழ்ச் சமூகத்தின், தமிழ் மொழியின் பழமையைச் சுட்டிக்காட்டுகிறது.

**துணை நூல்கள்**


1. Porunthal Excavations prove existence of Indian scripts in 5th century BC : expert , News paper Dated 15.10.2011.
2. Palani excavation triggers fresh depate- the hindu news paper dated 29-8-2011.
3. முனைவர் கா. இராசன், 'தொல்லியல் நோக்கில் சங்ககாலம்' உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 2010, பக்: 55, 56.
4. முனைவர் இராசு பவுன்துரை அவர்கள், "பண்டையத்தமிழக வரைவுகளும் குறியீடுகளும்" உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 2004, பக்: 257.
5. இலங்கையில் தமிழர்-ஒரு முழுமையான வரலாறு(கி.மு. 300-கி.பி. 2000), கலாநிதி முருகர் குணசிங்கம், எம்.வி வெளியீடு, 2008, பக்: 34.
6. அஅழகப்பா பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் முனைவர் அ. இராமசாமி, தொன்மைத்தமிழர் நாகரிக வரலாறு, டிசம்பர் 2013, பக்: 61, 62.
7. இலங்கையில் தமிழர்-கா. இந்திரபாலா, குமரன் புத்தக இல்லம், அக்டோபர் 2006, பக்:120.
8. அழகப்பா பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் முனைவர் அ. இராமசாமி, தொன்மைத்தமிழர் நாகரிக வரலாறு, டிசம்பர் 2013, பக்:11-22.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# சங்க இலக்கியத்தில் காணலாகும் தொல்லியல் சான்றுகள்
# Archaeological Evidences as seen in Sangam Literature

**முனைவர் மு.கலைமாமணி,** உதவிப் பேராசிரியர்,
தமிழ்த்துறை, அரசினர் கலைக்கல்லூரி, திருவண்ணாமலை.

**Abstract**

*The paper traces the relical facts in Sangam Literature that show the well being of the Tamil Society. The Sangam poems are a notable resource and record that gives us many of the antique states of Tamil culture. The traditions followed by them are mainly recorded by the Sangam poets. Lots of evidences speak of the ritual followed by the people on those days. The salutation to the dead by erecting stones, urn burial and the transformation of burial into cremation are evidently discussed in the article. Hence, the paper will be a source to identify Tamil culture.*

**Keywords:** Archaeology, Evidence, Sangam Literature

பொதுவாகநோக்கின் வரலாற்றுண்மைகளை நிலை நாட்டுவதற்குப் பெரிதும் உறுதுணையாக இருப்பதில் சங்க இலக்கியங்கள் பெரும் பங்குவகிக்கின்றன. அதோடு வணிகவழியில், கிரேக்க யவனர்கள் எழுதி வைத்துச் சென்ற குறிப்புகளும் நமக்கு துணை நிற்கின்றன. சங்ககாலத்தைச் சேர்ந்த நாணயங்கள் சேகரிக்கப்பட்டு பதிவு செய்யப்பட்டு இன்று ஆவணங்களாக்கப்பட்டுள்ள நிலையில் அதன் கண்ணுள்ள சின்னங்கள் பல நல்ல வரலாற்றுச் செய்திகளை நமக்குத் தெரிவிக்கின்றன. அவற்றை ஆராய்வதால் எதிர்காலச் சூழலில் நம் வரலாற்று ஆவணங்களின் முக்கியத்துவத்தை அனைவரும் அறிந்துக் கொள்ளலாம். இதற்கான முயற்சிகள் தொடர்ந்து அகழாய்வுகள் மூலம் கண்டெடுக்கப்பட்டுவருகின்றன. இன்னும்,

> “தமிழகத்திலும் தமிழகத்துடன் தொடர்புடைய வேற்று நாடுகளிலும் மேலும் மேலும் அகழ்வாய்வுகள் செய்து ஈட்டும் பழம்பொருட்கள் மூலம் வரலாற்றுத் தகவல்கல்ளைப் பெறுக்க வேண்டும். இன்னும் தொல்பழங்கால கல்வெட்டுகளில் அசோகனின் பாறைக் கல்வெட்டுகளும், கலிங்கத்துக் கரவேலனின் ஹதிரும்பர் கல்வெட்டுகளும் பெரிதும் தமிழகத்திற்கான வரலாற்றை அறிய உதவும் சான்றுகளாக உள்ளன.”1

என்று குறிப்பிடும் தொல்லியலாராய்ச்சியாளர் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு, நம் வரலாற்றையும், வரலாற்றுச் செய்திகளையும், தொல்லியல் தகவல்களையும் சங்க இலக்கியத்தின் துணையுடன் கண்டறிந்து, அகழாய்வுகள் மூலம் மீட்டெடுக்க வேண்டியத் தேவை இருக்கிறது. இத்தேவைக்குச் சங்க இலக்கியத்தின் மீதான வரலாற்றியல் மற்றும் தொல்லியல் ஆய்வுகள் அவசியப்படுகின்றன. இதுவரை சங்க இலக்கியப் புறநூல்களான *புறநானூறு, பதிற்றுப்பத்து* போன்ற நூல்களையே பெரும்பாலானஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. ஆனால் அந்நூல்களை விடவும் அகம் சார்ந்த நூல்களில் தொல்லியல் கூறுகள் அதிகம் இருப்பதை, எடுத்தியம்பும் வகையிலும், சமகால அல்லது

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

அதற்கு முன் நிகழ்ந்த சடங்குசார் நிகழ்வுகளைப் புலவர்கள் இலக்கியங்களில் எவ்வாறான புரிதலில் பதிவுச் செய்துள்ளனர், அவை எவ்வாறான வரலாற்றினை அல்லது சமூகத்தை உள்வாங்கி நிகழ்கிறது என்பதைக் கண்டறியும் வகையிலும் இக்கட்டுரை அமைக்கப்படுகிறது.

**சங்க இலக்கியமும் தொல்லியல் செய்திகளும்**

சங்க இலக்கியத்தில் தொல்லியல் குறித்த ஆய்வுகள் 1872 இல் தொடங்கபட்டது. தொடக்கத்தில் தேசிய எழுச்சி, ஆரியர்-திராவிடர் பண்பாடு, திராவிடர் பண்பாடு முதலான கருத்தியல்களுக்கு இடையே பல மோதல்கள் ஏற்பட்டதன் காரணமாக, களஆய்வுகளும் அகழாய்வுகளும் மேற்கொள்ளப்பட்டன. அதன் கீழ் அகழாய்வு முடிவுகள் பல முக்கியக் கூறுகளை வெளிக் கொணர்ந்தன. அதற்குப் பிறகு நருவண் அரசின் தொல்லியல் அளவீட்டுத்துறை (ASI) அகழாய்வுப் பணிகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து, ஆதிச்சநல்லூரில் அகழாய்வை மேற்கொண்டது. இந்திய சுதந்திரத்திற்குப் பின்னர் தமிழகத்தின் தென்பகுதியில் முதுமக்கள் தாழிகளை வெளிக்கொண்டு வரமேற்கொள்ளப்பட்ட முதல் அகழாய்வுப் பணியாக இப்பணி அமைந்திருக்கிறது. இதைத் தொடர்ந்து பல்வேறு சமூகஅமைப்புகளும், தொல்லியல் துறை சார்பாகப் பல்வேறு அகழாய்வுப் பணிகளை மேற்கொண்டு வருகின்றன. அவ்வகையில்,

> ‘‘வைகையாற்றுக்குவடக்கேபெண்ணையாறு,பாலாறுஉள்ளிட்டநீர்பிடிப்புபகுதிகளில் அமைந்துள்ளஅப்புக்கல்,பையம்பள்ளி,மயிலாடுபாறைபோன்றஊர்களில் மேற்கொள்ளப்பட்டஅகழாய்வுகள் மூலம்,வடதமிழகம் புதியகற்காலப் பண்பாட்டிலிருந்துபெருங்கற்படைப் பண்பாட்டுக் காலத்திற்குமாறியதைத் தெரிவிப்பதாகஆய்வாளர்கள் தெரிவிக்கின்றனர்’’2

இதனால் தமிழகத்தில் பல்வேறு பட்ட உற்பத்திப் பெருக்கங்களும், பண்பாட்டுவளர்ச்சியும் தோன்றியுள்ளன. இதனடிப்படையிலேயே சங்க இலக்கியம் குறிப்பிடும் மன்னர், வேளிர், வேந்தர் உள்ளிட்ட அரசு உருவாக்க முறையும் தோன்றியுள்ளது. கி.மு. ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய இப்பண்பாட்டுச் சின்னங்களில் இறந்தவர்களின் எஞ்சிய எலும்புத் துண்டுகள் வைக்கப்பட்டுள்ளதை அறிய முடிகிறது. இதற்கு முன்பு வழக்கத்தில் இருந்த புதிய கற்காலப் பண்பாட்டில் மனிதனின் முழு எலும்புக் கூடும் கிடைத்திருப்பது குறிப்பிடத்தக்கது. பெருங் கற்காலப் பண்பாட்டிற்குப் பின்னர் வைதீக மரபின் தாக்கத்தால் எரியூட்டுதல் தமிழகத்தில் வழக்கத்திற்கு வந்தது. இவ்விடைப்பட்ட காலமான பெருங்கற்படைக் காலம் சிறப்புவாய்ந்த திராவிடர் பண்பாட்டிற்குரிய காலமாக விளங்குகிறது.

**தமிழகத்தில் பெருங்கற்படைச் சின்னங்கள் :**

தமிழக எல்லைக்குள் பெருங்கற்படைச் சின்னங்களும், முதுமக்கள் தாழிகளும், ஈமப்பேழைகளும் பலவாறு பரவிக்கிடப்பதும், ஒரே இடத்தில் ஆயிரக்கணக்கில் குவிந்து கிடப்பதும் தொல்குடிமக்கள் ஒரே இடத்தில் கூட்டமாக வாழ்ந்ததையும் மக்கிய நிலையில் அங்குகிடைத்த அரிசி, சோளம், கம்பு போன்ற தானிய வகைகள் அம்மக்கள் வாழ்விடத்திற்கு அருகில் மழை நீரால் உருவாக்கப்பட்ட குளம், ஆற்றுப்பாசனத்திற்கான ஏற்பாடுகள் இருந்ததையும் தெரிவிக்கின்றன. மேலும் அதிக எடைக் கொண்டதாக இருக்கும் இப்பெருங்கற்படைச் சின்னங்கள் ஒரு தனிமனிதரால் உருவாக்கப்பட்டிருக்க வாய்ப்பில்லை. ஒரு சமுதாயம் முழுமையாக இதில் தங்களை ஈடுபத்தியிருக்க வேண்டும், அச்சமுதாயமும் உயர்குடி சமுதாயமாக இருக்க வேண்டும் என்பது போன்றச் செய்திகள் அகழாய்வு முடிவுகளில் கிடைக்கின்றன. இதனை,

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

"இடுகஒன்றோசுடுகஒன்றோ
படுக வழிப்படுக" 3

பேரையில் மூறுவலார் என்னும் புலவரின் பாடல்வரிகள் குறிப்பிடுகின்றன. இதில் 'இடுக' என்பது இறந்தவர்களை ஓர் இடத்தில் இடுவதையும், 'சுடுக' என்பது எரியூட்டுதலையும், 'படுவழிப்படுக'என்பது இறந்தோரை நேரடியாக ஈமக்குழியில் வைப்பதையும் குறிக்கிறது. இம்மூன்று முறைகளும் வழக்கத்தில் இருந்தமைக்கான சான்றுகளை அகழாய்வு முடிவுகள் மெய்ப்பிக்கின்றன. இதனை,

"மா இருந் தாழிகவிப்ப
தா இன்றுகழிகஏற் கொள்ளாக் கூற்றே"4

என்றுநற்றிணையில் பரணர்,தாழிகள் மூடியால் மூடப்பட்டுள்ளதாகக் குறிப்பிடுகிறார்.

**அக இலக்கியச் சான்றுகள் :**

இந்திய அளவில் பெருங்கற்படை மற்றும் நடுகல் தொடர்பான செய்திகள் முதன் முதலில் சங்க இலக்கியங்களிலேயே காணக்கிடைக்கின்றன. சங்க இலக்கியத்தில் சுமார் 52 க்கும் மேற்பட்ட புலவர்கள் நடுகற்கள் குறித்தச் செய்திகளைத் தந்துள்ளனர். இவ்வாறு கிடைக்கும் நடுகற்களில் காணப்படும் வட்டெழுத்து வரிவடிவம் சங்ககாலத்திற்கு உரியதல்ல என்று அகழாய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர். அவர்கள்,

"சங்ககாலஊர்களானகொற்கை,மாங்குடி,உறையூர்,அரிக்கமேடு,கரூர்,கொடுமணல் உள்ளிட்ட இடங்களில் கண்டெடுக்கப்பட்ட அகழாய்வுகளில், கிடைத்த பானை ஓடுகளிலும், கற்குகைகளிலும் மன்னர்களின் காசுகளிலும் தமிழ்ப் பிராமி எழுத்துவரி வடிவம் இருந்ததைச் சுட்டிக் காட்டி சங்ககாலத்தில் தமிழகத்தில் தமிழ்ப் பிராமிவரி வடிவமே புழகத்திலிருந்ததாகக் குறிப்பிடுகின்றனர்"5

இதனால் சங்க இலக்கியங்களில் குறிப்பிடப் பெறும் நடுகல் சார்ந்த செய்திகள் பிற்காலத்திய நடுகற்களைச் சுட்டுவனவாக இருக்க இயலாத நிலையில், சங்க இலக்கியம் குறிப்பிடும் நடுகற்களின் குறிப்புகள், கி.மு.5-4ஆம் நூற்றாண்டிக் குரிய பெருங்கற்படைச் சின்னங்களின் உருமாற்றம் என்பதும் தெரிய வருகிறது. இதனால் சங்க இலக்கியம் பல நூற்றாண்டுகளுக்கு முன் தொகுப்பு மரபாக உருப்பெற்ற இலக்கியம் என்பதையும் அறியலாம்.

**சங்க இலக்கியத்தில் காணலாகும் குறிப்புகள்**

தென்னகத்திலே இரும்புக் காலத்திற்கு முன்னதாகக் காணப்படும் பெருங்கற்படைக் காலத்தில், மனிதர்களின் இறப்பைக ்குறித்து இறந்த வீரர்களுக்கு நிகழ்த்தப்படும் ஈமச் சடங்குகளாகப் பதுக்கைகள், நடுக்கற்கள், தாழிகள் போன்றவைகள் அமைக்கப்பட்டுள்ளன.

"இ∴தே இறந்தவர்களைப் புதைத்துஅவர்களைவழிபடுகின்றபழக்கமாகிப் பின்னர் பெருங்கற்படைச் சின்னங்களாக உருவாயின." 6

இக்காலக்கட்டம் கி.மு.1000 முதல் கி.பி.1000 வரை எனக் கருதப ்பெறுகிறது. இதனை, கி.மு.2 முதல் கி.பி.250 வரை என கே.கே.பிள்ளை குறிப்பிடுகிறார். (தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும்) இக்கருத்தில் ஆய்வாளர்களிடையேயுள்ள கருத்து வேறுபாடுகள் இருந்தாலும் அவர்கள் குறிப்பிடும் காலக்கட்டம் ஓரே காலப்போக்குடையவனவாக அமைந்திருக்கின்றன. இக்காலத்தில் வெளியான சங்க இலக்கியங்களிலும் இதற்கான சான்றுகள் பரவலாகக் காணகிடைக்கின்றன. அவையாவன்

"பதுக்கைத்துஆயசெதுக்கை நீழல்"7

"வில் இட வீழ்ந்தோர் பதுக்கை"8

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

"…………அம்பின் விசைஇடவீழ்ந்தோர்
எண்ணும் வரம்புஅறியாஉவல் இடு பதுக்கை"9
"ஆள் அழித்துஉயர்த்தஅஞ்சுவரு பதுக்கை"10
"படுகளத்துஉயர்த்தமயிர்த் தலைப்பதுக்கை"11
"… … …நட்டபோலும் நடாஅ நெடுங்கல்
அகம் இடம் குயின்றபல்பெயர் மண்ணி"12
"மருங்குல் நுணுகியபேஎம் முதிர்நடுதல்"13

என்றவாறு அகநானூற்றில் பதுக்கைகள் குறித்து ஐந்து (151, 156, 190, 215, 231) பாடல்களிலும் நடுகல் குறித்து இரண்டு (269, 297) பாடல்களிலும் இவ்விரண்டையும் குறித்தவாறு,

"சிலைஏறட்டகணைவீழ் வம்பலர்
உயர் பதுக்கு இவர்ந்தததர் கொடிஅதிரல்
நெடுநிலைநடுகல் நாட்பலிக் கூட்டும்
சுரனிடைவிலங்கியமரன் ஓங்கும் இயவின்"14

என்றமைந்த பாடல் ஒன்றும் குறிப்பிடுவதைக் காணலாம். இதில், பதுக்கைக் குறித்த வந்த வரிகள் அக்காலத்தில் பிணங்கள் மேல் கற்குவியல்களை அமைப்பதுப் பற்றிக் குறிப்பிடுகின்றன. போரில் அல்லது தொறு பூசலில் இறந்துப் பட்ட வீரர்களின் உடல்களைக் கற்களாலான பதுக்கையில் வைத்து, மேலே கற்குவியல்களால் மூடிவைக்கப்பட்ட செய்தி இங்கு விளக்கப்படுகிறது. அதே போல குன்றுகளுக்கு நடுவில் நடுகல் போல இயற்கையாகவே நிற்கும் ஒரு கல்லின் அகலமான பகுதியில் உயிர் துறந்த வீரனின் வடிவங்களைச் செதுக்கினர் என்று நடுகல் குறித்தச் செய்திகளையும் மேற்கண்ட பாடல்கள் விளக்குகின்றன. அதே போல,

"காதொறுபூசலில் ஈடுபட்டு இறந்த மறவர்களுக்கு நெடுநிலை நடுக்கலுடன் கூடிய கற்பதுக்கைகள் அம்மைக்கப்பட்டன" 15

என்ற தொல்லியலாளரின் கூற்றை மெய்ப்பிப்பதாக அகநானூற்றில் இடம்பெறும் 289 ஆவது பாடல் அமைந்திருக்கிறது.

**நிறைவுரை**

சங்க இலக்கியப் பாலைத் திணையின் தொழிலான திருடுதல் பொருட்டு (கவர்தல்) ஏற்பட்ட சண்டையில் இறந்துப்பட்ட வீரர்களுக்குப் பதுக்கை அமைத்த செய்தியும், தொறுபூசலில் மாடுபிடி சண்டையில் இறந்தவர்களுக்குப் பதுக்கை, நடுகல் அமைத்தச் செய்தியினையும் அதே போல பெருஞ்செல்வமாக விளங்கிய மாடுகளைக் கவர்ந்து செல்லுதல் அதனை மீட்டல் (வெட்சித்திணை, கறந்தைத் திணை) என்று போரில் இறந்துப்பட்ட வீரர்களுக்கு நடுகல் அமைத்த செய்தியும், சங்க இலக்கியங்களில் காணக்கிடைக்கின்றன. இம்மரபிலிருந்தே பிற்காலத்தில் "நாட்டார் தெய்வ வழிபாடு" தோன்றியது என்பதனை சூ.வித்தியாநந்தன் எழுதிய "தமிழர்சார்பு" என்னும் நூல் விரிவாகக் குறிப்பிடுகிறது. மேலும் இவ்வழிபாடு முறைநீத்தோர் வழிபாட்டுடன் தொடர்புடையதாக மாற்றப்பட்டதும் குறிப்பிடத்தக்கது. இதுபோல இன்னும் சங்க இலக்கியங்களில் நடுகல் இருக்கும் நிலம், நடுகல் நாட்டுதல், நடுகல்லில் அம்மைத்தீட்டுதல், செய்திபொறித்தல், வழிபாடு உள்ளிட்ட பல்வேறு செய்திகள் புறத்திணைப் பாடல்களிலும் சில அகத்திணைப் பாடல்களில் விவரிக்கிடக்கின்றன.

**E-ISSN: 2581-7140**

**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

**அடிக்குறிப்புகள்**

1. மா.கந்தசாமி., தமிழகத் தொன்மையும் சிறப்பும்.,ப.14
2. கா.ராஜன்., தொல்லியல் நோக்கில் சங்ககாலம்.,ப.21
3. புறம்., 239:20-21
4. நற்றிணை., 271:11-12
5. பாலமனோகரன்., தொல்லியல் ஆய்வும் ஆதிக்குடிகளும்., ப.56
6. கா.ராஜன்., தொல்லியல் நோக்கில் சங்ககாலம்.,ப.53
7. அகம்., 151:11
8. அகம்., 156:5
9. அகம்., 190:7-8
10. அகம்., 215:6
11. அகம்., 231:6
12. அகம்., 269:7-8
13. அகம்., 297:7
14. அகம்., 289:1-4
15. க.ராஜன்., தொல்லியல் நோக்கில் சங்ககாலம்., ப. 31

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தென்கொங்கு நாட்டின் பெருங்கற் சின்னங்கள்
# Megalithic Symbols in the South Kongu Region

**முனைவர் மு.கவிதா,** உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
அவினாசிலிங்கம் மனையியல் மற்றும் மகளிர் உயர்கல்வி நிறுவனம், கோயம்புத்தூர்-43.

## Abstract

*The article purports the facts of the archaeological sites related to the Megalithic symbols found in the South Kongu Region. The evidences show that the people had been using the developed utensils, ware objects and other forms of products. These are the things which are widely seen as remnants in all archaeological sites. Therefore, the study culls out the megalithic sumbols found in the south Kongu region.*

**Keywords:** Megalithic, Symbols, Southern, Kongu, Region

வரலாறு என்பது காலப்பெட்டகம். ஓவ்வொரு காலகட்டத்திலும் நிலவிய அரசியல், சமூக அமைப்புகளின் நிலையைச் சித்தரித்துக் காட்டும் செழும் பணியை வரலாறு செய்கிறது. ஒருநாட்டின் வான்புகழ், கோன் சிறப்பு, பன்பாட்டு வளம், நாகரிக மேம்பாடு அனைத்தையும் உலகிற்கு உணர்த்தும் ஒப்பற்ற சாதனம் வரலாறு ஆகும். கல்வெட்டுக்கள், செப்பேடுகள், நாணயங்கள், ஓலைச்சுவடிகள் போன்ற தொல்லியல் சான்றாதாரங்கள் நம் முன்னோர்களின் வரலாற்றினை அறிய வழிவகுக்கிறது. கோவை மாவட்டத்தின் பெரும்பகுதி பொள்ளாச்சி, பல்லடம், உடுமலைப்பேட்டை, தாராபுரம் வட்டத்தின் ஒரு பகுதி, திண்டுக்கல் மாவட்டத்தில் பழனி வட்டத்தின் மேற்குப் பகுதி, நொய்யலாற்றின் தெற்கே பெரும்பகுதி ஆகியவற்றை உள்ளடக்கிய பரப்பு தென் கொங்கு ஆகும். அத்தகு தென் கொங்கு நாட்டின் பெருங்கற்சின்னங்களை அய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**பெருங்கல் பண்பாடு**

தென் கொங்குப் பகுதியில் தொல்பழங்காலத்தின் இறுதிப் பகுதியான பெருங்கல் சின்னம் மிகுதியாக காணப்படுகின்றன. கல்பதுக்கைகள், கல்மாடங்கள், கல்அரண்கள், தாழிகள் என நான்கு வகையான சின்னங்கள் கிடைக்கின்றன. சின்னங்கள் ஐம்பதுக்கும் மேற்பட்ட ஊர்களில் மிகுந்த பரப்பளவில் கிடைக்கின்றன. அவற்றில் ஒரு சில சின்னங்கள் மட்டுமே அகழ்வு செய்யப்பட்டுள்ளன

கொங்கல் நகரம், நாட்டுக்கல் காளையம், ஆனைமலை, தானிக்கண்டி (கொடைக்கானல்) ஆகிய ஊர்களில் அகழாய்வு செய்யப்பட்டுள்ளது. இப்பகுதியில் கிடைக்கின்ற அகழ்வுச் சான்றிதழ் பெருங்கல் பன்பாட்டினையும், நம்பிக்கைகள், சடங்குகள் முன்னோர் வழிபாடு ஆகியவற்றையும் சுற்றி நிற்கின்றன. இங்கு கிடைக்கின்ற அழகுமணிகள் ரோமாபுரிக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. பெருங்கற்சின்னங்கள் இப்பகுதி மக்களின் பொருளியல் வாழ்க்கையை வலியுறுத்துகின்றன. பெருங்கற்சின்னங்கள் வைத்த மரபினர் கொங்கு சமவெளியிலும் மலைப்பகுதியிலும் வாழ்ந்தவர்கள். அம்மக்கள் இன்றுவரையிலும் இப்பகுதியில் வாழ்ந்து வருகின்றனர்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**ஆனைமலைக் குன்று ஓவியங்கள்**

ஆனைமலைக் குன்றுகளில் மாவடைப்பு என்ற பகுதியில் பெருங்கற்கால ஓவியங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. மாடங்களாக வைக்கப்பட்ட பலகைக் கற்களின் உட்பகுதியில் வெள்ளை வண்ணத்தில் ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. புலி போன்ற விலங்குகளோட சண்டையிடும் காட்சியும் வடிக்கப்பட்டுள்ளன. பெருங்கல் சின்னங்கள் வீரர்களுக்கும் வேளிர்களுக்கும் நினைவாக வைக்கப்பட்டவை. சில நேரங்களில் இந்தப் பெருங்கல் சின்னங்கற்குரிய வீரனுடைய உருவத்தை ஓவியமாக வரைந்து வழிபட்டனர். அகநானூறு 377ஆம் பாட்டில் மன்றத்தில் இருந்த மாடத்தில் ஓவியம் வரையப்பட்டு வழிபட்டதைக் குறிக்கின்றது. மலைப் பகுதிகளிலும், மலைக் குகைகளிலும் கல் மாடங்கள் அமைத்து ஓவியம் வரைந்துள்ளனர். இந்த ஓவியங்களுக்குரிய தெய்வங்களை அணங்கு என்று கூறி அத்தெய்வம் பற்றிய ஓவியங்களில் உள்ள மலை முகடுகளை அணங்குடை நெடுமொழி என்று சங்க இலக்கியம் கூறுகிறது

**தானிக்கண்டி பெருங்கற்சின்னம்**

தானிக்கண்டியில் அகழாய்வு செய்யப்பட்டுள்ளது. இங்குள்ள பெருங்கற் சின்னங்கள், தமிழக பெருங்கற்சின்னங்களில் இருந்து வேறுபட்டவை. 60க்கு 60 என்ற பரப்பளவில் பெருங்கல் சின்னங்கள் வைத்துள்ளன. பெருங்கல் சின்னங்களில் சிறுசிறு பானைகள், இரும்புக் கத்திகள், சங்கு வளையல்கள், பளிங்குக்கள் மணிகள், கார்னீயலிக் கல்மணிகள் ஆகியவை கண்டெடுக்கப்பட்டுள்ளன. சிறுதாழிகள் சில சின்னங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

தானிக்கண்டிப் பெருங்கல் சின்னங்களைப் பற்றி தொல்லியலாளர்கள் கூறுகின்ற கருத்து எடுத்துக்காட்டத்தக்கது. சங்க இலக்கியத்தில் கூறப்படும் தான்றிக்கோன் என்ற மன்னன் இவ்வூரில் இருந்து ஆட்சி செய்திருக்க வேண்டும். தான்றி என்பது ஒரு மரம் என்றும் இம்மரத்தின் பெயர் அடிப்படையாக தான்றி ஊர் பெயர் வந்திருக்கலாம் என்றும் இந்த ஊரில் இருந்து ஆட்சி செய்த மன்னன் மிளகு வணிகத்திலும் மணி வணிகத்திலும் மேம்பட்டிருந்தான் என்றும் கருதுகின்றனர். அதனால்தான் இவ்வூரில் சிறப்பான மணிகள் ஈமச்சின்னத்தில் வைத்துப்புதைத்தனர். இவற்றை பாடசால் நன்கலம் என்றும் ஈகை அறிய நன்கலம் என்றும் சங்க இலக்கியம் கூறுகிறது.

**தாமரைக்குளம் பெருங்கற்சின்னங்கள்**

தாமரைக்குளம் பழனிவட்டத்தில் உள்ளது. இவ்வூரில் ஐம்பது ஏக்கர் பரப்பில் பெருங்கற்கால வாழ்விடமும் பெருங்கற் சின்னங்களும் உள்ளன. இங்கு நடத்தப்பெற்ற மேற்பரப்பு ஆய்வில் அக்காலக் கல்மணிகள் எழுத்துப் பொறித்த பானை ஓடுகள், குறியீடுகள் குறித்த பானை ஓடுகள் ஆகியவை கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. இந்த வாழ்விடம் ஈரோடு மாவட்டத்தில் உள்ள கொடுமணலில் கண்டறியப்பட்ட வாழிவிடத்தைவிட பரப்பிலும் உயரத்திலும் பெருமைபெற்றது என்று தொல்லியலாளர்கள் கூறுகின்றனர்.

**குறியீடுகள்**

தென் கொங்கில் அகழ்வில் கிடைக்கும் ஓடுகளில் நிறைய குறியீடுகள் வரையப்பட்டிருப்பதை கண்டறிந்துள்ளனர். இப்பகுதியில் கிடைக்கும் கருப்பு, சிவப்பு பனையோடுகளை செங்காவிப் பனையோடுகள், கருப்புப் பனையோடுகள் ஆகியவற்றின் குறியீடுகள் வரையப்பட்டு தாழியின் கழுத்துப் பகுதியில் வரையப்பட்டுள்ளது. பேரூர், காலப்பட்டி, வீரபாண்டிபுதூர், வெள்ளலூர், செட்டிபாளையம், காடுகுட்டை, ஒற்றைக்கால்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

மண்டபம், நாட்டுக்கல் பாளையம், கொங்கல் நகரம், அமராவதி ஆகிய ஊர்களில் கிடைக்கின்ற பெருங்கற்பானைகளில் குறியீடுகள் வரையப்பட்டுள்ளன.

**கொடுமணல் அகழாய்வு**

குறியீடுகளின் தனித்தன்மையையும் அவை வெளிப்படுத்தும் பண்பாட்டுக் கூறுகளையும் கூர்ந்து உணர்ந்த தமிழ் பல்கலைக்கழக கல்வெட்டியல் துறையினர் வல்லம், கொடுமணல் அகழாய்வுகளில் கிடைத்த குறியீடுகளைப் பதிவு செய்துள்ளனர். குறியீடுகளை ஆய்விற்கு உட்படுத்தியவர்கள் அத்தரவுகளின் அடிப்படையில் சில முடிவுகளைத் தந்துள்ளனர். கொடுமணல் அகழாய்வில் அகழ்ந்த குழிகளில் குறியீடுகள் பொறித்த பானையோடுகள் தமிழ் - பிராமி எழுத்து பொறித்த பானையோடுகள் கிடைக்கத் தொடங்கிய பின்பு குறியீடுகள் பொறித்த பானையோடுகள் எண்ணிக்கையில் குறைந்து போய்விடுகின்றன என்பது கொடுமணல் அகழாய்வில் கண்டறியப்பட்ட செய்தியாகும்

**தொழில்கள்**

பெருங்கல் சின்னங்களை வைக்கின்ற மக்கள் குடித்தலைவர்களின் ஆட்சியின் கீழ் வாழ்ந்தனர். இம்மக்கள் அந்தந்தப் பகுதிகளில் கிடைத்த இயற்கை வளத்தைப் பயன்படுத்தி வேளாண்மை, கால்நடை வளர்ப்பு, கனிமவளத்தை தோண்டி எடுத்தல், கனிமங்களைக் கொண்டு அழகிய அணிகலன்களை செய்தல், செய்த அணிகலன்களை வணிக மையத்தில் விற்பனை செய்தல் ஆகிய தொழில்களைச் செய்தனர். இந்தத் தொழில்களில் காலத்தால் முற்பட்டவை கால்நடை வளர்ப்பும், வேளாண்மையும் ஆகும். கால்நடை வளர்பபு புதிய கற்காலத்தில் தொடங்கி பெருங்கற்காலத்தில் பரவலான செய்யப்பட்டது. சில பெருங்கற்சின்னங்களில் மாடு, குதிரை போன்றவற்றின் பலியிடப்பட்டு இருக்க வேண்டும் என்று கருத இடமுண்டு. நரசிபுரம் பெருங்கற்சின்னத்தில் சுடுமண்ணால் ஆன மாட்டு உருவம் ஒன்று கண்டெடுக்கப்பட்டது. இந்தப் பகுதியில் கால்நடை வளர்ப்புடன் புஞ்சை வேளாண்மையையும் செய்தனர். இந்த வேளாண்மையின் காரணமாக கரடு முரடான தரைப்பகுதியை கலப்பை கொண்டு உழுதனர். அங்ஙனம் உழுத போது உழுசாலில் மணிக் கற்களைக் கண்டெடுத்தனர். அந்த மணிக் கற்கள் கொங்கு நாட்டிற்கும் வட நாட்டிற்கும் இடையிலான வணிகத் தொடர்பு உருவாவதற்குக் காரணமாயிற்று.

**கல்திட்டைகள்**

கல்திட்டைகள் எனப்படுவன பெருங்கற்கால பண்பாட்டைச் சேர்ந்த இறந்தவர்களுக்கான நினைவுச் சின்னங்களில் ஒரு வகையாகும். இது பொதுவாக மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட செங்குத்தான கற்களையும் அகற்றினால் கிடைநிலையில் தாங்கப்படும் பெரிய தட்டையான கற்பலகை ஒன்றையும் கொண்டிருக்கும் இவை பொதுவாக பொந்து போன்ற அமைப்பை உருவாக்குவதற்காக மண்ணினால் அல்லது சிறிய கற்கலினால் மூடி அடைக்கப்பட்டிருப்பது உண்டு. ஆனாலும் பெரும்பாலான இடங்களில் பெரிய கற்களாலான அமைப்புகள் மட்டும் இருக்க அடைப்புகள் காலப்போக்கில் அழிந்து விட்டன.

பெருங்கற்கால நினைவுச்சின்னங்கள் உலகில் வெவ்வேறு பகுதிகளில் வெவ்வேறு காலகட்டங்களில் காணப்பட்டதினால் இப்பண்காட்டுச் சின்னமான கல்த்திட்டைகளின் காலம் நாட்டுக்கு நாடு வேறுபடுகின்றது.

தழிழகத்தில் பெருங்கற்காலப் பன்பாடு கி.மு.1000 தொடக்கம் கி.பி.200 வரையாகும் என மதிப்பிடப்படுகிறது. இது புதிய கற்பாலத்திற்கு பிற்பட்ட வளர்ச்சியாகும். இக்காலத்தில் தமிழ்நாட்டில் காலாயுதங்கள் பயன்படவில்லை. இப்பால மக்கள் இரும்பைப் பயன்படுத்த அறிந்திருந்தனர். தென் கொங்கு நாட்டில் வாழ்ந்த மக்கள் பலரும் இரும்பைப்

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

பயன்படுத்தியுள்ளனர். பொதுவாக பெருங்கற்கால பன்பாடு, கட்டிடங்கள் அமைப்பதற்கான தொழில் நுட்பத்தின் வளர்ச்சியில் முக்கியமானதொரு மைல்கல் எனலாம். மேற்கூறப்பட்ட செய்திகள் தென் கொங்கு தமிழர்களின் பண்பாடு, வாழ்க்கை முறை, அவர்களின் தொன்மையான வரலாறு போன்றவற்றை பெருங்கற்சின்னங்களின் வழி அறிய முடிகிறது.

**நூற்பட்டியல்**

1. புறநானூறு மூலமும் பழைய உரையும்
2. தொல்காப்பியம் தெளிவுரை
3. குறுந்தொகை மூலமும் உரையும் - உ.வே.சாமிநாதய்யர்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தொல்குடி தமிழர்களின் வழிபாடு
# Worship of the Classical Tamil People

**டாக்டர். க.கவிதாஸ்,** கௌரவ விரிவுரையாளர், வரலாற்றுத்துறை,
பச்சையப்பன் கல்லூரி, சென்னை – 600 030.

## Abstract

*The article focuses on the worship of the classical Tamil people. Worship is the most significant tradition followed by the Tamil people of the ancient times. They gave much importance to the patterns of prayer methods. The present paper studies on the evidences of prayer seen in the archaeological evidences.The tamil people did Nature worship, Ancestor worship, Murugan worship, Kottravai worship and other minor forms. Hence the study gives the worship related informations from the culverts.*

**Keywords:** Worship, Classical Tamil People, Culture

### முன்னுரை

நாடோடிகளாக வாழ்ந்த மனிதன் இயற்கையின் செயல்களை கண்டு அச்சம் கொண்டான். அப்போது இயற்கைகளை வழிபடத் தொடங்கினான். பின்னர் இனக்குழு வாழ்வில் அடியெடுத்து வைத்த போது இயற்கையில் தாம் புனிதமாக கருதிய மரம், விலங்கு, நிலம், நீர், காற்று, நெருப்பு மற்றும் வானம் போன்றவைகளை குழுக்களுக்குரிய தெய்வமாக கொண்டு வழிபட தொடங்கினான். மருதநில மக்கள் பயிரிடும் தொழிலுக்குத் துணையாக இந்திரனை தெய்வமாக வழிபட்டனர். நீரினை ஆதாரமாக கொண்டுள்ள பரதவர்கள் வருணனைத் தெய்வமாக பெற்றனர். குறிஞ்சிநில மக்கள் முருகனை வழிபடுத் தெய்வமாக கொண்டனர். இத்தகு வழிபாடுகளை, சடங்குமுறைகளையும் ஆராய்வதே இக்கட்டுரையின் முன்னுரையாகும்.

### வழிபாடு

வணங்குதல், பூஜை செய்தல், நெகிழ்வுறுதல் என்னும் பொருள்பட அழைக்கப்படுவது வழிபாடாகும். இயற்கை பொருட்களை கொண்டும், பாடல்களாலும் வழிபடுகின்றனர். அமைதி நெறியான வாழ்வு ஆகியவைகளை பெறும் நோக்குடன் இறைவழிபாடு செய்யப்படுகிறது. மனிதனின் அகநோய் நீக்கவும் புற நோய் தீர்க்கவும் வழிபாடு செய்யப்படுகிறது. இத்தகைய முறை பழந்தமிழர்கள் காலந்தொட்டே இருந்து வந்துள்ளன. இதனை,

“வழிவடுதெய்வமும் நிந்புறம் காப்பப்
பழுநீர் செல்வமொடு வழிவிச் சிறந்து பொலிமின்”[1] (தொல்.நூ.1369)

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது. வழிபாடு மூலமே வாழ்வு வளம் பெறும், வலிமை சேரும் என்று நம்பினர். கற்களிலும் மரங்ககளிலும் தெய்வம் உறைத்ததாக நம்பி அவற்றை வழிப்பட்டனர் என்பதை,

“…. யாம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமுல்ல நின்பால்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளினர்க் கடம்பின் ஒலிதாராயோ"[2] (பரி-5:78-81)

பரிபாடல் மூலம் அறிய முடிகிறது. சங்க இலக்கியகளில் இத்தகைய வழிபாட்டிற்கான சான்றுகள் பெருமளவில் கிடைக்கப் பெற்றுள்ளன.

**இயற்கை வழிபாடு**

அடைமழை பொழியும்போது ஏற்பட்ட பெரு வெள்ளம் மற்றும் உயர்ந்த மரங்களை சாய்ந்தன. மண்கரைகளை அரித்தன. புதிய பாதையில் காட்டாறாக ஓடிய மழை பெய்யுங் காலத்தில் காதை பிளக்கும் இடியும், கண்ணைப் பறிக்கும் வானிலிருந்து எரிந்து விழும் விண்கற்களும் பலமுறை நிகழ்ந்தன. இத்தகைய இயற்கை சீற்றங்களுக்கும் பலமுறை நிகழ்ந்தன. இத்தகைய இயற்கை சீற்றங்களுக்கு என்ன காரணம் என அறியாமல் மக்கள் அச்சம் கொண்டனர். இவைகள் போன்று உளவியல் மனவியல் செயல்களிலும் மருட்சியுடன் காணப்பட்டனர்.

தொன்மை மக்களின் இத்தகைய தன்மை நீண்டு கொண்டே சென்றது. "நீர் நிலைகள், குளங்கள், ஆறு போன்ற இடங்களில் நீராடிய பொழுது அவர்களது சொந்த நிழல் உருவம் தெரியவே அதனைக் கண்டு மருண்டனர். காரணங்கள் அறிவதிலிருந்து விடுபட முடியவில்லை. இத்தகைய சூழலில் இயற்கைகளை வழிபட தொடங்கினர்."[3] (பக்தவத்சல பாரதி, ப.மா,பக்.493-94) இயற்கைகளின் இத்தகைய நிலைபாடுகளை கண்டு அவற்றை வழிபடத் தொடங்கின. சங்க இலக்கியங்களில் தமிழர்கள் இயற்கை வழிபாடு நடத்தியதை அறியமுடிகிறது. சூரியன், சந்திரன், தீச்சுடர் என்ற மூன்று இயற்கை காரணிகளை வழிபட்டதனை.

"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலான மூன்றும்
கடவுள் வாழ்த்தோடு கண்ணிய வருமே"[4] (தொல்.புறத்.நூ.52)

என்று தொல்காப்பிய பாடல் திணை சுட்டிக் காட்டுகிறது. இதன் வளர்ச்சி நிலையாக சிலப்பதிகாரத்தில் ஞாயிறு, திங்கள், மழை போன்ற இயற்கை காரணிகளை இளங்கோவடிகள் காப்பியத்தின் மங்கல வாழ்த்துப் பாடலில் வைத்து சிறப்பித்துள்ளார்.

**முன்னோர் வழிபாடு**

இறந்தோரின் ஆற்றல் வாழ்வோரின் நலனில் பெரும் பங்கு வகிக்கிறது என்னும் கருத்தாக்கத்தால் ஏற்பட்டது முன்னோர் வழிபாடு. இவ்வழிபாட்டில் வேறுபல காரணங்களும் கூறப்பட்டுள்ளது. இவ்வுலக வாழ்வு இம்மை, மறுமை கொண்டது பல பிறப்புக்களைக் கொண்டது ஒரு பிறவியில் செய்த செயல்கள் மறுபிறவியல் அமையும் வாழ்விற்கு காரணமாகிறது. ஒருவர் பெற்றிருந்த ஆற்றல் இறந்த பின்னும் அவருடைய இனத்தவருடன் தொடர்பு பெறுகின்றது. இத்தகைய நம்பிக்கைகளே முன்னோர் வழிபாட்டிற்கு அடித்தளமாக அமைந்துள்ளது.

"இறந்த மூதாதையர்களின் ஆற்றலும் அனுபவமும் வாழ்வோரைச் செழுமைப்படுத்தும் என்றும், இறந்த உறவினரின் ஆசி என்றென்றும் வாழ்வோருக்கு கிடைக்க வேண்டும் என்று முன்னோர். வழிபாடுகளை பழந்தமிழர் முதல் கடைபிடித்து வருகின்றனர்."[5](பக்தவத்சல பாரதி பண்பாட்டு மானிடவியல், பக்-515-16) பழங்குடி சமுதாயங்களில் குல மூதாதையர் அக்குலத்தவர் அல்லது கால்வழியினர் அனைவராலும் வணங்கப்படுகிறார். இவை தொன்மை மூதாதையர் வழிபாடு, உண்மை மூதாதையர் வழிபாடு என்றும் அழைக்கப்படுகிறது.

நடுகல் வழிபாடு

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கல் நட்டு வைத்து வழிபாடு செய்வதனை நடுகல் வழிபாடு எனப்படுகிறது. சமுதாய சிறப்புமிக்க இயல்புகளை கொண்டிருந்தவர்களின் இறப்பிற்கு பின் இத்தகைய வழிபாடு செய்யப்படுகிறது. வீரத்தின் அடையாளமாக பழந்தமிழர்கள் இக்கல் வழிபாட்டை கடைபிடித்தனர். பிற்காலத்தில் நட்பு, மானம், புகழ் ஆகியவற்றிற்காக உயிர் விட்டவருக்கும் நடுகல் நடப்பட்டது. தொல்காப்பிய புறத்திணையியல்,

"காட்சி, கால்கோள் நீர்ப்படை நடுகல்
...சொல்லப்பட்ட எழு மூன்று துறைத்தே"[6] (தொல்.பொருள்.நூ.63)

என்ற நூற்பாவில் நடுகல் பற்றி தொல்காப்பியர் எடுத்துரைக்கிறார். போர்களத்தில் இறந்த வீரரை நடுகல்லில் தெய்வ உருவமாக ஆக்கும் பொருட்டு கல்லை காணுதல், கல்லை கொள்ளுதல், நீராட்டல், நடுகல்லாக நடுதல் பின்னர் கோயிலாக எழுப்பி சிறப்புச் செய்தல், நடப்பட்ட கல்லினை தெய்வமாக்கி வாழ்த்துதல் போன்ற வழிபாடுகளை தொல்குடி தமிழர்கள் மேற்கொண்டனர்.

"ஒரே நடுக்கல்லில் இரண்டு வீரர்களின் சிற்பங்கள், இறந்த வீரனுக்காக உடன்கட்டை ஏறிய இரண்டு மனைவிகளின் சதிக்கல் நின்ற சிலையில் நவகண்டம் கொடுக்கும் வீரனின் சிற்பம். அமர்ந்த நிலையில் நவகண்டம் கொடுக்கும் நடுகல், மேலும் குத்துவிளக்கு, கெண்டி சொர்க்கம் முதலானவை செதுக்கப்பட்டுள்ள நடுகல் மக்களின் வழிபாட்டு நம்பிக்கைகளை காட்டுகின்றது."[7] (சி.இளங்கோ. தொ.த.வ.ப.ஆ,பக்-62-68)

**கொற்றவை வழிபாடு**

தொல்காப்பியம் உள்ளிட்ட சங்க இலக்கியங்களில் கொற்றவை வழிபாடு பதிவு செய்யப்பட்டுள்ளது. இதன் வளர்ச்சி மற்றும் படிநிலைகளே பொன்னியம்மன், காளியம்மன், மாரியம்மன் போன்ற தெய்வங்களாக வழிபடலாயின. கொற்றவை என்பவள் வெற்றிக்கு உரியவளாகவும், வேட்டைக்கு செல்லும் பொழுது பாதுகாப்பிற்கு இருப்பவளாகவும் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. கொற்றவை வழிபாடு குறித்து தொல்காப்பியர்,

மறம் கடைக்கூட்டிய குடிநிலை சிறந்த
கொற்றவை நிலையும்..................

எனக் குறிப்பிடுகிறார். மேலும் கொற்றவை, வெற்றிக்கு உரிய தெய்வமாக வழிபட்டதனை நெடுநல்வாடையும் குறிப்பிட்டு சொல்கிறது. இதனை,

"இன்னா அரும்படா தீர் விறந்து
இன்னே முடிகதில் அம்ம"[8] (பட்டின-165)

எனும் பாடலடிகள் போருக்கு செல்லும் வீரர்கள் வெற்றியுடன் திரும்பிவர வேண்டும் என பெண்ணொருத்தி கொற்றவையை வழிப்பட்டதனை இதன்வழி அறியமுடிகிறது.

**தெய்வமுற்றாடுதல்**

வினோதமாக குரலெடுத்துப் பேசுதல் மெய்சிலிர்த்தல் கைகளை அசைத்துக் கால்களை பெயர்த்து வைத்து ஆடுதல் உள்ளிட்ட மெய்ப்பாடுகள் தெய்வமுற்றவளின் செயல்பாடுகளாக அமைகின்றன. அவ்வாறே அவள் கூற்றின் மூலம் வெளிப்படும் அறிவுறுத்தல்கள் எயினர்களின் ஒட்டுமொத்த சமூகத்திற்கு முக்கியத்துவமுடையதாக காணப்படும்.

"முள்ளிட்டுக் கட்டிய வேலியை உடைய ஊரிலுள்ள எயினர்கள் தாம் கொண்டு வந்த பொருள்களை பகிர்ந்து உண்பதற்கு இடமாக அமைந்த ஊர்மன்றத்தில், அம்மறவர் குடியில் பிறந்தவளும் கொற்றவைக்கு தாம் முன்பு நேர்ந்து கொண்ட கடனை செலுத்தி வந்த

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

முழங்குகின்ற வாயை உடையவளுமான சாலினி என்னும் தேவராட்டி தீடீரென்று தெய்வமுற்றாள்''[9] (முனைவர்.ஆ.தனஞ்செயன், த.இ.மா.ப-88)

''கலைமான் மிசை அமரும் கொற்றவை கொடுத்த வெற்றிக்கு விலையாகிய உயிர்பலியை நீவிர் அவளுக்கு கொடுக்கவில்லை எனில், விற்போர் செய்யும் போது உங்களுக்கு வெற்றியை கொடுக்கமாட்டாள். நீங்கள் கள்ளுண்டு களித்திருக்கும் வாழ்வை விரும்புகிறீர்களானால், களவு செய்து அதன் பயனை அனுபவிக்கும் பாலை நில மக்கள் நீவிர் அத்தெய்வத்திற்கு செலுத்த வேண்டிய பலியைச் செலுத்துங்கள்.'' [10] (வேட்டுவரி-12-19) எயினரின் சமூக நலனும் வளமும் கொற்றவையால் உறுதிப்படுத்தப்படுகிறது. இது கொற்றவை வழிபாடு என்ற சடங்கியல் நிகழ்வு காப்பியத்தில் காணப்படுகிறது.

**முருகவழிபாடு**

''குறிஞ்சிநில மக்களின் கடவுளாக இருந்த 'சேயோன்' சங்க காலத்தே நிலங்கடந்த பெருங்கடவுளாக அனைத்து நிலத்தினராலும் போற்றி வழங்கப்பட்டார். பரங்குன்றம் சென்றோர் முருகனையும் அவன் உறையும் மலையினையும், அவனுக்குரிய கடம்ப மரத்தையும் மற்றும் பிணிமுகம் என்னும் ஊர்தியையும் வழிபட்டனர். அன்பர்கள் எழுப்பிய நறும்புகை கதிர் மண்டிலத்தை மறைத்தது. யாழ், முழவு முதலிய துணையுடன் தெய்வப் பண்பாடி வேல்வழிபாட்டை மேற்கொண்டனர். இறைவழிபாட்டின் போது மணியடிக்கும் பழக்கமும் இருந்தது. வழிபாட்டிற்கு சந்தனம், நறும்புகை, நந்தா விளக்கு, மண்கள் முழவு, மணி, கயிறு, குடாரி குழை, பூவாடை, வேல் முதலியன கொண்டு மலை முருகனை வழிபட்டனர். இவ்வுலக இன்பம் வேண்டி வரங்கேட்டல் செவ்வேள் பாடல்களில் காணப்படுகின்றது''[11] (முனைவர்.ச.வ.சுப்பிரமணியன், பத்துப்பாட்டு, பக்-67,68)

முருகனின் பாதங்கள் செம்மையானவை சிவந்தவை, அச்சேவடியை அடையும் உள்ளத்தோடு செல்கிறவன் நல்ல செயல்களை செய்ய விரும்புகின்ற கொள்கையுடையவன். ஒரு இடத்திலிருந்து இன்னோரு இடத்திற்கு செல்லுவதற்குரிய விருப்பத்தினையுடையவன். நல்ல உள்ளத்தை உடையவன். நீ மனப்பூர்வமாக முருகனை அடைய விரும்பினால் இப்போதே அடையலாம் நீ நினைக்கின்ற செயலை செய்க என்று பாடினர் இதனை,

''சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்து உறையும்
செலவுநீ நயந்தனை ஆயின், பல உடன்
நன்னர் நெஞ்சத்து இன்னசை வாய்ப்ப
இன்னே பெறுதி, நீமுன்னிய வினையே''[12]

(முனைவர்.ச.வ.சுப்பிரமணியன், பத்துப்பாட்டு, பக்-67,68)

பன்னிரு படைகளைப் பன்னிருகைகளில் செவ்வேள் பெற்றிருப்பினும் வேற்படையே சிறந்த படையாக கொண்டிருக்கும் மலைமுருக வழிபாட்டை தொல்குடி தமிழர்கள் வழிபட்டனர் என்பது புலனாகிறது.

**முடிவுரை**

தொல் தமிழர்களின் வாழ்வும், சங்க இலக்கியமும் மானிடவியல் வாழ்வை நெறிப்படுத்துகின்றது. பலாயிரம் ஆண்டுகால தொண்மையான தொடர்ச்சியான நாகரிக பண்பாடுகளை தமிழர்கள் பெற்றிருந்தனர். அகம் புறம் என வாழ்வியலை ஆராயும், தொல்குடி மக்களின் வழிபாடுகளும் அதன் வளர்ச்சியும் பழந்தமிழர்கள் முதல், இக்காலம் வரை தலைத்தோங்கி விளங்குகிறது என்பதுவே இக்கட்டுரையின் முடிவுரையாகும்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**பார்வை நூல்கள்**


1. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், மெய்யப்பன் பதிப்பகம், புதுத்தெரு சிதம்பரம், 608 001, திருத்திய பதிப்பு பிப்ரவரி 2014.
2. சி.இளங்கோ, தொல் தமிழர் வரலாறும் பண்பாட்டு ஆய்வுகளும், அலைகள் வெளியீட்டகம், இராமாபுரம், சென்னை-89, முதற்பதிப்பு 2015.
3. முனைவர் ச.வே.சுப்பிரமணியன், பத்துப்பாட்டு, கோவிலூர், மடலாயம், காரைக்குடி.307, முதற்பதிப்பு அக்டோபர் 2003.
4. முனைவர் ஆ.தனஞ்செயன், தமிழ் இலக்கிய மானிடவியல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை-113, முதற்பதிப்பு 2014.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தொல்லியல் பார்வையில் மானிடவியல்
# Anthropology in the Light of Archaeology

**டாக்டர் க.கனகராஜீ,** கௌரவ விரிவுரையாளர், வரலாற்றுத்துறை,
பச்சையப்பன் கல்லூரி, சென்னை – 600 030

## Abstract

*The article focuses that archaeology ought to be done in the original idea to extract evidences regarding anthropology. Tamil people are a classic set of people who had an ancient history to tell. Many of the civilizations on Tamil Nadu and under water near to the land are full of antique tamil culture.The remnants reveal the anthropological origins of Tamil people. Moreover their tradition, and cultural rituals are extracted through authentic evidences. Hence the study extracts the informations from the documents.*

**Keywords:** Anthropology, Light of Archaeology, Tamil Culture

வரலாற்றுக்கு முற்பட்ட காலப்பண்பாடுகளின் பொருள் எச்சங்கள் பற்றிய அறிவியல் சார்ந்த அகழாய்வு, தொல்பொருள் ஆய்வு, தொன்மையான வாழ்வியல் ஆய்வு மையப் பொருண்மையாகிறது. தொல் தமிழர்களின் வாழ்வியல் முறைகள், பண்பாடு, கலாச்சாரம் போர் முறைகள் சடங்குகள் போன்றவைகளை இத்தகைய அகழாய்வு மூலம் அறிய முடிகிறது. ஓலைச்சுவடிகள், செப்பேடுகள், நாணயங்கள், சிற்பங்கள், ஆதிச்சநல்லூர், அரிக்கமேடு மற்றும் சங்ககால இலக்கியங்கள் மூலம் அறிய முடிகிறது. இவற்றை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**மானிடவியல்**

மனிதனை பண்பாட்டு நிலையிலும் உயிரியல் நிலையிலும் ஆராய வேண்டும். மானிடவியல் வளர்ச்சியில் மேலை நாட்டு தத்துவ கருத்துக்களும், வரலாற்று நிகழ்களும் அடித்தளமாய் அமைந்துள்ளன. மனிதனின் தோற்றம் தன்மை அவர்களுக்குள்ள வேறுபாடுகள் குறித்து பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் எழுப்பப்பட்ட வினாக்களே! இன்றைய மானிடவியலின் வளர்ச்சிக்கு முதன்மையாக அமைந்தன. "புத்தாய்வுக் காலத்திற்கு பின்னர் கல்விசார் நிலையில் இலண்டன் ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் மானிடவியல் துறை பேராசிரியராக சர் எட்வர்ட் பர்னட் டைலர் கி.பி.1884இல் பொறுப்பேற்றார். இதுவே கல்விசார் நிலையில் மானிடவியலாளர் பெற்ற முதல் பதவியாகும். பின்னரே இத்துறை உலகலாவிய வளர்ச்சியை பெற்றது."[1] (பக்தவச்சல பாரதி பண்பாட்டு மானிடவியல், ப.17)

வரலாற்றின் தந்தை, இனவரைவியலின் தந்தை என அழைக்கப்படும் ஹெரோடொட்டஸின் பங்களிப்பு முதன்மையானது. மக்கள் பயன்படுத்திய மொழிகள், உருவ வகைகள் பொருட்கள், திருமண முறைகள், மணவிலக்கு, சமுதாய சட்டமுறைகள், சமய வழிபாடு, போர் முறைகள், அரசாட்சி, நீதிமுறைகள் போன்ற கூறுகளை ஆய்வுசெய்து மானிடவியல் வரலாற்றிற்கு அடித்தளமிட்டவர்.

**E-ISSN: 2581-7140**

**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

**தொல்குடி வாழ்விடங்கள்**

சங்க இலக்கியத்தில் குடி என்ற சொல் குறிப்பிட்ட குருதி உறவு உள்ளவர்களை மொத்தமாக குறித்தனவாக உள்ளன. இவ்வழி உறவுமுறை அனைவரையும் இணைத்து நிற்கின்றது. குடியின் மூத்தோரால் குடிதெய்வ வழிபாட்டில் செய்யப்படும் சடங்குகளும், இளையோரைக் குடிவாழ்வில் ஏற்றுக் கொள்ளும் சடங்குகளும் சிறப்புடையதாகும்.

“தொல் தமிழர்கள் போர்வீரர்களாகவும் குதிரைகளை பயன்படுத்தியும் வந்திருந்தனர். இரும்பை உருக்கவும் வார்க்கவும், அதனை பயன்படுத்தி போர் கருவிகள் செய்யவும் கற்றிருந்தனர். முருகவழிபாடு, கொற்றவை வழிபாடுகளை கடைப்பிடித்தனர். இதற்கு அங்கு கிடைத்துள்ள சிறிய வேல் சான்றாக அமைகிறது. தாய்வழி சமூகமாக வாழ்ந்த இவர்கள் உறை கிணறு, செங்கற் சுவர்கள், கூரை ஓடுகள், மண்பாண்டங்கள், செம்புக் கருவிகள், இருப்பிலான வேல், தமிழ் எழுத்து பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் கிடைக்கப் பெற்றுள்ளன. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தொன்மையான பாட்டையும் கலாச்சாரத்தையும் பெற்றிருந்தனர் என்பதை அறிய முடிகிறது.”[2] (ர.பூங்குன்றன் தொல்குடி வேளிர் வேந்தர் ப.19)

குறும்பு, மிளை, அரண், அருப்பம், அருப்பு ஆகிய சொற்கள் சங்க இலக்கியத்தில் காவல்கோட்டை பாதுகாப்பிடம் போன்ற பொருள்களில் ஆளப்பெற்றுள்ளது. வேளிர், வேந்தர் எழுச்சிக்குப் பின்னர் அவர்கள் வாழ்விடத்தை பாதுகாக்கும் அமைப்புகளாக மாற்றமடைந்தன. குறும்பு தொல்குடிகள் உருவாக்கிய பாதுகாப்பிடம் என்பதற்கு பெரும்பாணாற்றுப் படையில் குறிப்புகள் காணப்படுகின்றன.

அரணம் துவக்கத்தில் தொல் குடிகளுக்குரிய காப்பிடமாக விளங்கியது. “கூடமாக கால்களை நட்டு கயிற்றை இழுத்துக் கட்டிய வட்டாரத்தில், வலிய வில்லை சேர ஊன்றி அவற்றில் அம்புத் துணிகளைத் தொங்கவிட்டு எறி கோள்களையும் நிறுத்தி கிடுகுகளையும் வேலியையும் நிலையாகக் குத்தி வைக்கப்பெற்று, விளங்கும் வில் படையாகிய அரணம் தலைவனுக்கு அரணாக விளங்கியது.”[3] (முல்லை 39.42) இப்பாடல் தொல்குடியினர் எவ்வளவு பாதுகப்பாகவும் விளங்கினர் என்பதற்கு எடுத்துக்காட்டாக அமைகிறது.

மதுரைக் காஞ்சியில் நெடுஞ்செழியன் கானங்களுக்கு இடையில் அமைந்திருந்த பகைவன் நாட்டு அருப்பங்களை அழித்தான் என்ற கூறப்பட்டுள்ளது.

“பனி வார் சிமையக் கானம் போகி
ஆக நாடு புக்கு, அவர் அருப்பம் வெளவி (மதுரைகாஞ்சி-148-49)

இவ்வாறாக தொல்குடிகள் கானவர், குறவர், ஆயர் தங்கள் தொழிலை செய்தமை பற்றிய குறிப்பும், அவர்களது வாழ்விடங்களின் சிறப்பும் மானிடவியல் வரலாற்றில் முன்னோடியாக விளங்குகிறது.”[4] (ரா.பூங்குன்றன்.தொ.வே.வே, பக். 20-21)

**நம்பிக்கை சடங்குகள்**

இறந்தவர்களை வழிபடும் பண்பாட்டு மரபை இக்கால மக்கள் பெற்றிருந்தனர். உடல் அழிந்தாலும் ஆன்மா அழிவதில்லை என்ற கருத்தின் விளைவாக, இறந்தவர்கள் பயன்படுத்திய பொருட்களை வைத்துப் புதைக்கும் வழக்கத்தை கடைபிடித்தனர்.

பெருங்கற்கால கல்லறையில் உள்ள கற்பலகையில் துளைகள் காணப்படுகின்றன. “ஈமப் பெட்டிகள் விலங்கு உருவங்களில் செய்யப்பட்டுள்ளன. இவைகள் ஒரு நம்பிக்கையின் அடையாளமாக கருதப்படுகிறது. இறந்தவர்களுடன் வைத்துப் புதைக்கும் பொருட்களின் எண்ணிக்கை 18 முதல் 32 வரை உள்ளது. இவை சிறிய, பெரிய பானைகள், தட்டுகள் மற்றும் கிண்ணங்களில் வைத்துப் புதைக்கப்படுகின்றன. ஆதிச்சநல்லூர் அகழாய்வில் இம்மரபு மிகுதியாக காணப்படுகிறது. பெண் உருவ பொய்மைகளும் கிடைக்கின்றன. இவைகள்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

தொல்குடியில் தாய்வழி சமூகத்தில் தாய்தெய்வ வழிப்பாட்டை உணர்த்துவதாக உள்ளது."[5] (இளங்கோ.சி.தொ.த.வ.ப.ஆ.ப.44)

**நடுகற்கள் வழிபாடு**

நடுகற்கள் போரில் மாண்ட வீரனுக்காக வைக்கப்பட்டு வணங்கப்பட்டு வந்தன. இதனை வீரக்கற்கள் என்றும் அழைப்பர். வீரனின் குடும்பத்தவரால் நடப்படும் நடுகற்களில் எதற்காக என்ற குறிப்புகளை கல்வெட்டாக செதுக்கி வைப்பர். இவ்வீரர்கள் மரபு தொல்தமிழர்களின் வீர வரலாற்றை பதிவு செய்கிறது.

போரில் வெற்றிப் பெற்றாலும், இறந்த வீரர்களுக்கு வைக்கப்படும் நடுகற்கள் பாலை நில வழியில் பல உள்ளன. இவ்வழியாக ஒரு மன்னன் யானையில் அமர்ந்து நடுகற்கலை கடந்து செல்ல முற்படுகின்ற சூழலில், நடுகல்லில் இருந்து ஒரு பல்லி சத்தமிட்டு தடைசெய்ய, அச்சத்தத்தை கேட்டு தன் பயணத்தை தொடர மன்னன் அச்சம் கொள்கிறான். மேலும் சென்றால் தனக்கு ஏதாவது ஆபத்து வந்துவிடுமோ என அஞ்சி மன்னன் திரும்பி செல்வதாக அகநானூறு பாடல் வழி அறிய முடிகிறது. (அகம்-397)

நடுகற்களில் இறந்தவரின் உருவத்தை செதுக்குவதில் கோயில் சிலை வடித்தல் மரபிலிருந்து மாறுப்பட்டே உள்ளது. தொல்குடி மக்கள் கல்லில் சிற்பம் வடிக்கும் திறமைகளை பெற்றிருந்தனர். "போர்வீரன் நிரை பூசலில் உயிர்விட்ட வீரனின் உடலில் அம்புகள் காட்டும் நடுகல், புலியுடன் சண்டையிடும் வீரனின் நடுகல், கணவனுடன் உடன்கட்டையேறிய மனைவிக்கு வைக்கப்பட்ட சதிகல், பன்றியுடன் சண்டையிட்டு இறந்த வீரனுக்கு வைக்கப்பட்ட நடுகற்கள், புலி குட்டியை பிடித்து வரும்பொழுது, புலியிடம் சிக்கி உயிர்விட்ட வீரனுக்கு வைக்கப்பட்ட நடுகல், போன்ற நடுகற்கள் பழந்தமிழர்களின் வாழ்வியல் தொன்மைகளை படையலிடுகின்றன."[6] (இளங்கோ.சி.தொ.த.வ.ப.ஆ. பக்.55,60)

**உறவுமுறை**

பலர் குழுக்களாக சேர்ந்து வாழும் சமுதாய இயல்பு மனிதர்களுக்கு மட்டுமே உரியதன்று. இவர்களது நேர் மூதாதையர்களான மேல்நிலை உயர் பாலூட்டிகளிடமும் இப்பண்புகள் காணப்படுகிறது. உறவு முறையின் அனைத்து அடிப்படை இயல்புகளும் தனிக்குடும்பம் என்ற நிலைகளில் காணப்படுகின்றன. குடும்பத்தில் குழந்தை பிறக்கும் போது ஒரு புதுவகையான உறவு தோன்றுகிறது. இவை பெருக பெருக அதனுடைய எல்லைகளும் விரிவடைகிறது.

**உறவுமுறைக் குறியீடும் சொல்வழக்கும்**

பழந்தமிழர்களின் உறவுமுறை பரிமாணங்களை அறியும் வகையில் குறியீகளை பயன்படுத்தி வந்துள்ளனர்.

△ - "இக்குறியீடு ஆணைக்குறிக்கும்
○ இக்குறியீடு பெண்ணைக் குறிக்கும்
△ ○ - இக்குறியீடு இறந்தவர்களை குறிக்கும்
ஸ்ரீ - இக்குறியீடுகள் மன உறவைக் குறிக்கும்'
ை - இவ்வகை கோடால் இணைக்கப்படுவோர் அனைவரும் குருதி உறவு தொடர்புடையவர்களாவர்.

இரு வழிமரபு, ஒரு வழி மரபு, ஈரியல் மரபு, இணை மரபு என்றழைக்கப்படுகிறது. தாய் தந்தை வழி மூலமாக இணைத்து கூறுபவர்கள் இருவழி மரபை சார்ந்தவர்கள். தந்தை, பாட்டன், முப்பாட்டன் என்னும் தந்தை வழி மரபை ஆண் வழி மரபு என்றழைக்கப்பட்டது. பரம்பரை,

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

வம்சம், வகையறா போன்ற சொற்களால் அழைக்கப்படும் மூதாதையர் வழியை சார்ந்தவர்கள் கால்வழி மரபு என்று குறிக்கப்படுகிறது."[7] (பக்தவத்சல பாரதி, தமிழர் மானிடவியல்,பக் 422-23) இவ்வாறான குறியீடுகள் தொல் தமிழர்களின் அடையாளங்களாக தொல்லியல் பார்வையில் அறியமுடிகிறது.

**இனக்குழுத் தலைமை**

சங்க இலக்கிய பாடல்களின் மூலம் இனக்குழுத் தலைமையையும் அவை உருவாக்கிய படிநிலைகளையும் அறிய முடிகிறது. அரசு உருவாக்கம் மருதநிலம் எனப்படுகிற சமவெளி பகுதியை களமாக கொண்டிருந்தது. நால்வகை நிலங்களையும் தனித்தனியே ஆட்சியாண்ட நிலை மாறி நானிலத்தையும் ஒருவரே ஆளும் நிலை உருவாகியது.

"குன்றுமலை காடுநா
டோன்று பட்டு வழிமொழியக்
கொடிதுகடிந்து கோறிருத்திப்
படுவதுண்டு பகலாற்றி
இனிதுருண்டோர் சுடர்நேமி
முழுதாண்டோர் வழிகாவல்"[8] (புறம்-17:3:8)

என்ற பாடல் மூவேந்தர்களில் ஒருவரான தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பலவகை நிலப்பகுதிகளை உடையவர்கள் வழிபட்டனர் என்பதைக் காட்டுகிறது. குன்று, மலை, காடு, நாடு வழிமொழிய என்பது இங்குள்ள மன்னர் வழிபட என்று பொருள் தந்தது என்பதிலிருந்து, நெடுஞ்செழியன் நால்வகை நிலத்திற்கும் உரிமை பெற்றிருந்தான் என்று அறிய முடிகிறது.

"வேந்தர்களுக்கு உதவுபவர்களாக குறுநில மன்னர்களும், சிறூர் தலைவர்களும் இருந்தனர். குறுநில மன்னர்களின் பெயர்கள் மட்டுமே சங்க இலக்கியங்களில் இடம்பெறவில்லை என்றும் கூறுவர். இக்கூற்றிற்கு மாறுபட்டுச் சிறூர் தலைவர்கள் பெயர்களும் அறியப்படுகின்றன. சிறுகுடிக்கிழான், பண்ணன், மல்லிக்கிழான் காரியாதி, நாலை கிழவன் நாகன், ஈர்ந்தூர் கிழான் தோழன் மாறன், வல்லார் கிழான், பண்ணன், கரும்பனூர் கிழான், அம்பர்கிழான், அருவந்தை பொறையாற்றுக் கிழான் போன்ற பெயர்கள் இனக்குழு தலைமைக்கு சான்றாகின்றன."[9] (க.மணிவாசகம் பண்பாட்டு மானிடவியலும் சங்ககால மக்களின் போர்குணமும், பக் 41,42) தொல்குடி மக்களது மானிடவியல் செயல்பாடுகள் தமிழர்களின் பண்பாட்டு அடையாளமாக பதியம் போட்டுள்ளது என்பதை இதன் வழி அறிய முடிகிறது.

**முடிவுரை**

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு முன் தோன்றிய மூத்தக்குடி தமிழ்குடி என்பது பழமொழி. இப்பழமொழிக்கு வலுசேர்க்கும் வகையில், தொல் தமிழ்குடி மக்களின் பண்பாடு, கலாச்சாரம், சடங்கு முறைகள், போர்முறைகள், நடுகற்கள் வழிபாடு போன்றவைகள் வாழ்வியல் நெறிமுறைகளை வளப்படுத்தும் தொன்மையான நோக்கில் ஒன்றிணைந்து காணப்பட்டுள்ளது என்பதுவே இக்கட்டுரையின் முடிவுரையாகும்.

**பார்வை நூல்கள்**

1. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், மெய்யப்பன் பதிப்பகம், புதுத்தெரு சிதம்பரம், 608 001, திருத்திய பதிப்பு பிப்ரவரி 2014.

**E-ISSN: 2581-7140**

**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

2. சி.இளங்கோ, தொல் தமிழர் வரலாறும் பண்பாட்டு ஆய்வுகளும், அலைகள் வெளியீட்டகம், இராமாபுரம், சென்னை-89, முதற்பதிப்பு 2015.
3. ந.பூங்குன்றன், தொல்குடி வேளிர் வேந்தர், நியூ செஞ்சூரி புக் ஹவுஸ்(பி) லிட், அம்பத்தூர், சென்னை-98, முதற்பதிப்பு டிசம்பர் 2016.
4. பக்தவத்சல பாரதி, தமிழர் மானிடவியல், அடையாளம், பதிப்பகம் புத்தாநத்தம், திருச்சி மாவட்டம், இரண்டாம் பதிப்பு 2008.
5. க.மணிவாசகம், பண்பாட்டு மானிடவியலும் சங்ககால மக்களின் போர்க்குணமும், ஆம்பல் வெளியீடு, அகரகாரப்பட்டி, திண்டுக்கல் மாவட்டம், முதற்பதிப்பு ஆகஸ்ட் 2017

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தமிழகக் கோயில் கல்வெட்டுக்கள்
# Culverts in Tamil Nadu Temples

**பேரா.ஆ. கிருத்திகா,** உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
மன்னர் திருமலைநாயக்கர் கல்லூரி, மதுரை– 04.

## Abstract

*The study of the paper extends an analysis on the* Culverts in Tamil Nadu Temples. The temple were built by the Tamil people with great reverence. Many kings hab built many temples and edicted culverts about it. *Hence, the study helps to know the culverts in the Tamil temples.*

**Keywords:** Culverts, Tamil Nadu, Temples

**முன்னுரை**

தமிழர்களின் பெருமைமிக்க வரலாற்றுக்குச் சான்றாக இருப்பவை கல்வெட்டுக்கள் ஆகும். கோயில்கள் மலைகள் என எங்கெல்லாம் தமிழ் மன்னர்கள் காலடி பதித்தார்களோ, அங்கெல்லாம் கல்வெட்டுக்களை வெட்டிப் பொதித்து வைத்திருக்கிறார்கள். இக்கல்வெட்டுக்கள் வரலாற்றுரீதியாகத் தமிழ்ச் சமுதாயம், பண்பாடு, பழக்கவழக்கங்கள், நாகரீகம் ஆகியவற்றை அறிய உதவும் சான்றுகளாக இன்றுவரை விளங்கிவருகின்றன.

**கல்வெட்டுகளின் சிறப்பு**

தமிழகத்தில் கி.மு. 2-ஆம் நூற்றாண்டு முதல் கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. இவ்வெழுத்துக்கள் பிராமி எழுத்துக்கள் எனக் கூறப்படுகிறது. இப்பிராமி எழுத்தே பலவிதமாறுதல்களை அடைந்து இன்று கல்வெட்டு என்ற நிலையை அடைந்துள்ளது. இதன் பின்னர் தமிழகத்தில் கி.பி. 2ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டுக்கள் குகைகளில் கிடைத்துள்ளன.

**கல்வெட்டுஎழுத்துக்களின் வகை**

தமிழகத்தில் பிராமி, வட்டெழுத்து, கிரந்தம், நாகரி என பலவிதமான எழுத்துக்கள் கல்வெட்டுக்களில் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளன. இதில் கிரந்தம் என்பது தமிழ்க் கல்வெட்டுகளில் பிராகிருதச் சொற்களை எழுத வேண்டிய இடத்தில் பயன்படுத்தப்பட்ட எழுத்துக்களாகும்.

**அரசுப் பரம்பரையினரும் கல்வெட்டுஎழுத்துக்களும்**

பல்லவர் காலத்தில் பிராமி, வட்டெழுத்து, கிரந்தம், நாகரி ஆகிய எழுத்துக்களைக் கையாண்டனர். இவையே சோழர் காலத்திலும், பாண்டியர் காலத்திலும், கோயில்களில் பெரிதும் பயன்படுத்தப்பட்டுள்ளன. பல்லவர் காலத்தில் பிராமி, வட்டெழுத்து, கிரந்த, நாகரி ஆகிய நான்கு வகையான எழுத்துக்கள் கோயில்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பாண்டியர்களின் ஆட்சியில் பிராமி, வட்டெழுத்து, கிரந்தம் ஆகிய எழுத்துக்கள் பயன்படுத்தப்பட்டன. இவர்களுடைய ஆட்சியில் வட்டெழுத்து தான் அதிக செல்வாக்குப் பெற்றிருந்தது என்பதனைப் பாண்டியர்கள் செப்பேடுகள் மூலம் அறியமுடிகிறது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

சோழர்கள் பெரும்பாலும் தமிழ் எழுத்துக்களைப் பயன்படுத்தினர். இத்தமிழ் எழுத்துக்கள் முற்காலச் சோழர் எழுத்,பிற்காலச் சோழர் எழுத்துஎன இருவகைப்படும்.

**கல்வெட்டின் அமைப்பு**

கல்வெட்டில் பொதுவாக ஐந்துவகையான செய்திகள் இடம் பெற்றிருக்கும். அவை தொடக்கம், கல்வெட்டின் காலம், கல்வெட்டுச் செய்தி, எழுதியவன், எழுதுவித்தவன் பற்றிய குறிப்பு, முடிவு போன்றவை அமையும். கல்வெட்டின் துவக்கம் "ஸ்வதிஸ்ரீ"என்று அமையும். இதற்கு மங்களம் உண்டாகட்டும் என்று பொருளாகும். அடுத்ததாக கல்வெட்டில் அக்கல்வெட்டு யாருடைய காலத்தில் எழுதப்பட்டதோ அந்த அரசனது ஆட்சி ஆண்டும், சில கல்வெட்டுகளில் சக ஆண்டு சாலிவாகன சகாப்தம் முதலிய ஆண்டுகளும் இடம் பெறும். இதனை அடுத்து நிவந்தம் அளித்த செய்தி குறிப்பிடப்பட்டிருக்கும். நான்காவதாக இன்னாரின் கட்டளைக்கிணங்க இன்னார் எழுதியது என்று எழுதியவன் பெயரும், எழுதுவித்தவன் பெயரும் வெட்டப்பட்டிருக்கும். இறுதியில் அக்கொடைக்குத் தீங்கு நினைத்தால் இந்தவிதமான பாவத்தை அடைவான் என்றும் அக்கொடையைக் காத்தல் காப்பவர்களது "அடிஎண் முடிமேலன"[2] என்பது போன்ற குறிப்புகள் அமையும்.

**கல்வெட்டுகளின் பயன்பாடு**

கோயிற் கல்வெட்டுகள் கோயிலின் காலத்தை அறியப் பெரிதும் பயன்படுகின்றன. அக்காலத்தில் இருந்து வந்த பழக்கவழக்கங்கள், பண்பாடு, பொருளாதாரம் போன்றவற்றையும் நாட்டின் எல்லைப்பரப்பு முதலான பல செய்திகளையும் அறியக் கல்வெட்டுக்கள் பயன்படுகின்றன.

கல்வெட்டுக்கள் அரசப் பரம்பரையை வரிசைப் படி அறியப் பயன்படுகின்றன. மேலும் வரலாற்றுரீதியாக நிலவும் போது காலக் கணக்கீட்டில் குழப்பங்கள் நிலவும் போது கல்வெட்டுச் செய்திகள், மெய்க்கீர்த்திகள் ஆகியவற்றின் துணை கொண்டு குழப்பங்களைத் தவிர்க்க முடியும்.

**தமிழ் - பிராமிகல்வெட்டுக்களின் அமைவிடம்**

தமிழ் - பிராமி கல்வெட்டுக்கள் பெரும்பாலன வைச மணம் தொடர்பானவை. இல்லறவாழ்வினைத் துறந்த அம்முனிவர்கள் வாழத் தேர்வு செய்த பகுதிகள் மலைகளில் இயற்கையாய் அமைந்த குகைத்தளங்களாகும். அவர்களுடைய அறநெறி வழிகாட்டுதலில் ஈர்க்கப்பட்ட மக்கள் அவர்களிடம் பெருமதிப்பு கொண்டனர். அதன் காரணமாக அவர்கள் வாழ்ந்த குகைத்தளங்களில் எளிமையான கற்படுக்கைகள் அமைத்தும், குடிநீருக்காக செயல்களை செய்து வந்தனர். அந்தத் தர்மச் செயல்களைக் கல்வெட்டுக்களாகவும் பதித்தனர். இக்குகைகத் தளங்கள் எளிமையானவையாக காணப்படுகின்றன. அக்குகைத் தளங்களிலிருந்து பார்க்கும் போது அவற்றின் எதிரே மிகப் பரந்த சமவெளி காணப்படும். நெடுந்தூரத்து நிகழ்வுகளை நோக்கும் போது அவற்றின் குறுக்கே எவ்விதத் தடைகளுமில்லாத குகைத்தளங்களாக அமைந்திருக்கும். தமிழ் பிராமி கல்வெட்டு உள்ள இடங்கள் பெருவழிகளை அடுத்தும் பண்டையத் தலைநகரங்கள், பெருநகரங்கள் மற்றும் வணிகச் சிறப்புடைய ஊர்களை அடுத்தும் இருப்பதை அறியலாம்.

அழகர் மலைக் கல்வெட்டு சோழ நாட்டிலிருந்து பாண்டிய நாட்டிற்கு வரும் அன்றைய பெருவழியில் அமைந்துள்ளது.

> "சிலப்பதிகாரம் கோவலன் கண்ணகி ஆகியோருடன் திருவரங்கத்திலிருந்து மதுரை வரும் கௌந்திஅடிகள் அழகர்மலை வழியாக மதுரை வந்ததாககுறிப்புகள் காணப்படுகிறது."[3]

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

பாண்டியர்களின் தலைநகரமான மதுரையைச் சுற்றியுள்ள குன்றுகள் பெரும்பாலானவற்றில் தமிழ் பிராமி கல்வெட்டுகள் உள்ளன. தமிழ் - பிராமி கல்வெட்டுகள் குன்றுகள் பெரும் ஏரிகள், ஆறுகளை அடுத்து சற்று தொலைவில் உள்ளன. மதுரைப் பகுதியில் உள்ள குன்றுகள் வைகையின் இரு மருங்கிலும் அமைந்திருக்கின்றன.

கல்வெட்டுள்ள குகைத் தளங்கள் சிலவிடங்களில் மிகப் பரந்த உட்பகுதியைக் கொண்டிருக்கின்றன. அதனால் ஏராளமான கற்படுக்கைகள் அமைக்கப்பட்டுள்ளன. குகைத்தளங்களின் உள் உயரம் முகப்புப் பகுதியில் அழகர் மலை, வரிச்சியூர் போன்ற இடங்களில் மிக உயரமானது. இங்குத் தமிழ் - பிராமி கல்வெட்டுக்கள் முகப்புப் பகுதியில் மிக உயரத்தில் உள்ளன. அவற்றை சாரங்கள் கட்டியும் ஏணிகள் வைத்து மேவிரல் தடவி படிக்க இயலும்.

**சமண முனிவர்களின் உறைவிடம்**

தமிழ்நாட்டில் சமண முனிவர்கள் வாழும் உறைவிடங்கள் பெருவழிகளிலும், முக்கிய நகரங்களைச் சுற்றியமைந்த குன்றுகளிலும் நல்ல விளைச்சல் உள்ள பகுதிகளிலும் மேற் சொன்ன எளிமையான வசதிகளுடனும் காணப்படுகின்றன. கி.மு. 3ஆம் நூற்றாண்டிற்கும் கி.பி. 3ஆம் நூற்றாண்டிற்கும் இடையில் வாழ்ந்த சமண முனிவர்களின் எளியவாழ்வை இக்குகைத் தளங்களும் அங்குள்ள கல்வெட்டுகளும் காட்டுகின்றன. சுமண முனிவர்களின் வாழ்விடங்களைப் பற்றி சங்க இலக்கியங்களில் காண்பது அரிதாகவே இருக்கிறது. நீண்ட சடைமுடியோடு நீராடாத சமண முனிவர்கள் குன்றங்களில் வாழ்ந்தது பற்றி நற்றிணை குறிப்பிடுகிறது.

“நீடியசடையோடுஆடாமேனிக்
குன்றுறை தவசியர்”[4]

என்ற பாடல் மூலம் அறியப்படுகிறது.

முனிவர்களின் உறைவிடங்கள் பலபெயர்களில் தமிழ் - பிராமி கல்வெட்டுகளில் குறிப்பிடப் படுகின்றன. அவை

“1. பாளி இய்,பாளிய்,பாளி
2. அதிட்அனம்,அதட்அனம்,அதிட்டானம்,அதிடானம்
3. கரண்டை
4. முழாகை,நல்முழஉகை
5. கல்காஞ்சனம்
6. அறுத்தகல்,அறுபிதகல்
7. உறை,உறையுள்,
8. பள்ளி”[5]

பாளி என்பதும் பள்ளி என்பதும் தங்குமிடம், துயிலுமிடம் என்பதைக் குறிக்கும் சொற்களாகும். இயற்கையான குகைத்தளத்தினை உளியால் செதுக்கி உறைவிடமாக உருவாக்கினர். இது கல்லினை அறுத்துச் செய்த செயல் என்று புகளுர் கல்வெட்டு குறிப்பிடுகிறது. “அறுடாதகல், அறுத்தகல்” என்று அங்குள்ள முனிவர்களின் இருப்பிடம் அழைக்கப்பட்டுள்ளது. கரண்டை என்பது முனிவர்கள் உறையும் இடம் என்று தமிழ் நிகண்டுகள் தெரிவிக்கின்றன. இச்சொல் திருமலைக் கல்வெட்டில் உறைவிடத்தைக் குறிக்கப் பயன்படுத்தப் பட்டுள்ளது. “முழாகை, முழுஉகை” என்ற சொற்களால் குன்றுகளிலுள்ள குகைகளில் வாழ்ந்த முனிவர்களின் இருப்பிடங்களைக் குறிக்கின்றன. மறுகால் தலையிலுள்ள கல்வெட்டு இதனைக் “கல்லால் செய்தகாஞ்சனம்”என்றுகுறிப்பிடுகிறது. மேட்டுப்பட்டியிலுள்ள

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019
Available at: www.ijtlls.com

கல்வெட்டு முனிவர் இருப்பிடத்தை உறை என்றும் ஆனைமலையிலுள்ள கல்வெட்டு உறையுள் என்றும் அழைக்கப்படுகின்றன. அய்யனார் குளம் தமிழ் - பிராமி கல்வெட்டில் முனிவர்கள் இருப்பிடத்தைக் குறிக்கும் “பள்ளி” என்ற சொல் காணப்படுகிறது.

**தமிழ் - பிராமிகல்வெட்டுகள் காட்டும் அரசியல்**

தமிழகத்தில் கிடைக்கும் பிராமி கல்வெட்டுகள் மூலம் சங்க காலத்தினுடைய வரலாறு பெறப்படுகிறது. பாண்டியர் மற்றும் சேர மன்னர்களின் பெயர்களைச் சுட்டக் கூடிய கல்வெட்டுக்கள் ஒரு சில இடங்களில் காணப்படுகின்றன.

**பாண்டியர் கல்வெட்டுக்கள்**

**நெடுஞ்செழியன்**

மதுரையை தலைமையிடமாகக் கொண்டு ஆட்சி செய்தவர்கள் பாண்டிய மரபினர். இவர்களைப் பற்றிய செய்திகள் மகாபாரதம், மகாவம்சம் ஆகிய நூல்களில் காணப்படுகின்றன. சங்க இலக்கியங்களிலும் விரிவாகக் காணப்படுகின்றன. ஆனாலும் கல்வெட்டுச் சான்றுகளில் இடம்பெறும் பாண்டியர் பற்றிய செய்திகள் முக்கியமானதாகக் கருதப்படுகிறது. மதுரையைச் சுற்றிலும் 14 இடங்களில் தமிழ் - பிராமி கல்வெட்டுகள் கண்டறியப் பட்டுள்ளன. அவை,

1. மாங்குளம், 2. அரிட்டாபட்டி, 3. திருவாதவூர், 4. கீழவளவு, 5. வரிச்சியூர், 6.விக்கிரமங்கலம், 7. மேட்டுப்பட்டி, 8. கருங்காலக்குடி, 9. முதலைக்குளம், 10. அழகர்மலை, 11. திருப்பரங்குன்றம், 12. முத்துப்பட்டி, 13. ஆனைமலை, 14. கொங்கர் புளியங்குளம்

அவற்றுள் மிகத் தொன்மையானதாகக் கருதப்படுபவை மாங்குளம் கல்வெட்டுகளாகும். இங்குக் கிடைத்துள்ள ஆறு கல்வெட்டுகளில் இரண்டில் நெடுஞ்செழியன் என்ற பெயர் இடம் பெற்றுள்ளது.

**சேரர் கல்வெட்டுகள்**

கரூருக்கு அருகில் உள்ள புகழூரில் கண்டறியப்பட்டுள்ள இரண்டு கல்வெட்டுகளில் மூன்று சேர மன்னர்களின் பெயர்கள் இடம் பெற்றுள்ளன. இவர்கள் இரும்பொறை மரபினர் ஆவர். கோஆதன் செல்லிரும்பொறை, அவன் மகன் பெருங்கடுங்கோன் அவனது மகன் இளங்கடுங்கோன் ஆகிய மூவர் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. இச்சேர மன்னர்களின் காலம் கி.பி. 1-2ஆம் நூற்றாண்டு எனக் கூறப்படுகிறது.

**சோழர் கல்வெட்டுகள்**

சங்ககாலச் சோழ மன்னர்கள் காலத்திய பிராமி கல்வெட்டுகளோ, காசுகளோ இதுவரை தமிழகத்தில் கிடைக்கவில்லை. ஆனால் கரூரில் கிடைத்த வெள்ளி மோதிரம் ஒன்றில் “தித்தன்”என்னும் பெயர் காணப்படுகிறது.

**பட்டங்களும்,அலுவலர்களும்**

அரசன் என்பதைக் குறிக்க ‘கோ’ என்னும் சொல் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை கரூர் கல்வெட்டில் காணலாம். மாங்குளம் கல்வெட்டில் இடம் பெறும் ‘பணஅன்’ என்னும் சொல்லை அரசருக்குரிய சேவகன் எனப் பொருள் கொள்கிறார். ‘காவிதி’ என்னும் சொல் மாங்குளம் கல்வெட்டிலும், திருமலை கல்வெட்டிலும் வருகின்றது.

தமிழ் பிராமி கல்வெட்டுகள் அளவிலும் உள்ளடக்கத்திலும் சிறியதாக இருப்பதால் பிற்காலக் கல்வெட்டுகளில் காணப்படுவது போன்ற விரிவான அரசியல் செய்திகளைப் பெற முடியவில்லை. அரசு தோற்ற காலத்தைச் சேர்ந்த கல்வெட்டுகள் இவை என்பதால் குறைந்த அளவிலான செய்திகள் கிடைத்துள்ளன.

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**முடிவுரை**

தமிழகத்துக் கோயில்களில் உள்ள கல்வெட்டுகளைப் படி எடுப்பதும், அவற்றைப் பற்றிய ஆய்வு செய்வதுமான வேலைகள் கி.பி. 19ஆம் நூற்றாண்டில் தொடங்கப்பட்டு இன்றுவரை நிகழ்த்தப்பட்டு வருகிறது. நம் வரலாற்றையும், பண்பாட்டையும் அறிவதற்கான ஆதாரமாக கல்வெட்டுகள் உள்ளன. கல்வெட்டுகளின் தேவையையும் சிறப்பையும் உணருவது மிக அவசியம். இதன் மூலம் பல வரலாற்றுச் சிறப்புகளை அறிய முடிந்தது.

**அடிக்குறிப்புகள்**

1. சமய இலக்கியமும் கோயிற்கலையும், ப.96.
2. மேலது.
3. சிலப்பதிகாரம்,மேலது
4. நற்றிணை,பா.எண். 141.
5. தமிழ் - பிராமிகல்வெட்டுகள், ப.3.
6. மேலது. ப.9.

**துணைநூற் பட்டியல்**

1. தி. ஸ்ரீ. ஸ்ரீதர், தமிழ் - பிராமி கல்வெட்டுகள், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை - 600 008. முதற்பதிப்பு - 2006.

2. டாக்டர் அம்பைமணிவண்ணன், சமய இலக்கியமும் கோயிற் கலையும், ஜெ.ஜெ. பப்ளிகேஷன்ஸ், 29,கற்பக விநாயகர் வணிக வளாகம், கோ. புதூர். மதுரை - 625 007. முதற்பதிப்பு - அக். 2006.

3. மா. இராசமாணிக்கனார், பல்லவர் வரலாறு, பாவைபப்ளிகேஷன்ஸ், 142, ஜானி ஜான் கான் சாலை, இராயப்பேட்டை, சென்னை - 600 014 முதற்பதிப்பு - ஆகஸ்டு 2013.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தொல்லியல் நோக்கில் வேலூர் மாவட்டத்தின் சில குறிப்பு செய்திகள்
## A Brief Archaeological Scrutiny of Vellore District

**சே. கிருஷ்ணவேணி,** முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழாய்வுத்துறை,
பிஷப் ஹீபர் கல்லூரி, திருச்சிராப்பள்ளி-17.

**Abstract**

*The article discloses the rich ethical life, life style and war are found in the highest intentions of the world. The life of the Tamils is the lifestyle of the noble ones. The study of this article is a study of the Tamil's lifestyle in the Vellore district at the ancient times. It evinces the Stone age, New stone age, Iron age and Historical monuments and relics of the Tamils. Hence, the paper attempts a survey of the concerned theme.*

**Keywords:** Tamils, Archaeological Scrutiny, Vellore District

**முன்னுரை**

இந்திய வரலாற்றில் தமிழ்நாட்டின் தொல்லியல் வரலாறு சிறந்ததொரு இடத்தைப் பெற்றுத் திகழ்கிறது. உலக அளவில் பழங்கற்கால நாகரிகங்கள் மிகுந்த பகுதிகள் சென்னைக் கைக்கோடரித் தொழிற்கூடம் எனத் தொல்லியல் அறிஞர்களால் குறிப்பிடப்படும். தமிழகம் பழங்கற்கால மனிதன் வாழ்ந்த எச்சங்களை மிகுந்த அளவில் கொண்ட மாநிலமாகத் திகழ்கிறது. தமிழ்நாட்டின் வட மாவட்டங்களில் பழங்கால மனிதர்கள் பழைய வரலாற்றை பற்றி விட்டுச் சென்றுள்ள கற்கருவிகள் மூலம் அறியமுடிகிறது. இதனை தொல்லியல் நோக்கில் வேலூர் மாவட்டம் சிற குறிப்பு செய்திகள் என்னும் கட்டுரையில் காண்போம்.

**வேலூர் வரலாற்றுச் சிறப்புகள்**

வேலூர் மாவட்டத்தின் எல்லை கிழக்கில் திருவள்ளூர், காஞ்சிபுரம், திருவண்ணாமலை மாவட்டங்களும் மேற்கில் கிருட்டினகிரி மாவட்டமும், தெற்கில் பழைய வட ஆர்க்காடு மாவட்டத்தில் இருந்து பிரிந்த திருவண்ணாமலை மாவட்டமும், வடக்கில் ஆந்திர மாநிலத்தில் சித்தூர் மாவட்டமும் உள்ளன. வேலூர் மாவட்டம் நீண்ட கால வரலாற்று நிகழ்வுகளைத் கொண்ட மாவட்டமாகும்.

அ) பல்லவர்களும் சோழர்களும், ஆந்திர கர்நாடகப்பகுதியில் ஆட்சி புரிந்த பல்வேறு அரசு மரபுகளின் படையெடுப்பகளைத் தடுக்க வேலூர் மாவட்டத்தின் எல்லைப் பகுதியில் தங்களது படைவிடுகளை அமைத்து தங்க வைத்தனர்.
வேலூர் மாவட்டம் இன்றளவு விளை நிலமாக விளங்கி வருகிறது. இதன் தாக்கம் வரலாற்று ஏடுகளில் பேசப்பட்டு வருகிறது.

ஆ) போரில் வீர மரணம் அடைந்த வீரர்களுக்கு நடுகல் முதல் தொடர்ச்சியாக பள்ளிப்படைக் கோயில்களும் வேலூர் மாவட்டத்தில் மிகுந்த அளவில் உள்ளன.

இ) இந்திய போர் வீரர்களால் ஆங்கில இராணுவத்திற்கு எதிராக நடத்தப்பட்ட முதல் சுதந்திரப்போரான சிப்பாய்க்கலம் மூடிய வேலூர் மாவட்டம் வரலாற்றில் தனித்து ஓர் இடத்தை பெற்றுத் திகழ்கிறது. தமிழகத்திற்கு பெருமை சேர்க்கும் மாவட்டமாக இது

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019
Available at: www.ijtlls.com

விளங்குவதுடன் பழமை வாய்ந்த தொல்லியல் பண்பாட்டு கூறுகள் சிறப்பான இடத்தைப் பிடித்துள்ளது.

ஈ) பல்லவர் காலத்தில் பல பண்பாட்டு முறை வேலூர் மாவட்டத்தின் வழியாக நடைபெற்றது. குடியாத்தம் வட்டத்தில் அமைந்துள்ள உதயோத்திரம் பகுதி பல்லவர்களின் தளபதி உதய சந்திரவர்மனால் உருவாக்கப்பட்ட ஊராகும். இப்பகுதி அக்காலத்தில் “காஞ்சி நுழைவாயில் என்று அழைக்கப்பட்டது.

உ) ஆங்கிலேயர் ஆட்சி காலத்தில் வட ஆர்க்காடு என வழங்கப்பட்ட பழமையான இம்மாவட்டம் இக்காலத்தில் தமிழக அரசால் நிர்வாக வசதிக்காக வேலூர், திருவண்ணாமலை மாவட்டங்கள் என இரண்டு மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டது. இம்மாவட்டங்கள் பண்பாட்டு வழியாக ஒற்றுமைகள் வழியாக இருந்தாலும், தொன்மை காலத்தில் இருந்து பல்வேறு வேற்றுமைகளை பெற்றுள்ளன. இம்மாவட்டங்கள் ஒவ்வாது மலைத்தொடர் பண்பாட்டு வேற்றுமை அறிய முடிகிறது.

ஊ) வேலூர் மாவட்டத்தில் கிடைக்கின்ற நடுகற்கள் பல்லவர்கள் காலத்தைச் சார்ந்தவையாக உள்ளது.

எ) திருவண்ணாமலை மாவட்டத்தில் நடுகற்கள் செங்கம் பகுதிகளில் பெருவாரியாகக் கிடைக்கின்ற இவை வட்டெழுத்துக் கல்வெட்டுகளாக உள்ளன

ஏ) மேற்கிலும் வடக்கிலும் அமைந்துள்ள கிருட்டினகிரி, தர்மபுரி மாவட்டங்களின் பண்பாட்டு கூறுகள் வரலாற்றுக் காலத்தில் செங்கம் கணவாய் வழியாகத் திருவண்ணாமலை மாவட்டத்தில் ஊடுருவி உள்ளன. வட்டெழுத்து நடுகற்கள் செங்கம் பகுதியில் அதிகமாகக் கிடைக்கின்றன.

**பழங்கால கற்காலம்**

வரலாற்று முற்பட்ட காலத்தில் பலசான்றுகள் வேலூர் மாவட்டத்தில் அதிகமாக கிடைக்கின்றன. இப்பகுதியில் கள ஆய்வுகளும் அகழாய்வுகளும் அதிகமாக நடைபெற்றுள்ளன உள்ளன. வேலூர் மாவட்டத்தில் தொல்லியல் வரலாற்றை நம்ம அறிய முடிகிறது. வேலூர் மாவட்டத்தில் அரக்கோணம் வட்டத்தில் பழங்காற்காலக் கருவிகள் மிகுந்த அளவு கிடைத்துள்ளன.

**புதிய கற்காலம்**

தமிழ் நாட்டில் புதிய தற்காலம் வேலூர் மாவட்டம் அமைத்துள்ளன. இவ்மாவட்டத்தில் ஒவ்வாது மலைப் பகுதியை ஓட்டியுள்ள ஊர்களில் புதிய கற்காலம் காலத்தை சார்ந்த கற்கோடரிகள் பெருமளவில் கிடைத்துள்ளன. பிளைஸ்டோகின் காலம் முடிந்து பின்பனிப்படர்வுக் காலமான ஹாலோகின் காலத் தொடக்கத்தில் மனித வாழ்வில் பலமாற்றங்கள் நிகழ்கின்றன. இக்கால கட்டத்தில் மனிதன் நிலையற்ற வாழ்க்கையை விடுத்து ஓரிடத்தில் நிலையாகத் தங்கித் தனது தேவைகளைப் பூர்த்தி செய்ய விரும்புகின்றான். கால் நடைகளை வளர்க்கவும் வீடுகளை அமைக்கவும், கூட்டுக் குடும்ப வாழ்க்கை முறையை மேற்கொள்ளுவது, உணவு சமைக்க மட்பாண்டங்களை செய்தல், போன்றவை புதிய கற்காலம் செய்து வருகின்றன. புதிய கற்காலம் மாவட்டத்தில் சில அகழாய்வுகள் உறுதி செய்துகொள்ளுகிறோம். திருப்பத்தூர் வட்டத்தில் பல புதிய கற்கால வாழ்விடங்களைச் கண்டு பிடித்தனர். புதிய கற்காலக் கருவிகள் புதிய கற்காலத்தில் வாழ்ந்த வீடுகள் ஆகியவை கண்டு பிடித்தனர். பையம்பள்ளியில் தலதாப்பு மலை அடிவாரத்தில் நடத்தப்பட்ட அகழாய்வில் புதிய தற்கால மண்ணடுக்குகள் காணப்பட்டன.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**அப்புக்கல்லு**

வேலூருக்கு அருகில் உள்ள அப்புக்கல்லு என்றும் இடத்தில் புதிய கற்கால கருவிகள் கிடைத்துள்ளன. அப்புக்கல்லு மலைபகுதியில் அருகில் கருங்கற்கள் வெட்ட, மலையை வெடி வைத்துத் தகர்த்து மலையில் செம்பால் நீண்ட வாட்கள் கைப்பிடியுடன் கண்டுபிடிக்கப்பட்டன. புதிய தற்காலத்தில் இம்மாவட்டங்களில் கல்லேரிமலை, ஆம்பூர், சென்னராயன பள்ளி, கொசவன்புதூர், காவனூர், செங்குன்றம், கீழ்ப்பட்டி, மேல்பட்டி, சவ்வாது மலைப்பகுதிகள், புதூர் நாடு, நெல்லிவாசல் நாடு, ஏலகிரி பாக வெளி, சோளிங்கபுரம், விண்ணமங்கலம் கீழ்ச் சிலம்பாடி, கீழ்விளம்பூச்சி, கூட்டத்தூர், பழைய தளுர், ஊர்கவுண்டனூர், கொழுத்தம்பத்தூர் ஆகிய இடங்களில் காணப்படுகின்றன.

**இரும்புக்காலம்**

இரும்புக் காலத்தைச் சார்ந்த ஊரிருக்கைக் பகுதிகளும் புதைவிடங்களும் இம்மாவட்டத்தில் பரவலாகக் காணப்படுகின்றன. இம்மாவட்டத்தில் இதுவரை ஏறக்குறைய 100 இடங்களில் பெருங்கற்காலச் சின்னங்களும் ஊரிருக்கைப் பகுதிகளும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இம்மாவட்டத்தில் இரும்புக் காலத்தைச் சார்ந்த பல்வேறு இடங்களில் அகழாய்வுகளும் மேற்கொள்ளப்பட்டன. பையம்பள்ளி அகழாய்வில் கல்வட்டங்கள் பல அகழ்ந்தெடுக்கப்பட்டன. இவற்றில் ஈமப்பொருள்களாக மட்கலன்கள் இரும்புப்பொருள்கள், சுடுமண் மணி போன்றவைகளும், 24 கால்களுடைய ஈமப்பேழை அன்றும் கண்டுபிடிக்கப்பட்டன.

இரும்புக்கால மக்கள் மலைப்பகுதிகளில் இருந்த குகைகளிலும் தங்களது வாழ்விடங்களை அமைத்து கொண்டனர். குகை ஒன்றில் இரும்புக்கால ஓவியங்கள் உள்ளன.

**இரும்புக்காலம் ஈமச்சின்னங்கள் 6 வகைப்படும்**

- கல்வட்டங்கள்
- கல்திட்டை
- கல் உயர்திட்டை
- பரலுயர் பதுக்கை
- ஈமப்பேழைகள்
- தாழிகள்

வேலூர் மாவட்டத்தில் கீழ்க்கண்ட இடங்களில் இரும்புக்கால ஈமச்சின்னங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

1. **கல்வட்டம்** : ஆரியூர், ஆத்துப்பாக்கம் ஆய்ப்பேடு கரிக்கல், மதேரி, பாராஞ்சி, பெருவளையம் வேட்டங்குளம், திருப்பான்மலை, நாகல், பாலூர், உள்ளி, அலங்கனேரி காக்கங்கரை, குரிசிலாப்பட்டு வேடப்புதுப்பட்டு, குப்புக்கல்மேடு ஏரிபள்ளம், ஊசூர் குப்பம், ஆரியூர்
2. **கல்திட்டை** : ஆரியூர், ஆய்பேடு, கரிக்கல் கரிக்கன்தாங்கள், மேகந்திரவாடி சூரை, தளிகல், புலிவலம், பல்லாளகுப்பம் செம்பள்ளி, கற்கூர், சின்னகந்திலி மிட்டாலம், கொடைக்கல், ஓடுகத்தூர்
3. **கல்உயர்திட்டை** : கத்தியவாடி பின்னத்துரை கீழ்க்கொத்தூர்.
4. **பரலுயர் பதுக்கை** : அரப்பாக்கம், குறும்பேரி, பாச்சூர், விஷமங்கலம், சின்னமுதலிமுதூர் வள்ளிமைல.
5. **ஈமப்பேழைகள்** : கரிக்கல், கல்லேரிமலை ஓடுகத்தூர்
6. **தாழிகள்** : தக்கோலம், வடக்குப்பட்டு

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**வேலூர் வரலாற்று சின்னங்கள் :**

| | | | |
|---|---|---|---|
| 1. | ஜலகண்டேஸ்வரர் கோயில் | - | வேலூர் |
| 2. | கேட்டை | - | வேலூர். |
| 3. | மசூதி | - | வேலூர் |
| 4. | சோமநாதர் கோயில் | - | மேல்பாடி |
| 5. | சோழீஸ்வரர் கோயில் | - | மேல்பாடி |
| 6. | சமணச் சிற்பங்கள் கல் வெட்டுகள் | - | வள்ளிமைல |
| 7. | சுப்பிரமண்யஸ்வாமி கோயில் | - | வள்ளிமைல |
| 8. | ரங்கநாதர் ஆலயம் | - | எருக்கம்பட்டு |
| 9. | டெல்லி நூழைவு வாயில் | - | ஆற்காடு |
| 10. | பீரங்கி | - | ஆற்காடு |
| 11. | மசூதி | - | ஆற்காடு |
| 12. | கோட்டைப்பகுதியில் உள்ள குளங்கள் | - | ஆற்காடு |
| 13. | வடகிழக்கில் அமைந்த கோட்டையின் வெளிப்புறச்சுவர் | - | முப்பதுவெட்டி |
| 14. | குடைவரை, சமண, தீர்த்தங்கரர் சிற்பம் | - | விளாப்பாக்கம் |
| 15. | சோளிங்கர் குளக்கரையில் காணப்படும் கல்வெட்டு | - | சோளிஸ்கா |
| 16. | ஒற்றைபாறையில் அமைந்த குடைவரை | - | மகேந்திரவாடி |
| 17. | கோனார் கோவில் | - | திருமால்யூா |

**முடிவுரை**

தொல்லியல் நோக்கில் வேலூர் மாவட்ட சில குறிப்பு செய்திகள் என்னும் தலைப்பில் சில குறிப்பு செய்திகள், வேலூர் வரலாற்றுச் சிறப்புகள் பழங்கால கற்காலம், புதியகற்காலம், அப்புக்கல்லு இரும்புக்காலம், வேலூர் வரலாற்று சின்னங்கள் ஆகிய இடங்களில் கிடைக்கும் பொருட்களை பற்றி ஆராய்ந்து கிடைக்கும் பொருட்களை எடுத்து கூறுவதையே இக்கட்டுரையில் அமைந்துள்ளது.

**பார்வை நூல்கள்**

1. கே. திருமூர்த்தி, தமிழ்நாட்டுத் தொல்லியல் அகழாய்வுகள், பண்பாட்டு வெளியீட்டகம், சென்னை, 1995.
2. https : ///velour nic.in
3. இந்தியக்கல்வெட்டு ஆண்டறிக்கை 1912.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019
Available at: www.ijtlls.com

# கொங்கு நாட்டுக் கல்வெட்டுகளில் வணிக அறம்
## Business Ethics in Kongu County Culverts

**முனைவர். S. கிரேசிராணி,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, ஸ்ரீசாரதா மகளிர் கல்லூரி, பெரம்பலூர்.

## Abstract

*The paper deals with the facts collected from the culverts related to the Business Ethics found in the Kongu region of Tamil Nadu. A society's grandeur can be assessed through the edicts. The edicts show their culture, ethics, charity and society related ethics. Business is considered one of the major parts in the development of the society and the ethical norms followed by the set of people are also very important to know their level. Tamil people are well known for their trade with the foreign contries in the past to the Present. They even had business contacts with ancient civilizations like Greek, Roman, Chinese and Egyptian people. The business stalwarts on those times had donated gold coins, bronze coins, land and other charity acts are revealed through the culverts. Hence, the paper traces business ewthics with archaeological evidences.*

**Keywords:** Culverts, Copper Plates, Tamil Nadu, Tamil Culture

தமிழகம் ஐந்து மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. சேர நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு, தொண்டை நாடு, கொங்கு நாடு என்பன. கொங்கு நாட்டை பல்வேறு மன்னர்கள் ஆட்சி புரிந்தனர். அதற்குச் சான்றாக, கொங்கு நாட்டில் மிகுதியான கல்வெட்டுகள் கிடைக்கின்றன. இக்கல்வெட்டுகளில் வணிகர்கள் பற்றிய குறிப்புகள் மற்றும் அவர்களின் அறச்செயல்கள் பற்றி ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

**வணிகர்கள்**

பொருள் உற்பத்தி செய்பவருக்கும், பொருள் கொள்வனவு செய்வோருக்குமான பாலமாக இருப்பவர்கள் வணிகர்கள். சந்தைப் பொருளாதாரத்தை ஏதுவாக்குவதில் இவர்களின் பங்கு முக்கியமானது.

**அறம்**

அறம் எனும் சொல்லுக்கு வழக்கம், நீதி, கடமை, கொடை எனப் பல்வேறு பொருள் வழங்கினாலும் கொடை என்பதையே ‘அறம்’ என்ற மையப்பொருளாகக் கொண்டு இக்கட்டுரை அமைகின்றன.

**வணிக அறம்**

எந்த ஒரு செயலைச் செய்வதற்கும் அறம் தலையாய ஒன்றாக விளங்குகின்றது. வணிகம் பற்றி வள்ளுவர் கூறும் பொழுது,

“வாணிகம் செய்வோர்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தம்போல் செயின்” (குறள்.120)

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

அதாவது பிறர் பொருளையும் தம்பொருள்போல் போற்றிச் செய்தலே நல்ல வணிகம் செய்வோர்க்கு உரியமுறை என்கிறார். இதனையே வணிகர்களுக்குரிய அறமாகவும் கொள்ளலாம்.

**கொங்கு நாட்டுக் கல்வெட்டுகளில் வணிகர்கள்**

கொங்கு நாட்டில் கிடைக்கப் பெற்ற கல்வெட்டுகளுள் ஐம்பதிற்கும் மேற்பட்ட கல்வெட்டுகளில் வணிகர்கள் பற்றி செய்திகள் இடம்பெறுகின்றன. இவ்வணிகர்கள் கொங்கு நாட்டில் தங்கி வணிகம் புரிந்தமைக்குக் கல்வெட்டுகளும் அகழ்வாய்வில் கிடைக்கும் பொருட்களும் சான்றுகளாக உள்ளன.

**கல்வெட்டுகளில் வணிக குழுக்கள்**

பரந்த அளவில் வணிகம் மேற்கொள்ள வணிக முறையில் தேர்ச்சிப் பெற்ற வணிகர்கள் பலர்கூடி தொழில் நிமித்தமாகக் குழுக்கள் பலவற்றை ஏற்படுத்தினர். அவ்வாறு உருவான வணிகக்குழுக்களில் சில குழுக்களின் பெயர்கள் கொங்கு நாட்டுக் கல்வெட்டுகளில் இடம் பெறுகின்றன. அவை,

திசையாயிரத்து ஐந்நூற்றுவர்
பதினெண் விசையத்தார்
ஐந்நூற்றுப் பெருநீரவியர்
பதிணென் விசயப் பெருநீரயவிர்
நகரத்தார்

என்பனவாகும்.

**கல்வெட்டுகளில் வணிகக் குறிப்புகள்**

கொங்கு நாட்டுக் கல்வெட்டுகளில் பெருவிழிகள், அடிக்கீழ்த்தளம், தாவளம், எறிவீரப்பட்டணம் போன்ற வணிகம் தொடர்பான சொற்களும் காணப்படுகின்றன.

**பெருவழிகள்**

கொங்குநாடு காடும், மலையும் சேர்ந்த குறிஞ்சி, முல்லை நிலமாகத் திகழ்கிறது. இந்நாடு கால்நடை வளர்ப்பில் சிறந்து விளங்கியது. மேலும், கனிமவளம் பெற்றுப் பெருமை அடைந்திருந்தது. கால்நடை வளர்ப்புக்காக மக்களை ஓரிடத்திலிருந்து பிற இடங்களுக்கு மேய்ச்சல் நிலம் வேண்டிக் குடிபெயரச்செய்தது, அக்குடி பெயர்ச்சி குறிப்பிட்ட வழியிலேயே நடைபெற்றிருக்க வேண்டும். அவ்வழிகள் பின்னாளில் பெருவழியாக மாறின. பெருவழி ஆக்கத்திற்கும், முல்லை ஆயர்கள் குடியெர்ச்சிக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதை மானிடவியல் ஆய்வாளர்களும் உறுதிப்படுத்துகின்றனர். மேலும், இதனை சங்க இலக்கியங்களும் உறுதிப்படுத்துகின்றன. அகநானூற்றில் முல்லைத் திணைப்பாடல்களில் பெருவிழி பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

'அரக்கத்து அன்ன செந்நிலப் பெரு விழி' (அகம். 14:1)

'தளவுப் பிணி அவிழ்ந்த தண் பதப் பெருவிழி' (அகம். 64. 4)

"குரதி உருவின் ஒண் செம் மூதாய்
பெரு வழி மருங்கில் சிறுபல வரிப்ப" (அகம். 74:4,5)

'காடுகவின் பெற்ற தண்பதப் பெருவழி' (அகம். 14.10)

இச்சான்றுகள் முல்லைத்திணை பாடல்களில் மட்டுமே காணப்படுகின்றன. எனவே, முல்லைநில ஆயர்குடி மக்களே பெருவழிகளை உருவாகியிருக்க வேண்டும் இவ்வாறு அமைந்த பெருவழிகளில் பலநாட்டு வணிகர்களும் வந்து சென்றனர்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கொங்கு நாட்டில் மூன்று பெருவழிகள் மிகச் சிறப்பாகப் பேசப்பட்டவையாகும். அவை, ஆனைமலை வடபூதி நத்தம், சி.கலையமுத்தூர், பழனி, திண்டுக்களல், மதுரை, திருத்தங்களல் வழியாக அழகன்குளம் சென்றடையும் பெருவழி. இப்பெருவழியை இடைக்காலக் கல்வெட்டு 'வீரநாராயணப் பெருவழி' எனக் குறிப்பிடுகின்றது. இங்கு இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட ரோமானியக் காசுகள் கிடைத்துள்ளன.

பேரூர், வெள்ளலூர், சூலூர், பல்லடம், காங்கயம், கரூர், உறையூர் வழியாகப் பூம்புகார் வரை செல்லும் பெருவழி. இது 'இராசகேசரிப் பெருவழி' என்று அழைக்கப்படுகின்றது. கோயம்புத்தூர், அவினாசி, விசயமங்கலம், ஈரோடு, சேலம், ஏத்தாப்பூர், கள்ளக்குறிச்சி, விழுப்புரம், திண்டிவனம் வழியாக மாம்மல்லபுரம் செல்லும் பெருவழி. இப்பெருவழியில் கோயம்புத்தூர் மாவட்டத்தில் மிகுதியான யவனக் காசுகளும் கைவினைப் பொருட்களும் கிடைத்துள்ளன. (கோவை மாவட்ட தொல்லியல் கையேடு)

மேலும், இடைக்காலக் கல்வெட்டுகளில் பல பெருவழிகள் வழக்கத்திலிருந்தமைப் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன. சோழமாதேவிப் பெருவழி, கொழுமம் பெருவிழி, அரசுமலைப் பெருவழி, இராச மகேந்திரப்பெருவழி, காரைத் தொழுப்பெருவழி போன்ற பெருவழிகள் குறிக்கப்படுகின்றன. பா்டன் ஸ்டீன் என்ற வெளிநாட்டு அறிஞர் கொங்கு நாட்டைப் 'பெருவழிநாடு' என்றே அழைக்கிறார். இப்பெருவழிகள் பொருட்களை ஒரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குக் கொண்டு செல்ல ஏதுவாக இருந்துள்ளன. பெருவழிகளில் செல்வோர்க்கு பாதுகாப்பிற்காக வழிவீரர்கள் நிறுத்தப் பெற்றனர். அவர்கள் 'எறிவீரர்' என்று அழைக்கப்பட்டனர்.

**அடிக்கீழ்த்தளம்**

அடிக்கீழ்த்தளம் என்பது வணிகர்கள் தங்கியிருந்த இடத்தையே குறிக்கும். அடிக்கீழ்த்தளம் என்ற சொல் தமிழ்நாடு முழவதும் கிடைத்தபோதிலும் கொங்கு நாட்டில் மிகுதியாக இருந்தமை கட்டப்பெறுகின்றது. தாராபுரம் அருகிலுள்ள பொன்னிவாடி என்ற ஊரில் கிடைத்த வணிகக் கல்வெட்டில், 'அஞ்சுரை நாடும் அடிக்கீழ்தளமும் நகரமிரண்டும்' (திருப்பூர் மாவட்டக் கல்வெட்டுகள்)

என்பதன் மூலம் வணிகத்திற்கும் அடிக்கீழ்த்தளத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருந்துள்ளது. என்பதை அறிய முடிகின்றது. மேலும், கொங்கு நாட்டுக் கல்வெட்டில் 'அடிக்கீழத்தளமான இராசராசபுரம்', 'அடிக்கீழ்த்தளத்திலிருக்கும் வியாபாரி', 'அடிக்கீழ்த்துளான் தேவன் உடையான்', 'காரைநாடு மடிக்கீட்தளம்', 'அடிக்கீழ் தளம் பதினெண் விசையத்தார்', 'அடிக்கீட்தளத்து வியாபாரி' போன்ற தொடர்கள் வருகின்றன. மேலும், மூன்று அடிக்கீழ்த்தளங்கள் மிகவும் சிறப்பாகப் பேசப்படுகின்றன.

1. கரையான அடிக்கீழ்த்தளம்
2. மேற்றலைத் தஞ்சாவூரான மன்னியூர் அடிக்கீழ்த்தளம்
3. இராஜராஜபுரமான அடிக்கீழ்த்தளம்

இவற்றில் இராஜராஜபுரமான அடிக்கீழ்த்தளம் அரசியலில் பெம்பங்காற்றியுள்ளது என்கிறார். க.அ.புவனேசுவரி. அடிக்கீழ்த்தளம் என்பதற்குத் தெளிவான பொருள் கூறமுடியவில்லை எனினும், அது வணிகத்தோடு தொடர்புடையது என்பதை மட்டும் உறுதியாகக் கூறமுடியும். மேலும், தளம் எனும் சொல்லுக்குப் படைகள் தங்கியிருந்த இடம் எனப் பொருள் கொள்ளலாம். அடிக்கீழ்த்தளம் என்பது பெரும்பாலும் 12,13, 14 ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளிலேயே மிகுதியாக வருகின்றன. இச்சொல் அவினாசி, பெருமாநல்லூர்,

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

பழங்கரை, நடுவச்சேரி, பட்லூர், பரஞ்சேர்வழி, தாராபுரம், பிரம்மியம் போன்ற ஊர்க் கல்வெட்டுகளில் இடம்பெறுகின்றன.

**தாவளம்**

தாவளம் என்பதற்குத் தங்குமிடம் என்று பொருள் தருகின்றது தமிழ் லெக்சிகன். இது வணிகர்கள் பெருவழிகள் தங்கி வாணிகம் செய்வதற்காக உருவாக்கப்பட்டதே தாவளம் ஆகும். கல்வெட்டுகளில் கி.பி.10 ஆம் நூற்றாண்டில்தான் தாவளம் என்ற சொல் பயின்று வருகின்றது. இச்சொல் முதன் முதலாக பராந்தகனின் கல்வெட்டில்தான் 'பேட்டைத் தாவளம்' எனப் பேசப்படுகின்றது. கொங்குப்பகுதியிலுள்ள பேரூர்க் கல்வெட்டில் 'கொற்ற மங்கலமான மஞ்சிப் புளித் தாவளம்' (கோயம்புத்தூர் மாவட்டக் கல்வெட்டுகள், தொகுதி-I) எனக் குறிக்கப்பெறுகின்றது. இங்கு தாவளம் என்பது மரப்பெயருடன் வந்துள்ளது.

**கல்வெட்டுகளில் வணிகர்களின் அறச்செயல்கள்**

கொங்கு நாட்டுக் கல்வெட்டுகளில் கோயில்களுக்கு வணிகர்களின் அறச்செயல்கள்,

"இறைவனை எழுந்தருளச் செய்தல்
விளக்கு எரிக்க கொடையளித்தல்
அமுதுபடிக்கு பணம் கொடையளித்தல்
நெல் கொடையளித்தல்
தூண் அமைத்துக் கொடுத்தல்
பலிபீடம், உத்திரம், போதிகை அமைத்துக் கொடுத்தல்
கிணறு, செக்கு, குளம் வெட்டிக் கொடுத்தல்"

இக்கொடைகளை வணிகர்கள் காசுகளாகவும், பொருட்களாகவும் வழங்கியுள்ளனர். அதிகமாக காசுகளையே வழங்கியுள்ளனர் என்பதற்கு கொங்குநாட்டில் பல்வேறு இடங்களில் கிடைக்கப் பெறும் நாணயங்கள் சான்றாகும்.

**முடிவுரை**

கொங்கு நாட்டில் வணிகர்கள் தங்கியிருந்து வணிகம் செய்தனர் என்பதற்கு வணிகர் குழுக்களின் பெயர்களும், வணிகம் தொடர்பான சொற்களும் சான்றுகளாக அமைகின்றன. வணிகர்கள் கொங்கு நாட்டில் வசணிகம் செய்தோடு மட்டுமல்லாமல் ஏராளமான கோயில்களை எழுந்தருளச் செய்து அவற்றிக்குப் பல நிவந்தங்களையும் அளித்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

**துணைநூல்கள்**

1. வ.சுப. மாணிக்கம் (உ.ஆ) - திருக்குறள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, மறுபதிப்பு-2000
2. முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன், அகநானூறு மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட், சென்னை - 600098.
3. ஔவை சு. துரைச்சாமிப்பிள்ளை, முனைவர்.கதிர்முருகு - சங்க இலக்கியம் மூலமும் உரையும், அகநானூறு, சாரதா பதிப்பகம், சென்னை - 600014.
2. பேராசிரியர் ஜே. தர்மராஜ், டாக்டர் த. எபிஜேம்ஸ், கல்வெட்டியல், டென்சி பப்ளிகேஷன்ஸ், சிவகாசி, ஐந்தாம் பதிப்பு – 2014.
3. முனைவர். சுப்புராயலு, தமிழ்க் கல்வெட்டியலும் அதன் வரலாறும், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், முதற்பதிப்பு - 2001.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019

Available at: www.ijtlls.com



4. வை. சுந்தரேச வாண்டையார், (அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் துறையின் முன்னாள் கல்வெட்டு ஆராய்ச்சியாளர்), 30 கல்வெட்டுகள், 25, பீட்டர்ஸ் சாலை, சென்னை - 600004. முதற்பதிப்பு - 1958.

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தொல்பொருள் சமயக்குறிப்புகள்
# Religious Archaeological Inscriptions

**அ.கீதா,** ஆய்வியல் நிறைஞர்,

தமிழாய்வுத்துறை, பிஷப் ஹீபர் கல்லூரி, திருச்சி.

## Abstract

*The gist of the study is to decipher the evidences of Tamil society through the religious inscriptions from the ancient times of the Tamil society. The article explains about religion in general, the types of religion and its impact on the Tamil society and culture. It evinces the inscriptions from artefacts and relics to tell about the glorious religions such us Saiva, Vaisnava, Samana and Budddist religion and the evidences related to it. Through the samples, the study putforth the ethical values followed by the people.*

**Keywords:** Religion, Archaeology, Inscription, Tamil Culture, Tradition

### முன்னுரை

நம்பிக்கை இல்லாமல் மனிதன் வாழ முடியாது. ஒரு குறிப்பிட்டட நம்பிக்கை எப்படி ஏற்பட்டதுஎன்பதை மனிதன் தன்னையும், வரலாற்றையும் தோண்டி பார்ப்பது கூடத் தேவைப்படுகிறது. இத்தகைய மனிதனிடம் இறைநம்பிக்கை காலங்காலமாக நிலவி வருகிறது. இதுவே பிற்காலத்தில் சமயம் என நிறுவனமாக்கப்படுகிறது. சமயங்கள் மூடநம்பிக்கை என முழுவதுமாக மறுக்க முடியாது. எந்த ஆதாரததின் அடிப்படையில் இவை மக்களின் வாழ்வில் அங்கம் வகிக்கின்றன என்பதை ஆராயும் போது வரலாற்றுச் சூழலே சமயங்கள் தோன்ற ஏதுவாக அமைவதை நாம் அறியலாம். அந்தவகையில் வரலாற்று அடிப்படையில் அறிய உதவும் கல்வெட்டுகள், செப்பேடுகள், சிற்பங்கள், செம்புச் சிலைகள் ஆகியவற்றின் மூலம் அறியலாகும் சமயக்குறிப்புகளை ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

### சமயங்கள்

மனிதனை நன்னெறிப்படுத்தத் தோன்றியவையே சமயங்கள். தோடக்கக்காலத்தில் ஆதிகால மனிதன் இயற்கையைத் தொழத் தொடங்கினான். தீ, காற்று, நீர், மின்னல், இடி ஆகியவற்றை அச்சம் காரணமாகத் தொழுததே பின் சமயமாகப் பரிணமித்தது. பக்தி இல்லாமல் மனிதன் இல்லை. என்னதான் மனிதன் பகுத்தறிவு என்று பேசிளாலும் மனிதனுக்குள் அறிவு இயக்கத்தோடு உணர்வ இயக்கமும் இருக்கத்தான் செய்கிறது. இதை மனிதனிடமிருந்து எந்தவொரு காலத்திலும் நீக்கிவிட முடியாது. காதல் உணர்வு முதல் அருள் உணர்வு வரை மனிதனின் இயல்பாக மாறிவிட்டன பல உணர்வுகள் தேசம்இ காலம்இ மக்களின் பழக்க வழக்கங்கள், அரசு மற்றும் தனியுடைமை ஆகியவையும் சமய உருவாக்கத்தினுள் செயல்ப்டிருக்க வேண்டும். மனிதர்களின் தேவைகள், ஆர்வங்கள், சிக்கல்கள் இதீர்வுகள் முதலியவற்றின் கலப்பில்லாமல் சமயங்கள் உருவாகிவிடுவதில்லை. வேற்றுமையில் ஒற்றுமை காணும் நம் இந்திய திருநாட்டில் தொண்மையான சமயங்களாக வைதீக மதமும்இ சமண மதமும்இ பௌத்த மதமும் செல்வாக்குடன் திகழ்ந்தன. வைதீக

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

மதம் சைவம்இ வைணவம் எனும் இருபெரும் பிரிவுகளை உடையது. பௌத்த மதம் மகாயானம், தேரவாதம், வச்சிராயணம் ஆகிய பகுப்புகளை உடையது.

**வைதீக சமயம்**

சைவம், வைணவம், சாக்கதம், கௌமாரம், காணபத்தியம், ஸ்மார்த்தம் ஆகிய ஆறு பிரிவுகளை உடையது வைதீக சமயம். ஆனால், இவற்றில் முதன்மை பெறுவது சைவமும் வைணவமும் ஆகும்.

**சைவம்**

சிவனை முழுமுதற்கடவுளாகக் கொண்ட சமயமே சைவ சமயமாகும். பக்தி காலத்திலேயே சைவம் மேலோங்கியது ஆயினும், சங்ககாலத்திலேயே சிவனின் இயல்பானது

*"ஏற்றுவலன் உயரிய எரிமருள் அவிர்ச்சடை*
*மாற்றரும் கணிச்சி மணிமிடற்றோனும்"* (1) (புறம்-56)

*"நன்றாய்ந்த நீள்நிமிர் சடை முதுமுதல்வன்"* (2) (புறம்-166)

என்றும் வருணிக்கப்படுகிறது.

சிவ வழிபாடு பன்னெடுங்காலமாக நிலவி வருகிறது என்பதை சிந்து சமவெளி அகழாய்வுகள் நமக்கு உணர்த்துகின்றன. ஆரியர்கள் இந்தியாவிற்கு வருவதற்கு முன்பு பரதக் கண்டம் முழுவதும் திராவிடர்களே வாழ்ந்து வந்தனர். உலகின் மிகப் பழமையான நாகரிகங்களுள் ஒன்றாக இடம்பெறும் சிந்து சமவெளி நாகரிகத்தைத் தோற்றுவித்தவர்கள் திராவிடர்களே ஆவர். 'சிந்து சமவெளியில் இலிங்க உருவங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன' (3) (தமிழக வரலாறும் பணிபாடும்-பக்-34) என்று கூறும் டாக்டர் ஆ.இராமகிருட்டிணனின் கூற்றை நோக்கின் சிவ வழிபாடு அங்கு பரவலாக இருந்ததை அறியலாம்.

சங்க காலத்தில் காதலும், வீரமும் பெற்றிருந்த இடத்தை சமயங்கள் பெறவில்லை. களப்பிரர் ஆட்சிக்குப் பின் தமிழ் இலக்கியம் நீதி இலக்கியமாக பரிணமித்தது. பல்லவர் ஆட்சியில் வீறுகொண்ட பக்தி இயக்கத்தாலே கலைகளும் வளர்ந்தன. "லிங்கத்தை வழியடுகின்ற குணபரன் என்ற பெயர் கொண்ட அரசன் அந்த லிங்கத்தினால் புறச்சமயத்திலிருந்து திரும்பிய ஞானம் உலகத்தில் நீண்டநமள் நிலைப்பதாகுக" (4) (தமிழக வரலாறும் பண்பாடும் -பக்- 136) எனத் திருச்சிக் கல்வெட்டு சைவ சமய எழுச்சியை விளக்குகிறது. அப்பர் மூலம் சைவம் தழுவிய குணபரனாகிய முதலாம் மகேந்திரவர்மன் மற்றும் நரசிம்மவர்மன் ஆகியோர் சைவ சமயத்திற்கு பெருந்தொண்டு ஆற்றினர். முதலாம் நரசிம்மவர்மன் ஒரே கல்லைக் கோவிலாக அமைத்த பஞ்சபாண்டவர் ரதங்களில் தருமராசனின் தேரும், அருச்சுணன் தேரும் சிவன் கோவில்களாகும். கற்சிலைகளில் கங்கையணிந்த சிவன் சிலை தலைசிறந்ததாகும்.

கட்டிடக் கலையீன் மிகப்பெரிய படைப்பாகக் கருதப்பெறும் காஞ்சி கைலாசநாதர் கோவிலில் சிவன்-உமை திருமணம், சிவன் முப்புரம் எரித்த வரலாறு, சிவன் அமர்ந்திருந்த கயிலாய மலையை இராவணன் பெயர்த்தல், சிவன் எமனை உதைத்தல், சிவன் நால்வருக்கும் அறம் உரைத்தல் ஆகியவை சிற்பங்களாக வடிக்கப்பட்டு உள்ளன.

அவர்களைத் தொடர்ந்து சோழர்களும் சைவ சமயத்திற்கு தொண்டாற்றியுள்ளனர். ஆவர்களின் படைப்புகளுள் விஜயாலயச் சோழீச்சுரம், கன்னனுனார் பாலசுப்பிரமணியர் கோவில், மூவர் கோவில், தஞ்வசப் பெருவுடையார் கோவில், கங்கை கொண்ட சோழீச்சுரம் ஆகியவை முக்கியமான கலைப் படைப்புகளாகும்.

திராவிடக் கலைமுறையைப் பின்பற்றி அமைக்கப்பட்ட பண்பாட்டுச் சின்னமாகத் திகழும் முதலாம் இராசராசனால் கட்டப்பட்ட தஞ்சைப் பெரியக் கோவில் பிற்காலச்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

சோழர்களின் சிற்பக் கலைத்திறனுக்கு சிறந்த எடுத்துக்காட்டாகும். தென் இந்தியாவில் உள்ள மிகப்பெரிய நந்திகளுள் ஒன்றாகத் தஞ்சைப் பெரியக் கோவிலிலுள்ள நந்தி திகழ்கிறது.

தட்சிணமேரு எனப்படும் விமானம் 190 அடி உயரமுடையது. 13 அடுக்குகளை உடைய இதன்மீது 80 டன் எடையுள்ள கருங்கல் போடப்பட்டு 2926 கழஞ்சு பொன் போர்த்தப்பட்டுள்ளது. “திராவிடக் கைவினைஞர்களின் ஈடுஇணையற்ற கலைப்படைப்பாக இவ்விமானம் இந்தியக் கட்டிடக் கலையின் உரைக்கல்லாகத் திகழ்கிறது” (5) (தமிழக வரலாறும் பண்பாடும்- பக்-204) என்று பெர்சி பிரவுன் தஞ்சைப் பெரிய கோவிலின் விமானத்தைப் புகழ்ந்து உரைப்பார். சைவ சமயப் பிண்ணனியில் அமைந்த பல ஓவியங்கள் கோவில் சுவர்களுக்கு எழிலூட்டுவதாக உள்ளன. செப்புத் திருமேனிகளின் பொற்காலம் எனப் போற்றப்படும் சோழர்காலச் செப்புத் திருமேனிகளில் தில்லை நடராசரின் உருவம் தலைசிறந்ததாகும்.

நாயக்கர்கள் ஆட்சிக்காலத்திலும் சைவ சமயம் தழைத்தோங்கியே இருந்தது. திருககுற்றாலச் சித்திர சபையும், தில்லை சிவகாமியம்மன் ஓவியங்களும் நாயக்கர்களின் படைப்புகளே.

இவ்வாறாக சைவ சமயக் கூறுகளைத் தொல்பொருட்கள் மூலம் அறியலாம்.

**வைணவம்**

“மாயோன் மேய காடுறை உலகமும்” (6) (தொல்.பொருள்-5)

ஏன்று அண்பின் ஐந்திணைகளுள் ஒன்றான முல்லை நிலத்தின் தெய்வமாகப் போற்றப்படும் திருமாலை முழுமுதற் கடவுளாகக் கொண்டதே வைணவ சமயம். இது சங்ககாலம் முதலே தமிழகத்தில் செல்வாக்கு செலுத்தி வருகிறது. திருமாலின் அவதாரச் செய்திகள் பல சங்க இலக்கியத்துள் இடம்பெறுகின்றன.

“மாயோன் அன்ன மால்வரைக் கவாஅன்
வவாலியோன் அன்ன வயங்குவெள் அருவி”(7) (நற்றிணை-32)
“நனைந்தலை உலகம் வளைஇ நேமியொடு
வுலம்புரி பொறித்த மாதங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல் போல” (80 (முல்லைப் பாட்டு வரி 1-3)

இதன் மூலம் மாயோன் வழிபாட்டின் முக்கியத்துவத்தை உணரலாம். சங்கத் தமிழர்கள் மண், கல், மரம், தந்தம் ஆகியவற்றால் அழகிய சிற்பங்களை அமைத்தனர். தச்சர்கள் வீடுகளின் உத்தரக் கற்பலகைகளில் திருமகளின் உருவத்தை மிகுதியாக செதுக்கினர். பல்லவர்களின் கலைக்கூடமான மாமல்லபுரத்தில் உள்ள மும்மூர்த்தி மண்டபத்தின் மூன்றாவது குகையில் திருமால் சங்கு சக்கரமேந்தி நிற்பதாக வடித்த சிற்பம் பேரெழில் மிக்கதாகும்.

மாமல்லபுரப் பாறையில் கண்ணன் கோவர்த்தகிரியைத் தூக்கி நிற்பதாக உள்ள கற்சிலை போற்றுதற்குரிய படைப்பாகும். கோவர்த்தன மலையின் கீழுள்ள மக்களின் கவலையும், தெளிவும் கலந்துள்ள ஆவர்தம் மனநிலையை பிரதிப்பலிப்பதாக அவர்களின் முகம் அமைவதே இதன் சிறப்பு அம்சமாகும். வராக மண்டபம் எழில் மிகுந்த ஏராளமான சிற்பங்களைத் தன்னகம்தே கொண்டுள்ளது. திருமால் தன் மேலிரு கரங்களில் சங்கு சக்கரமேந்தி கீழிரு கைகளில் நிலமகளை தாங்கியவராய் காட்சியளிக்கும் சிற்பம் காணத்தக்கதாகும்.

திருமாலின் தசவதாரம் குறித்த கல்வெட்டுக்கள் ஆதிவராகர் மண்டபத்தில் உள்ளன. இங்கு புத்தர் திருமாலின் அவதாலமாகச் சுட்டப்படுகிறார். திருமகளின் சிலையோடு அரிஅரன்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

சிலை ஒன்றும் இங்குள்ளது. கடல் நோக்கி நிற்கும் அர்ச்சுணன் தவம் புரிவதாக அமைக்கப்பட்டுள்ள புடைப்புச் சிற்பம் பல்லவர்களின் முக்கியமான கலைப்படைப்பாகும். “பல்லவர் கட்டிடக் கலையின் முதிர்ச்சி பெற்ற படைப்பு காஞ்சி வைகுந்த பெருமாள் கோவிலே” (9) (தமிழக வரலாறும் பண்பாடும் பக்-164) என்று நீலகண்ட சாஸ்திரி பெரும்பகுதியை குறிப்பாக சமயநிலையை விளக்கும் சிற்பங்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது.

சோழர் காலத்தில் சிவபுராணம், இராமகாதை போன்ற புராண இதிகாசக் காட்சிகள் தொடர்ந்து சிறுசிறு சிற்பங்களாகச் செதுக்கும் வழக்கம் மேலோங்கியது. குடந்தை கீழ்க்கோட்டத்தில் தொடர்ந்துள்ள பல சிற்பங்கள் மூலம் இராமாயணம் முழுவதும் சித்தரிக்கப்பட்டு உள்ளது. திருவரங்கக் கோவிலில் கண்ணன் மீது மையல் கொண்ட ஆயர்குலப் பெண் நினைவிழந்து ஆடையை நெகிழவிடஇ அவள் தோழியால் நினைவு வரப்பெற்றவளாய் நாணி நிற்கும் காட்சி எழில் வாய்ந்த சிற்பமாகச் சித்தரித்துக் காட்டப்பட்டு உள்ளது. இவ்வாறாக, வைணவ சமயக் கூறுகள் தொல்பொருட்களில் காணக்கிடைக்கின்றன.

**சமணம்**

இந்திய நாட்டின் மிகப் பழமையான சமயங்களில் சமண சமயமும் ஒன்று. இது பாரதம் முழுவதும் பரவியிருந்ததை “Tamil or Dravida was not merely the language of South India, but before the Aryan came, it was the language of whole India) and was spoken from Kasmir to Capecomorin” (10) (குமரி நாட்டில் சமணம்-பக்-1) என்று அம்பேத்கர் கூற்றின் மூலம் அறியலாம். தமிழகத்தைப் பொறுத்தவரை சமண சமயம் சங்க காலத்திலிருந்தே வழக்கில் இருந்தது. தமிழகத்திலுள்ள மலைகள் அனைத்திலுமே சமணர்கள் வசித்துள்ளனர்.

சுமணர்களின் கயிலாயமாகத் திகழ்வது திருமலை என்னும் திருத்தலம் ஆகும். இது திருவண்ணாமலைக்கு அருகில் உள்ளது. 16.5 ஆடி உயரமுடைய நேமிநாதர் திருவுருவம் பாறையில் பெரிதாகச் செதுக்கப்பட்டுள்ளது. இகிகோவிலை சோழ மன்னர் குடும்பத்தில் உதித்த குந்தவை அம்மையார் உருவாக்கினார் என்பதால் ‘குந்தவை ஜீனாலயம்’ என்று பெயர் பெற்றது. திருப்பான் மலையில் தியானத்திலிருக்கும் சமணரின் உருவம் சிற்பமாக வடிக்கப்பட்டு உள்ளது. இதன் அருகிலுள்ள கற்பாறையில் தாமரை மலர் ஏந்திய பொன்னியக்கி, நாகநந்தி உருவம் செதுக்கப்பட்டு அதன் அருகில் “நந்திப் போத்தரசற்கு ஐம்பதாவது நாகநந்தி குரவர் இருக்க பொன்னியக்கார் படிமக் கொத்துவித்தான் புகழானை மங்கலத்து மருத்துவன் மகன் நாரணன்” (11) (குமரி நாட்டில் சமணம் பக்-23) என்ற கல்வெட்டும் காணப்படுகிறது.

விஜயமங்கலத்தில் அமணேஸ்வரர் கோவில் எனப்படும் சந்திர பிராபர் கோவில் மற்றும் குஸ்மாண்டிவி ஏணம் இயக்கியின் ஆலயமும் உள்ளது. இங்கு ஆதிநாதர் வாழ்க்கை வரலாற்றை விவாதிக்கும் சிற்பங்கள் பல உள்ளன. விழுப்புரம் அருகிலுள்ள சமணத் தலமாகிய திருநறுங்கொண்டையில் உள்ள சமணத் தலத்திற்கு கிபி 11ம் நூற்றாண்டு வரை நிவந்தங்கள் அளிக்கப்பட்டதை “திருமேனி நறுங்கொண்டை மேலைப்பள்ளீ வீர நந்தி அடிகள் செய்வித்தவை” (12) (குமரி நாட்டில் சமணம் பக்-56) கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன. வீடூரில் சோழர் காலச் சிற்பங்கள் பல உள்ளன. அவற்றுள் ஆதிநாதர், அவரது இயக்கன் கோமுக யட்சன், இயக்கி சக்ரேஸ்வரி ஆகியோரின் சிற்பங்கள் பல உள்ளன. “மேனச்சி நாட்டியச் சாத்தன் செய்வித்த திருமேனி” (13) (குமரி நாட்டில் சமணம் பக்-55) என்ற கல்வெட்டு இடம்பெறும் கழுகுமலையில் ஆதிநாதர்இ பார்கவ நாதர்இ பாகுபலி ஆகியோரின் சிற்பங்கள் உள்ளன.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

இவ்வாறு தமிழக மக்களின் நெறியாகத் திகழ்ந்த சமண சமயம் சைவ வைணவ எழுச்சியால் வீழ்ச்சியுறத் தொடங்கியது. தமிழகத்தில் நிகழ்ந்த சமயப் போரில் சமணர்கள் கழுவேற்றப்பட்டமைக்கு இன்றும் சான்றாகத் திகழ்பவை கழுவன் திட்டைஇ கழுவன் திட்டுஇகழுவன் தட்டு போன்ற இடப்பெயர்களும் மீனாட்சியம்மன் கோவில் உள்ளிட்ட சைவ கோவில்களில் சிற்பமாக சமணர்கள் கழுவேற்றப்பட்ட காட்சி செதுக்கப்பட்டுள்ளது.

**பௌத்தம்**

இந்தியாவில் தோன்றி உலகம் முழுவதும் புகழ்பெற்ற சமயமே பௌத்த சமயம். இதைத் தோற்றுவித்தவர் கௌதம புத்தர் ஆவார். கி.மு. 2ம் நூற்றாண்டில் தமிழகத்தில் நுழைந்த பௌத்த சமயம் கி.பி 10ம் நூற்றாண்டு வரை வெகுவாக மக்களால் பின்பற்றப்பட்டது. கி.பி 13ம் நூற்றாண்டிற்குப் பின்னரே இது முற்றிலும் மறைந்தது..

திருவரங்கநாதர் திருக்கோவில் மற்றும் திருவேங்கடமலையில் புத்தர் உருவங்கள் சிற்பங்களாக உள்ளன. மாமல்லபுரத்திலுள்ள பஞ்சபாண்டவர் ரதங்களீல் சகாதேவனின் தேர் புத்தப்பள்ளி அமைப்பை உடையது. புதுக்கோட்டையை ஆடுத்துள்ள ஆலங்குடிப் பட்டியில் 3அடி 6 அங்குலம் உயரமுள்ள புத்தர் சிலை கண்டெடுக்கப்பட்டு உள்ளது. முதலாம் இராசராசன் ஆணைமங்கலம் என்ற ஊரை நாகையிலுள்ள புத்த விகாரத்திற்கு பள்ளிச்சந்தமாக அளித்ததை சோழர் காலக் கல்வெட்டுக்கள் மூலம் அறியலாம். குலோத்துங்கனின் கல்வெட்டுக்கள் அவன் நாகப்பட்டினத்திலுள்ள புத்த விகாரத்திற்கு இறையிலி நிலங்கள் அளித்ததைக் கூறுகின்றன.

தமிழகத்திலுள்ள பௌத்தக் கோவில்கள் இந்துக்கள் கோவில்களாக மாற்றப்பட்டு உள்ளன. ஆதிகேசவ பெருமாள் கோவிலில் மூன்று புத்தர் சிலைகள் உள்ளன. அரிக்கமேட்டில் 4அடி உயரமும் 2அடி அகலமும் உடைய புத்தர் சிலை உள்ளது. சோழர்கால சிற்பமாக கணிகிலுப்பை என்னும் ஊரிலும் புத்தர் சிலை கண்டெடுக்கப்பட்டு உள்ளது. ஆணைமங்கலச் செப்பேடும்இ வேள்விக்குடிச் செப்பேடும் தமிழகத்தில் பௌத்த சமயத்தின் நிலையை விளக்குகின்றன.

**முடிவுரை**

கலைகளைப் போற்றாத சமண, பௌத்த சமயங்களை விட கலைகளைத் தன்னுள் அங்கமாக்கிக் கொண்டனவாய் சைவ, வைணவ சமயங்கள் விளங்கின. இவை வீறுகொண்டு எழவே சமண, பௌத்த சமயத்தின் எச்சங்களை இந்து சமயம் தனதாக்கிக் கொண்டது.

**பார்வை நூல்கள்**

1. இராமகிருட்டிணன்.ஆ. *தமிழக வரலாறும் பண்பாடும்*, சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை-625 001.
2. காசிநாதன். நடன. *தமிழர் தெய்வங்கள்*, தென்றல் நிலையம், சிதம்பரம் -608 001.
3. சுப்பிரதணியன் ச.வே. *தொல்காப்பியம்* (தெளிவுரை), மணிவாசகர் பதிப்பகம், சென்னை -600 018.
4. தட்சிணாமூர்த்தி.அ. *தமிழர் நாகரிகமும் பண்பாடும்*, யாழ் வெளியீடு, சென்னை -600 040.
5. புலியூர்கேசிகன். *புறநானூறு* (தெளிவுரை), கங்கை புத்தக நிலையம்,சென்னை -600 017.
6. விவேகானந்தன்.சிவ. *குமரி நாட்டில் சமணம்*, காவ்யா பதிப்பகம், சென்னை -600 024.
7. வேங்கடசாமி.மயிலைசீனி. *சமயங்கள் வளர்த்த தமிழ்*, ஸ்ரீ குமார் அசோசியேட்ஸ், சென்னை -600 014.

**E-ISSN: 2581-7140**

**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

8. வேங்கடசாமி. மயிலை சீனி. தமிழ் வளர்த்த வைணவம், மீனா பதிப்பகம், சென்னை 625 019.
9. வேங்கடசாமி. மயிலை சீனி. *பௌத்தமும் தமிழும்*, மீனா கோபால் பதிப்பகம், சென்னை-600 085.
10. http//roar media,tamil,history,scripture and architecture works of Buddhism in tamilnadu.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# செய்யாறு வட்டக் கல்வெட்டுகளால் அறியப்படும் தகவல்கள்
# Evidences Evinced through the Culverts of Cheiyyar

**இரா.கோட்டீஸ்வரி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
இராணி மேரி கல்லூரி , சென்னை- 600004

## Abstract

*The paper evinces the religious ethical life, life style of the Tamils. Their lifestyle is a noble one. The study of this article is a study of the Tamil way of culvert edicting in the ancient times. Cheyyar is an important place in Thiruvannamalai District. There are lots of temple edicts that tells about the nobility of he people, kings and administrators under he king. The culverts and the edicts in the temples reveal a superior culture existed and existing in the society. Hence, the paper attempts an investigation of the edicts.*

**Keywords:** Evidences, Culverts, Cheiyyar

### முன்னுரை

“நல்லோர் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப் போல் காணுமே- அல்லாத
ஈரமில்லா நெஞ்சத்தார்க்கீந்த உபகாரம்
நீர் மேல் எழுத்திற்கு நேர்”

என்ற முதுரைப் பாடலின் பொருளுக்கேற்ப மனிதர்கள் தாம் பிறர்க்குச் செய்த உதவியும் அதனால் தோன்றிய புகழும் உலகில் பன்னெடுங்காலம் நிலைத்து நிற்க வேண்டுமென்ற நோக்கிலும், அவ்வறச் செயல் தம் காலத்திற்குப் பிறகு மற்றவர்களுக்கும் பயன்பட வேண்டுமென்ற நோக்கிலும், நம்மை ஆட்சிச் செய்த மன்னர்கள் பலர் அவர்கள் கட்டிய கோயில்களில் உள்ள கற்படிகளிலும், சுவர்களிலும் செய்திகளை வடித்து வைத்துள்ளனர். அவ்வாறு எழுத்துடன் கூடிய கற்களைக் கல்வெட்டுக்கள் என அழைக்கின்றனர்.இவை நம் நாட்டின் பண்டைய வரலாற்றினை அறிவதற்கு மாற்ற முடியாத உண்மை ஆதாரங்களாக அமைகின்றன.இவற்றின் மூலம் அக்கால அரசியல் அமைப்பு, சமுதாய அமைப்பு, மக்கள் வாழ்க்கை முறை, சமயம் போன்றவற்றைப் பற்றிய தகவல்களை அறிய முடிகிறது.

### செய்யாறு வட்டக் கல்வெட்டுகள்

தமிழகத்தில் திருவண்ணாமலை மாவட்டத்தில் செய்யாறு வட்டம் அமைந்துள்ளது. இது 130 மேற்பட்ட கிராமங்களை உள்ளடக்கியது. சேயாற்றின் கரையோரம் என்பதால் இப்பகுதி வளமையாக காணப்படும். எனவே சோழ,பல்லவ மன்னர்களால் ஆட்சி செய்யப்பட்டு கோயில்கள் கட்டப்பட்டுள்ளன. இவற்றில் அரசர்கள் ஆட்சிச் செய்த சிறப்புக் குறித்தும் இவர்கள் அளித்த தானம் குறித்தும் எழுதப்பட்ட கல்வெட்டுகள் பதிக்கப்பட்டுள்ளன. திருவோத்தூர், கூழமந்தல், உக்கல், அத்தி, புரிசை ஆகிய ஊர்களில் உள்ள கோயில்களில் காணப்படும் கல்வெட்டுகள் குறிப்பிடத்தக்க வகையில் அமைந்துள்ளது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**திருவோத்தூர் வேதபுரீசுவரர் கோயில் கல்வெட்டுகள்**

செய்யாறு வட்டத்தின் தலைநகராக உள்ள செய்யாறு என்ற ஊர் திருவத்திபுரம், திருவத்தூர், திருவத்தியூர் என்று பல பெயர்களில் அழைக்கப்படுகின்றது. கி.பி.17-ஆம் நூற்றாண்டு வரையுள்ள கல்வெட்டுகளில் இவ்வூர் 'திருவோத்தூர்' என்றே அழைக்கப்பட்டுள்ளது.

திருவோத்தூர் கோயிலில் காணப்படும் மிகப் பழமையான கல்வெட்டு முதலாம் ஆதித்தன் (கி.பி.871-907) காலத்தியது ஆகும். சிதம்பரேசுவரர் சன்னதியில் தெற்கு ஜகதியில் உள்ள இக்கல்வெட்டில் சங்கரநாரணர் என்பவரின் தம்பி ஆதித்தகுட்டியார் என்பவர், தனது தமையன் பெயரில் 'சங்கரநாரண ஈஸ்வரம்' என்ற இக்கோயிலைக் கட்டியுள்ளார் என்றும் இக்கோயிலுக்கென்று நந்தவனம் ஒன்றினைத் திருவோத்தூர் சபையர் அமைத்துக் கொடுத்துள்ளனர் என்றும் எழுதப்பட்டுள்ளது. முற்காலச் சோழர் காலக் கல்வெட்டுகள் அனைத்தும் சிதம்பரேஸ்வரர் கோயில் கருவறை அதிட்டானத்திலே காணப்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.

திருவோத்தூர் வேதபுரீஸ்வரர் கோயிலில் உள்ள இராட்டிரகூட மன்னன் கன்னாதேவனின் 27-ஆம் ஆட்சியாண்டுக்(கி.பி.966) கல்வெட்டில் 'திருவோத்தூர் மகாவேர்' என்று இக்கோயில் இறைவர் அழைக்கப்பட்டுள்ளார். கி.பி.17-ஆம் நூற்றாண்டு வரையிலானக் கல்வெட்டுகளில் இக்கோயில் இறைவன் திருவோத்தூர் உடையார், திருவோத்தூர் ஆளுடையார், ஆளுடையார் திருவோத்தூருடையார், உடையார் திருவோத்தூடையார், திருவோத்தூருடைய நயினார் என்று தமிழில் ஊரின் பெயரால் காலவாரியாக அழைக்கப்பட்டுள்ளார்.

சோழ மன்னன் உத்தமசோழனின் பட்டத்து அரசியார் ஆருரன் அம்பலத்தடிகள் என்பவர் இக்கோயிலில் விளக்கெரிக்க 25 கழஞ்சுப் பொன் தானமளித்துள்ளார் எனக் கல்வெட்டுகள் சான்றளிக்கின்றன.

கி.பி.13-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கண்டகோபாலன் என்ற தெலுங்குச் சோழ மன்னன் பதித்த கல்வெட்டில் இவருடைய படைத்தளபதி பட்டமுடையார் காங்கயர் என்பவரின் பேரன் பெருமானடி நாயக்கர் என்பவர் கருவறையும், ஓடும் வேய்ந்ததாக கூறப்பட்டுள்ளது. மூன்றாம் சடையவர்மன் வீரபாண்டியனின் (கி.பி.1310) ஆட்சிக் காலத்தில் சிவனம்மை என்பவள் இக்கோயிலில் சோமநாததேவர் திருமேனியை அமைத்துள்ளான். இதுபோல் சம்புவராயர் இராஜநாராயணன் ஆட்சியின்போது (கி.பி.1350) வீரவல்லாள தேவர் என்பவர் இக்கோயிலில் அண்ணாமலையார் திருமேனி ஒன்றினை எடுத்துள்ளார், இவ்வூரில் கொற்றவைக்கு தனிக்கோயில் 'கானகரை செல்வி அம்மை' என்ற பெயருடன் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இக்கோயிலைச் சேர்ந்த தேவரடியால் சம்பா என்பவள் விசைய கண்ட கோபாலன்(கி.பி.1277) காலத்தில் இத்தலத்தைஅமைத்துள்ளார். புவனேகபாகு தேவர் என்பவர் இக்கோயிலில் பூசை செய்வதற்கான உரிமையை பெற்றிருந்தார். மேற்கண்ட செய்திகளுக்கு இராஜநாராயணன் கல்வெட்டுகள் சான்று பகருகின்றன.

15-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டில் இக்கோயிலுக்கு வரும் பக்தர்களுக்கு உணவளிக்க 'புட்பகிரி ஜீயர்' மடத்திற்கு நிலம் தானமாகக் கொடுக்கப்பட்டுள்ள தகவலும், இக்கோயிலில் பலபண்டங்கள் விற்பதற்கான உரிமை வழங்கப்பட்டுள்ள தகவலும் குறிப்பிடப்பட்டுள்ளது.இக்கோயிலுக்குப் பல்வேறு தானங்கள் வழங்கப்பட்டுள்ளன. இத்தல இறைவனுக்குப் பொன்னாலான பட்டங்கள் தானமளிக்கப்பட்டுள்ளன. பொன்னூரைச் சார்ந்த கண்ணுடையான் காரணை விழுப்பரையன் என்பவன் இரண்டுப் பட்டங்களுக்கு நூறு கழஞ்சுப்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

பொன் தானமளித்துள்ளான். இதுபோன்று பாண்டிய அரசி உலகுமுழுதுடையார் என்பவர் 'கலியுகராமன் திருத்தோள் பிரியாத திருக்காணை' என்ற தனது பெயரில் 48 கழஞ்சுப் பொன்னில் ஆன பட்டம் ஒன்றைத் தானமளித்துள்ளார். பாண்டிய மன்னன் வீரபாண்டியன் பெயரில் 'வீரபாண்டியன் சந்நதி' ஒன்றினை இக்கோயிலில் கண்டியத்தேவர் என்பவன் ஏற்படுத்தியுள்ளான். இக்கோயில் இறைவனுக்கு திருப்பள்ளித்தாமம் (பூமாலை) வழங்கிட வேண்டி அழகியசீலன் என்பவன் 520 குழி அளவு நிலத்தில் 'தப்பாமொழி' என்ற பெயரில் நந்தவனம் ஒன்றினை உருவாக்கியுள்ளான். இவ்வாறாக தானங்கள் வழங்கப்பட்டுள்ளன.

திருவோத்தூருடைய நயினார் கோயிலில்(தேவார மூவர் முதலிகளில் ஒருவரான) திருஞானசம்பந்தப்பெருமாளுக்கு சித்திரைத் திருநாள், ஆனித்திருநாள் திருவிழாக்களில் பத்தாந் திருநாளில் நிருத்த மண்டபத்தில் திருகண்சாத்து நிகழ்ச்சி நடைப்பெற்றுள்ளது. அவ்விழாவில் திருஞானம், சுகந்தம், அடைக்காயது, திருவிளக்கு ஆகியவற்றை வழங்கிட 100 பணம் அளித்து 200 குழி நிலம் ஒன்றினை வாங்கி இந்நிலத்தின் மூலம் வரும் மேல்வாரத்தினைப் பயன்படுத்திக்கொள்ள நயினார் திருச்சினை என்பவர் ஏற்பாடுச் செய்துள்ளார் என்ற செய்திக் குறித்த கல்வெட்டுகள் உள்ளன.

முற்காலச் சோழர் காலத்தில் 'கைக்கோளப்படை'அரசு படையாக விளங்கியது. இக்கோயில் உள்ள உத்தமசோழனின் கல்வெட்டில்(984) 'இரண்டு தலை பொற்கோயில் கைக்கோளப் பெரும்படை'பற்றிய குறிப்புக் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.

மன்னர்கள் தான் அறியாமல் செய்த தவறை இறைவன் மன்னித்தருள வேண்டி தானம் வழங்கியச் செய்தியும் கல்வெட்டில் உள்ளதாக கூறப்படுகிறது. சீயமுத்தரையன் விட்ட அம்பு தவறுதலாக பந்தல் என்பவன் மீது பாய்ந்து இறந்துவிட்டான். இந்த குற்றம் நீங்க ஆளுடையார் இக்கோயிலுக்கு சீயமுத்தரையன் பெயரில் தானம் வழங்கியுள்ளார். கொங்கன் செல்வமுத்தரையன் என்பவன் மிருக வேட்டைக்குச் சென்ற போது மிருகத்தின் மீது எறிந்த அம்பு தவறுதலாக புலியன் என்பவன் மீது பாய்ந்து இறந்துவிட்டான் என்ற குற்றத்திற்காக இக்கோயில் இறைவனுக்கு ஒரு விளக்கு வைக்க பதினாறு பசுக்களைத் தரவேண்டும் என்ற பன்னாட்டார் என்னும் நிர்வாக அமைப்பினரின் தீர்ப்பை ஏற்று அவ்வாறே வழங்கியுள்ளான் என்ற கல்வெட்டுகள் உள்ளன என கண்டறியப்பட்டுள்ளது.

செங்கேணி அத்திமல்ல நாயன் என்கிற இராசேந்திரசோழச் சம்புவராயன் மற்றும் இவனது தம்பி ஓதுவாந் என்கிற இராசகம்பீர சம்புவராயன் ஆகிய இருவரும் இணைந்து சீயன் பல்லவதரையன் எனும் சம்புவராயனுடன் ஓர் அரசியல் உடன்படிக்கைச் செய்து கொண்டனர். அத்தியாண்டான் என்கிற விக்கிரமசோழ சம்புவராயன் என்பவனுடன் ஒருபொழுதும் உறவு கொள்ளமாட்டோம் என்றும் அத்தியாண்டானை எதிர்க்கும் பொழுது தங்கள் பகையாகக் கருதி எதிர்ப்போம் என்று உறுதியளித்து உடன்படிக்கை எழுதிக்கொடுத்துள்ளனர் என்ற தகவல்கொண்ட கல்வெட்டும் இக்கோயிலில் உள்ளதாக கூறப்படுகிறது.

**அத்தி**

அத்தி என்னும் இவ்வூர் செய்யாறு வட்டத்தில் வந்தவாசி அருகில் உள்ளது. இங்கு அத்தீஸ்வரர் ஆலயம் அமையப் பெற்றுள்ளது. இது ஒரு தேவார வைப்புத் தலமாகும். இக்கோயிலில் கல்வெட்டுகள் பல உள்ளன. 1242-ஆம் ஆண்டு மூன்றாம் ராஜராஜ சோழ மன்னன் என்பவர் இக்கோயிலைக் கட்டியுள்ளார். இத்தலத்தில் தினமும் நெய் தீபம் (நந்தா விளக்கு) எரிய வேண்டும் என்பதற்காக 31 பசுக்கள், ஒரு பொலிக் காளை மற்றும் ரிடபம் வாகனமான ஒரு காளையும் வழங்கியுள்ளான் என்றும் இக்கோயிலின் பெருமையை அறிந்த நடுநாட்டு மன்னன் கோப்பெருஞ்சிங்கன் இந்த ஆலயத்திற்கு நிலதானம் அளித்துள்ளதாகவும்,

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

விஜயநகரப் பேரரசர்கள் திருப்பணிகளைச் செய்துள்ளதாகவும் கல்வெட்டுகளில் பதியப்பட்டுள்ளன.

**கீழ்குளத்தூர்**

வந்தவாசி செய்யாறு சாலையில் அமைந்துள்ள இவ்வூரில் அகத்தீவர மகாதேவர் கோயில் அமைந்துள்ளது. இக்கோயிலில் காணப்படும் கல்வெட்டுகளிலிருந்து பெறும் செய்திகளாக முதலாம் இராசேந்திர சோழன் (கி.பி.1012-1044) காலத்தில்கட்டப்பட்டிருக்க வேண்டும் என அறிய முடிகிறது. இவரின் மைந்தனான முதலாம் இராஜாதிராஜன் (1018-1065) காலத்தில் 5,7 ஆம் ஆட்சி ஆண்டுக் காலங்களில் வழங்கப்பட்ட கொடைகளைப் பற்றிய குறிப்புகள் கல்வெட்டுகளில் காணப்படுகிறது. மேலும் இவ்வூரின் தெற்கில் ஏரி ஒன்று உள்ளது,இதன் கரையில் 15-16 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தெலுங்கு எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட கற்பலகை நடப்பட்டுள்ளது, இருபக்கங்களிலும் எழுத்துக்கள் காணப்படுவதால் தம்ழ்நாடு அரசு தொல்லியல் துறை கல்வெட்டாக ஆராய்கின்றனர். ஆனால் ஊர் மக்கள் இதனை செல்லியம்மனாக வழிபடுகின்றனர்.

‘தென்னூர் கைம்மைத் திருச்சுழியற்றிருக் கானப்பேர்
பன்னூர் புக்குறையும் பரமற்கிடம் பாய்நலம்
என்னூர் எங்கள்பிரான் உறையுந்திருத் தேவனூர்
பொன்னூர் நாட்டுப் பொன்வார்புரிசை நாட்டுப்புரிசையே’

என்று சுந்தரமூர்த்தி நாயனாரால் பாடப்பட்ட தேவார வைப்புத் தலம் புரிசைக் கோயிலாகும். இத்திருக்கோயில் கல்வெட்டுகளிலிருந்து சுமார் 1500 ஆண்டுகளுக்கு முற்பட்ட கோயில் என்பது தெரிய வருவதாகவும் காலப்போக்கில் சிதிலும் அடைந்துவிட்ட இக்கோயில் என்பது 700 ஆண்டுகளுக்கு முன் புதுப்பித்துக் கட்டப்பட்டதாகவும் கூறுகின்றனர். அதற்கான கல்வெட்டுகள் கோயிலைச் சுற்றிலும் காணப்படுகின்றன.

கூழமந்தல் கல்வெட்டு
‘ஸ்வஸ்திஶ்ரீ திரிபுவநசகர் வத்திகள்
ஶ்ரீவிஜய கண்ட
கோபாலற்குயாண்டு இருபது காலியூற்
கோட்டத்து கூவழன
பந்தலான விக்கிரம சோழபுரத்து பேசும்
பெருமாள் கோயில
காணியுடைய உறபலியாந்தன்
நூற்றிவுடையான
சொற்பார்பணிபந்தல்

பேசும் பெருமாள் நின்ற திருக்கோலத்தில் காட்சியளிக்கின்ற ஊர் கூழமந்தலாகும். இத்தலத்தில் உள்ள கல்வெட்டு முதலாம் இராஜேந்திர சோழனால்(கி.பி 1012-1044) கட்டப்பட்டுள்ளது என சான்றளிக்கிறது.ஶ்ரீவிஜய கண்ட கோபாலன் கி.பி.1270-ஆம் ஆண்டு இக்கோயிலுக்கு வந்து இங்குள்ள பெருமாளிடம் பேசியதாகவும் அதற்கு ஆதாரமாக இரண்டு வாயிற்படி நிலைகால்களில் கல்வெட்டுகள் பதிக்கப்பட்டுள்ளன.

இவ்வூரில் கங்கை கொண்ட சோழீச்சுவரம் என்ற சிவன் கோயிலும் உள்ளது. பெருமாள் கோயில் கட்டப்பட்ட காலத்தில் கற்றளியாக அமைக்கப்பட்டுள்ளது.

“கோப்பரகேசரிபத்மரான நுடையார்
ராஜேந்திர தேவர்க்கு யாண்ட

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

எட்டாவது ஜயங்கொண்டசோழ
மண்டலத்துகாலியூர்க் கோட்டத்த
பாகூர் நாட்டு நகரம் விக்கிரம
சோழபுரத்துக் கூடிநாநாதேச
இசையாயிரத்தை போற்றுவர்''

ஏன்ற தகவலையுடைய கல்வெட்டில் இவ்வூர் விக்கிரம சோழபுரம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு சிவன் கோயிலில் காணப்படுகிறது.

**உக்கல்**

கூழமந்தலுக்கு கிழக்கில் மூன்று கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. பல்லவ மன்னனான கம்பவர்மனின் (கி.பி.869-901) காலத்தில் இவ்வூருக்கு 'உட்கல்' என்ற பெயர் வழங்கிவந்தமையை இவனுடைய 10 ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு புலப்படுத்துகிறது. முதலாம் ஆதித்தியசோழனின் 23 ஆம் ஆட்சியாண்டு காலத்தில்'சிவசூளாமணிச் சதுர்வேதி மங்கலமான அபராஜித சதுர்வேதி மங்கலம்' என்ற பெயர் வழக்கிலிருந்துள்ளது. அடுத்து வந்த பராந்தக சோழனின் சிறப்புப் பெயரின் அடிப்படையில் ஸ்ரீவிக்கிரமாபரண சதுர்வேதி மங்கலம்' என்ற பெயர் வழக்கில் இருந்துள்ளது

உக்கல் கல்வெட்டுகளில் தனியூராக இராசராசசோழன் காலம் முதல் இருந்துள்ளது. ஆவூர்க் கூற்றுத்து ஆவூரைச் சேர்ந்த கண்ணன் ஆருரன் உக்கல் பெருவழியில் கிணறு அமைத்து நீர்த் தொட்டியும் தண்ணீர் பந்தலும் அமைத்துள்ளான். முதலாம் இராசேந்திர சோழன் காலத்தில் இவ்வூர் ஏரி துர்ர்வாரப்பட்டுக் கரைகள் உயர்த்தப்பட்டுள்ளன. துார்வார ஓடங்கள்(படகுகள்) கொடை கொடுக்கப்பட்டுள்ள செய்தியைக் கல்வெட்டுகள் காட்டுகிறது. ஏரியைப் பராமரிக்க ஏரி வாரியம் ஒன்றும் செயல்பட்டிருக்கிறது.

தெலுங்கு சோழன் கண்டகோபாலன் காலத்தில் நிலம் வாங்கிய செய்தி சொல்லப்படும் போது நிலவிளை 230 கண்ட கோபாலன் மாடை என்ற பணத்திற்கு இணையானது 1725 வராகன் பணம் என்று சொல்லப்பட்டுள்ளது. மேற்கண்ட கல்வெட்டுகள் அனைத்தும் புவன மாணிக்க பெருமாள் கோயிலில் காணப்படுகிறது. திருவாய் மொழித் தேவரைப் பற்றியும் இவ்வூர் வைத்தியநாத சுவாமிகள் கோயிலில்''திருவாய்மொழித் திருப்பதிகம்'' அநுசந்திப்பது பற்றியும் முதலாம் ராஜராஜசோழன் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வூரைச் சேர்ந்த குமாரகாலன் வாசுதேவனான அதிசயசோழன் கல்லால் கோயில் எடுத்ததை மற்றொரு கல்வெட்டில் பதியப்பட்டுள்ளது.

**முடிவுரை**

செய்யாறு வட்டத்தில் 20க்கும் மேற்பட்ட ஊர்களில் பழங்கால கல்வெட்டுகள் உள்ளன. இவற்றில் திருவோத்துார், புரிசை,அத்தி, கீழ்குளத்துார், கூழமந்தல், உக்கல் போன்ற ஊர்களில் புகழ்பெற்ற திருத்தலங்கள் அமைந்துள்ளதால் இக்கல்வெட்டுகள் சிறப்பான முறையில் பராமரிக்கப்படுகின்றன. மேற்கொண்டு ஆய்வும் செய்து வருகின்றனர்.

**ஆதாரங்கள்**

1. தமிழ்நாட்டுக் கல்வெட்டுகள்-11, திருவண்ணாமலை மாவட்டக் கல்வெட்டுகள்-தொகுதி-1.
2. தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை-600008.
3. கல்வெட்டு காலாண்டிதழ்-67, சூலை(2005) தமிழ்நாடு அரசு, தொல்லியல் துறை.
4. உக்கல் கல்வெட்டுச் செய்திகள், இரா.செல்வராசு (தொல்லியல் அலுவலர் சிதம்பதம்)

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019
Available at: www.ijtlls.com


# தமிழகத்தில் தொல்லியல் ஆய்வு ஓர் பார்வை
# A Survey on Archaeology in Tamil Nadu

**முனைவர்.தி.சண்முகராஜா,** கௌரவ விரிவுரையாளர், இந்தியப்பண்பாட்டுத்துறை,
அருள்மிகு பழனியாண்டவர் கலை மற்றும் பண்பாட்டுக்கல்லூரி,பழனி.

## Abstract

*The study gives a close analysis on the archaeological surveys done in Tamil Nadu. The article explains the role of archaeology and the lofty past of the Tamil culture. It brings down the ages of Tamil culture and the methods used by the department of archaeology to define the facts evolved from it. The studuy scrutinizes the site relics to decode the similarities and the antiqueness of the civilization. It also suggests the regions near to Palani for survey.*

**Keywords:** Survey, Archaeology, Tamil Nadu

**முன்னுரை**

பழந்தமிழ் மக்களின் வாழ்க்கை முறையையும், பொருளாதார மேம்பாட்டினையும். கலை மற்றும் பண்பாடு குறித்த செய்திகளையும், கைத்தொழில் திறத்தையும், அறிய பல அரிய ஆதாரங்களையும் தருவது தொல்லியல் ஆய்வுகளே. இதுவரையிலும் தெரியாத பல உண்மைகளை இந்த அகழாய்வுகள் புலப்படுத்தியுள்ளன. முதுமக்கள் தாழிகள், கற்கருவிகள், கலைநயமிக்க சுடுமண்பொம்மைகள், இரும்புக்கருவிகள், உலோகப்பொருள்கள், மூவேந்தர்களின் வரலாற்றையும், கட்டுவித்த கோயில்களையும், அக்கோயிலுக்கு செய்த தானங்களையும் அறிய துணைபுரியும் கல்வெட்டுக்களையும், பழந்தமிழ் எழுத்துக்களை அறிந்திடவும் துணையாய் இருப்பது இத்தொல்லியல் அகழாய்வுகளே. தமிழகத்தின் வரலாற்றுத்தொன்மையை அறிந்துகொள்ள இதுவரை நடந்த தொல்லியல் ஆய்வுகளையும், அதன்மூலம் தமிழக மக்களின் பண்பாட்டு நிலை, வாழ்க்கை முறை, தொழில் போன்றவற்றைப்பற்றி அறிவதுடன் மேற்கொண்டு தமிழகத்தில் தொல்லியல் எச்சங்கள் இருக்கும் இடங்களில் தொல்லியல் அகழாய்வு செய்து தமிழகத்தின் தொன்மையை உலகத்திற்கு அறிவுறுத்திட வலியுறுத்துவதும் இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**தமிழகத்தில் தொல்லியல் ஆய்வுகள்**

தொல்லியல் ஆய்வுகள் ஒரு நாட்டின் பழமையான வரலாற்றை அறிய உதவும் ஒரு அரிய ஆயுதம் ஆகும். வரலாறு அறியாத நாடு அடிமைப்படுகிறது. ஆகவே, ஒரு நாட்டின் வரலாற்றை அறிய அடித்தளமாய் அமைவது தொல்லியல் சார்ந்த அகழாய்வுகளே. அவ்வகையிலே இந்தியாவில் சிந்துவெளி நாகரீகத்தைப்போல் ஒரு நகர நாகரீகம் இல்லை என்பதை தகர்த்திருக்கின்றது தமிழகத்தில் மதுரைக்கு அருகில் உள்ள கீழடி அகழாய்வு.

இவ்அகழாய்வு சங்க காலத்தில் தமிழகத்தில் நகர நாகரீகம் செழிப்புற்று இருந்ததை மெய்ப்பிக்கின்றது. கீழடியில் இருப்பது அழிந்து போன ஒரு பெரும் நகரம் ஆகும். நகர நாகரிகத்தின் அனைத்து தடயங்களும், அணிகலன்களும், முத்துக்களும், தமிழ்ப்பிராமி எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட பானை ஓடுகளும், ரோமாபுரி நாட்டு மண்பாண்டங்களும் கிடைத்துள்ளன. மேலும், அங்கே கிடைத்துள்ள தடயங்கள் எல்லாம் பெரும் தொழிற்சாலை

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

இருந்துள்ளதை உறுதிப்படுத்துகின்றன. மேலும், வரிசை வரிசையான கால்வாய்கள் அதன் முகப்பில் உள்ள தொட்டிகள் அந்தத் தொட்டிகளுக்குள் தண்ணீர் உட்செல்லவும் வெளிச்செல்லவும் ஆன அமைப்புகள், அந்த கால்வாய் தடத்தை ஒட்டிச் சிறிதும் பெரிதுமான ஆறு உலைகள், கால்வாயின் ஆரம்பப்பகுதியில் வட்டக்கிணறுகள், மூன்று விதமான வடிகால் அமைப்பு, மூடிய வடிகால்கள், திறந்த வடிகால்கள், சுடுமண் குழாய்களினால் ஆன வடிகால்கள், இவையெல்லாம் முதன் முறையாக கிடைத்துள்ளன. இதுவரை தென்னிந்தியாவிலேயே இதுபோன்று கண்டறியப்ளுபடவில்லை. மதுரை கீழடியில் இருக்கும் தொல்லியல் மேடு சுமார் 110 ஏக்கர் பரப்பைக் கொண்டது. தற்போது அகழாய்வு நடந்திருப்பது வெறும் 50 சென்ட் நிலப்பரப்பே, மீதமுள்ள நிலப்பரப்பில் ஆய்வுகள் தொடருமேயானால் இதுவரை கண்டறியப்படாத பல்வேறு அரிய பொருள்களையும், தடயங்களையும் கண்டறிய முடியும்.

பழந்தமிழ் இலக்கியங்களில் சங்ககால மதுரை என்பது இன்றுள்ள மதுரை அல்ல என்றும் அது திருப்புவனத்திற்கு நேர்மேற்கிலும், திருப்பரங்குன்றத்திற்கு கிழக்கிலும் அமைந்திருக்கவேண்டும் என்றும் இதனை ஆய்வு மூலம் தான் கண்டறிய வேண்டும் என்று தமிழ்ப் பேரறிஞர் மா.இராசமாணிக்கனார் கூறியிருந்தார். அக்குறிப்பு 50 ஆண்டுகளுக்குப் பின்னர் இவ் அகழாய்வு அவ் உண்மையை நெருங்க வழிகாட்டுகின்றது. சங்க இலக்கியம் சொல்லும் அதே புவியியல் அமைப்பில் தான் இன்று அகழாய்வு நடக்கும் கீழடி இருக்கிறது. ஆகவே, இந்த பழந்தமிழ் நாகரீத்தின் பேரடையாளங்களை மீட்டெடுத்து பாதுகாக்க உடனயாக கள அருங்காட்சியகம் அமைத்து அகழாய்வு செய்திட மத்திய, மாநில அரசுகள் நடவடிக்கை எடுத்திட வேண்டும்.[1]

இராமநாதபுரம் மாவட்டம் அழகன் குளத்தில் செம்பு, வெள்ளி நாணயங்கள் உட்பட 13,000 பழங்காலப் பொருள்கள் அகழாய்வின் மூலம் கண்டறியப்பட்டுள்ளன. இது கடற்கரை கிராமம் என்பதால் இங்கே பெரிய வாணிபம் நடைபெற்றிருப்பதை அறிய முடிகின்றது. அதற்கேற்றாற் போல பண்டைய தமிழ் மக்கள் பயன்படுத்திய ஆபரணங்கள், மண்பாண்டங்கள், பச்சைநிற கற்கள், சங்கு, வளையல்கள் ரோமானிய மண்பாண்டங்கள், விலையுயர்ந்த கல்மணிகள், சுடுமண் பொம்மைகள், ரோம், சீனா, கிரேக்கம் ஆகிய நாடுகளின் வணிகத்தொடர்பை வெளிப்படுத்தும் அரிய மண்பாண்டங்கள், ஆம்ப்ரோ எனப்படும் மது குடிக்கப்பயன்படும் குடுவைகள் கிடைத்துள்ளன. தொழிற்கூடங்கள் இருந்ததற்கான அடையாளமாக இரும்புப்பொருள்கள் தயாரிக்கும் கொல்லம்பட்டறை, மண் குழாய்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அது மட்டுமல்லாமல் சிறிய தானிய விதை கொள்கலனும் அதில் 150 கிராம் எடையுள்ள விதைகளும் கிடைத்துள்ளன. இதுவரை இக்கிராமத்தில் 7 முறை தொல்லியல் அகழாய்வுகள் நடைபெற்றுள்ளன. 8வது முறையாக அகழாய்வுப்பணியை அதன் இயக்குநர் ஜெ.பாஸ்கரன் தலைமையில் நிகழ்த்தப்பட்டது.[2]

இராமநாதபுரத்தில் இருந்து கிழக்கே சுமார் 20 கி.மீ. தொலைவில்தான் அழகன் குளம் உள்ளது. இவ் அழகன் குளம் செல்லும் வழியில் தான் கீழடியும் உள்ளது. ஆகவே, கீழடிக்கும், அழகன் குளத்திற்கும் இடையே உள்ள நெருங்கிய தொடர்பை ஆய்வின் மூலம் வெளிக்கொணரலாம்.

தமிழ் இலக்கியங்களில் பூம்புகார் பற்றிய செய்திக் குறிப்புகளை வைத்து முதன்முதலாக 1962-இல் இந்தியப் பெருநாட்டின் தொல்லியல் துறையின் தென்மண்டலப் பிரிவு இங்கே அகழாய்வு நடத்தும் பணியைத் தொடங்கியது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

இக்குழுவினர் கடற்கரையோரப் பகுதிகளையும், மக்கள் வாழ்ந்து விட்டுச் சென்றுள்ள தடயங்களையும், உறை கிணறுகளையும், கட்டடச் சிதைவுகளையும், செங்கல் குவியல்களையும், உடைந்த பழைய மட்பாண்டங்களையும் பல இடங்களில் கண்டனர். அதன்பின்னரே அகழாய்வுப்பணியை மேற்கொண்டனர்.

வாணகிரி என்னும் ஊரின் அருகில் கடலோரப் பகுதியில் இந்நகரின் பண்பாட்டுப் பெருமையைப் பறைசாற்றும் அடையாளங்களாகச் சோழ மன்னர்களின் புலி இலச்சினைகளைக் கொண்ட சதுர வடிவக் காசுகளும், பல வண்ணக்கற்களால் செய்யப்பட்ட எண்ணற்ற அணிகலன்களும் ரோமானிய மட்பாண்டச் சிதைவுகளும், நாணயமும், மட்பாண்டங்களும் இப்புகழ்மிக்க நகரில் யவனர் தங்கியிருந்ததை உறுதி செய்கின்றன. 1963-64ஆம் ஆண்டுகளிலும் அகழாய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. அப்பொழுது மூன்று பெரும் செங்கற் கட்டட அமைப்புகள் அகழ்ந்தெடுக்கப்பட்டன. அவற்றில் மிகவும் முக்கியமானது பௌத்தப் பள்ளியாகும்.

மேலையூர் என்னும் பகுதியில் பல்லவனீச்சுரம் என்னும் கோயிலுக்கு அருகாமையில் இந்தப் பௌத்த விகாரம் உள்ளது. இந்த விகாரம் புத்தபிரானை வழிபாடு செய்வதற்கும், துறவிகள் தங்குவதற்கும் ஏற்ற வகையில் அறைகளைக் கொண்டு கட்டப்பட்டிருப்பது நன்றாகத் தெரிகின்றது. அதன் ஓர் அறையில் புத்தரின் சிறிய செப்புத் திருமேனியும் கண்டெடுக்கப்பட்டது.

கடற்கரையிலிருந்து மேற்கில் உள்ள கீழையூரில் சிறிய படகுகளை நிறுத்தி, சரக்குகளை இறக்குமதி ஏற்றுமதி செய்தற்கான சிறிய முன்துறை ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. பூம்புகாரில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள புத்த விகாரம், நீர்த்தேக்கம், முன்துறை, சோழப் பெருமன்னர்கள் வெளியிட்ட காசுகள், ரோமாபுரியைச் சேர்ந்த நாணயங்கள், பானை ஓடுகள் போன்ற இன்ன பிறவெல்லாம் காவிரிப்பூம்பட்டினத்தின் தொன்மையையும், கீர்த்திமிகு மேன்மையையும் எடுத்துக்காட்டுகின்றன. கி.பி.1963 மற்றும் 64-இல் அகழாய்வு கண்டுபிடிப்புகள் சென்னை அருங்காட்சியகத்தில் ஒரு சிறப்புக் கண்காட்சியாக வைக்கப்பட்டன.[3]

பெருங்கற்காலச் சின்னங்களான கற்பதுக்கை, முதுமக்கள் தாழி போன்றவை திண்டுக்கல் மாவட்டம் பழனியைச்சுற்றியுள்ள கிராமங்கள் பலவற்றில் அகழாய்வு மூலமாக கண்டறியப்பட்டுள்ளன. எனவே, இப்பகுதியில் ஆதிகாலத்தில் மக்கள் வாழ்க்கை இருந்துள்ளது உறுதிப்படுகிறது.[4]

கல்வெட்டுக்களை நம்பகரமான ஆவணங்கள் என்று கூறுவது மரபு. இது இடம் பெயராதது. இந்தியவில் 1837-ல் தான் முதலில் கல்வெட்டு கண்டுபிடிக்கப்பட்டது. இதுவரை 90,000 க்கு மேல் கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. இவற்றில் 2/3 அளவு தென்னிந்தியாவில் கிடைத்தவை. தமிழகத்தில் 28,000 கல்வெட்டுக்கள் 1980-க்கு முன்பே அடையாளம் காணப்பட்டன. கடந்த 30 ஆண்டுகளில் 5000 க்க மேற்பட்ட கல்வெட்டுக்கள் அரசு அதிகாரிகளாலும், தனியாராலும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

தமிழக கல்வெட்டுகளில் பிராமி, வட்டெழுத்து, கிரந்தம், தமிழி ஆகிய எழுத்துக்கள் முக்கியமாக வருகின்றன. தமிழகத்தில் காணப்படும் பிராமி எழுத்துக்கள் தமிழ் வரிவடிவங்களில் பழமையானது என்று கருதப்படுகிறது. இவை மலைக்குகைகளிலும், பாறைகளிலும் உடைந்த பானைக்கீறல்களிலும், நாணயங்களிலும் கிடைத்துள்ளன. இவற்றில் மதுரையைச் சுற்றியுள்ள குகைகளிலேயே பிராமி எழுத்துக்கள் அதிகம் காணப்படுகின்றன.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

அகழாய்வில் கிடைத்த பானை ஓடுகளில் 250 பிராமி எழுத்துக்கள் காணப்பட்டன. நாணயத்திலும், முத்திரை மோதிரத்திலும் பிராமி எழுத்துக்கள் உள்ளன. 1940-40-ல் அரிக்கமேடு, கரூர் போன்ற இடங்களில் கிடைத்த நாணயங்களில் பிராமி எழுத்துக்கள் இருப்பதையும் இவை சங்க காலத்தவை என்பதையும் உறுதி செய்தனர். புகளூரில் கிடைத்த பிராமி எழுத்துக்களில் சங்க காலப் பெயர் வருவதை ஆய்வாளர் ஐராவதம் தான் முதலில் கி.பி.1964-ல் கண்டுபிடித்தார்.

1998-ல் கோவை, பேருர், போளுவார்பட்டி போன்ற இடங்களில் நடைபெற்ற அகழாய்வில் 3-ஆம் நூற்றாண்டைச்சேர்ந்த பானை ஓடுகள் கிடைத்துள்ளன. தமிழக அரசு தொல்லியல் துறை தமிழகத்தில் கொடுமனல், கொற்கை, புகளுர் போன்ற 30 இடங்களில் நடத்திய அகழாய்வில் கிடைத்த பானை ஓடுகளில் காணப்பட்ட பிராமி எழுத்துக்கள் வழியாக பல்வேறு செய்திகள் கண்டுபிடிக்கப்பட்டன.[5]

பழந்தமிழக கற்கால மக்கள் மிகச்சிறிய கற்கருவிகளை அல்லது நுண்ணிய கற்கருவிகளைப் பயன்படுத்தியதால் இக்காலத்தை நுண்கற்காலம் எனப்பெயரிடப்பட்டது. ஆங்கிலத்தில் இதற்கு “மைக்ரோலித்திக்” என்று பெயரிட்டுள்ளனர். மைக்ரோ என்றால் நுண்ணிய என்றும், லித்திக் என்றால் கல் என்றும் பொருள் கூறப்பட்டுள்ளன.[6] இவ்வகைக்கற்கள் தமிழகத்தில் தாமிரபரணி ஆற்றிற்கு வடக்கிலும், தெற்கிலும் பளிங்குவகை நுண்கற்கருவிகளாக தொல்லியல் ஆய்வாளர்கள் கண்டறிந்துள்ளனர். இதன் மூலம் கற்கால மக்களின் கற்தொழில்பட்டறையையும், அவர்கள் வேட்டைத்தொழில் புரிந்ததையும் அறிய முடிகின்றது.

அலெக்சாண்டர் ரியா என்பவரால் ஆதிச்ச நல்லூர் என்னும் இடத்தில் 115 ஆண்டுகளுக்கு முன்னர் நடத்தப்பட்ட அகழ்வாராய்ச்சியில் 616 மண்பாத்திரங்களை கண்டறிந்து ஆவணப்படுத்தியுள்ளார். இவற்றில் பெரும்பாலானவை சென்னை அருங்காட்சியகத்தில் இப்போதும் நாம் பார்க்கலாம். இவ்ஆய்வு மூலம் அப்பகுதியில் வாழ்ந்த மக்கள் எப்படிப்பட்ட நாகரீக வாழ்க்கை வாழ்ந்துள்ளார்கள் என்பதை அறியமுடிகின்றது.

திருச்சி, புதுக்கோட்டை, மதுரை, திருநெல்வேலி, செங்கற்பட்டு, சேலம் ஆகிய இடங்களில் நடத்தப்பட்ட அகழ்வராய்ச்சி மூலம் கிடைக்கப்பெற்ற புதைப்பொருள்கள் தமிழர்களின் அந்நாளைய வாழ்க்கை முறையை அறிய உதவுகின்றது. சர் மார்டிமோர் வீலர் அரிக்கமேட்டில் நடத்திய அகழ்வாராய்ச்சியும் பழந்தமிழர்களின் வாழ்க்கைமுறை பற்றி அறிய உதவுகிறது. பூம்புகாரில் நடந்த அகழ்வாராய்ச்சி பழந்தமிழர்களின் பண்பாட்டை அறிய உதவுகின்றது.[7] மலையும், மலை சார்ந்த பகுதிகளிலும் தமிழகப் பெருங்கற்படைகளின் எச்சங்களுடன் மிகுதியாக இருப்பதை தற்கால ஆய்வுகளால் அறிய முடிகின்றன. இப்பகுதிகளில் கனிமவளம், நீர்வளம் நிறைந்தும் உள்ளன. இதனால் இடத்தொல்லியல் அல்லது பெருங்கற்படை கட்டுமான வெளிகள் காலத்தால் சிதைவுற்றனவாக உள்ளன. திண்டுக்கல் மாவட்டம் பழனிக்கு அருகே உள்ள இரவிமங்கலம் என்னும் பெருங்கற்படை நிலப்பகுதியுள்ளது. தமிழகத்தில் மிகப்பெரிய பெருங்கற்படை நிலப்பரப்பாக இதைக்கருதலாம். இந்த பெருங்கற்படைக் கட்டுமானங்களுக்கு மிக அருகே நீர்நிலைகளும் மேற்கு மலைத்தொடரின் மலை அடிவாரப்பகுதிகளும் உள்ளன. எனவே, நிலத்தொல்லியல், இயற்கைச்சூழல் ஆகிய இரண்டும் பெருங்கற்படை ஆய்வுக்குரிய சிறப்புக் களமாகவும் ஆகின்றன.[8]

பழனிக்கு அருகில் 12 கிலோமீட்டர் தொலைவில் உள்ள அதிக பரப்பளவைக் கொண்ட தொல்லியல் மேடு இரவிமங்கலத்தை மத்திய, மாநில அரசு தொல்லியல்துறையினர்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

அகழாய்வு மேற்கொண்டால் கீழடியைப்போன்று எண்ணற்ற தொல்லியல் தடயங்களும், பெரும் வாணிபம் நடைபெற்றதற்கான பழங்காலப் பொருள்களும், பழந்தமிழர்கள் வாழ்ந்ததற்கான அடையாளங்களும் கண்டறியப்படும் என்பதில் சந்தேகமே இல்லை. ஏனென்றால் கல்பதுக்கைகள், கல்வட்டங்கள், புதைகுழிகள் போன்ற தொல்லியல் சார்ந்த எச்சங்கள் இங்கு கண்டறியப்பட்டுள்ளன. மேலும், பழனிக்கருகில் உள்ள கலையமுத்தூரில் கிடைத்த ரோமாபுரி நாணயங்களை வைத்து பார்க்கும்போது சங்க காலத்திலேயே இப்பகுதி வணிகவளமும் செல்வச்செழிப்பும் மிக்கது என்பதையும், தமிழகத்தின் தெற்கு கடற்கரைப் பகுதியினை கிரேக்கம், பாரசீகம் மற்றும் ரோமாபுரி ஆகிய பேரரசுகளை இணைக்கும் ஒரு பெருவழிப்பாதை என்பதையும், இப்பாதை இரவிமங்கலம் வழியாக சென்றிருக்கலாம் என்பதையும் அறிய முடிகின்றது. இப்பகுதியைச் சேர்ந்த மக்களும், இப்பகுதியினை நீண்ட காலமாக ஆய்வு செய்து வரும் தன்னார்வ தொல்லியல் ஆய்வாளர் நாராயணமூர்த்தி அவர்களும் மத்திய,மாநில அரசுகள் மற்றும் தொல்லியல் துறையினரும் கீழடி போன்று இப்பகுதியிலும் ஆய்வு செய்திட வேண்டுமென்று நீண்ட காலமாக கோரிக்கை வைத்து வருகின்றனர்.

**முடிவுரை**

இதுவரை இக்கட்டுரையின் வாயிலாக தமிழகத்தில் நடைபெற்ற தொல்லியல் ஆய்வுகளால் நமது ஆதிகால தமிழர்களின் வரலாற்றையும், பண்பாட்டையும் மீட்டெடுத்ததோடு, அவர்களின் வாழ்க்கை முறையையும், செய்து வந்த கைத்தொழில்களையும், அயல்நாடுகளுடன் வைத்திருந்த வாணிகத்தொடர்பையும் சிந்துவெளி நாகரீகம் போல தமிழகத்திலும் ஒரு நகர நாகரீகம் இருந்ததையும் அறிவதோடு மட்டுமல்லாமல் வருங்கால சந்ததியினர் இவற்றை அறிந்திடவும், உலகெங்கும் தமிழர்களின் பண்பாட்டை ஆவணங்களாக, அடையாளமாக மாற்றுவது இத்தொல்லியல் அகழாய்வுகளே. மேலும், கண்டறியப்பட்ட பகுதிகளையும், அரியவகை பொருள்களையும் பாதுகாப்பது மத்திய, மாநில அரசுகள் மட்டுமல்லாமல், தொல்லியல் துறையினரும், தமிழ் மக்களாகிய நாம் எல்லோரும் என்பதை இக்கட்டுரை வாயிலாக தெரிவிக்கின்றேன்.

**அடிக்குறிப்புகள்**

1. தினஇந்து 28-9-2016 நாளிதழில் வெளியான எழுத்தாளர் சு.வெங்கடேசன் அவர்களின் கட்டுரை.
2. தினஇந்து நாளிதழுக்கு அகழாய்வுப்பபணி இயக்குநர் அளித்த தகவல்.
3. இராமன்.கே.வி.தொல்லியியல் ஆய்வுகள். பக்.20-25.
4. பழனித்தலவரலாறு திருக்கோயில் வெளியீடு. ப.2.
5. பெருமாள்.அ.கா. பழந்தமிழர் வழிபாட்டு மரபுகள். பக்.133-135.
6. சுப்ரமணியன்.தி. தொல்பழங்காலம் ப.29.
7. அறிவுராஜ்.ந, குமார்.ஆ, தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும். ப.2.
8. பவுன்துறை. இராசு தமிழகப்பெருங்கற்காலக் கட்டடக்கலைமரபு ப.344.

**துணைநூல் பட்டியல்**

1. இராமன்.கே.வி. தொல்லியியல் ஆய்வுகள்
அகழலாய்வு,கல்வெட்டு,நாணயம் பற்றியவை
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை,

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

முதல் பதிப்பு, 2014.

2. செல்வராஜ். சீ, (மு.ப.ஆ) மேனகா.இரா. (மு.ப.ஆ) சுப்பிரமணியன். பெ. (து.ப.ஆ) முருகாணந்தம். இரா. (து.ப.ஆ) — பழனித்தலவரலாறு, திருக்கோயில் வெளியீடு, பழனி, பதிமூன்றாம் பதிப்பு. 2017.
3. பெருமாள்.அ.கா. — பழந்தமிழர் வழிபாட்டு மரபுகள், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, முதல் பதிப்பு, 2018
4. சுப்ரமணியன்.தி. — தொல்பழங்காலம் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, முதல் பதிப்பு, 2016.
5. அறிவுராஜ்.ந, குமார்.ஆ, — தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும், பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, மூன்றாம் பதிப்பு, 2014.
6. பவுன்துறை.இராசு — தமிழகப் பெருங்கற்காலக்கட்டடக்கலை மரபு, மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், முதல்பதிப்பு. 2013.

**நாளிதழ்கள்**

தின இந்து, 28-9-2016.

தினத்தந்தி, 04-10-2015.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# எதிர்கால தமிழக தொல்லியற் களங்கள்
# Future Archaeological Sites of Tamil Nadu

**வெ.சந்தியா,** ஆய்வில் நிறைஞர், தமிழ்த்துறை,
திருவள்ளுவர் பல்கலைக்கழகம், சேர்க்காடு -632 115.

## Abstract

*Tamil Nadu is one of the ancient places with a vast history and literary sources. It has lots of evidences such as culverts, plates and other inscriptions to boast of their age old traditiuion. It is to note that lots of archaeological sites in Tamil region proved it rationally. The sites such as Kodumanal, Keeladi, Ravimangalam, Seithunganallor, Pattaraiputhur and many places are the future sites because there are no any further site openings of them. So it remains dormant. This is the time to make these sites to be assessed again in the possible areas to establish Tamil Culture. Hence, the paper tries to scrutinize the facts regarding to the topic.*

**Keywords:** Archaeological Sites, Tamil Culture, Future

### முன்னுரை

தொல்லியல் என்பது தொல்பழங்காலத்தைப் பற்றி ஆய்வு செய்வதாகும். தொன்மையான காலத்தில் வாழ்ந்த நமது முன்னோர்களின் பண்பாட்டையும், மரபையும் அவர்கள் விட்டுச் சென்ற எச்சங்கள் வாயிலாக அறிந்து கொள்வதற்கு தொல்லியல் பயன்படுகிறது. பழங்கால மக்களின் வாழ்க்கை முறை, தொழில்கள், வாணிகம், வேளாண்மை, அரசியல், நுண்கலைகள் முதலியவை பற்றி அவர்கள் விட்டு சென்ற எச்சங்களான கல்வெட்டுகள், கட்டடங்கள், நாணயங்கள், செப்பேடுகள் முதலியவற்றின் அடிப்படையில் ஆய்ந்தறிதலே தொல்லியலின் முதன்மையான நோக்கமாகும். (www.1govtjob.com). தொல்லியலை ஆங்கிலத்தில் "ஆர்க்கியாலஜி" (Archaeology)எனக் குறிப்பிடுவர். தொல்லியல் ஆய்வுகள் இல்லையெனில் நமது முன்னோர்கள் கடந்து வந்த பாதையையும், வரலாற்றையும் அறியா முடியாத சூழ்நிலை ஏற்பட்டிருக்கும். தமிழகத்தில் எதிர்காலத்தில் ஆய்வு செய்யப்பட வேண்டிய தொல்லியற் களங்களைப் பற்றி இக்கட்டுரை விவரிக்கின்றது.

### தொல்லியல் ஆய்வு

தொல்லியல் ஆய்வு என்பது பூமிக்குள் புதையுண்டு மறைந்து கிடக்கும் அல்லது மேற்பரப்பிலே காணப்படும் மனித இனத்தோடு தொடர்புடைய பொருள்களையும், அவர்கள் நாள்தோறும் வாழ்க்கையில் பயன்படுத்தி விட்டுச் சென்ற பொருள்களையும் அகழ்ந்தெடுத்து ஆய்வு செய்து அவர்களின் பழம் பண்பாடுகளைப் பற்றி உய்த்தறியும் ஓர் ஆய்வாகும். (blogspot.com). தமிழகத்தில் பல்வேறு இடங்களில் தொல்லியல் ஆய்வுகள் நடைபெற்றுள்ளன. "தமிழ்நாட்டின் பண்டைய வரலாற்றை அறிய உதவுபவை இலக்கியச் சான்றுகள், ஓலைச் சுவடிகள், கல்வெட்டுகள், செப்பேடுகள், காசுகள், அகழாய்வில் கிடைத்த பல பொருட்கள் போன்றவை எனலாம்" (ந.வேங்கடேசன்-2009, ப.30))

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**தமிழக அரசு தொல்லியல் துறை**

தமிழ்நாடு அரசால் 1961ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட தொல்லியல் துறையானது பழங்கால நினைவுச் சின்னங்களைப் பாதுகாத்தல் மற்றும் பராமரித்தல் என்பதையும், வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த இடங்களில் அகழாய்வு மேற்கொள்வதையும் முதன்மையான நோக்கமாகக் கொண்டிருந்தாலும் பின்னர் கல்வெட்டெழுத்துகளைப் படியெடுத்து, படித்து, பதிப்பித்து அதனை ஆவணயங்களாக்கி வெளியிடும் பணிகளையும் செய்கின்றது. (cms.tn.gov.in). "தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை கல்வெட்டு அகராதி தயாரிப்பிலும் ஈடுபட்டு வருகிறது" (ச.கிருஷ்ணமூர்த்தி-2001, ப.68)) வரலாற்றிற்கு முந்தைய காலம் முதல் தற்காலம் வரையில் 33 இடங்களில் தமிழக அரசின் தொல்லியல்துறை ஆய்வுகள் மேற்கொண்டுள்ளது. "பண்டைத் தமிழகம் நீண்ட கடற்கரையையும், எண்ணற்ற இயற்கை வளத்தையும் தன்னகத்தே கொண்டு விளங்கியதால் அம்மக்கள் வணிகத்திலும் தொழில்நுட்பத்திலும் சிறந்து விளங்கினர் என்பதை அண்மைக் காலத் தொல்லியல், கல்வெட்டியல், நாணயவியல் சான்றுகள் உணர்த்துகின்றன" (கா.ராஜன் -2004, ப.79)

**எதிர்கால தொல்லியற் களங்கள்**

தமிழகத்தில் கீழடி ஆதிச்சநல்லூர் போன்று பல புதிய தொல்லியல் இடங்கள் தனிப்பட்ட ஆய்வாளர்களின் தேடல்களால் கண்டறியப்பட்டுள்ளன. அவ்விடங்கள் குறித்த பதிவினை இங்கு காண்போம்.

**பட்டறைப் பெரும்புதூர்**

சென்னையிலிருந்து 55 கிலோமீட்டர் தொலைவில் உள்ள இந்த கிராமத்தில் கற்காலம் முதல் வரலாற்றுத் தொடக்க காலம் வரையிலான தொல்லியல் சான்றுகள் கிடைத்துள்ளன. பட்டறைப் பெரும்புதூரில் உள்ள ஆனைமேடு, நத்தமேடு, இருளந்தோப்பு ஆகிய இடங்களில் நடைபெற்ற ஆய்வில் 200க்கும் மேற்பட்ட தொல்பொருட்கள் கிடைத்துள்ளன. கி.மு.3 முதல் கி.மு 1 வரையிலான காலகட்டத்தில் இங்கு மனிதர்கள் வாழ்ந்தனர் என்பது உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. மேலும் ரோமானிய மட்பாண்ட வகையான ரௌலட் மட்பாண்ட ஓடுகள் இங்கு கண்டறியப்பட்டுள்ளன. இதுவரை கடலோரப் பகுதிகளில் ரோமானிய மட்பாண்ட வகைகள் கிடைத்துள்ள நிலையில், மக்கள் வாழ்விடப் பகுதியில் கிடைத்திருப்பது சங்க காலத்தில் இருந்தே ரோமானியர்களுடன் இப்பகுதியினர் வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்தது உறுதிப் படுகிறது. மேலும் இப்பகுதியில் பல இடங்கள் ஆய்வுக்கு காத்திருக்கின்றன. அவையும் தொடர்ச்சியாக அகழாய்வு செய்யப்பட்டால் ரோமானியர்கள் குறித்த புதிய வரலாற்றினை அறிய முடியும் (சி. இளங்கோ -2017, பக். 90-91).

**இரவிமங்கலம்**

பழனி அருகே 12 கி.மீ தொலைவில் உள்ள இந்த ஊரில் 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட தொல்லியல் சின்னங்கள் உள்ளன. பெருங்கற்கால சின்னங்களான புதைமேடுகள், கற்படுக்கைகள், கல்திட்டைகள், குத்துக்கல், நடுகல், கல்லரண், கல்வட்டம் என அனைத்து வகையான தொல்லியல் சின்னங்களும் ஒரு களஞ்சியம் போன்று இங்கு கிடைப்பது குறிப்பிடத்தக்கது. மேலும் இங்கு இரும்பு உருக்காலைகள். இரும்பு அச்சுகள் ஏராளமான இருந்ததற்கான தடயங்கள் கிடைத்துள்ளன. இதுவரை இங்கு எந்த தொல்லியல் ஆய்வும் நடைபெறவில்லை.(சி.இளங்கோ -2017, பக். 91-92)

**செய்துங்க நல்லூர்**

செய்துங்க நல்லூர் வசவப்புரத்தில் முதுமக்கள் தாழிகள் இவ்வூர் வட்டாட்சியரால் கண்டுபிடிக்கப்பட்டது. ஆதிச்சநல்லூரில் இருந்து 10கி.மீ. தொலைவில் அமைந்துள்ள இந்த

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

இடத்தில் முதுமக்கள் தாழி, கிண்ணம் முதலானவை கிடைக்கப் பெற்றன. வசவப்புரம் பரம்பு பகுதியான இவ்விடத்தை அகழாய்வு மேற்கொண்டால் ஆதிச்சநல்லூர் நாகரிகத்தின் தொடர்ச்சியும் வட்டார பண்பாட்டு தன்மைகள் பலவும் புலப்படும். (சி.இளங்கோ- 2017 (ப.92)

**கொக்கரசன் கோட்டை**

சாயல்குடியில் இருந்து சூரங்குடி செல்லும் மங்கம்மாள் சாலையில் தரைக்குடி அருகில் இருக்கும் கொக்கரசன் கோட்டையில் ஆய்வு நிகழ்த்திய போது இரண்டரியரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இரும்பு உருக்காலையின் உடைந்த பகுதிகள், இரும்புத்தாது, கழிவுப் பொருட்கள், கருப்பு, சிவப்பு, பழுப்பு நிற பானை ஓடுகள், குறியீடு உள்ள பானை ஓடு ஆகியவை கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இப்பகுதியில் இரும்பு பண்பாடு செழுமையாக நிலவியமைக்கான சான்றுகளும் மக்கள் வாழ்ந்தமைக்கான சான்றுகளும் பல கிடைத்துள்ளன. இரும்புக் கருவிகள் செய்யும் தொழில் நுட்பத்தை அறிந்த இம்மக்களின் தொன்மையான வரலாற்றை அகழாய்வு செய்வதன் மூலமே வெளிக் கொண்டுவர முடியும். (சி.இளங்கோ – 2017 (பக். 92-93)

**மதகம்**

புதுக்கோட்டை மாவட்டம் ஆவுடையார்கோயில் வட்டம், மதகம் கிராமத்தில் சாலை ஓரமாக அமைந்திருக்கும் கருளாநாதர் ஊருணிக்கரையில் பண்டைத் தமிழ் எழுத்து பொறித்த பானை ஓடு கிடைத்துள்ளது. பானையோட்டில் பண்டைய தழிழ் எழுத்தில் எழுத்துப் பொறிப்பு கிடைத்திருப்பது இதுவே இப்பகுதியில் முத்ல முறையாகும். இப்பகுதியில் தொடர்ச்சியாக ஆகழாய்வு மேற்கொள்ளப்பட்டால் தமிழின் தொன்மைக் குறித்து பல்வேறு சான்றுகள் கிடைக்க வாய்ப்புள்ளது (சி.இளங்கோ-2017 (பக். 94-95)

**செங்கதுறை**

கோவை மாவட்டம் செங்கதுறை அருகே 3000 ஆண்களுக்கு முற்பட்ட பழமையான புதிய கற்கால கருவிகள். தமிழ்பிராமி எழுத்துக் குறியீடுகள் உள்ள கருவிகள் கண்டு பிடிக்கப் பட்டுள்ளன. மேலும் கருப்பு, சிவப்பு பானையோடுகள், சங்கு வளையல்கள், கல்மணிகள், அரவைக் கற்கள் எடைக் கற்கள், விளையாட்டுச் சில்லுகள், ரோம் நாட்டு நாணயங்கள் என பல பொருட்கள் கிடைத்துள்ளன. இப்பகுதியில் நொய்யல் நதிக்கரை, அமைந்துள்ளதால் விவசாயம் சார்ந்த தொழில் செய்யும் மக்களும் இப்பகுதியில் வசித்திருக்க வேண்டும். இப்பகுதியில் தொடர்ச்சியாகத் தொல்லியல் அகழாய்வு செய்யப்பட்டால் பல புதிய தரவுகள் கிடைக்க வாய்ப்புள்ளது. (சி.இளங்கோ-2017 (பக்.95-96)

**மேட்டூர் அணை**

மேட்டூர் அணையில் பெருங்கற்கால கல்வட்டங்கள் அமைந்துள்ளன. இவ்வணையின் நீர்ப் பிடிப்பு பகுதியில் ஆய்வு மேற்கொண்டபோது 3000 வருடங்கள் பழமையான கற்திட்டைகளுடன் கூடிய கல்வட்டங்களும் கற்திட்டைகளும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. பாண்டவன் திட்டு என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட கற்திட்டை மிகவும் பழமையானதாகும். இக்கற்திட்டையின் மூடுகல் மட்டும் சுமார் 80 டன்கள் இருக்கும். இதில் அமைந்துள்ள இடுதுளையானது கிழக்குப் பக்கம் பார்த்த முகத்தில் உள்ளது. மேலும் அரைவட்ட வடிவில் இருப்பதும் இதன் பழமையைக் காட்டுகிறது (சி.இளங்கோ- 2017 (ப.96)

**ஆர்ப்பாக்கம்**

காஞ்சிபுரம் மாவட்டம் ஆர்ப்பாக்கம் ஊரில் அமைந்துள்ள மண்டபம் பகுதியில் பல்வேறு முதுமக்கள் தாழிகள் கிடைத்துள்ளன. இரும்புக் காலத்துடன் தொடர்புடைய இத்தாழிகளில் எவ்வித குறியீடுகளும் இல்லை. இப்பகுதியில் கருங்கல் சல்லி உடைப்பு

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

நிலைய் அமைந்துள்ளதால் எல்லா இடங்களும் தோண்டப்பட்டு தாழிகள் பல அழிக்கப்பட்டுவிட்டன. ஆதிச்சநல்லூருக்கு இணையான நாகிரிகத்தை கொண்டுள்ள இப்பகுதி இதுவரை பாதுகாக்கப்படவில்லை. எவ்வித அகழாய்வும் மேற்கொள்ளப்படவில்லை. (சி.இளங்கோ -2017 (ப.98)

**ஊஞ்சப்படி**

நங்கவல்லியிலிருந்து 4 கிலோ மீட்டர் தொலைவில் மேச்சேரி ஒன்றியத்தைச் சேர்ந்த குட்டப்பட்டி கிராமத்தை அடுத்த ஊஞ்சப்பட்டி குக்கிராமத்தில் 3000 ஆண்டுகால கல்வட்டத்திற்குள் கல்திட்டை ஒன்று அமைந்துள்ளது. மலையடிப் பட்டியிலிருந்து ஊஞ்சப்பட்டி வரை சாலையோரத்தில் முப்பதுக்கும் மேற்பட்ட சிறிய பெரிய அளவில் கல்வட்டங்கள் காணப்பட்டது. தற்போது கல்வட்டங்களை அழித்து விவசாய நிலமாகவும், வீடுகளும் கட்டப்பட்ட நிலையில் இரண்டு கல்வட்டங்கள் மட்டுமே எஞ்சியுள்ளன. இப்பகுதியில் அகழாய்வு செய்யப்பட்டால் மேலும் பல வரலாற்றுத் தரவுகள் கிடைக்கும். (சி. இளங்கோ – 2017 (பக். 98-99)

**பசுமாத்தூர்**

வேலூர் மாவட்டம் பாலாற்றுப் படுகையை ஒட்டி அமைந்துள்ள பசுமாத்தூர் கிராமத்தில் கல்பதுக்கை ஒன்று ஜே.சி.பி இயந்திரத்தால் குழி தோண்டும் பொழுது வெளிப்பட்டது. அதில் படையல் பொருட்கள், பெரிய இரும்புக் கத்தி, சிறிய குடுவைகள், தானியங்கள் வைத்துப் புதைத்த நான்கு கால் ஜாடி தட்டுகள், தாங்கிகள் என பெருங்கற்கால படையல் பொருட்கள் கிடைத்தன. இங்கு கிடைத்த மட்பாண்டப் பொருட்களில் குறியீடுகளாக அம்புமுனை, ஏணி, உடுக்கை, இரு அம்புமுனை என பல்வகைக் குறியீடுகள் கிடைத்தது குறிப்பிடத்தக்கதாகும். இதுவரையிலும் இப்பகுதியில் எவ்வித ஆய்வும் மேற்கொள்ளப்படவில்லை (சி.இளங்கோ – 2017 (ப.99)

**முடிவுரை**

தொல்லியல் என்பது தொடர்ந்து ஆராய்ந்து உண்மைகளை கண்டறியும் முடிவுப் பெறாத ஒரு பயணமாகும். தொல்லியல் ஆய்வுகள் மண்ணுக்குள் மறைந்திருக்கும் பழங்கால மக்களின் நாகரிகத்தை அவர்கள் பயன்படுத்திய பொருட்கள் வாயிலாக வெளிப்படுத்துகின்றன. தமிழக அரசு தொல்லியல்துறை நமது பண்பாட்டினை வெளிக் கொணரவும், பாதுகாக்கவும் பல்வேறு திட்டங்களை சிறப்பாக செயல்படுத்தி வருகிறது. மத்திய அரசு தொல்லியல் துறை, சென்னைப் பல்கலைக்கழகம், தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகம் போன்றவையும் பல்வேறு தொல்லியல் ஆய்வுகளை நிகழ்த்தியுள்ளன. இன்று தொல்லியல் சார்ந்த ஆய்வுகளுக்கு தேவையான ஆட்கள் பற்றாக்குறையாக இருப்பதால் தமிழகத்தில் பல இடங்கள் ஆய்வுக்காக காத்துக் கொண்டிருக்கின்றன. இந்த இடங்களில் விரைந்து ஆய்வுகள் நிகழ்த்தினால் மனிதகுல வரலாற்றின் சிறப்பினை முழுமையாக அறிய முடியும்.

**பார்வை நூல்கள்**

1. blogspot.com.
2. www.1govtjob.com.
3. Cms.tn.gov.in.

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

4. சி.இளங்கோ, தமிழகத் தொல்லியல் ஆய்வுகள் கீழடி வரை.
5. ச. கிருஷ்ணமூர்த்தி, கல்வெட்டுகளில் ஊரும் பேரும்.
6. கா.ராஜன், தொல்லியல் நோக்கில் சங்ககாலம்.
7. ந. வேங்கடேசன், புதுச்சேரி மாநிலச் செப்பேடுகள் - ஓர் அறிமுகம்

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies

A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com



# பாசன வேளாண்மையின் பரிணாம வளர்ச்சி
# Gradual Development of Water Management in Agriculture

**முனைவர் மு.சாஹிரா பானு,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, ஸ்ரீசாரதா மகளிர் கல்லூரி, பெரம்பலூர்.

## Abstract

*The article enunciates the water management principles followed in the Tamil region by the Tamil kings and the later Nayak Kings. It briefs about water management in the Sangam Period, Pallava Period, Pandian Period, Nayak Period and other water related constructions conducted and maintained at Thamiraparani river basin and Kumbakonam warer reservoir. The evidences from 'Purananooru', 'Malaipadukadam', 'Paripadal' and other sources tell of the apt and systematic water system managed by our ancestors. Today, in the time of water crisis, we all should know about the systems followed and maintained by our forefathers to resurrect the golden age of agriculture. It is also suggested to do multi-faceted research in the water management systems followed in the Tamil society and to redeem it for the betterment of life.*

**Keywords:** Gradual Development, Water Management, Agriculture, Tamil Nadu

### முன்னுரை

மனித நாகரிக வரலாற்றில் வேளாண்மை முதலிடம் வகிக்கிறது. வேளாண்மைக்கு ஆதாரம் நீர்ப்பாசனம். வேளாண்மையின் வளர்ச்சியையும் நீர்ப்பாசனத்தின் வளர்ச்சியையும் வெவ்வேறாகப் பிரித்துப் பார்ப்பதென்பது இயலாது. உணவுக்காகப் பயிர் வளர்க்கும் கலையை அறிந்த பின்னரே நாடோடியாகத் திரிந்த மனிதன் ஓரிடத்தில் நிலைபெறத் தொடங்கினான். அப்போது அவனுக்கும் ஆற்றுக்குமிடையே இருவிதமான போராட்டங்கள் இருந்தன. முதலாவதாக வெள்ளத்திலிருந்தும் அதன் அழிவிலிருந்தும் தன்னைக் காக்க வேண்டிய போராட்டம். இரண்டாவதாக குடிப்பதற்கும் விவசாயத்திற்கும் பயனள்ள வகையில் இந்தத் தண்ணீரைக் கொண்டு சேர்ப்பதன் மூலமே வாழ முடியும் என்ற வாழ்க்கைப் போராட்டம். இந்தப் போராட்டங்களிலிருந்து பாசனம் பற்றிய பட்டறிவுகள் கிடைத்தன. இத்தகைய பாசனம் எவ்வாறு பரிணாம வளர்ச்சி அடைந்துள்ளது என்பது குறித்து ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### சங்ககாலத் தமிழரின் பாசன வேளாண்மை

தமிழர்கள் கால்நடை மேய்ச்சல் நாகரிகத்தைத் தாண்டி, வேளாண்மை நாகரிகத்திற்கு வந்து விட்டதைக் குறிக்கும் கருவிகள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. இச்சின்னங்களில் பெரும்பகுதி பெரிய ஏரிகளை ஒட்டிக் கிடைத்துள்ளன. ஏரிகள், குளங்கள் பற்றி சங்க இலக்கியங்கள் அதிகம் செய்திகளைத் தெரிவிக்கின்றன. மழை மற்றும் நீர்நிலை நாகரிகங்கள் சங்க காலத்தில் நிலவின எனக் காணலாம்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

நீர்நிலை மற்றும் தண்ணீரைச் சேமித்து வைக்கும் கட்டுமானங்கள் பற்றிய பல சொற்கள் இலக்கியங்களில் வருகின்றன. மழைநீரைச் சேமித்து வைப்பதற்கு ஏற்ற நீர்நிலைகளை அமைப்பது மன்னனின் தலையாய கடமை என புறநானூற்றுப் பாடல் ஒன்று கூறுகிறது.

"நிலன் நெளி மருங்கின் நீர்நிலை பெருக
தட்டோரம்ம இவன் தட்டோரே
தள்ளாதோர் இவன் தள்ளாதோரே" (புறம் - 18)

இப்பாடல் பாண்டியன் நெடுஞ்செழியனிடம் குடபுலவியனார் பாடியதாகும். 'நிலம் எங்கெங்கு பள்ளமாக இருக்கிறதோ, அங்கெல்லாம் நீர்நிலைகள் அமையும்படி கரை அமைத்த மன்னர்களே இவ்வுலகில் தம்பெயரை நிலைநிறுத்திக் கொள்வார்கள் என்று பொருள்படும் இப்பாடல் நீர்நிலைகளின் சிறப்பை வலியுறுத்துகிறது.

"குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெய்" (புறம் - 33)

"திரை இரும் பனிப் பௌவம் செய்விதா அறமுகந்து
ஊர உரும் உடன்று ஆர்ப்ப, ஊர் பொறை கொள்ளாது,
குரை உடை குளமெனக் கழன்று, வாள்வயிறு அழிபு
வரை வரை தொடுத்த வயங்கு, வெள்ளருவி" (பரிபாடல் - ப.160)

மேற்கண்ட சங்க இலக்கியப் பாடல்கள் எல்லாம் ஏரி, குளம் என்பவை பற்றிய செய்திகளைக் கூறுகின்றன. ஏரி, குளம் மட்டுமன்றி அதன் அங்கங்களான பல கட்டுமானங்களைப் பற்றிய செய்திகளும் சங்க இலக்கியங்களில் உள்ளன.

காரியாசான் இயற்றிய சிறுபஞ்சமூலம் என்ற நூலில்,

"குளந்தொட்டு கோடு பதித்து வழிசீத்து
உளந்தொட்டு உழுவயலாக்கி வளந்தொட்டு
பாகுபடுங் கிணற்றேடென்றிவ் வைம் பாற்படுத்தான்
ஏகுஞ் சுவர்க்கத் தினிது" (சிறுபஞ்சமூலம் - ப.1332)

இதன் பொருளை, குளம் தோண்டுதல், மிகைநீர் வழிய கலிங்கு அமைத்தல், தண்ணீர் போகும் வழிகளை நன்றாக அமைத்தல் (வரத்துக்கால், வாய்க்கால், வடிகால் ஆகியவை), நிலத்தை உழுவயல் ஆக்குதல், பொதுக் கிணற்றையும் உண்டாக்குதல் என்ற ஐந்து பணிகளையும் செய்தவன் சுவர்க்கத்திற்குப் போவான் என்று குறிப்பிட்டுள்ளார்.

"புனவம் பதவின் மிழலையொடு கழனிக்
கயவார் நாரை" (புறம் - 24)

"பொய்கை வாயிற் பனல்பொரு பதவின்" (பதிற்றுப்பத்து – ப.78)

இங்கே பதவு என்ற சொல் தண்ணீர் வெளிப்போகும் சிறிய கதவைக் குறிப்பிடுகிறது.

"கருங்கையின் ஆயத்தார் சுற்றம் எறிந்து" (பரிபாடல் - ப.442)

கருங்கை என்பதும் பதவு என்பதும் தண்ணீர் வெளியேறும் சிறிய வழிகள்.

"வையை உடைந்த மடை அடைத்த கண்ணும்" (பரிபாடல் - ப.149)

மடை என்பது ஆறு, குளம், ஏரி, கால்வாய்களில் தண்ணீர் வெளியேறுவதற்காக அமைக்கப்படுவது. இந்த மடையில் ஒரு கதவு இருக்கும். இக்கதவைத் திறந்தால் மடை வழியாகத் தண்ணீர் வெளியேறும். இது போன்ற அமைப்பில் தண்ணீர் 'மடைதிறந்த வெள்ளம்' போல் வெளியேறும். வெளியேறும் தண்ணீரின் அளவைக் கூட்டவோ குறைக்கவோ முடியாது.

"நுரையுடன் மதகு தொறு இழிதரு புனல் கரை புரளிய செல்லும்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

மறிகடல்" (பரிபாடல் - ப.655)

மதகு என்பது மடை போன்றே அமைக்கப்படுவது. ஆனால், இதன் கதவைச் சிறுகச் சிறுகத் திறக்கலாம். தண்ணீர் வெளிவரும் அளவைக் கூட்டவோ, குறைக்கவோ முடியும். இது தற்காலத் திருகு மதகு அடைப்பான் என்பதற்கு ஒப்பனதாகும்.

"வனை கலத் திகிரியின் குமிழி சுழலும்
துனை செவல் தலைவாய், ஓஇறந்து வரிக்கும்
கானுநா வயாஅம், கட்கு இன் சேயாற்றின்" (மலைபடுகடாம் - ப.382)

குமிழி என்பது குளங்களிலிருந்து தண்ணீர் வெளியேற, கல்லால் பெட்டி ஒன்று அமைத்து, அதில் துளையிட்டு, அத்துளை வழியாக தண்ணீர் புகுந்து வெளிவரும் அமைப்பு. மரத்தால் செய்யப்பட்ட சக்கை மூலம் இக்குமிழியின் துளையை அடைப்பார்கள். குமிழியின் துளை வழியாகத் தண்ணீர் போகும் போது ஒரு சுழல் உண்டாகும். இது குயவன் சக்கரம் சுழல்வது போல் உள்ளது என்று *மலைபடுகடாம்* பாடல் வருணிக்கிறது.

**கலிங்கு**

இவ்வமைப்பு, தண்ணீரை ஏரி, குளங்களில் தேக்கும்போது ஓர் அளவிற்கு மேல் வரும் அதிகப்படியான வெள்ளநீர் வழிப்போக்கியாக இருக்கும். வாய்த்தலைகளிலும் அமைக்கப்படும் இப்பெயர் சீவகசிந்தாமணியில் வருகிறது. இது போன்ற அமைப்பிற்கு சங்க இலக்கியங்களில் 'கற்சிறை' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

"வருவிசைப் புனலைக் கற்சிறைபோல
ஒருவன் தாங்கிய பெருமையாலும்" (தொல் -பொருள் -65)
"வருபுனல் கற்சிறை கடுப்ப, இடை அறுத்து
ஓன்னார் ஒட்டிய செருப் புகல் மறவர்" (மதுரைக்காஞ்சி 725-726)

கடினமான பாறைகளை அடித்தளமாக உள்ள ஆறுகளிலும் வெள்ளம் பெருக்கெடுக்கும் ஆறுகளிலும் கொறம்பு அமைப்பது கடினம். ஆகவே ஆறுகளில் உள்ள கற்சிறை என்ற கட்டுமானத்தால் ஆற்று நீரை வாய்க்கால்களுக்கு திருப்பி விடும் தொழில் நுட்பத்தை சங்ககாலத்திலேயே தமிழர்கள் அறிந்திருந்தார்கள் என்பதனை சங்க இலக்கியங்களிலிருந்து அறிய முடிகிறது. இக்கட்டுமானங்கள் இன்று அணைக்கட்டுகள் என்றழைக்கப்படுகின்றன.

**பல்லவர் காலத்தில் பாசனப் பணிகள்**

தமிழக வரலாற்றிலேயே பல்லவர் காலம் என்பது தனிச் சிறப்புடையது. பல்லவர் காலத்தில் பாசனமும் வேளாண்மையும் ஆட்சியாளர்களின் முக்கியப் பணியாக இருந்தது. பல்லவர் காலத்தில் கட்டப்பட்ட பெரிய பாசன அமைப்புகள் பற்றி கல்வெட்டுகளிலிருந்தும் செப்பேடுகளிலிருந்தும் ஏராளமான செய்திகள் கிடைத்துள்ளன்.

"காஞ்சிபுரத்துக்கு கிழக்கே பத்து மைல் தொலைவில் தென்னேரி என ஓர் ஏரி உள்ளது. சில ஆராய்ச்சியாளர்கள் திரையனேரி என்பதன் மரூஉ தான் தென்னேரி என்கின்றனர். நந்திவர்மனின் காசாக்குடிச் செப்பேடு இந்தத் திரையனேரியைப் பற்றிக் குறிப்பிடுகிறது. பல்லவர்கள் ஆட்சியில் முதல் மன்னனாக தொண்டைமான் இளந்திரையன், சோழ இளவரசன் நெடுமுடிக் கிள்ளிக்கும், மணிபல்லவத் தீவின் இளவரசி பீலிவளைக்கும் பிறந்தவன் என்று சொல்லப்படுகிறது. இரண்டாம் நந்திவர்மன் காலத்திற்கு முன் வெட்டப்பட்ட இவ்வேரி திரையனால் வெட்டப்பட்டிருக்கலாம். எனவே இப்பெயரால் அழைக்கப்பட்டிருக்கலாம்." (ப.கோ, த.பா.வ, ப.64)

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

இவர்கள் தமிழரல்லாத இனத்தவர் ஆயினும் பின்னர் தமிழோடு இரண்டறக் கலந்துவிட்டனர். இவர்கள் நிறையக் காடுகளை வெட்டி வயல்களாக மாற்றியுள்ளனர். தமிழகத்தின் வடபகுதியில் இவர்கள் செய்த பாசனப் பணிகளால் இன்றும் அங்கு வேளாண்மை சிறப்பாக நடைபெறுகிறது.

> "கூரம் செப்பேடு, 'வித்யா விநீத பல்லவ பரமேச்சுர கரம் எடுத்து ஏரி தோன்றி' என்று குறிப்பிடுகிறது. மகேந்திர வாடி கல்வெட்டு மகேந்தி தடாகக் கரையில் மகேந்திர விஷ்ணு கிரகம் அமைக்கப்பட்ட செய்திகளைக் குறிப்பிடுகிறது. நந்திவர்மனின் ஏழாம் ஆட்சியாண்டைச் சேர்ந்த உத்திமேரூர் கல்வெட்டு (கி.பி ஒன்பதாம் நூற்றாண்டு) அவ்வூரில் குளம் வெட்டுவதற்கு நிலம் வாங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது" என்கிறார் ப.கோமதிநாயகம். (ப.கோ, த.பா.வ, ப.64)

இவை தவிர நாட்டுக்கால், ஆற்றுக்கால் என்ற இரண்டு வாய்க்கால் கட்டுமான முறை பற்றிய குறிப்புகள் உள்ளன. இது ஆற்றிலிருந்து நேரடியாக நீரை வயலுக்கு கொண்டுவரக்கூடிய அமைப்புகள் மற்றும் ஏரிக்கு நீர் கொண்டு வரும் அமைப்புகள் என்று தெரிகிறது. இது தவிர நீரூற்று வாய்க்கால்கள் ஊற்றுக்கால் என்று கூறப்படுகின்றன. இதை ஒளவையார் குறிப்பிடும் 'ஊற்றுக்கால் உலகூட்டும்' என்ற தொடர் நினைவூட்டுகிறது. பாலாற்றில் இருந்து நீரானது பல ஏரிகளுக்கு கொண்டு செல்லப்பட்டுள்ளன. இவை தவிர கூற்றன் வாய், வாய்த்தலை, தலைவாய், முகவாய் என்று பெயருள்ள பாசனக் கட்டுமானங்கள் ஆற்றிலிருந்து நீரை வயலுக்கு கொண்டு செல்லப் பயன்பட்டுள்ளன. திருச்சி அருகேயுள்ள பெட்டவாய்த்தலை இதற்கு நல்ல சான்று. இவற்றைப் பராமரிக்க நிலமானியங்கள் வழங்கப்பட்டிருந்தன.

சிற்றூர்களில் குடியாட்சிமுறை நன்கு நிலவியிருந்தது. முறையான தேர்தல்கள் நடந்துள்ளன. தன்னாட்சியுடன் கூடிய நிர்வாக அமைப்பு இருந்தது. இந்த சிற்றூர் ஆட்சியின் கீழ் அலுவல் முறைப்படி பல சிறு குழுக்கள் இருந்தன. இவற்றுக்கு வாரியங்கள் என்று பெயர். இன்றைய அரசு அமைத்துள்ள வாரியங்களுக்கு முன்னோடியாக அன்றைய பல்லவ நாட்டு மக்கள் முன்னோடியாக இருந்ததை அறிய முடிகிறது. இவ்வாறு பல்லவர் காலத்தில் தொடங்கப்பட்ட நீர்ப்பாசனப் பணிகள், சோழர் காலத்தில் விரிவடைந்து ஏற்றம் பெற்றன.

**பிற்காலச் சோழர்களின் பாசனப் பணிகள்**

சோழர் காலத்தில் காவிரிக் கழிமுகப்பகுதியை வளப்படுத்துவதில் பெரும்பாலான பாசன வசதிகள் உருவாக்கப்பட்டன. சோழர் காலத்தில் வாய்க்கால்களையும், ஏரிகளையும் மன்னர் பெயரிலும் அவர்களது மனைவியர் பெயரிலும் அவற்றை அமைக்க உதவிய மற்றவர் பெயரிலும் அழைத்தனர். இன்றும் அப்பெயர்கள் வழக்கத்தில் உள்ளன. அதனைக் கொண்டு அவை உருவான காலத்தை நாம் தெரிந்து கொள்ளலாம்.

தஞ்சை வடபுறம் உள்ள வடவாறு, வீரசோழ வடவாறு என்று கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்டுள்ளது. திருப்பனந்தாளுக்க வடக்கே கொள்ளிடத்திலிருந்து பிரியும் வடவாறு, மதுராந்தக வடவாறு எனப் பெயர் கொண்டது. வீர நாராயணன் வாய்க்கால், வீர நாராயணன் ஏரி ஆகியவை இவனால் உருவாக்கப்பட்டவை. வீர நாராயணன் ஏரி தற்போது வீராணம் ஏரி என்று அழைக்கப்படுகிறது. வட ஆர்க்காடு மாவட்டம் சோழிங்கபுரத்தில் சோழிங்க வாரிதி என்ற ஏரியை இவனே உருவாக்கினான் என்று கல்வெட்டுகள் கூறுகின்றன.

மைசூர்ப் பகுதியில் ஏரி ஒன்று அமைத்ததற்கான செய்தியை மாலூபட்டனா கல்வெட்டு கூறுகின்றது. உய்யக் கொண்டான் வாய்க்கால் ஒரு சமமட்டக் கோட்டு வாய்க்கால் ஆகும்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

இந்த வாய்க்கால் அமைந்துள்ள பகுதி மேடும் பள்ளமும் அமைந்தது. ஆற்றுநீர் அறுத்து முறையற்று இருக்கும் இடம். இங்கு சமமட்டக்கோடு வாய்க்கால் அமைக்கும் நுட்பம் அப்போதே இருந்தமை மிகவும் வியப்பிற்குரிய ஒன்று. ஏனெனில் நீரியல் கோட்பாடுகள் வளர்ந்தது 18ஆம் நூற்றாண்டுக் காலத்தில்தான் என்பது குறிப்பிடத்தக்கது.

> "குலோத்துங்கன் காலத்துக் கல்வெட்டு உடைந்து போன ஏரியைப் பராமரிப்பது பற்றி விரிவாகச் சொல்கிறது. இது ஏரி அடைக்க பொற்காசுகள் அளித்த செய்தி கூறுகிறது. இக்கல்வெட்டு கி.பி.1192 ஆம் ஆண்டைச் சேர்ந்தது. இவ்வாறாக மன்னர்கள் மட்டுமல்லாது பொதுமக்களும் நீர்ப்பாசனப் பணிகளில் மிகுந்த ஈடுபாட்டுடன் செயல்பட்டுள்ளனர்".
>
> (பா, ப. வே, ப.27)

நாட்டின் பொருளியல் இந்த வேளாண்மையை வைத்தே இயங்கியது. வேளாண்மையும் அதற்கு மூலமான பாசனமும் பிற்காலச் சோழர்களின் இன்றியமையாத பணியாக இருந்துள்ளது.

**பாண்டிய மன்னர்களின் பாசனப் பணிகள்**

தமிழக வரலாற்றிலேயே பாண்டியர் வரலாறு மிக நெடியது. பாண்டியர்களின் ஆரம்பகால கல்வெட்டுகள் அனைத்தும் தமிழகத்தின் தென்பகுதியில் கிடைப்பதிலிருந்தே அவர்கள் முதலில் தென் பகுதியில் தான் தங்கள் ஆதிக்கத்தைச் செலுத்திக் கொண்டிருந்தார்கள் என்பது தெளிவாகும். பாண்டியர்களின் தமிழ்க் கல்வெட்டுகளில் மிகவும் பழமையானது மதுரை வைகைக் கரையில் கிடைத்துள்ள தமிழ்க் கல்வெட்டே ஆகும். இது பாண்டிய மன்னன் செழியன் சேந்தன் காலத்தியது. இக்கல்வெட்டு அம்மன்னன் வைகையில் மதகு கட்டியதையும், அரிகேசரி என்ற கால்வாயை வெட்டியதையும் குறிக்கிறது.

பிற்காலப் பாண்டியர்கள் ஏராளமான அணைக்கட்டுகள் கட்டிக் கால்வாய்கள் வெட்டினார்கள். திருக்கோவிலூர் அணை உள்ள இடத்தில் மதகு அமைத்து வாய்க்கால் பிரித்ததை விக்கிரம பாண்டியன் கல்வெட்டு கூறுகிறது. பவானி ஆற்றில் உள்ள காலிங்கராயன் அணைக்கட்டு பிற்காலப் பாண்டியர்கள் காலத்தியது.

> "பிற்காலப் பாண்டியர் காலத்தில் தாமிர வருணி ஆற்றின் குறுக்கே கோடைமேல் அழகியான் அணை, நதியுண்ணி அணை, கன்னடியன் அணை என்று அணைக்கட்டுகளும் அதிலிருந்து பாசன வசதியளிக்கும் வாய்க்கால்களும் வெட்டப்பட்டன. அவை இன்றளவும் பயன்படுகின்றன".
>
> (ப.கோ, த.பா.வ, ப.54)

நாஞ்சில் நாட்டில் பழையாற்றின் குறுக்கே பாண்டியன் அணை, பாண்டியன் என அழைக்கப்படும் கால்வாயும் பாண்டியர்களின் ஆட்சிக்காலத்தியவை. பாண்டியன் அணை இருக்கும் இடத்தில் புதிய அணை கட்டப்பட்டு புத்தன் அணை என்று இப்போது அழைக்கப்படுகிறது. பாண்டியன் கால்வாய் இன்றும் பாசனத்திற்குப் பயன்படுகிறது.

தமிழ்நாட்டின் பாசன வரலாற்றின் எட்டிச் சாத்தான் எனப்படும் இருப்பைக்குடிக் கிழவன் தனது ஆட்சியின் பெரும்பகுதியை நீர்ப்பாசனப் பணிக்காகவே செலவிட்டிருக்கிறான்.

**நாயக்க மன்னர்களின் நீர்ப்பாசனப் பணிகள்**

பாண்டியர்களுக்குப் பின் மதுரையில் ஆட்சியைப் பிடித்த நாயக்க மன்னர்கள் ஆட்சியில் பல நீர்ப்பாசன பணிகளும் நடந்துள்ளன. தாமிரவருணி ஆற்றில் உள்ள அரியநாயகிபுரம் அணைக்கட்டு, தளவாய் அரியநாதரால் கட்டப்பட்டது. இதே போல் பாளையன் அணைக்கட்டு நதியுண்ணி அணைக்கட்டு போன்றவை நாயக்கர் காலத்தைச் சார்ந்தவையே.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கும்பகோணம் மகாமகக் குளத்தைத் தஞ்சையில் வாழ்ந்த நாயக்க மன்னரின் அமைச்சரான கோவிந்த தீட்சிதர் அமைத்தார். சிறந்த நிர்வாகியான இவரை அய்யன் என மக்கள் அன்புடன் அழைத்தனர். இவர் ஆற்றிய பொதுப்பணிகள் அய்யன்குளம், அய்யன் வாய்க்கால், அய்யன் கடை என்று அழைக்கப்படுகின்றன. அய்யன் வாய்க்கால் காவிரியின் வடபுறத்தில் மேலணையில் பிரிகிறது. இன்றும் பல்லாயிரம் ஏக்கர் நிலங்களுக்குப் பாசன நீர் வழங்கி வருகிறது.

**தாமிரவருணி அணைக்கட்டுகளின் தொழில்நுட்பம்**

ஆற்றின் குறுக்கே அணை கட்டுவதன் மூலம் ஆற்றின் நீர்மட்டம் உயர்ந்து, கால்வாயில் தண்ணீர் இயற்கையாக பாய்கிறது. இதனால் ஆற்றைவிட உயரமான இடத்தில் உள்ள நிலங்களுக்கும், குளங்களுக்கும் தண்ணீர் பாய்ச்ச முடிகிறது. இந்நோக்கத்தோடு பாண்டிய, நாயக்க மன்னர்களால் வடிவமைக்கப்பட்ட தாமிரவருணி அணைக்கட்டுகள் இன்றளவும் பயன் தருகின்றன. இதை தொடர்ந்து ஆங்கிலேயர் காலத்தில் வரி வசூலித்து இலாபம் கண்டனர். எனவே மக்களால் வரி செலுத்த முடியாமலும் நீர் வரத்து மற்றும் அணைக்கட்டுகளை சரிவர பராமரிக்க முடியாமலும் துன்பப்பட்டனர். விடுதலைக்குப்பின் ஐந்தாண்டுத் திட்டங்கள் வகுத்து ஏராளமான நீர்த் தேக்கங்கள் உருவாக்கப்பட்டன.

**முடிவுரை**

மழை வேளாண்மையிலிருந்து நீரியல் வேளாண்மை வரை பாசன வளர்ச்சி தமிழர்களின் அறிவியல் தொழில் நுட்பத்தைச் சுட்டுகிறது. அன்றைய தொழில் நுட்பங்கள் இன்றளவும் ஏற்புடையதாகச் செயல்படுகின்றன. காலப்போக்கில் மக்கள் தொகைப் பெருக்கத்தின் காரணமாகவும் மழை வரத்து குறைவதன் காரணமாகவும் இந்த அணைக்கட்டுகளின் பராமரிப்பு குறைந்து வருகிறது. எனவே அரசு இதனை கவனத்தில் கொண்டு நீர்ப் பாசனங்களை மேம்படுத்துவதன் மூலம் எதிர்கால சந்ததியினரின் வாழ்க்கையை மேம்படுத்த முடியும். இதனைத் தொடர்ந்து இன்னும் ஏராளமான ஆய்வுகளை நடத்தி நமது பாரம்பரிய அறிவியலை உலக மக்கள் உணரச் செய்ய வேண்டும்.

**துணைநூற் பட்டியல்**

முனைவர் வி.நாராசன் (உ.ஆ) - *பத்துப்பாட்டு,*
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட்,
41-பி,சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098.

இளம்பூரணனார் உரை (உ.ஆ) - *தொல்காப்பியம் பொருளதிகாரம்,*
சாரதா பதிப்பகம்,
ஜி-14, சாந்தி அடக்ககம்,
3, ஸ்ரீகிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை, சென்னை – 600 014.

முனைவர் பெ.சுப்பிரமணியன் (உ.ஆ) - *பரிபாடல்,*
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட்,
41-பி,சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098.

**E-ISSN: 2581-7140**

**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

எஸ்.கௌமாரீஸ்வரி(தொ.ஆ) - *பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்,*
சாரதா பதிப்பகம்,
ஜி-14, சாந்தி அடக்ககம்,
3, ஸ்ரீகிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை, சென்னை – 600 014.

முனைவர் அ.ஆலிஸ்(உ.ஆ) - *பதிற்றுப்பத்து,*
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட்,
41-பி,சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098.

ப.கோமதி நாயகம் - *தமிழகப் பாசன வரலாறு,*
ஸ்நேகா, 348,டி.டி.கே சாலை,
இராயப்பேட்டை, சென்னை – 600 014.

பாமயன் - *பழந்தமிழர் வேளாண்மை,*
பூவுலகின் நண்பர்கள்,
106/1, முதல் தளம்,
கனகதுர்கா வணிக வளாகம்,
வடபழனி, சென்னை – 600 026.

ச.மா.இரத்னவேல், ஸ்ரீ.வை.நா.கள்ளபிரான் - *பாசன ஏரிகளின் பாரம்பரியத்தைத் தேடி….,*
பாவை பப்ளிகேஷன்ஸ்,
16(142) ஜானி ஜான்கான் சாலை,
இராயப்பேட்டை, சென்னை – 600 014.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# இலங்கையில் தமிழ் அரச மரபின் உருவாக்கம் - அண்மைக்காலத் தொல்லியற் கண்டுபிடிப்புகளை அடிப்படையாகக் கொண்ட ஆய்வு

# The Creation of the King's Clan in Ilankai- An Analysis based on the Recent Archaeological Findings

**திருமதி.சயிதரன் சிவரூபி,** தொல்லியல் விரிவுரையாளர்
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம், இலங்கை.

## Abstract

*The article has been culled out by the inspiration to extract the creation of the King's Clan in Ilankai. It speaks of the generations of the kings from the past Tamil Pandian and Chola kings to the later arrived Sinhala kings and the sub sects of Tamil people. Nevertheless, the purpose of it is to bring out the glimpses from the archaeological evidences of the clans.*

**Keywords:** Creation, King's Clan, Ilankai, Analysis, Archaeological Findings

தமிழ்ப் பண்பாடு பற்றிய ஆய்வின் தொடக்க காலமாக சங்க காலம் கொள்ளப்படுகிறது. தமிழ் வளர்ச்சியில் மைல்கல்லாக பார்க்கப்படுகின்ற சங்ககாலம் கால அடிப்படையில் எதுவென்பதையிட்டு அறிஞர்களிடையே வேறுபட்ட கருத்துநிலை காணப்படுகின்ற போதிலும்,இப்பண்பாடு ஆதியிரும்புக் காலப் பண்பாட்டின் முதிர்ச்சி நிலையில் தோன்றியதை அப்பண்பாடும், அப்பண்பாட்டு மக்கள் பயன்படுத்தி தமிழ்ப் பிராமியில் எழுதப்பட்ட மட்பாண்டச் சாசனங்களும் உறுதி செய்கின்றன. இப்பின்னணி தான் திராவிட மொழிகளில் முதலில் தோன்றிய வளமான தமிழ் இலக்கியமான சங்க இலக்கியம் தோன்றக் காரணமாகும். சங்க இலக்கியமும், பின் தோன்றிய பழந் தமிழ் இலக்கியங்களும் பல்லவருக்கு முன் ஆட்சிபுரிந்த மூவேந்தர்கள், இருநூறுக்கு மேற்பட்ட இனக்குழுத் தலைவர்கள், சிற்றரசர்கள், குருசில்கள் என்போரின் ஆட்சி பற்றிக் கூறுகின்றன.

தென்னாசியாவில் தமிழகத்தை அடுத்து அதன் சமகாலத்தில் தமிழ், தமிழர், தமிழ் மன்னர்களின் ஆட்சி பற்றிய சான்றுகள் இலங்கையிலேயே காணப்படுகின்றன. பொதுவாக இலங்கைப் பண்பாடு இந்தியத் தொடர்பு கொண்டு வளர்ந்தாலும், அதன் ஆதிகால இடைக்கால அரசியல் வரலாறு தமிழகத்துடன் இணைந்து வளர்ததற்கே சான்றுகள் காணப்படுகின்றன. இத்தொடர்பால் சமகாலத்தில் இலங்கையிலும் தமிழ் அரச மரபு தோன்றியிருக்கும் எனக் கூறலாம். சங்ககாலத் தமிழகத்தில் மூவேந்தர் ஆட்சியில் இருந்த போது சமகாலத்தில் இலங்கையில் உள்ள அநுராதபுரத்தில் தமிழ் மன்னர்களும் ஆட்சி புரிந்தது பற்றிப் பாளி இலக்கியங்கள் கூறுகின்றன.

இலங்கையின் புராதன கால பண்பாட்டு வரலாற்றை அறிவதில் தீபவம்சம், மகாவம்சம், சூழவம்சம் போன்ற பாளி இலக்கியங்கள் முக்கிய வரலாற்றாதாரமாகப் பார்க்கப்பட்டு வந்துள்ளன. அதில் மகாவம்சம் கி.மு 6ஆம் நூற்றாண்டு தொடக்கம் கிட்டத்தட்ட 1000 ஆண்டுகால வரலாற்றை உள்ளடக்கிய வகையில் இலங்கையின் பூர்வீக மக்கள்,நாகரிக உருவாக்கம், அரச உருவாக்கம் போன்ற செய்திகளை கூறுகின்றது. இவ்விலக்கியம்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

அநுராதபுர இராச்சியத்தினையும், பௌத்தமதத்தினையும், பௌத்த மதத்திற்கு தொண்டாற்றிய மன்னர்களையும் மட்டுமே கருப்பொருளாகக் கொண்டெழுந்ததாக காணப்படுவதனால் மகாவம்சம் போன்ற பாளி இலக்கியங்களில் ஆரம்பகால இலங்கையின் முழு வரலாற்றையும் எதிர்பார்க்க முடியாதாகும். அதாவது ஆரம்பகால இலங்கையின் வரலாற்றைக் கூறுகின்ற ஒரு முழுமையான இலக்கியமாக பாளி இலக்கியங்கள் அமைந்திருக்கவில்லை. எனினும் இவ்விலக்கியங்களில் தேவைகருதி தமிழ் மன்னர்கள் பற்றியும், தென்னிந்தியா குறிப்பாக தமிழ்நாடு அரசுகளுடான அநுராதபுர தொடர்புகள் பற்றியும், அநுராதபுரம் தவிர்ந்த பிரதேசங்கள் பற்றியும் ஆங்காங்கே காணப்படும் குறிப்புக்களினைக் கொண்டு அநுராதபுர அரசின் தமிழ் மன்னர்கள் பற்றி ஒரளவேனும் அறிந்துகொள்ள முடிகின்றது. பௌத்த மதம் பற்றிய செய்திகளைக் கருப்பொருளாகக் கொண்டெழுந்த பாளி இலக்கியங்களிலும், பிராமிக் கல்வெட்டுக்களிலும் தமிழர்கள் எனக் குறிப்பிடப்பட்டவர்களின் பெயர்கள் பெரும்பாலும் பௌத்த சமய மொழியாகிய பிராகிருதமொழி பெயர்களாகவும்,பிராகிருதமயப்படுத்தப்பட்ட தமிழ்ப் பெயர்களாகவும் காணப்படுகின்றன. இவ்வாறு குறிப்பிடப்பட்டவர்களின் பெயர்கள் கூட தமிழர்கள் எனக் குறிப்பிடப்படாத ஏனையோர்களின் பெயர்களாகவிளங்கியமையும் இங்கு சுட்டிக்காட்டத்தக்கது. பாளி இலக்கியங்களின் அடிப்படையில் இலங்கையின் முதலாவது இராசதானியாக விளங்கிய அநுராதபுர அரசில் செல்வாக்குப் பெற்ற தமிழ் மன்னர்களாக பின்வருவோரை அடையாளம் காணமுடிகின்றது.

1. குதிரை வர்த்தகத்தில் ஈடுபட்டவர்களின் பிள்ளைகளான சேன (Sena) குத்தக (Guttaka) (கி.மு237 – 214) என்போர் அநுராதபுரத்தில் ஆட்சி செய்த சூரதிஸ்ஸ (Suratissa) மன்னனை பெரும்படையுடன் வந்து வெற்றி கொண்டு 22 வருடங்கள் நீதி தவறாது ஆட்சி செய்திருந்தனர்.
2. சோழ உயர் குடியில் பிறந்த எல்லாள மன்னன் (கி.மு 145 – 101) ஆட்சியிலிருந்த அசேலா மன்னனை வெற்றி கொண்டு 44 ஆண்டுகள் நீதிதவறாது ஆட்சி செய்திருந்தான். இன்று வரையும் இலங்கைவாழ் தமிழ் சிங்கள மக்களிடையே எல்லாளன் மன்னன் பற்றிய கதைகளும், நினைவுகளும் வாழ்ந்து கொண்டிருப்பதனை காணமுடிகின்றது.
3. துட்டகாமினி மன்னன் எல்லாள மன்னனுக்கு எதிராக போராடிய பொழுது தென்னிலங்கையில் 32 தமிழ்ச் சிற்றரசர்களை வெற்றி கொண்டதன் பின்னரே எல்லாள மன்னனை வெற்றி கொண்டதாக வரும் செய்தி.
4. வட்டகாமினியின் ஆட்சிக் காலத்தில் (கி.மு 104) மாதோட்டத்தில் வந்திறங்கிய ஏழு தமிழர்களில் ஒருவன் வட்டகாமினியின் மனைவியுடனும், இன்னொருவன் புத்தரது பிச்சாபாத்திரத்துடனும் மறுகரைக்குத் திரும்பிச் செல்ல, ஏனைய ஐந்து தமிழர்களான புலகத்தா (Pulahattha) பாகிய (Bahiya), பணயமாற (Panayamara) பிணையமாற (Pilayamara) தாடிக(னுயவாமைய) என்போர் 14 வருடங்கள் ஏழு மாதங்களாக (கி.பி 102 – 87) ஆட்சிசெய்திருந்தமை.
5. வட்டகாமினி மன்னன் ஆட்சிக் காலத்தில் ரோகணத்திலிருந்து ஆட்சி புரிந்த திஸன் என்ற பிராமணன்.
6. அனுலா தேவி என்ற அரசியால் நியமிக்கப்பட்ட வடுக (Vatuka) (கி.பி 47) என்போனின் ஒரு வருடமும் ஆறு மாதங்களுமான ஆட்சி.
7. அனுலா தேவி வடுக என்போனைக் கொன்று விட்டு அரண்மனைப் புரோகிதரான (jkpsuhI) நீலிய என்போனை (Niliya) அரசனாக நியமித்திருந்தாள். இவன் ஆறு மாதங்கள் மட்டுமே ஆட்சி செய்திருந்தான்.

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

8. இளநாகன் என்ற மன்னன் மறுகரைக்குத் தப்பிச் சென்று மூன்று ஆண்டுகளின் பின் பெரும்படையுடன் வந்ததுடன், அநுராதபுர அரசில் ஆறு வருடங்கள் (கி.பி 38 -44)ஆட்சி செய்திருந்தான். இவனுடைய மனைவி பெயர் தமிழாதேவி எனக் குறிப்பிடப்படுவதிலிருந்து அவளொரு தமிழ் பெண்ணாக அறியமுடிகின்றது.

மகாவம்சம் கிறிஸ்துவிற்கு முற்பட்ட நூற்றாண்டுகளிலிருந்து அநுராதபுர அரசில் தமிழ், சிங்கள மன்னர்கள் மாறி மாறி ஆட்சி புரிந்த வரலாற்றையே குறிப்பிடுகின்றது. அதிலும் குறிப்பாக கி.மு 2ஆம் நூற்றாண்டு தொடக்கம் கி.பி 1ஆம் நூற்றாண்டு வரையான காலப்பகுதியில் பத்து தமிழ் மன்னர்கள் 80 ஆண்டுகளுக்கு மேலாக ஆட்சி புரிந்ததாக அறியமுடிகின்றது. சேன, குத்திக, எலாரா, பாகிய, பழையமாற, பிழையமாற, தாதிக, நீலிய, வடுக, திஸ என பாளி இலக்கியங்களில் கூறப்பட்ட இவ்தமிழ் மன்னர்களின் பெயர்கள் முறையே தமிழில் சேனன், குத்திகன், எல்லாளன், புலகதன், பாகியன், பழையமாறன், பிழையமாறன்,தாதிகன், நீலியன், வடுகன், திஸன் என அறியப்படும். மேலும் இலங்கையில் ஆட்சி புரிந்த தமிழ், சிங்கள மன்னர்கள் ஆட்சியுரிமை இழந்த போதெல்லாம், தமது ஆட்சியுரிமையினை நிலைநாட்டுவதன் பொருட்டு அடிக்கடி தமிழ் நாட்டிற்கு சென்று படையுடன் வந்த வரலாற்றையும் பாளிநூல்கள் குறிப்பிடுகின்றன. மகாவம்சம் கிறிஸ்துவிற்கு முற்பட்ட நூற்றாண்டுகளிலேயே இந்தியாவுடனான தொடர்புகள் பற்றி குறிப்பாக வடஇந்தியாவுடனான தொடர்புகளை முக்கியப்படுத்தும் நோக்கில் தென்னிந்திய தொடர்புகளை மறைமுகமாகவே கூறிநிற்கின்றது. உதாரணமாக கி.மு 6ஆம் நூற்றாண்டில் வடஇந்தியாவிலிருந்து வந்த விஜயனும் அவனது 700 தோழர்களின் வருகையுடன் இலங்கையின் நாகரிக உருவாக்கம் ஏற்பட்டதாக கூறிநிற்கும் பாளிநூல்கள் அவர்கள் மணமுடிப்பதன் பொருட்டு பாண்டிய இளவரசி உட்பட 700 மணப்பெண்கள் வரவழைக்கப்பட்டதனையும், அவர்களுடன் சேர்ந்து 18தொழில் தெரிந்த 1000 தொழில் வினைஞர்களும் தமிழ் நாட்டிலிருந்து வந்ததாகவே குறிப்பிடுவதும் இங்கு நோக்கத்தக்கது. ஆயினும் மேற்கூறப்பட்ட தமிழ் மன்னர்களை பாளி இலக்கியங்கள் இலங்கைக்குரிய ஆட்சியாளர்கள் எனக் கூறாது அக்கரையில் (தமிழகத்தில்), சோழ, பாண்டிய நாட்டில் இருந்து படையெடுப்பாளாராக, வர்த்தகர்களாக, ஆக்கிரமிப்பாளர்களாக வந்து இலங்கையின் ஆட்சியுரிமையைப் பெற்ற அன்னியர் என்றே கூறுகின்றன.

பாளி இலக்கியங்கள் குறிப்பிடும் இவ்தமிழ் மன்னர்களுடைய பெயர்களையொத்த பெயர்கள் சமகாலத்தில் தமிழகத்தில் காணப்பட்டதற்கான சான்றுகள் காணப்படவில்லையென்றும் ஆனால் ஈழத்தில் வாழ்ந்த தமிழர்களிடையே மேற்கூறப்பட்ட பெயர்களில் குறுநிலத் தலைவர்கள், அரசஅதிகாரிகள், கப்பல் தலைவர்கள், கப்பலோட்டிகள் என சமூகத்தில் உயர்ந்த நிலையிலிருந்ததற்கான ஆதாரங்களினையும் தொல்லியல் சான்றுகளின் அடிப்படையில் பேராசியர்.புஸ்பரட்ணம் (2001) அவர்கள் எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார். மேலும் அவர் குறிப்பிடுகையில் சிங்கள மன்னர்களை சுதேசிகளாகவும்,தமிழ் மன்னர்களை தமிழ் நாட்டிற்குரியவர்களாகவும் குறிப்பிடுவதற்கு, சிங்கள மன்னர்கள் தென்னிலங்கையில் சிற்றரசர்களாக இருந்து பின்னர் அநுராதபுரத்தை வெற்றி கொண்டு ஆட்சி செய்ததை உண்மையான வரலாறாக கொண்டால் சமகாலத்தில் தமிழ்ச் சிற்றரசர்கள் தென்னிலங்கை, வடஇலங்கையில் ஆட்சியாளர்களாக இருந்து காலப்போக்கில் அநுராதபுரத்தையும் வெற்றி கொண்டு ஆட்சிபுரிந்ததன் அடிப்படையில் அவர்களை ஏன் இலங்கை மன்னர்களாக கொள்ளமுடியாதென கேள்வியெழுப்பியுள்ளமையும் இங்கு சுட்டிக்காட்டத்தக்கதாகும். இவ்வினாவிற்கு விடையளிப்பதன் பொருட்டு சமகாலத்திற்குரிய பிராமிக்கல்வெட்டுக்கள், நாணயங்களை ஆதாரமாக எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

இலங்கையில் ஆட்சிபுரிந்த தொடக்ககால தமிழ் மன்னர்களை தமிழ்நாட்டுடன் தொடர்புபடுத்துவதனை விட இலங்கையுடன் தொடர்புபடுத்தி ஆராய்வதே பொருத்தமாக தெரிவதன் அடிப்படையிலும் சமகாலத்திற்குரிய தமிழக ஆதாரங்களுடன் ஒப்பிட்டாராய்வதில் காணப்படும் வேறுபாடுகளும் குறிப்பாக பல்லவர் ஆட்சிக்கு முன்னர் தமிழகத்தின் இயற்கை எல்லையைத் தாண்டி இன்னொரு நாட்டின் ஆட்சியுரிமையை படைகொண்டு கைப்பற்றும் அளவிற்கு தமிழகத்தில் பலமான அரசு தோன்றவில்லையென்பதும், மேலும் காதலையும், வீரத்தையும் போற்றிப்பாடும் பழந்தமிழ் இலக்கியங்கள் இலங்கையுடனான வர்த்தக, பண்பாட்டு உறவுகளைக் கூறிய போதும் இலங்கையுடனான அரசியல் உறவு பற்றியோ அல்லது தமிழக ஆட்சியாளர்கள் இலங்கை மீது படையெடுத்து ஆட்சியைக் கைப்பற்றியது பற்றியோ எந்த இடத்திலும் கூறவில்லை. இந்த வேறுபாடுகள் இலங்கையில் ஆட்சி புரிந்த தமிழ் மன்னர்கள் பற்றிப் பாளி இலக்கிய வரலாற்றுக் கதைகளை மீள்வாசிப்பிற்கு உட்படுத்த தூண்டுகின்றதெனலாம்.

இதனால் வரலாற்றுக்கு முற்பட்ட ஆய்வுகளிலிருந்து குறிப்பாக ஆதியிரும்புக்கால பண்பாட்டு பின்னனியிலிருந்து இலங்கையின் அரச உருவாக்கத்தினை ஆராய்வதே பொருத்தமானதாகும். இலங்கையின் ஆதியிரும்புக்காலப் பண்பாடு பற்றிய அண்மைக்கால ஆய்வுகள் குறிப்பாக தமிழரின் பூர்வீக வரலாறு, பண்பாடு பற்றிய ஆய்விற்குப் புதுவெளிச்ச மூட்டுவதாக உள்ளது. தமிழகப் பண்பாட்டின் ஒரு பாகமாகப் பார்க்கப்படும் இலங்கையின் ஆதியிரும்புக்காலப் பண்பாட்டின் பல்வேறு அம்சங்கள் ஒரு பிராந்தியத்திற்குரிய பண்பாடாகவே காணப்படுகின்றன. தென்னிந்திய, இலங்கை ஆதியிரும்புக்காலப் பண்பாடு பற்றி விரிவான ஆய்வு செய்த கலாநிதிசுதர்சன் செவியரட்ன'அடிப்படை உலோகத் தொழிநுட்பம், இரும்பின் உபயோகம், மட்பாண்ட செய்கை உபகரணங்கள், நெற்பயிர்ச்செய்கை உபகரணங்கள், நீர்ப்பாசன முறைமை, சிறுகைத்தொழில், புதிய நிலையான குடியிருப்புகள், பண்டமாற்று வர்த்தக மையங்கள், குறுநில அரசுகளின் தோற்றம், குதிரையின் அறிமுகமும், புதிய சவஅடக்கமுறை என்பனவற்றை இப்பண்பாட்டின் முக்கிய கூறுகளாக எடுத்துக்காட்டியுள்ளார். பேராசிரியர் இந்திரபாலா ஆதியிரும்புக் காலத்தில் ஏற்பட்ட பண்பாட்டு வளர்ச்சிநிலை பற்றி குறிப்பிடுகையில் 'மொழி, எழுத்து, தொழில்நுட்பம், பயிர்ச்செய்கை போன்ற முக்கியமான துறைகளில் பெரும் முன்னேற்றங்களும், மாற்றங்களும் ஏற்பட்ட காலம் எனவும் ஆதியிரும்புக் காலத்தில் அரசியல், சமூக, பண்பாட்டு மாற்றங்கள் பல அக்காலத்தில் நிகழ்ந்ததனால் கற்கால மக்கள் பெரிதும் முன்னேறியிருந்தனர். இதனால் இலங்கை மக்களிடையே நாகரிகம்தோற்றம் பெற்றது. இத்தகைய வளர்ச்சியை ஆரியர் வந்து குடியேறியதன் விளைவாக தொடங்கிய வரலாறாக இதுவரை வரலாற்று அறிஞர்கள் கூறிவந்தமை பொருத்தமற்றது. ஆரியர் என்போர் இலங்கை வந்ததென்பதற்கு இடமேயில்லை. வெளியிலிருந்து பெருந்தொகையான மக்கள் வந்து குடியேறியதற்கோ, முன்வந்த மக்கள் அழிக்கப்பட்டதற்கே தொல்லியல் சான்றுகள் இல்லை' எனக் குறிப்பிட்டிருந்தார் (இந்திரபாலா.க,2006).

இப்பின்னனியில் இலங்கையின் நாகரிக உருவாக்கத்தினை இடைக்கற்காலத்தினை அடுத்து தோன்றிய ஆதியிரும்புக் காலத்துடன் தொடர்புபடுத்திப் பார்ப்பதே பொருத்தமாக அமைவதுடன் அதன் வளர்ச்சிநிலையிலான அம்சங்களாகவே வெளிநாட்டு வர்த்தகம் மற்றும் அரசஉருவாக்கத்தினை பார்க்க முடியும்.இவை இனக்குழு நிலையில் இருந்து அரசு தோன்றுவதற்கு இடைப்பட்ட குறுநில அரசுகளின் ஆட்சியாகவும் விளங்கியிருந்தன. தமிழக அரச மரபின் தோற்றம் பற்றி ஆராய்ந்த அறிஞர்கள் அவற்றின் தொடக்கத்திற்கு

**E-ISSN: 2581-7140**

**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

ஆதியிரும்புக் காலப் பண்பாட்டைச் சான்றாகக் காட்டுகின்றனர். இலங்கையின் அரச உருவாக்கம் பற்றி ஆராய்ந்த இலங்கை அறிஞர் சுதர்சன் செனிவரட்னாவும் இப்பண்பாட்டையே ஆதாரமாகக் கொள்கிறார்.இத்தகைதொரு நிலைப்பாட்டினையே பேராசிரியர்களான லெஸ்லி குணவர்த்தன, தெரணியகல, சிரான் தெரணியகல, இந்திரபாலா, சிற்றம்பலம், புஸ்பரட்ணம் போன்றோர்களது ஆய்வுகளும் வெளிப்படுத்தி நிற்கின்றன.ஆதியிரும்புக்காலப் பண்பாட்டில் பெரிதும் வளர்ச்சியடைந்திருந்த பொருளாதார அம்சமானது சமூகத்தினை பல்வேறு வளர்ச்சி நிலைக்கு எடுத்துச் சென்றன எனவும், இது சமூகத்தின் கட்டமைப்பில் பல்வேறு குழுக்களின் தோற்ற எழுச்சியையும் மன்னர்,வேளிர், வேந்தர் போன்ற அரசஉருவாக்கத்திற்கும் வழிவகுத்ததென பேராசிரியர் ராஜன் அவர்கள் குறிப்பிட்டிருந்தமையும் இவ்விடத்தில் நோக்கத்தக்கதாகும் (ராஜன்,கா., 2012).

ஆதியிரும்புக்கால வளர்ச்சி நிலையில் தமிழகத்திலும், இலங்கையின் வடமேற்கு கரையிலும் வர்த்தக பண்பாட்டு வளர்ச்சியின் பின்னனியில் குறுநில அரசுகள் தோற்றம் பெற்றிருந்தன. அவை தமிழகத்தின் திருநெல்வேலிக் கரையில் அமைந்திருந்த மதிரையும் (பிற்கால பாண்டிய அரசு) அதற்கு நேர்ரெதிரே அமைந்திருந்த வடமேற்கிலங்கையின் தம்பபண்ணியுமாகும். இவ்விரு மையங்களுக்குமிடையே ஏற்பட்டவர்த்தக, அரசியல் தொடர்புகளின் பின்னனியே விஜயன், பண்டுகாபயன் கதைகள் தோற்றம் பெறக் காரணமாக அமைந்திருக்கும். காலப்போக்கில் இவ்விரு மையங்களிலும் தோற்றம் பெற்றிருந்த குறுநில அரசுகள் உள்நோக்கி பரவலடைந்ததுடன் அங்கு கிடைக்கப்பெற்ற இயற்கை வளங்களின் சாதகதன்மை காரணமாக வலுவான அரசாக மாற்றம் பெற்றிருந்தன. தம்பபண்ணியில் தோற்றம் பெற்றிருந்த அரசு உள்நோக்கி நகரும் போது அநுராதகாம என்ற பெயரில் (கிரேக்க, உரோமர் குறிப்பிடும் Anouragrammon) புதிய குறுநில அரசு தோன்றி, காலப்போக்கில் நீர்ப்பாசன தொழில்நுட்பத்தினை அடிப்படையாகக் கொண்ட வலுவான அரசாக மாறியதனால் தம்பபண்ணி மற்றும் மாந்தை துறைமுகத்தினை உள்ளடக்கி வளர்ச்சி பெற்றிருந்தது (இந்திரபாலா.க. 2006). வடஇலங்கையிலும் குறுநில அரசு ஒன்று இருந்த செய்தியினை ஸம்மோஹவிநோதனீ என்ற நூலில் வரும் கதை நாகதீப எனப் பாளியில் வழங்கும் நாகதீவில் தீபராஜ (பின்னர் தமிழில் தீபத்தரையன்) என்ற விருதைப் பெற்ற ஒரு ஆட்சியாளன் பற்றிக் கூறுகின்றது. தீபராஜ என்ற விருதைப் பெற்ற ஆட்சியாளன் ஒருவனைப் பற்றி மிகிந்தலையிலுள்ள பிராமிக் கல்வெட்டொன்றும் குறிப்பிடுகின்றது. மேலும் 1980களில் பேராசிரியர் இந்திரபாலா தலைமையில் ஆனைக்கோட்டையில் இடம்பெற்ற தொல்லியலாய்வானது வடஇலங்கையின் முக்கிய ஆதியிரும்புக்கால மையமாக ஆனைக்கோட்டையை அடையாளப்படுத்தியது. இங்கு இனங்காணப்பட்ட சவஅடக்கம் ஒன்றில் கிடைக்கப்பெற்ற எலும்புக்கூடும், தமிழ்ப் பிராமி எழுத்தில் 'கோவேத' என பொறிக்கப்பட்ட முத்திரை மோதிரமும் இப்பிரதேசத்தில் குறுநில மன்னன் ஒருவனின் ஆட்சி இடம்பெற்றதனை எடுத்துக்காட்டியுள்ளது. இவ்சவஅடக்கம் பற்றி கருத்து தெரிவித்த பேராசிரியர் இந்திரபாலா 'சவஅடக்கம் கண்டுபிடிக்கப்பட்ட ஆனைக்கோட்டைப் பகுதியானது ஒரு குறுநிலத்தலைவனின் அதிகார பீடமாக இருந்திருக்கலாம் அல்லது கந்தரோடையை அதிகார பீடமாகக் கொண்ட குறுநிலத்தலைவன் ஆனைக்கோட்டைப் பகுதியில் வணிக நடவடிக்கைகளில் ஈடுபடுவதற்கான துறை ஒன்றைத் தன் ஆணைக்கு உட்படுத்தியிருக்கலாம்' எனக் குறிப்பிட்டிருந்தார் (இந்திரபாலா.க, 2006).

சங்ககாலத்திற்கு சமனான காலப்பகுதியில் இலங்கையில் ஆட்சியிலிருந்த மன்னர்களில் பெரும்பாலனோர் 'நாக' என்ற பெயரை பின்னொட்டுச் சொல்லாக

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கொண்டிருந்தமைக்கு பாளி இலக்கியங்களில் பல சான்றுகள் காணப்படுகின்றன. குறிப்பாக தேவநம்பியதீஸனின் ஆட்சிக் காலத்தின் பின்னர் ஈழத்து மன்னர்களில் பலர் துல்லத்தநாக (கி.மு 119), கல்லத்தநாக (கி.மு 109 – 103), சோறநாக (கி.மு 63 – 51), மகாநாக (கி.பி 07 – 19), இளநாக (கி.பி 33 – 43), மல்லகநாக (கி.பி 136 – 143), குஜநாக (கி.பி 186 – 187), குஞ்சநாக (கி.பி 187 – 189),முதலாவது ஸ்ரீநாக (கி.பி 189 – 209), அபயநாக (கி.பி 231 – 240), ஸ்ரீநாக (கி.பி 240 – 242) போன்ற பெயர்களினைக் கொண்டிருந்ததாக அறியமுடிகின்றது. சங்க இலக்கியத்திலும், சமகாலப் பிராமிக் கல்வெட்டுக்களிலும் நாகன், நாகர் என்ற பெயர்கள் குறுநிலத் தலைவர்களுடனும், புலவர்களுடனும் நாடு, நகர், ஊர் ஆகிய இடப்பெயர்களுடனும் இணைந்து வருகின்றமை குறிப்பிடத்தக்கதாகும். நாக என்ற பெயரைத் தாங்கியோர் கிறிஸ்தவ சகாப்தத்திற்கு முன்னரே இலங்கை முழுவதும் காணப்பட்டிருந்ததனை இங்கு கண்டுபிடிக்கப்பட்ட பிராமிக் கல்வெட்டுக்கள் உறுதிப்படுத்துகின்றன. இலங்கையில் கண்டுபிடிக்கப்பட்ட பிராமிக் கல்வெட்டுக்களில் 200 கல்வெட்டுக்களில் 'நாக' என்ற பெயரை பலதரப்பட்ட மக்களும் தனிநபர் முன்னொட்டு அல்லது பின்னொட்டுப் பெயராக பயன்படுத்தியமைக்கு ஆதாரங்கள் காணப்படுவதுடன், அவர்கள் இனக்குழுத்தலைவர்கள், சிற்றரசர்கள், அரசஅதிகாரிகள் என உயர் பதவியிலிருந்ததனை இக்கல்வெட்டுக்கள் எடுத்துக்காட்டுகின்றன. இக்கருத்தினை இலங்கையில் கண்டுபிடிக்கப்பட்ட பிராமிஎழுத்துப் பொறித்த நாணயங்கள் மேலும் உறுதிப்படுத்துகின்றன. பிராமிக் கல்வெட்டுக்களில் நாக என்ற பெயர் பிராகிருத மொழியில் எழுதப்பட்டிருப்பினும் சில கல்வெட்டுக்களில் தமிழகத்தைப் போல் இப்பெயர் 'ந(ா)க, நாக, ணாக' என தமிழ்ப்படுத்தியும் எழுதப்பட்டுள்ளன. வவுனியா மாவட்டத்திலுள்ள புளியங்குளத்தில் கண்டுபிடிக்கப்பட்ட 35 கல்வெட்டுக்களில் நான்கு கல்வெட்டுக்கள் இப்பகுதியில் காணப்பட்ட நாக சிற்றரசு பற்றிய செய்தியினைத் தருகின்றன. அதில் ஒரு கல்வெட்டில் அநுரதியின் தகப்பனான ரஜநாக என்பவனுடன் அவளின் கணவனான உதியும், அவனது மனைவி அபிஅனுரதியும் இதில் விபரிக்கப்பட்டுள்ளனர். நாகஅரசின் வழித்தோன்றலாகிய அனுரதி பற்றிய செய்தியானது நாட்டின் ஏனைய பகுதிகளில்நாக மரபு காணப்பட்டது போன்று நாகதீபப் (வடஇலங்கை) பகுதியிலும் நாகஅரசு காணப்பட்டதையே எடுத்துக்காட்டுகின்றது.

தென்னாசியா நாடுகளுக்குள் பொதுவானதொரு பண்பாடாக விளங்கியிருந்த நாகமரபு (நாகத்தை குலமரபுத் தெய்வமாக கொண்ட மக்கள்) இப்பிரதேசங்களில் வேறுபட்ட காலமளவில் தோன்றிய செம்புக்கால, நுண்கற்கால, பெருங்கற்கால பண்பாடுகளுடன்இணைத்து பார்க்கப்பட்டு வருகின்றன(புஸ்பரட்ணம், 2017). கலாநிதி சிரான் தெரணியகல நாகர்களே இலங்கைக்கு பெருங்கற்காலப் பண்பாட்டைப் பரப்பியவர்கள் எனக் கூறுகிறார். பேராசிரியர் இந்திரபாலா பௌத்த மொழியான பிராகிருத மொழியை ஏற்றுக் கொண்ட மக்கள் அம்மொழி சார்ந்த இனக்குழுவாக உருவாகிக் கொண்டிருந்த போது நாகஇனமக்கள் தமிழ் மொழி பேசும் இனக்குழுவாக உருவாகி வடக்கு, கிழக்கு மாகாணங்களில் வாழத் தொடங்கினர் எனக் கூறுகிறார். அண்மையில் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தின் தொல்லியல் பிரிவினர் பேராசிரியர் புஸ்பரட்ணம் தலைமையில் வடஇலங்கையின் கட்டுக்கரை, நாகபடுவான் ஆகிய பகுதிகளில் மேற்கொண்ட தொல்லியல் அகழ்வாய்வுகளில் - 2016, 2017 நாகமரபு பற்றிய கணிசமான தொல்லியல் ஆதாரங்கள் கிடைக்கப்பெற்றிருந்தன. இவைபற்றி பேராசிரியர் புஸ்பரட்ணம், 2017 கருத்து தெரிவிக்கையில் 'இலங்கைத் தமிழர் தமிழ் நாட்டிலிருந்து தமிழ்மொழி பேசும் மக்களாக வருவதற்கு முன்னரே அவர்களின் மூதாதையினர் இலங்கையில் வாழ்ந்துள்ளனர் என்பதை எடுத்துக் காட்டுவதாகவும் அதற்குப் பெருங்கற்காலப் பண்பாட்டுடன்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

உருவான நாகமரபே காரணம் எனவும், இப்பண்பாடு இலங்கையில் 60க்கு மேற்பட்ட இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டாலும் நாகமரபை அடையாளப்படுத்தும் தொல்லியல் ஆதாரங்கள் கட்டுக்கரை, நாகபடுவனிலேயே அதிகளவில் கிடைக்கப்பெற்றுள்ளன' எனக் குறிப்பிட்டிருந்தார். இவ்வகையான ஆதாரங்கள் நாகமரபு ஏனைய பகுதிகளை விட வடபகுதியில் செல்வாக்குடன் காணப்பட்டதனையும், அதனாலேயே இப்பகுதி நாகதீபம், நாகநாடு என அழைக்கப்பட்டு வந்ததாக அறிய முடிகின்றது. இத்தகைய அம்சங்களின் காரணமாகவேமகாவம்சம், மணிமேகலை, சிலப்பதிகாரம் போன்ற இலக்கியங்களில் நாகமரபு பற்றிய செய்திகள் ஐதீகங்களாக பிரதிபலித்திருந்தன. அதுமட்டுமன்றி தொடர்ந்தும் வடஇலங்கையில் நாகமரபு நிலைத்திருந்தமைக்கான ஆதாரங்கள் காணப்படுவதும் இப்பகுதியின் தொன்மைக்கு சான்றாகும். இவ்வாறாக இலங்கையின் தொடக்ககால பண்பாடு பற்றிய ஆய்வில் நாகமரபு பற்றிய ஆய்வு குறிப்பிடத்தக்க இடத்தினைப் பெற்றிருப்பதனை பிராமிக்கல்வெட்டுக்கள், நாணயங்கள், பாளி, தமிழ் இலக்கியங்கள் போன்ற ஆதாரங்கள் வெளிப்படுத்தி நிற்கின்றன. இதன்பின்னனியில் இலங்கையின் அரச உருவாக்கம் பற்றி அதிலும் குறிப்பாக தமிழ் மன்னர்களுடைய அரச உருவாக்கத்தினை நாகமரபுடன் தொடர்புபடுத்தி ஆராய்வது பொருத்தமானதாகும்.

தமிழ்மொழியின் தொன்மையை நிறுவுவதில் கி.மு 3ஆம் நூற்றாண்டிலிருந்து பயன்பாட்டுக்கு வந்ததாகக் கருதப்படும் பிராமிக்கல்வெட்டுக்கள் முக்கிய பங்கு வகிக்கின்றன. தமிழ்நாட்டில் மட்டும் பயன்பாட்டிலிருந்த தமிழ்ப்பிராமி வரிவடிவத்திற்கே சிறப்பான இ, ம, ள, ழ, ற, ன போன்ற எழுத்துக்கள் பெருமளவுக்கு இலங்கைப் பிராமிக் கல்வெட்டுக்களிலும், மட்பாண்டங்களிலும் பயன்படுத்தப்பட்டிருப்பதனால் சமகாலத்தில் இலங்கையிலும் தமிழ்மொழியின் பயன்பாடு இருந்திருக்கும். இதற்கு இத்தமிழ்ப்பிராமி எழுத்துக்கள் மட்டுமன்றி சங்கஇலக்கியத்தில் வரும் பெயர்களோடு தொடர்புபடுத்தக்கூடிய ஆய், வேள், பருமக (பெருமகன்), பருமகள் (பெருமகள்), மருமகன், சலஹ (சகலன்), பரத (பரதவர், பரவர்), உதி, உதிய (உதியன்), குடி போன்ற சமூகம், வம்சம், பட்டம் தனிநபர் சார்ந்த பெயர்கள் சிறந்த எடுத்துக்காட்டாகும். இப்பெயருக்குரியவர்கள் ஆளும்வர்க்கமாக, அதிகாரம் மிக்க தலைவர்களாக,அக்கால சமூகத்தில் மதிக்கப்பட்டவர்கள், அவர்கள் வகித்த பதவிகள், பட்டங்கள் உறுதிப்படுத்துகின்றன (புஸ்பரட்ணம்.ப, 2003).

இலங்கையின் ஆதியிரும்புக் காலப் பண்பாட்டின் முதிர்ச்சியில் பிராமி எழுத்து, தமிழ் மொழி தொடர்பான சான்றுகள் அநுராதபுரம், பூநகரி, கந்தரோடை முதலான இடங்களில் கிடைத்திருப்பதும் தமிழ் அரச மரபின் தொடக்கத்தை கோடிட்டுக் காட்டுகிறது எனலாம். இக்கருத்தை மேலும் உறுதிப்படுத்துவதில் இப்பண்பாட்டு மையங்களில் கண்டுபிடிக்கப்பட்ட பிராமிக் கல்வெட்டுகள், பிராமி எழுத்துப் பொறித்த நாணயங்கள் முக்கியத்துவம் பெறுகின்றன. இலங்கையில் ஏறத்தாழ 1500 க்கு மேற்பட்ட பிராமிக் கல்வெட்டுக்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் பெரும்பாலான கல்வெட்டுக்கள் ஆதியிரும்புக்காலப் பண்பாட்டு மையங்களில் கண்டுபிடிக்கப்பட்டவையாகும். இலங்கையில் கண்டுபிடிக்கப்பட்ட பிராமிக் கல்வெட்டுக்களில் குறிப்பிடத்தக்க அளவில் 'வேள்' என்ற தமிழ்ப் பெயர் காணப்படுகின்றன. இலங்கையில் பெருங்கற்காலப் பண்பாட்டுடன் ஏற்பட்ட குள நீர்ப்பாசனம் மற்றும் வாணிப வளர்ச்சியினால் பொருளாதார வளர்ச்சியடைந்த பிரதேசங்களில் வேள் தோன்றியதென கருத முடியும். இதனை உறுதிப்படுத்தும் முகமாக பூநகரியில் பரமன்கிராய் என்ற இடத்தில் கிடைக்கப்பெற்ற மட்பாண்ட துண்டுகளில் இரு இடங்களில் தமிழ்ப்பிராமி எழுத்தில் வேள் (வேளான்) என்ற சொல் காணப்பட்டிருந்ததனைக் குறிப்பிடலாம்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

(புஸ்பரட்ணம்.ப, 1993).வேள் பற்றிய பெரும்பாலான கல்வெட்டுக்கள் பெருங்கற்கால மையங்களிலேயே கிடைக்கப்பெற்றிருந்தது. தமிழகத்தில் வேள், வேளிர் என்ற சொல்லினை சங்க இலக்கியத்திலும், மாங்குளம், கரூர், மறுகால்தலை, மேட்டுப்பட்டி (கி.மு 3-2 ஆம் நூற்றாண்டுக்குரியன) ஆகிய இடங்களில் கிடைக்கப்பெற்ற பிராமிக் கல்வெட்டுக்களிலும் காண முடிகின்றது. சங்க இலக்கியங்களிலும், பாளி இலக்கியங்களிலும், பிராமிக் கல்வெட்டுக்களிலும் காணப்படும் வேள் என்ற பெயர் குறுநில மன்னனாக, அதிகாரம்மிக்க தலைவனாக மட்டுமன்றி சமூகத்தில் செல்வாக்கு மிக்க பிற தலைவர்களையும் குறிக்கப் பயன்படுத்தப்பட்டமை பற்றியும் அறியமுடிகின்றது. அத்துடன் இப்பெயர் தனிநபர் பெயர்களின் பின்னொட்டு, முன்னொட்டுச் சொற்களாக காணப்பட்டமை பற்றியும், தமிழ் மன்னர்கள் பற்றிய ஆய்வில் ஏனைய குறுநில மன்னர்கள் பெறாத முக்கியத்துவத்தினை வேள் மரபினர் பெற்றிருந்தமை பற்றியும் அறியமுடிகின்றது. தமிழ்ப் பிராமியில் அமைந்த இப்பெயர் சங்க காலத்தை ஒத்த வேள் ஆட்சி இலங்கையில் இருந்ததை உறுதிப்படுத்துகிறது. பேராசிரியர் செண்பகலட்சுமி வேள் என்ற பெயர் அரசனைக் குறித்த பட்டப் பெயர் எனக் குறிப்பிட்டு வடமொழியில் ராஜா என்ற பட்டம் என்ன பொருளைக் கொண்டுள்ளதோ அப்பொருளையே தமிழில் வேள் என்ற பட்டப்பெயரும் கொண்டுள்ளதாகக் கூறுகிறார். இலங்கையில் வேள் ஆட்சி இருந்ததாகக் கூறும் கலாநிதி பூங்குன்றன் அதற்கு பிராமிக் கல்வெட்டுக்கில் வரும் பெயருடன் மகாவம்சத்தில் வரும் வேள் நாடு வேளுக்குரியது என்ற குறிப்பையும் ஆதாரமாகக் குறிப்பிடுகிறார். வேளிரைப் போன்று ‘ஆய்’ என்ற இனக்குழுவினரும் தென்னிலங்கையில் சிற்றரசர்களாக இருந்துள்ளனர் என்பதை இங்கு கிடைக்கப்பட்ட பிராமிக் கல்வெட்டுக்கள் உறுதிப்படுத்துகின்றன (சிற்றம்பலம்.சி.க, 1994).

இலங்கையில் தமிழ் அரச மரபு இருந்ததை உறுதிப்படுத்தும் இன்னொரு முக்கிய ஆதாரம் பிராமி எழுத்துப் பொறித்த தமிழ் நாணயங்களாகும். இந்நாணயங்கள் தென்னிலங்கையில் அக்குறுகொட, வடஇலங்கையில் கந்தரோடை, பூநகரி,உடுத்துறை முதலான இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. ஆதிகால, இடைக்கால வரலாற்றில் நாணயங்கள் பொதுவாக சிற்றரசால், பெரும் அரசுகளால் அல்லது அரச அனுமதி பெற்ற வணிகரால் வெளியிடப்பட்டவை. இலங்கையின் தொடக்ககால நாணயங்களை கொட்றிங்ரன் (1924) போன்ற நாணயவியலாளர்கள் சிங்க உருவம் போன்ற நாணயங்களில் வரும் சின்னங்களை அடிப்படையாகக் கொண்டு அவை சிங்கள மன்னர்களால் வெளியிடப்பட்டவை எனவும், தமிழ் நாணயங்களை தமிழகத்துடன் கொண்டிருந்த அரசியல், வர்த்தக, பண்பாட்டுப் பின்புலத்தின் அடிப்படையில் தமிழகத்திலிருந்து கொண்டுவரப்பட்டவையாகவே எடுத்துக்காட்டுகின்றனர். தென்னிலங்கையில் பண்டைய இராசதானி அமைந்த உருகுணைப் பிரதேசத்தில் உள்ள அக்குறுகொடவில் நூற்றுக்கணக்கான பிராமி எழுத்துப் பொறித்த நாணயங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. இவ்நாணயங்களில் நான்கு நாணயங்கள் ‘அன்’ என்ற விகுதியுடன் முடிவடையும் தமிழ்ப்பெயர்களை கொண்டுள்ளன. அவை உதிரன், மகாசாத்தன், கபதிகஜபன், சடநாகன் முதலான தமிழ் பெயர்கள் தமிழுக்குரிய பிராமி எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளன. இவ்தமிழ் நாணயங்கள் முக்கியத்துவம் பற்றி இந்திய தொல்லியலாளரான மகாதேவன் (2000)‘தமிழ் பிராமிக்கே சிறப்பான ‘ணகரம்’ மற்றும் ‘அன்’ என்று முடிவடைவதன் காரணமாக இவை அனைத்தும் தமிழ்ப்பெயர்களெனவும், தமிழ்நாட்டில் கிடைக்கப்பெற்ற இரு பாண்டிய பெருவழுதி நாணயங்களைப் போல் இவையும் கி.மு 2ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தொடக்க கால நாணயங்களாக காணப்படுவதாகவும்,அவை தென்னிலங்கையில் குடியேறிய தமிழ் வணிக குழுக்களால், தமிழ் மொழியில் தங்கள்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

பெயரில் நாணயங்கள் வெளியிடும் உரிமையைத் தென்னிலங்கையில் குடியேறிய வணிகக் குழுக்களின் தலைவர்கள் பெற்றிருந்தனர்' எனவும் இவ்நாணயங்களின் வரலாற்று முக்கியத்துவத்துவம் பற்றி குறிப்பிட்டிருந்தார். எனினும் தமிழ் நாட்டிலிருந்து தென்னிலங்கையில் குடியேறிய வணிகர்களால் வெளியிடப்பட்ட நாணயங்கள் என்பதில் மாற்றுக் கருத்துடைய பேராசிரியர் புஸ்பரட்ணம் (2001) அவ்தமிழ் நாணயங்கள் இலங்கையிலேயே வெளியிடப்பட்ட தொடக்ககால நாணயங்கள் என உறுதிபடக் கூறுகின்றார். அதற்கு பின்வரும் நியாயமான காரணங்களை முன்வைத்துள்ளமையும் குறிப்பிடத்தக்கதாகும். முதலாவது சமகாலத்தில் தமிழகத்தில் வழக்கிலிருந்த சங்ககால நாணயமரபின் செல்வாக்கு இலங்கையில் வெளியிடப்பட்ட நாணயங்களில் இல்லாதிருந்தமையும், இரண்டாவதுநாணயங்களின் வடிவமைப்பு, அவற்றில் உள்ள சின்னங்கள் என்பவற்றின் அடிப்படையில் இத்தமிழ் நாணயங்களுக்கும் ஏனைய பிராகிருத மொழிப் பெயர்கள் கொண்ட நாணயங்களுக்கும் ஒரே நாணய மரபு எனக் கூறக் கூடிய வகையில் ஒற்றுமை காணப்படுவதனையும், மூன்றாவது இலங்கை நாணயங்களுக்கே உரிய தனித்துவமான அம்சமான பீடத்துடன் கூடிய சுவஸ்திகா காணப்படுவதனையும் கொண்டு இலங்கைக்குரிய நாணயமரபை பின்பற்றி அவை இலங்கையிலே வெளிடப்பட்டதென்கிறார்.

அவற்றுள் ஒரு நாணயத்தில் 'தஷ்புரசடணாகராசன்'என்ற வாசகம் இடம் பெற்றுள்ளது. இவ்வாசகம் திஸபுரத்தில் ஆட்சிபுரிந்த சடநாகராசனால் வெளியிடப்பட்ட நாணயம் என்ற பொருளில் அமைந்துள்ளது. இதிலிருந்து நாக அரச மரபு இருந்தமை உறுதியாகின்றது.தென்னிலங்கையில் இச்சிற்றரசனின் ஆட்சிக்கீழிருந்த மக்களில் ஒருபிரிவினராவது தமிழர்களாக இருந்துள்ளார்கள் என்பதனையும் புலப்படுத்தி நிற்கின்றது (புஸ்பரட்ணம். 2001). இதை மேலும் உறுதிப்படுத்தும் வகையில் துட்டகாமினி எல்லாளன் போராட்டம் பற்றிக் கூறும் மகாவம்சம் துட்டகாமினி மன்னன் அநுராதபுரத்தில் எல்லாளன் மன்னனை வெற்றி கொள்ள முன்னர் தென்னிலங்கையில் 32 தமிழ்ச் சிற்றரசர்களை வெற்றி கொள்ள நேரிட்டதாகக் கூறுவது இவ்விடத்தில் சிறப்பாக நோக்கத்தக்கது.இவ்வாறாக கிறிஸ்தவ சகாப்தத்திற்கு முன்னரே இலங்கையில் பரவலாக தமிழ் மன்னர்களுடைய ஆட்சியிருந்தமை புலப்படுகின்றது. பச்சிலைப்பள்ளி பிரதேசத்தில் உள்ள உடுத்துறை என்ற இடத்தில் 1990ஆம் ஆண்டில் கண்டுபிடிக்கப்பட்ட 'நாகபூமி' என பெயர் பொறிக்கப்பட்ட நாணயம் வட இலங்கையின் தமிழ்மன்னர்கள் பற்றியதாகவே அமைகின்றது. குறிப்பாக இந்நாணயம் கி.பி இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த நாகமரபின் ஆட்சி பற்றி அறிய உதவும் முக்கிய ஆதாரமாக அமைகின்றது (புஸ்பரட்ணம்.ப.2017).

இவ்வாறாக பாளிஇலக்கியங்கள், பிராமிக்கல்வெட்டுக்கள், நாணயங்கள் என்பவற்றின் அடிப்படையில் இலங்கையில்கிறிஸ்தவ சகாப்தத்திற்கு முன்னரே சுதேச தமிழ் மன்னர்களுடைய ஆட்சி இருந்துள்ளதென்பதனை தெளிவாக அறிந்து கொள்ள முடிகின்றது. தமிழகத்தினைப் போன்று இவ்வரச உருவாக்கத்தினை ஆதியிரும்புக்காலப் பண்பாட்டில் ஏற்பட்ட வளர்ச்சி நிலையிலானதொரு அம்சமாக பார்ப்பதே பொருத்தமானதாகும். இத்தகையதோர் பின்னனியில் தான் இலங்கையின் தமிழ் மன்னர்களுடைய ஆட்சியானது வேள், நாக மரபினருடன் தொடர்புபடுத்தப்படுவதுடன், இவ்வரச வம்சங்களின் தொன்மையையும் விளங்கிக்கொள்ள முடிகின்றது.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019
Available at: www.ijtlls.com



**உசாத்துணை நூல்கள்**


1. இந்திரபாலா.கா, 2006, இலங்கையில் தமிழர் ஓர் இனக்குழு ஆக்கம் பெற்ற வரலாறு, குமரன் புத்தக இல்லம் கொழும்பு.
2. புஸ்பரட்ணம், ப, 1993, பூநகரித் தொல்பொருளாய்வு, யாழ்ப்பாண பல்கலைக்கழக வெளியீடு,திருநெல்வேலி.
3. புஸ்பரட்ணம்.ப, 2001, இலங்கைத் தமிழரின் பண்டையகால நாணயங்கள், பவானி பதிப்பகம், யாழ்ப்பாணம்.
4. புஸ்பரட்ணம், ப., 2003,தொல்லியல் நோக்கில் இலங்கைத் தமிழர் பண்பாடு, குமரன் பதிப்பகம், சென்னை.
5. புஸ்பரட்ணம்.ப, 2017, இலங்கைத் தமிழர் ஓர் சுருக்க வரலாறு, தமிழ்க் கல்விச் சேவை சுவிற்சர்லாந்து.
6. ராஜன்,கா, 2012,சங்க இலக்கியமும் அகழ்வாய்வும், கொழும்புத் தமிழ்ச் சங்கம், இலங்கை.
7. சிற்றம்பலம்.சி.க, 1994, யாழ்ப்பாணத் தொன்மை வரலாறு, யாழ்ப்பாணப் பல்கலைக்கழக வெளியீடு.
8. Deraniyagala.S.U, 1992, Prehistory of Sri Lanka: An Ecological Perspective, Department of Archaeological Survey, Colombo.
9. Seneviratne.S, 1984, The Archaeology of the Megalithic Black and Red Ware Complex in Sri Lanka in Ancient Ceylon, Journal of the Archaeological Survey of Sri Lanka.
10. Mahadevan.I, 2000, Ancient Tamil Coins from Sri Lanka, Journal of the Institute of Asian Studies, Madras.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# திராவிட மக்களின் வரலாறு ஓர் பார்வை
# A Glance on the Chronology of the Dravidians

**முனைவர். செ.சிராஜுதீன்,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, மு.சா.ச. வக்பு வாரியக் கல்லூரி, மதுரை – 20

**Abstract**

*The article explains about the history of the true inhabitants of the present India. The history was originally falsely written in Aryan perspective but the Dravidian culture and language was once spoken all over the today's India and the places such as Today's Pakistan and Afganistan. Still, Dravidian languages are spoken there. Brahui, Malt are such languages existing there. The art and culture of the Dravidian people are really ancient and remarkable in the archaeological history. Hence, the study make clear the unified details from the revelation found on authentic sources.*

**Keywords:** Glance, Chronology, Dravidians

இந்திய மக்கள் வரலாற்றில் திராவிட மக்களின் வரலாறு என்பது மிக முதன்மை உடையது என்று கூறலாம். இன்று இந்திய நாகரிகம் எனப் பெயர் பெறுவது ஆரிய திராவிட நாகரிகங்களின் கலப்பினால் தோன்றியதாகும். ஆரிய நாகரிகத்துக்கு முற்பட்டது திராவிட நாகரிகம். இதில் சிறிதும் ஐயப்பாடு இல்லை. நீண்ட காலம் திராவிட நாகரிகத்தைப் பற்றிய செய்திகள் அறியப்படாமல் இருந்தன. அதனால் திராவிடரின் பண்பாட்டைக் குறித்த செய்திகள் வரலாற்று ஆசிரியர்களால் பலவாறு திரித்துக் கூறப்பட்டன. ஆனால் இன்று தமிழரின் நாகரிகத்தைப் புலப்படுத்தும் சான்றுகள் பல கிடைத்துள்ளன. தமிழரின் நாகரிகம் என்னும் கருத்தை விரிவாக ஆராய்வது இன்றைய நிலையில் முக்கியத்துவம் பெற்றுள்ள காரணத்தினால், இவ்வாய்வு மேற்கொள்ள வேண்டியது கட்டாயத் தேவையாக அமைகிறது.

**திராவிடர் பிறப்பிடம்**

“திராவிட மக்கள் அயல்நாடுகளில் இருந்து இந்தியாவின் வடபகுதிகளை அடைந்தார்கள். பின்பு ஆரியர் என்னும் புதிய பெயரோடு அங்கு வாழ்ந்து வந்தனர். அவர்கள் திராவிடர்களை வென்று தெற்கே விரட்டினர். அவர்கள் தெற்கே வந்து வாழ்ந்தார்கள். அவர்களே தமிழர் எனப்படுவோர்” என மேல் நாட்டாசிரியர் சிலர் பல ஆண்டுகளின் முன் உண்மை அறியாது எழுதிவைத்தனர். அக்கொள்கை இன்று சிறிதும் ஏற்றுக் கொள்ளத் தக்கதாக இல்லை. பள்ளிச் சிறுவர்களுக்கு வரலாறு எழுதும் ஆசிரியர் பலர் உண்மை இல்லாத பழைய கொள்கையைப் பின்பற்றி எழுதிவருவதும் வருந்தத்தக்கதாகும்.

திராவிட மக்கள் வெளி நாடுகளிலிருந்து வந்து இந்திய நாட்டை அடைந்தார்கள் என்று கூறுவதற்கு ஏற்ற ஆதாரம் ஒன்றேனும் காணப்படவில்லை. பழைய கற்காலம் முதல் இரும்புக்காலம் வரையில் மக்கள் தொடர்பாகச் செய்து, பயன்படுத்திய ஆயுதங்களும், பிறபொருள்களும் இந்திய நாட்டின் பல்வேறு இடங்களில் கண்டு எடுக்கப்பட்டுள்ளன.

திராவிட மக்கள் அயல்நாடுகளிலிருந்து வந்தார்கள் என்று கூறுவோர்க்குத் துணையாக இருப்பது ஆப்கானிஸ்தானத்தின் ஒரு பகுதியில் தமிழுக்கு இனமுடைய பிராகூய் மொழி

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

வழங்குவது. இன்றைக்கு ஆறாயிரம் ஆண்டுகளின் முன் சிந்து ஆற்று வெளிகளில் திராவிடர் நாகரிகம் பரவியிருந்தது. இம்மக்களின் தொடர்புடையவர்களே ஆப்கானிஸ்தானத்தில் தங்கி வாழ்ந்தார்கள். அவர்களின் சந்ததியினரே திராவிடத்தின் சம்பந்தமுடைய பிராகூய் மொழியை இன்றும் பேசி வருகின்றனர். திராவிட மக்கள் பழமை தொட்டே இந்திய நாட்டில் வாழ்ந்து வருகின்றார்கள். அவர்களின் பழைய நாடு குமரி முனைக்குத் தெற்கிலும் பரந்து இருந்தது.

**நாகரிகத்தின் பழமை**

மேற்கு ஆசியா, எகிப்து முதலிய நாடுகளில் பழைய இடிபாட்டு மேடுகள் தோண்டி ஆராயப்பட்டுள்ளன. அங்கு கிடைத்த பழம்பொருள்களைக் கொண்டு அந்நாடுகளின் நாகரீகம் ஏழாயிரம் அல்லது எண்ணாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது என ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். மைசூரிலே ‘சிற்றால்ரக்’ என்னும் இடத்திலும், சிந்து வெளியிலும் செய்யப்பட்ட அகழ்வு ஆராய்ச்சிகளால் இந்திய நாட்டின் நாகரிகமும் அந்நாட்டு நாகரிகங்களை ஒத்த பழமையுடையது என அறியப்படுகின்றது. எகிப்து, மேற்கு ஆசியா முதலிய நாடுகளில் நாகரிகத்தைத் தோற்றுவித்தோர் அயல் நாடுகளிலிருந்து சென்றவர்கள் என்றும், அவர்கள் இந்திய நாட்டிலிருந்தும், சென்றார்கள் என்பதற்கும் சான்றுகள் பல உள்ளது என்றும் சிறந்த மேற்திசை ஆராய்ச்சி அறிஞர் பலர் கருதுகின்றனர்.

**தமிழும் திராவிடமும்**

இன்று தமிழரைக் குறிக்கத் திராவிடர் என்னும் பெயரும் சுட்டப்படுகின்றது. திராவிடம் என்னும் சொல்லைப் பற்றிப்பலர் பலவாறு ஆராய்ந்து கூறியுள்ளார்கள். திராவிடம் என்பது தமிழ் என்னும் சொல்லின் உச்சிரிப்பு வேறுபாடு என்பதே ஆராய்ச்சி அறிஞர் இறுதியாகக் கொண்ட முடிவு. இன்று திராவிடம் என்னும் சொல் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு முதலிய மொழிக் கூட்டத்தைக் குறிக்கப் பயன்படுகின்றது. திராவிடர் என்னும் பெயர் இம் மொழிக் கூட்டத்துக்குரிய மக்களைக் குறிக்கின்றது.

**சூழல்நிலைக்கேற்ப மக்கள் பண்பாடு**

உலகில் மக்கள் வாழக்கூடிய இடங்கள் ஐந்து வகை என்று பழந்தமிழர் அறிந்திருந்தனர். அவர்கள் அவ்வகை நிலங்களைத் திணைகள் என்றனர். திணை என்பது திட் அல்லது திண் என்னும் அடியாகப் பிறந்தது. நிலப்பரப்பு என்பது அதன் பொருள். திட் அல்லது திண் என்பதில் இருந்தே திட்டு, திட்டை, திடர், திண்ணை முதலிய சொற்கள் பிறந்தன. திண் என்பது வலிமையையும் குறிக்கும். இடங்களின் சூழ்நிலைக்கு ஏற்பவே மக்களின் வாழ்வும் வளர்ச்சியடைந்தது. தண்ணீரில்லாத வறண்ட மணற் பகுதி பாலை எனவும், மலைநாடு குறிஞ்சி எனவும், மலைநாட்டுக்கும் கீழ்நாட்டுக்கும் இடைப்பட்ட குறுங்காட்டு நிலம் முல்லை எனவும், ஆற்றோரங்கள் மருதம் எனவும், கடற்கரை நெய்தல் எனவும் வழங்கின. இவ்வகை நிலங்களும் தமிழ்நாட்டில் ஓரளவு உண்டு. மக்கள் தோன்றிய காலம் முதல் தமிழர் தென்னிந்தியாவில் வாழ்ந்து வருகின்றார்கள். அவர்கள் ஒரு நிலத்திலிருந்து இன்னொரு நிலத்துக்குச் சென்று படிப்படியான சீர்திருத்தங்களை அடைந்தனர்.

**மலையும் மலைசார்ந்த நிலமும்**

மக்கள் முதல் முதல் குடியேறி வாழ்ந்த இடம் மலை. மிகமிக நீண்ட காலம் மழையினாலும், பருவக்காற்றினாலும் தாக்குண்டதால் தேய்ந்து போன சிறிய குன்றுகள் பல தென்னிந்திய பூமிகளில் காணப்படுகின்றன. இம் மலை இடங்களுக்குக் கீழே ‘தண்டகம்’ என்னும் இருண்ட காடு இருந்தது. அங்கு சிங்கம், புலி, யானை, காட்டு எருமை, சிறுத்தை, மனிதனுக்கு அழிவைச் செய்யும் பூச்சி வகைகள் காணப்பட்டன. ஆதிகால மனிதன். வெய்யில், மழை, விலங்குகள் முதலியவைகளிலிருந்து தன்னைக் காப்பாற்றிக்கொள்ளக்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கூடிய குகைகள் மலையிடங்களாக இருந்தன. அவன் தண்ணீரைச் சேமித்து வைப்பதற்கு மண் பாத்திரங்களைச் செய்ய அறிந்திருக்கவில்லை. நீரூற்றுகள் வற்றிய காலத்தில் பாறைகளிலுள்ள குழிகளில் நீர் நிறைந்திருந்தது. அவன் அதனைக் கைகளால் அள்ளிப் பருகினான். காலடியில் கிடந்த கற்களை எடுத்து அவைகளிலிருந்து கோடரி, ஈட்டிமுனை, அரியும் கருவிகள், சுரண்டும் கருவி முதலியவைகளைச் செய்யப் பழகிக்கொண்டான். இந்நிலையில் இருந்து மனிதனின் சீர்திருத்தம் வளர்ந்தது. மிக முற்பட்ட திருத்தக்காலம் பழைய கற்காலம் எனப்படும். பழைய கற்கால நாகரிகத்தை காட்டும் கையினால் செய்யப்பட்ட பொருள்கள் கடப்பா, நெல்லூர், வடஆர்க்காடு, செங்கற்பட்டு முதலிய இடங்களில் கிடைத்துள்ளன.

குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் பழங்கள், விதைகள், கிழங்குகளை உண்டு வாழ்ந்தனர். பருவகால மாறுதல்களால் இவ்வுணவுப் பொருள்கள் சில காலங்களில் எளிதில் கிடைக்கவில்லை. எனவே, அவர்கள் ஊன் உணவையும் உண்ணத்தொடங்கினர். அவர்கள் தற்காப்பின் பொருட்டு விலங்குகளோடு அதிகம் போராவேண்டியிருந்தது. அதனால் அவர்கள் வேட்டையாடுவதில் திறமை பெற்றனர். ஆகவே தொடக்கத்தில் மனிதனின் தொழில் வேட்டையாடுவதாக இருந்தது. அப்பொழுது அவர்கள் ஓரிடத்தில தங்காது அலைந்து திரிபவர்களாக இருந்தார்கள். உலகம் முழுமையிலும் கண்டெடுக்கப்பட்டுள்ள பழைய கற்கால ஆயுதங்கள் எல்லாம் ஒரே வடிவினை உடையதாக இருக்கின்றன. இதனால் ஆதிகால மனிதன் உலகில் எங்கும் அலைந்து திரிபவனாக இருந்தான் எனத் தெரிகின்றது.

குறிஞ்சி நிலச்சூழல், மனித சீர்திருத்தத்திற்கு அடிப்படையாகிய இரண்டு புதியவற்றைக் கண்டுபிடிக்கும்படி செய்திருந்தது. அவற்றுள் ஒன்று வில்லும் அம்பும், மற்றொன்று நெருப்பு உண்டாக்குதல். மலைகளில் மூங்கில் அதிகம் வளர்கின்றது. மலையில் வாழும் மக்கள் மூங்கிலின் வளையும் தன்மையை அறிந்தார்கள். அவர்கள் அதனைப் பிளந்து இரு முனைகளிலும் கொடியைக் கட்டி நீண்ட முட்களை அதில் வைத்து எய்யப் பழகினார்கள். இன்றும் மலைகளில் வாழும் மக்கள் ஒரே அம்பினால் ஒரு புலியைக் கொல்லும் திறமை பெற்றிருக்கிறார்கள் என்பதற்கு இதுவே சிறந்த சான்றாகும்.

ஆதிகால மக்கள் மலையில் தீ உண்டாகி எரிவதைக் கண்டார்கள். மூங்கில் ஒன்றோடு ஒன்று உரசுவதால் தீ உண்டாகின்றது என்பதை அவர்கள் அறிந்தார்கள். ஆகவே தாமும் இரண்டு தடிகளை ஒன்றோடு ஒன்றை உரசி தீ உண்டாக்கலாம் என எண்ணினார்கள். தாம் வேட்டையாடிக் கொன்ற விலங்குகளின் இறைச்சியை வேக வைக்கும் பொருட்டு அவர்கள் முதலில் நெருப்பைப் பயன்படுத்தினார்கள்.

ஆண்கள் வேட்டையாடச் சென்றார்கள். பெண்கள் காட்டிற்குச் சென்று பழங்களைப் பொறுக்கி, கிழங்குளை அகழ்ந்தார்கள். தாம் வாழிடங்களைச் சுற்றித் தானே விளைந்த மலை நெல், மூங்கிலரிசி முதலியவைவற்றையும் சேகரித்தார்கள். பெண்களின் அடுத்த கடமை குழந்தைகளை வளர்ப்பது. இந்த நிலையிலிருக்கும் போது அவர்கள் வீடு அமைத்துக் கொள்ள அறியவில்லை. தென்னிந்திய வெப்ப நிலைக்கு வீடு வேண்டிதில்லை. மர நிழல்களும், மலைக் குகைகளுமே ஒதுக்கிடங்களாக அவர்களுக்குப் பயன்பட்டன. மக்கள் தொடக்கத்தில் வீடுகளை உறைவிடத்தின் பொருட்டாக அமைக்கவில்லை. தமது செல்வமாகிய உணவுப் பொருள்களைப் பத்திரப்படுத்தி வைக்கும் பொருட்டே வீடுகளை அமைத்தனர். பழைய கற்கால மனிதனுக்கு உணவைச் சேமித்து வைக்கும் பழக்கம் இல்லை. வீடு இல்லாமையாலும், அலைந்து திரியவேண்டிய சூழலாலும், வீட்டில் தங்கி வாழ்வதற்குரிய

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

எண்ணம் அவனுக்குள் எழவில்லை. ஆகவே தாயாட்சி முறையால் வாழ்க்கை ஆதியில் வளர்ச்சியடைந்தது.

இவ்வகையான வாழ்க்கையை முறையினால் இன்னொன்றையும் அறியலாம். முற்கால மனிதன் ஆடம்பரமான வாழ்க்கைக்குள் (மணக்கிரிக்குள்) தன்னை கட்டுப்படுத்தி வைத்திருக்கவில்லை. ஆடவரும் மகளிரும் காதலித்து மணந்தனர். சில நாள்களின் பின் உறவினரை அழைத்து விருந்தும் வைத்தனர். இதுவே முற்கால திருமணக் கிரி விருந்தாக அமைந்தது. திருமணம் என்றும் நிலையான தன்மையுடையதாக இருக்கவில்லை. தனிப்பட்டச் சொத்து இன்மையும், நிலையான வீடு இன்மையும் தாயாட்சி முறையான வாழ்க்கைக்கு நீண்ட காலம் வாய்ப்பை அளித்தன.

தமது மேனியை அலங்கரித்துக் கொள்வதில் ஆடவருக்கும் மகளிருக்கும் விருப்பம் இருந்தது. இந்த விருப்பம் பெண்களுக்கு அதிகமாக இருந்தது. குறப்பெண்கள் ஓய்வு நேரங்களில் ஓடுகளைப் பொறுக்கி, அவைகளை மாலையாகக் கோர்த்து அணிந்தார்கள். அவர்களின் காதலர் வேட்டையாடுவதில் கிடைத்த புலி நகம், புலிப்பல் போன்றவைகளை அவர்களுக்குக் கொடுத்தார்கள். அவைகளையும் அவர்கள் கழுத்தில் அணிந்தார்கள். பிற்காலத்தில் இவையே தாலியின் வடிவாக மாறின. தென்னிந்தியப் பெண் தாலிதரித்து திருமணம் செய்துகொண்டமைக்கு இதுவே முதல் அடையாளமாகும். பெண்களின் இன்னொரு அலங்காரம் தழைஉடை. தழைஉடை என்பது கொடியில் கட்டிய தழைகளாலான உடை. இவ்வடை உடுக்கும் வழக்கம் இன்றும் சில காட்டுச் சாதி மக்களிடையே காணப்படுகின்றது.

**மணலும் மணல் சார்ந்த இடமும்**

மணலும் மணல் சார்ந்த இடமும் பாலை எனப்படும். இது மக்கள் வாழக்கூடிய இடத்தின் ஓர் உட்பிரிவில் அடங்கும். வேடன் காட்டு விலங்குகளைத் துரத்திச் செல்லும்போது பாலைநிலத்தில் நிலையில்லாது சிலகாலம் தங்குவான். பாலை நிலத்தில் சிலகாலம் தங்கி வாழ்வோர் மறவர் எனப்படுவர். மறம் வீரத்தை உணர்த்தும். இவர் கள்ளர் எனவும் அழைக்கப்பட்டனர். பாலை நிலம் செழுமையற்றதாக ஆனாலும் பாலை நில மக்கள் போர்த் தொழிலில் சிறந்தவர்கள். ஆதலினால் மறவரும் கள்ளரும் செல்வரையும் மற்ற நிலங்களில் வாழும் வலிமையற்றவர்களையும் கொள்ளையிட்டு வாழ்பவராக இருந்தனர். இதன் மூலம் மறம் என்பது கொடுமையையும், கள்ளர் என்பது திருடரையும் குறிக்கும் சொல் ஆயின.

**காடும் காடுசார்ந்த நிலமும்**

குறிஞ்சி நிலத்தில் மக்களின் பெருக்கம் அதிகமாகும் பொழுது உணவு பற்றாக்குறை ஏற்பட்டது. அப்பொழுது அவர்கள் அருகில் உள்ள முல்லை நிலத்திற்குச் சென்றனர். அப்பொழுது அவர்கள் சீர்திருத்தத்தில் இன்னொரு படியை அடைந்தனர். எருமை, பசு, ஆடு, செம்மறியாடு போன்ற விலங்குகளை இவர்கள் பழக்கி வளர்த்தார்கள். அவர்கள் குறவராக இருந்தபோது நாய் பழக்கி வளர்க்கப்பட்டது. முல்லை நிலத்தில் ஆடுமாடுகள் பெருகின. அதனால் அவர்களுக்குச் சொத்து உருவாயின. இதனால் அங்கு குடும்பங்களும் குடிகளும் தோன்றி வளர்ந்தன.

ஆடவரும் மகளிரும் ஒருவரையொருவர் காதலித்தலும், காதலின் அடையாளமாக காதலன் காதலிக்கு புலி நகம், இலையுடை முதலியவற்றை கொடுத்துக் கிரியை இன்றி மணந்து கொள்வதுமாகிய மணம் களவு எனப்பட்டது. குறிஞ்சி நிலத்தில் தோன்றிய இவ்வகை மணங்கள் நின்று போயின. இப்பொழுது கற்பு ஒழுக்கம் தோன்றியது. காதலர் ஒருவரோடு ஒருவர் பழகுவதன் முன் மணச்சடங்கு இயற்றப்பட்டது. இலைகளினாலும், மலர்களினாலும் அலங்கரிக்கப்பட்ட பந்தரின் கீழ் சுற்றத்தினர் திரளாக இருந்து, மணக்கிரி நடத்தப்பட்டது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

சொத்துச் சேரத்தொடங்கியதும், கற்பு ஒழுக்கம் தோன்றியதும், சமூகம், தந்தை, ஆட்சிமுறையாக வளர்வதாயிற்று. தந்தையே ஆடு மாடுகளுக்கு சொந்தம் உடையவனாக இருந்தான். நிலங்களைப் பிரித்தால் ஆடுமாடுகள் மேய்வதற்கு முடியாமல் போகும். ஆகவே கூட்டு குடும்ப வாழ்க்கை தோன்றியது. தந்தை ஆட்சியில் பெரிய குடும்பத்தலைவனாக அரசன் போல் ஆயினான். இம்முறையிலேயே அரசன் தோன்றினான். ஆட்சிமுறை முதலில் முல்லை நிலத்திலேயே தோன்றியது. கோன் என்பது பழைய தமிழ்ச்சொல். இது அரசனைக் குறிக்க பயன்படுகிறது. ஆய்ச்சி என்னும் சொல் இடைச்சியையும், அரசியையும் குறிக்கின்றது.

மற்ற நாடுகளில் இடையரின் வாழ்க்கை இடம்விட்டு இடம் அலைந்து திரிவதாக இருந்தது. தென்னிந்தியா செழிப்புடையதாகவும் எல்லாக் காலக்களிலும் ஆடுமாடுகளுக்கு வேண்டிய உணவு கிடைக்கக்கூடியதாகவும் இருந்தமையால் தென்னிந்திய இடையர்களுக்கு இடம்விட்டு இடம் செல்ல வேண்டிய கட்டாயம் உண்டாகவில்லை. ஆகவே தென்னிந்திய இடையர்களின் வாழ்க்கை ஓரிடத்தில் தங்கியிருப்பதாக அமைந்தது.

இடையர் ஆடுமாடுகளை மேய்ச்சல் நிலத்துக்கு ஓட்டிச் சென்றார்கள். மந்தைகள் மேயும்போது அவர்கள் மரநிழலில் தங்கியிருந்தார்கள். பொழுதுபோக்கின் பொருட்டு மூங்கில் குழலில் இனிய இராகங்களைப் பாடினார்கள். ஆடு மாடு மேய்ப்பவர்களில் ஒரு பிரிவினர் குறும்பர் எனப்பட்டனர். இவர்கள் மயிர் நீண்டு வளரும் குறும்பு ஆடுகளை வளர்தனர். குறும்பு ஆடுகளின் மயிர்களிலிருந்து கம்பளி நெய்யப்பட்டது.

**கடலும் கடல்சார்ந்த நிலமும்**

இதற்கு அடுத்த படியில் கடற்கரை நிலம் மக்களால் குடியேறப்பட்டது. இங்கு வாழ்ந்த மக்கள் கரையை அடுத்த கடலில் மீன் பிடித்தார்கள். பின்பு ஆழமான நீரில் மீன் பிடிக்கச் சென்றார்கள். கடற்கரையில் வாழ்வோர் பரதவர் எனப்பட்டனர். இவர்களின் தொழில்கள் மீன் பிடிப்பதும் மரக்கலம் செய்வதுமாக இருந்தன. மிகப் பெரிய மரக்கலங்கள் கட்டுமரங்களாக இருந்தன. இதன் பின் தோலால் மூடப்பட்ட கூடைகள் தோனிகளாக பயன்படுத்தப்பட்டன.

நெய்தல் நிலத்தில் கிடைக்கும் முக்கிய பொருள்கள் உப்பும், மீனும் பரதவர் இவைகளை மற்ற நிலங்களுக்குக் கொண்டுச் சென்று பிற உணவுப் பொருள்களுக்கு பண்டமாற்றுச் செய்தனர். பரதவர் இவ்வாறு வணிகராயினர். அவர்கள் தமது பண்டங்களைப் பொதிமாடுகளில் ஏற்றிச் சென்றனர். இந்தியப் பொருள்களை ஆப்ரிக்கா, அரேபியா முதலிய மேற்கு நாடுகளுக்கும் கிழக்கே மலாயா, சீனா முதலிய நாடுகளுக்கும் ஏற்றிச்சென்ற கடலோடிகள் தோன்றினார்கள். கடற்கரை நிலங்கள் சில பயிர்ச்செய்வதற்கு ஏற்றதாக இருந்தன. அங்கு பயிர்கள் பயிரிப்பட்டன.

**வயலும் வயல்சார்ந்த நிலமும்**

மருத நில மக்கள் நிலத்தை உழுது பயிரிட்டார்கள். ஆற்றோரங்களில் வாழ்ந்த மக்கள் ஆற்று வெள்ளத்தை வாய்க்கால் வழியாக வயல்களுக்குப் பாய்ச்ச அறிந்திருந்தார்கள். இவ்வாறு மிக மிக முற்காலத்திலேயே பயிர்ச்செய்வது தென்னிந்தியாவில் மிக வளர்ச்சி அடைந்திருந்தது. ஆற்றுப்பள்ளத்தாக்குகளுக்கு அப்பால் பஞ்சு விளையும் நிலம் இருந்தது. புதிய கற்கால மக்கள் பஞ்சிலிருந்து நூல் நூற்கவும் நூலால் ஆடை நெய்யவும் அறிந்திருந்தார்கள்.

இப்பொழுது மக்கள் மரங்களால் வீடு கட்டினார்கள். தேவைக்கு அதிகமாக தானியம் வீடுகளில் சேமித்து வைக்கப்பட்டது. மற்ற நிலங்களில் உள்ள உப்பு, மீன், வெண்ணெய், தயிர், கல் ஆயுதங்கள் போன்றவைக்குத் தானியம் பண்டமாற்றுச் செய்யப்பட்டது. மருத நிலத்தில் பண்டமாற்றுச் செய்ய முடியாத பண்டங்களை வெளியே கொண்டு செல்லவேண்டிய

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

அவசியம் உண்டாயிற்று. பண்டங்களைக் கொண்டு செல்வதற்கு வண்டிகள் செய்யக் கண்டு பிடிக்கப்பட்டது. உணவுக்குப் பயன்படக்கூடிய மரஞ்செடிகளும் கண்டறியப்பட்டன. இவ்வாறு திராவிட நாகரிகம் இந்திய நாட்டிலேயே தோன்றி வளர்ச்சி அடைந்தது.

திராவிட மக்களே இந்திய நாட்டின் ஆதிமக்கள். இம்மக்கள் இன்றைக்கு ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன் சிறந்த நாகரிக வளம் பெற்று விளங்கினார்கள் என்பதற்கு ஐவகை நிலத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறைகளும் மற்றும் அவர்களின் பழக்கவழக்கங்களும், பண்டமாற்று முறைகளுமே சிறந்த சான்றுகளாக அமையும். இந்தியாவின் அயலிலிருந்தே திராவிட நாகரிகம் இந்தியாவை அடைந்தது என்பதற்கு ஆதாரம் எங்கும் சிறிதும் காணப்படவில்லை என்பதே உண்மை.

**ஆய்வுக்கு பயன்பட்ட நூல்கள்**

1. Kushwaha.H.C., *History of Indian Archaeology*, Kunal Books, New Delhi, 2013, P. 88.
2. Venkatraman. R., *Indian Archaeology A Survey*, Ennes Publications, Udumalpet, 1985, P. 21.
3. Stuart Piggot, *Prehistoric (to 1000 B.C.)* Cassell & Company Ltd., London, 1962, P. 17.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தொல்லியல் நோக்கில் பூலித்தேவன் வரலாறு
# The Chronicle of Pulithevan through the Traces of Archaeology

**முனைவர்.அ.சுகந்தி அன்னத்தாய்,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,எஸ்.டி.என்.பி மகளிர் வைணவக் கல்லூரி, குரோம்பேட்டை, சென்னை.44.

## Abstract

*Archaeology deals with the decoding of the past facts with ancient or traditional forms of documentation. The study propagates to find out the life of pulithevan, the famous warrior of Tamil Nadu through the Tamil traditional documentation sources such as culverts, bronze plates, numismatics and the weapons used by them. He was the first one to fight against the British East Indian Company. So the study becomes relevant to tell the hidden fact that he is the first in India who fought bravely with rhe Britishers. Hence, the paper focuses to extract evidence to prove the facts.*

**Keywords:** Pulithevan, Archaeology, Facts, East Indian Company, First Revolution

### முன்னுரை

தொல்பழங்காலத்தைப் பற்றி ஆய்வு செய்தலையே தொல்லியல் என்கிறோம். தொன்மையான காலத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறை, தொழில்கள், வாணிகம், வேளாண்மை, அரசியல், நுண்கலைகள் முதலியன பற்றி அவர்கள் விட்டுச்சென்ற எச்சங்களான கல்வெட்டுகள், கட்டடங்கள், செப்பேடுகள், நாணயங்கள் முதலானவற்றின் அடிப்படையில் ஆய்ந்தறிதலே தொல்லியலின் முதன்மையான நோக்கமாகும். இந்தியாவில் முதன் முதலில் கிழக்கிந்தியக் கம்பெனிப் படையை எதிர்த்துப் போர் செய்தவர் பூலித்தேவன் ஆவார். வரிவசூலிக்க வந்த அலெக்சாண்டர் கெரான் என்பவனோடு 1755-ம் ஆண்டு பூலித்தேவன் செய்த போரே இந்தியாவில், ஆங்கில கிழக்கிந்திய கம்பெனிப் படையை எதிர்த்த முதல் போராகும். விடுதலைப் போரை முதன் முதலில் தொடங்கிய பூலித்தேவனைப் பற்றிய அரிய பல தகவல்களைக் கூறும் செப்பேடுகள், கல்வெட்டுகள், கவண்கற்கள், படைகருவிகள் ஆகியன தற்போது, தொல்லியல் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. அவற்றின் துணையோடு பூலித்தேவனின் ஆளுமையையும் வீரத்தையும் ஆய்வுலகிற்கு இனங்காட்டும் முகமாக அமைவதே இக்கட்டுரை.

### பூலித்தேவரின் பூர்வீகம்

மறவர் சீமையாகிய சேது நாட்டில் வெள்ளாற்றிற்கும், வம்பாற்றிற்கும் இடைப்பட்ட பகுதியில் வாழ்ந்து வந்த மறவர் சிலர் 12-ம் நூற்றாண்டிற்கு முன்னர் குடிபெயர்ந்து திருநெல்வேலிச் சீமைக்கு வந்தனர். அவ்வாறு குடி பெயர்ந்தவர்கள் இராமதபுரம் சீமையிலுள்ள ஆப்பநாடு, கிழுவநாடு, ஆன்மநாடு ஆகிய பகுதிகளைச் சேர்ந்தவர்கள். இவர்கள் கடலோரமாக வந்து அமர்பதி, கடம்பூர். மணியாச்சி, ஆசூர் வளநாடு ஆகிய பகுதிகளில் வந்து தங்கி வாழ்ந்து வந்தனர். இதனை மெய்ப்பிக்கும் வகையில் பழைய நாட்டுப்புறப்பாடல் ஒன்று வழக்கில் இருந்துள்ளது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

"ஆதி கிழுவைநாடு குறிச்சியில் இருந்துவரும்
ஆதி கடம்பூர் சாயமலை தடியம்பட்டி
நீதி சேர்கஞ்சார் நாடு திருமங்கலக் குறிச்சி
எய்தநல் இடஞ்செவல் செங்கோனை திருவுவவு
கரிசல்குளம் கோட்டூர் நெற்கட்டுஞ் செவ்வல்
சிந்தா மணிநகர் பண்பொழிபட்பீணம்
மாற்றல் புலர்த்திடும் மாட்டாடி பணிந்திடும்
புகழ்வளர்த்த ஊத்துமலை கோவிலா நகராம்
வன்னிக் கோனேந்தல் வீராணம் கோட்டை
வளநாட் டோரே மறவர் ஆவர்;" [1]

இப்பாடல் வழி பூலித் தேவன் முன்னோர்கள் இராமநாதபுரம் பகுதியிலிருந்து வந்து குடியேறினார்கள் என்று தெரிய வருகிறது.

பூழி நாடு என்பது பாண்டிய நாட்டில் அமைந்த ஒன்று. 1378ஆம் ஆண்டு சேர நாட்டில் இருந்த ஒரு மன்னனால் 'வரகுணராம சிந்தாமணி காத்தப்ப பூழித்தேவர்' என்ற தளபதிக்குத் தானமாக வழங்கப்பட்ட நாடே இந்த பூழிநாடு. ஆரம்ப காலத்தில் இதன் தலைநகரம் ஆவுடையார்புரம். பின்னா் நெற்கட்டான் செவ்வலுக்குத் தம் தலைநகரை மாற்றிக் கொண்டதாக அறியப்படுகிறது. இராமநாதபுரம் பகுதியில் இருந்து வந்த பூலித்தேவர் முன்னோர்கள், தென்காசிப் பாண்டியனிடம் பாதுகாவலராகப் பணியாற்றிப் பின், பாண்டியனால் தரப்பட்ட பகுதியான ஆவுடையாபுரம் பாளையத்தை திசைக்காவலராக ஆண்டார்கள் என்றும் கூறப்படுகிறது. ஒரு புலியை வீழ்த்தி மன்னைக் காப்பாற்றியதால் 'பூலித்தேவர்' என்று பட்டமளித்து திசைக்காவல் வழங்கப்பட்டதாக வாய்மொழிக்கதை வழங்கி வருகிறது. பாளையப்பட்டுகள் வம்சாவழி, "வடக்காத்தான் புலித்தேவனும் 34 ஆண்டுகள் பாளையப்பட்டை ஆண்டு வந்தான்"[2] என எடுத்துரைக்கிறது.

திருச்செங்கோடு நாணயவியல் ஆய்வாளர் விஜயகுமார் கண்டுபிடித்துள்ள பூலித்தேவன் கால செப்பேடு ஒன்றில், "ஆவுடையார்புரம் ஜமீன்தார் ஆபத்துக் காத்தார் புலித்தேவன்' என்று எழுதப்பட்டுள்ளது."[3] என்று செ.ராசு குறிப்பிட்டுள்ளாா்.

**வாரிசுப்பட்டியல்**

| | | |
|---|---|---|
| 1 | வரகுண சிந்தாமணி பூலித்தேவன் | 1378 - 1424 |
| 2 | வடக்காத்தான் பூலித்தேவன் | 1424 - 1458 |
| 3 | வரகுண சிந்தாமணி வடக்காத்தான் பூலித்தேவன் | 1513 -1548 |
| 4 | சமசதி பூலித்தேவன் | 1548 - 1572 |
| 5 | முதலாம் காத்தப்ப பூலித்தேவன் | 1572 - 1600 |
| 6 | இரண்டாம் காத்தப்ப பூலித்தேவன் | 1600 - 1610 |
| 7 | முதலாம் சித்திரபுத்திரத்தேவன் | 1610 - 1638 |
| 8 | மூன்றாம் காத்தப்ப பூலித்தேவன் | 1638 - 1663 |
| 9 | இரண்டாம் சித்திரபுத்திரத்தேவன் | 1663 - 1726 |
| 10 | நான்காம் காத்தப்ப பூலித்தேவன் | 1726 - 1767 |

10வது பூலித்தேவராகக் கருதப்படும் 'காத்தப்ப பூலிதுரை தேவரே சுதந்திர முழக்கமிட்ட மாவீரனாவாா். இவரது முழுப்பெயர் 'வரகுண சிந்தாமணி ஆபத்துகாத்த பூலித்துரைப்பாண்டியன்' என்பது தான். ஆனால் "சடையவர்ம சுந்தரபாண்டியன் (கோனேரி மேல் கொண்டான்) சுட்டமலை கல்வெட்டில் 'அரையன் குவாளைய சந்திரன்' என்ற

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

பூழிதேவன் என பூலித்தேவன் முன்னோர்கள் சாட்சி கையொப்பம் இட்டுள்ள ஆதாரமான கல்வெட்டு உள்ளது."[4] என்று குறிப்பிடப்படுகிறது.

**நெற்கட்டுஞ் செவ்வல் பெயர் காரணம்** :

கடந்த 1755ம் ஆண்டு வரி வசூலிக்க வந்த அலெக்சாண்டர் கெரானிடம், "வரி என்னும் பெயரில் 'ஒரு நெல்லைக் கூடக் கட்டுவதில்லை' என்று மறுத்துக் கூறினார் பூலித்தேவன். அன்று முதல், 'நெல்கட்டும் செவ்வல் என்பது நெற்கட்டான் செவ்வல்' என அழைக்கப் பெறலாயிற்று' என்றும், 'தன் முன்னோர் தலைநகரான ஆவுடையார்புரம் தலைநகரை மாற்றி, நெற்கட்டுஞ் செவ்வலில் கோட்டைக் கட்டி அவ்வூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தவர் புலித்தேவன்"[5] என்றும் இராசையா குறிப்பிட்டுள்ளார். ஆனால், "1748ம் ஆண்டு வெட்டப்பட்ட இச்செப்பேட்டில், 'கசுப்பா நெற்கட்டுஞ் செவ்வல்' என்றே எழுதப்பட்டுள்ளது."[6] என்று கூறப்படுகிறது.

பூலித்தேவனின் பூர்வீகம், ஊர் பெயர் காரணம் குறித்த செய்திகளை நாட்டுப்புற இலக்கியங்களும், வரலாற்று ஆசிரியர்களும் ஒரு புறம் வேறு விதமாக எடுத்துரைக்க, தொல்லியல் ஆய்வில் கூறப்படும் செய்திகள் முரணாக அமைந்துள்ளன என்பது ஈண்டு நோக்கற்பால.

**செப்பேடு**

நெற்கட்டான் செவ்வலில் 'ராமகோவிந்தப்பேரி' என்ற பெயரில் பெரிய குளம் இருந்தது. அக்குளம் உடைந்து சிதைந்து பல ஆண்டுகள் பாசனம் இல்லாமல் இருந்தது. தலைநகர்ப் பகுதி வளம் பெறும் வகையில், அக்குளத்தைப் புதுக்குளமாகக் கட்டிப் பாசனம் செய்து பயிரிட புலித்தேவன் கேட்டுக்கொண்டதனால், நெற்கட்டுஞ் செவ்வலில் உள்ள பிறக்குடையாக் குடும்பன் என்பவர், தன் செலவில் ராமகோவிந்தப்பேரிக் குளத்தைப் புதுக்குளமாக அமைத்துள்ளார்.

விப வருடம் ஆடி மாதம் 25ம் நாள் புலித்தேவன், பிறக்குடையாக் குடும்பனுக்கு மானிய பூமி நன்செய் நிலம் வழங்கியதோடு அவர் நிலங்களுக்குச் சில ஆண்டுகள் வரிச் சலுகையும் அளித்த விவரம் இச்செப்பேட்டில் கூறப்பட்டுள்ளது. குளத்தில் உள்ள மீன்களைப் பிடிப்பதன் மூலம் வருகின்ற வருவாயிலிருந்து குளம் பராமரிப்பும், தூர் வாருதலும் நடைபெற வேண்டும் என்றும், இவற்றுக்குக் கணக்கெழுதி ஒப்பிக்க வேண்டும் என்றும் செப்பேட்டில் எழுதப்பட்டுள்ளது.

"பூலிதேவர் வம்சம் குடும்பர்களுக்கு வழங்கிய கண்மாய் பராமரிப்பு தொடர்பான தகவல்கள் இவற்றில் உள்ளன. பூலித்தேவனின் தளபதியாக விளங்கிய தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சேர்ந்த வெண்ணிக்காலாடியின் வம்சாவளியினருக்கு கோவிந்தப்பேரி கண்மாய் சம்பந்தமாக ஏற்படும் சகல பராமரிப்புகளும் அடக்கம் என்று இச்செப்புப் பட்டயத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. வடக்காத்தான் பூலித்தேவனால் தமிழ் விபவ ஆண்டில் இப்பட்டயம் வழங்கப்பட்டுள்ளது. இதன் நீளம் 22 செ.மீ. அகலம் 15 செ.மீ, கனம் 4மில்லி கிராம். நெல் கட்டும்செவல் அருகே அம்மன்குளத்தில் உள்ள முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினர் அமரர் செல்லச்சாமியின் குடும்பத்தினரிடம் இப்பட்டயம் உள்ளது."[7] என ராசையா தன் ஆய்வுக் கட்டுரை ஒன்றில் குறிப்பிட்டுள்ளார்.

"நிலங்கள் அளக்கப்பட்டு அடையாளமாக அவற்றிற்கு எண்கள் இடப்பட்டிருந்தது. 85, 86, 87, 88ம் எண் நிலங்கள் செப்பேட்டில் குறிக்கப்பட்டுள்ளன. நெல் கோட்டை, பாட்டம் என்ற அளவில் குறிக்கப்பட்டுள்ளது. விதை நெல் விரை என்று கூறப்பட்டுள்ளது. பொதுவாக அக்காலச் செப்பேட்டில் வழக்கமாகப் பயின்று வரும் வடமொழிச் சொற்கள் இன்றித் தனித்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

தமிழில் செப்பேடு எழுதப்பட்டுள்ளது. குளம், மடை விருத்திக்குத் தனி மானியமும் விடப்பட்டிருந்தது. புலித்தேவன் 'நம்மிட மனோ ராசியில்' இச்செப்பேட்டை எழுதிக் கொடுத்ததாகக் கூறியுள்ளார். விடுதலைப் போரை முதலில் தொடங்கிய புலித்தேவனைப் பற்றிய அரிய தகவல்களைக் கூறும் இச்செப்பேடு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது."[8] எனப் புலவர் ராசு குறிப்பிட்டுள்ளார்.

**கல்வெட்டு**

1820-ல் பொறிக்கப்பட்டுள்ள இக்கல்வெட்டு சிந்தாமணி பெரியகுளம் கண்மாய், தெற்கு மடைகளில் உள்ளது. பிறக்குடையக் குடும்பன் மகன் சிவனுக்குடும்பனுக்கு சிந்தாமணி பெரியகுளம் கண்மாய் பராமரிப்பு வழங்கப்பட்டுள்ள தகவல் இக்கல்வெட்டில் தெரிவிக்கப்பட்டுள்ளது. தாழ்த்தப்பட்ட மக்களுக்கு கண்மாய் பராமரிப்பு பூலித்தேவன் மகள் கோமதி முத்து நாச்சியார் வழங்கியுள்ளது இக்கல்வெட்டின் மூலம் தெரியவருகிறது. 1820-ல் பொறிக்கப்பட்டுள்ள இக்கல்வெட்டு சிந்தாமணி பெரியகுளம் கண்மாய், தெற்கு மடைகளில் உள்ளது. இக்கல்வெட்டு தொல்லியல் கட்டுப்பாட்டுக்குள் எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது.[9]

**கவண்கற்கள்**

தமிழக அரசு, மாவீரன் பூலித்தேவன் தியாகத்தைப் போற்றும் வகையில் புதிய கோட்டையைக் கட்ட வானம் தோண்டியபோது நிலவறை ஒன்று இருப்பதும் அந்த நிலவறைக்குள் ஆயிரக்கணக்கான கவண் கற்கள் இருப்பதும் தெரியவந்தது. முதன் முதலாக, நெல்லைச் சீமைக்கு வரி வசூல் செய்ய வந்த முதல் ஆங்கிலத் தளபதியான அலெக்சாண்டர் கெரானை, பூலித்தேவன் எதிர்த்துப் போரிட்ட போது, வளை தடி, ஈட்டி, வாள், வளரி, சுருள், பட்டா, வல்லியம், கவண் போன்ற நாட்டுப்புறக் கருவிகளை வைத்துப் போரிட்டான். அச்சுதந்திரப் போராட்டத்தின் போது வெள்ளையரை விரட்ட உதவிய கவண்கற்களே தற்போது, பூலித்தேவன் கோட்டையில் நிலவறைக்குள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

"கவண்கற்கள் உருண்டையாக எந்திரங்களில் வார்த்து எடுத்ததைப் போன்று உள்ளன. தற்போது நான்கு வகையான கவண்கற்கள் கிடைத்து உள்ளன. இந்தக் கவண்கல்லின் விட்டம் சுமார் 4 செ.மீட்டரிலிருந்து 6 செ.மீ வரை உள்ளது. அவை சுமார் 130 மி.கிராமிலிருந்து 230 மி.கிராம் வரை எடையுள்ள கவண்கற்கள் கிடைத்துள்ளன. போர் வீரர்களின் திறமைக்குத் ஏற்றபடி கவண்கற்கள் வழங்கப் பெற்றுள்ளன. தூரத்திலுள்ளவர்களைத் தாக்குவதற்குச் சின்னக் கவண்கற்களையும் அருகிலுள்ளவர்களைத் தாக்குவதற்குப் பெரிய கவண்கற்களையும் பயன்படுத்தி வந்துள்ளனர். கோட்டைச் சுவரின் மேல் மாடத்திலிருந்து கொண்டு பூலித்தேவனின் படை வீரர்கள் ஆங்கிலேயரைக் கவண்கற்கள் எறிந்து தாக்கி வந்தனர்."[10] என்று ஆய்வாளர் இராசையா குறிப்பிடுகிறார்.

தோல்பட்டை, கயிறுகள், கவண்கற்கள் ஆகிய மூன்று பொருட்களும் சேர்ந்தது தான் கவண் என்னும் கருவியாகும். தோல்பட்டையின் இருபக்கங்களிலும் இரண்டு கயிறுகள் இணைக்கப்பட்டிருக்கும். தோல்பட்டையில் கவண் கல்லை வைத்து இரண்டு கயிறுகளையும் ஒன்று சேர்த்து பிடித்துக் கொண்டு வேகமாகச் சுழற்றி ஒரு கயிற்றைப் பிடித்துக் கொண்டு மற்றொரு கயிற்றை விட்டு விட்டால் இந்தக் கல் எதிரியின் நெற்றியில் பட்டு, அந்த இடத்திலேயே சுருண்டு விழுந்து உயிரை விடுவர். விவிலியத்தில் குறிப்பிடப்படும், "பெலிஸ்திய வீரன் கோலியாத்தை, சிறுவன் தாவீது கவண் கல்லைக் கொண்டு வீழ்த்திய நிகழ்வு"[11] ஈண்டு குறிப்பிடத்தக்கது.

கற்களையே கருவிகளாகக் கொண்டு மிருகங்களை வேட்டையாடி வந்த ஆதி மனிதன், பின்நாளில் இரண்டாகப் பிரியும் மரத்தின் கிளைப் பகுதியை எடுத்து அதில் இரண்டு

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

பக்கங்களிலும் ரப்பரைக் கட்டி அவற்றின் நுனிகளைத் தோல்பட்டையுடன் இணைத்து அதில் சிறிய கற்கள், அல்லது களிமண்ணால் செய்த கோலி உருண்டை ஆகியவற்றைப் பயன்படுத்தி வேட்டையாடியிருக்கலாம். சங்ககால மகளிர் "தினைப்புனம் காக்கும் போது பறவைகள், விலங்குகளை விரட்ட இத்தகைய கவண்கல்லைப் பயன்படுத்தினர்"[12] என்பதை இலக்கியங்கள் வழி அறிய முடிகிறது.

**கடித ஆவணங்கள்**

நெற்கட்டான் செவ்வல் கோட்டையைப் பார்வையிட்டு மேஜர் கெரான் 14-5-1755 இல் மேலிடத்திற்கு எழுதிய கடிதம் பூலித்தேவன் கோட்டையின் சிறப்பை பறைசாற்றுவனவாக உள்ளது. "பூலித்தேவனின் கோட்டையானது மிகவும் வலிமை வாய்ந்த ஒன்றாகும். கோட்டையின் அடிப்பாகம் கற்களால் கட்டப்பட்டது. இக்கோட்டை 4000 வீரர்களால் பாதுகாக்கப்பட்டு வருகின்றது. மதுரையிலிருந்து கொண்டுவரப்பட்ட ஆறு பவுண்டு பீரங்கிகளால் கோட்டையைத் தாக்கிப் பார்த்தேன். எனினும், எந்தச் சிறிதளவும் சேதம் ஏற்படவில்லை. இந்தக் கோட்டையைத் தகர்த்தால் நவாப்பிற்கு பெருமை சேர்க்கும் என்று மாபுஸ்கானும், அதிகாரிகளும் கூறினர். இந்தக் கோட்டையை மூன்று நான்கு நாட்களுக்குள் தகர்த்து விடலாம் என்று கூறினார்கள். ஆனால நேரே சென்ற போது, 6 பவுண்டுகளைப் பயன்படுத்தியும் சிறிது அளவு சேதம் கூட ஏற்படாததைக் கண்டேன்."[13] என்று குறிப்பிட்டுள்ளார்.

பூலித்தேவன் மீது படையெடுத்துச் சென்ற தளபதி டொனால்டு காம்பெல், படை வீரர்களின் அஞ்சா நெஞ்சத்தையும், உயிரைத் துச்சமாகக் கருதிய திறத்தையும் வியந்து பாராட்டியுள்ளார். "பீரங்கிக் குண்டுகளாலேயே கோட்டையைத் தகர்க்க முடியவில்லை. குண்டு பட்ட இடங்களில் ஓட்டைகள் மட்டும் விழுந்தன. ஓட்டைகளைப் பூலித்தேவன் படைவீரர்கள் பச்சை மண்ணும் பனைநாரும் கொண்டு அப்போதைக்கப்போது அடைத்து விட்டார்கள். விடாது சுட்டுத்தள்ளச் சொன்னேன். ஓட்டைகளைத் தமிழ் மறவர்கள் தங்கள் உடல்களாலேயே அடைத்து நின்றார்கள். சுட்ட இடங்களிலெல்லாம் மண்ணும் நாரும் எப்படிச் சிதறமோ அப்படியே பூலித்தேவனின் வீரர்களின் உடல்களும் சிதறின. இதன் பின்னரும் அந்த வீரர்கள் அஞ்சாமல் தங்கள் பணியைச் செய்வதைக் கண்டு என்னால் வியக்காமல் இருக்க முடியவில்லை. நாகரிகம் குறைந்தவர்கள் என்று நம்மால் கருதப்படுகிற தமிழ் மறவர்களின் வீரம், நம் ஐரோப்பியர்களின் வீரத்திற்கு எந்த விதத்திலும் குறைந்ததன்று"[14] என்று டொனால்டு காம்பெல் 20-5-1767 இல் கும்பினியருக்கு எழுதிய கடிதம் குறித்து இராசையா தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

இக்கடிதங்கள் தமிழக அரசின் ஆவணக் காப்பகத்தால் பாதுகாக்கப்பட்டு வருகின்றன என்பதும், நெற்கட்டான் செவ்வல் பகுதியில் இருந்து எடுக்கப்பட்ட பீரங்கிக்குண்டுகள் மற்றும் பல போர்க்கருவிகள் மதுரை தொல்பொருள் துறையினரிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளன என்பதும் குறிப்பிடத்தக்கன.

**முடிவுரை**

பூலித்தேவனின் பூர்விகம், முன்னோர்கள், தலைநகரம் ஆகியன குறித்து வரலாற்று ஆய்வாளர்கள் கூறும் தகவல்களும், தொல்லியல் தரவுகள் அளிக்கும் விளக்கங்களும் முரணாக இருப்பதால், இளம்தலைமுறையினர் பூலித்தேவனின் உண்மை வரலாற்றை அறிய இடர்பட நேரிடும். இந்நிலை மாற, 'தொல்லியல் துறை' தங்களுக்குக் கிடைத்த ஆதாரங்களைக் கொண்டு உண்மை வரலாற்றை வெளிக்கொண்டு வந்தால் சிறப்பாக அமையும் என்பது இவ்வாய்வாளர் கருத்தாக அமைகிறது.

**E-ISSN: 2581-7140**

**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

**அடிக்குறிப்புகள்**

1. ந.இராசையா., மாமன்னன் பூலித்தேவன். இ.ப 2012., பக் 272-273.
2. பாளையப்பட்டுகள் வம்சாவழிகள், தொகுதி.1, பக்.39.
3. தென்பாண்டிச்சிங்கங்கள் (இணையதளப் பதிவு) 17 ஜீலை, 2013.
4. மேலது.
5. இராசையா., மாமன்னன் பூலித்தேவன். இ.ப 2012., பக் 272.
6. தென்பாண்டிச்சிங்கங்கள் (இணையதளப் பதிவு) 17 ஜீலை, 2013.
7. ராசையா ஆய்வுக் களஞ்சியம்., இரா.நரேந்திரக் குமார் (தொ.ஆ) மு.ப2008., ப.165.
8. தினமலர், ஜூலை 12, 2008.
9. பின்னிணைப்பு.
10. ராசையா ஆய்வுக் களஞ்சியம்., பக் 166-168
11. 1 சாமுவேல் 17: 40, விவிலியம்.,
12. மலைபடுகடாம் பாடல் எண். 203- 206, கலித்தொகை 52 13,14.
13. இராசையா, மாமன்னன் பூலித்தேவன். இ.ப 2012., பக் 272-273.
14. மேலது., பக் 368-369.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# நடுகற்கள் சான்றும் தமிழர் பண்பாடும்
# Stonehenge and Tamil Culture

**ம.சுப்பராயன்,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
பெரியார் மணியம்மை நிகர் நிலைப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

## Abstract

*Tamil culture is known for its monuments. In the ancient days the ancient Tamil Warriors are glorified in all sorts of documentation, especially in the verses and the culverts show their valour and martyrdom for the sake of the country, they gave their lives for saving innocent people with stoicness. In commemoration of their feats and valorable acts, the kings erected many stonehenges for the martyred warriors. Hence, this paper tries to bring out the informations related to the Stonehenge.*

**Keywords:** Stonehenge, Tamil Culture, Warriors, Commemoration

**முன்னுரை:**

"கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளோடு
முன்தோன்றிய மூத்தகுடி தமிழ்க்குடி"

முதல் மொழி தமிழ். முதல் மாந்தன் பிறந்தது குமரிக்கண்டம், முத்தகுடியினர் தமிழர். பண்பாட்டிலும், பாரம்பரியத்திலும், நாகரீகத்திலும், நயமிகுநட்பிலும், கொடையிலும் சிறந்துவிளங்கிய இனம் தமிழினம். தமிழர்கள் காதல், மானம், வீரம் இவற்றை உயிரெனப் போற்றிவந்தனர். இயற்கையோடியைந்து காதலைப் போற்றி வளர்த்தனர். "தன்னிலைத் தாழாமையும் தாழ்ந்தக்கால் உயிர்வாழாமையும் மானமாகும்" என்ற உன்னதப் பண்பாட்டைப் பின்பற்றினர்.

வீரத்தின் விளைநிலமாக தமிழகம் இருந்தது. தான் விரும்பும் பெண்ணை அடைய 'ஏறுதழுவுதல்' என்ற வீர விளையாட்டில் தனது உயிரையும் பொருட்படுத்தாமல் முரட்டுக்காளையை போராடி அடக்கினர். தன் வீரத்திற்காகப் அப்பெண்ணைப் பரிசாகப் பெற்று இல்வாழ்க்கையை வள்ளுவர் நெறிப்படி நடத்தினர். தன் நாட்டு மன்னன் வெற்றி பெற, வீரத்துடன் போர்புரிந்து விழுப்புண் படுவதையும், இறந்து படுவதையும் விரும்பினர். அரசர்கள் தனது வெற்றிக்காக உழைத்து வீரமரணம் தழுவிய வீரர்களைப் பாராட்டும் வகையில் அவர்களின் உருவங்களைக் கல்லில் செதுக்கி, அதனுடன் அவ்வீரன் பற்றிய பெயர், பிறந்த ஊர், செய்தபோர்,.... போன்ற விவரங்களையும் குறித்து, அந்த கல்லை நட்டு தெய்வமாக வழிபட்டனர். இதுவே நடுகல் எனப்படும். இவ்வாய்வுக் கட்டுரையில் நடுகல் பற்றிய சான்றுகளையும், தமிழர் பண்பாட்டையும், சில எடுத்துக்காட்டுகளுடன் விளக்க விழைகின்றேன்.

**தொல்காப்பியத்தில் நடுகல் சான்றும் தமிழர் பண்பாடும்:**

போரிலே மாண்ட வீரர்களுக்கு கல்நட்டு வணங்கும் வழக்கம், தமிழர் பண்பாடாக தொல்காப்பியத்தில் குறிக்கப்பட்டுள்ளது.

"காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுகல்,

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

சீர்த்தகு மரபின் பெரும்படை வாழ்த்தல்"

என்று வீரருக்கு கல்நாட்டு முறையைக் கூறுகிறது தொல்காப்பியப் புறத்திணை இயல் சூத்திரம். முதலிலே நல்ல உறுதியான கல்லைக் காணுதல்; இரண்டாவது கல்லை எடுத்துவருதல்; முன்றாவது அக்கல்லை நீராட்டுதல்; நான்காவது அதனைக் குறித்த இடத்தில் நடுதல்; ஐந்தாவது அக்கல்லில் வீரனுடைய பெயரும் புகழும் குறித்தல்; ஆறாவது அதனைத் தெய்வமாக வைத்து விழாக் கொண்டாடி வாழ்த்தி வணங்குதல் என்று ஆறுவகையாக நடுகல் நாட்டுமுறை கூறப்பட்டிருக்கிறது. இவ்வாறாக போரிலே விழுப்புண் பட்டு வீரமரணம் அடைந்த வீரர்களின் நடுக்கற்களைத் தெய்வமாக வணங்கும் வழக்கம் தமிழர்களின் பண்பாடாக இருந்தது என்பதை, தொல்காப்பியத்தால் அறியமுடிகிறது.

இன்றும் கூட இந்தியா, தன்நாட்டுக்காக வீர மரணம் எய்திய வீரர்களை 21 குண்டுகள் முழங்க மரியாதை செலுத்தி, அவர்களை அடக்கம் செய்து அவ்வீரர்களின் தியாகத்தைப் போற்றுகிறது. மேலும் அந்த வீரனின் குடும்பத்திற்கு நிதிஉதவியும் செய்து வருகிறது. இந்திய மக்களாகிய நாமும் அவர்களின் தியாகத்தைப் போற்றி மதிக்கிறோம்; வணங்குகிறோம்.

அகநானுற்றில் நடுகல் சான்றும் தமிழர் பண்பாடும்:

"நல்அமர்க் கடந்த நாண்உடை மறவர்
பெயரும் பீடும் எழுதி அதற்தொறும்
பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல்" (அகம்: 67)

(கடந்த-வெற்றி பெற்ற, நாண் உடை-தோல்விக்கு நாணுதல் உடைய, பீடு-பெருமை, அதர்-வழி, பிறங்கு - விளங்குகின்ற)

"நல்ல போரிலே வெற்றி பெற்ற – தோல்விக்கு நாணும் தன்மையுள்ள வீரர்களின் பெயரும், பெருமையும் பொறித்து வழிகளிலே மயிற்பீலி சூட்டி விளங்குகின்ற நடுகற்கள்" என்பதே இதன் பொருள். மதுரை வீரன், வீரனார், கருப்பனார், அய்யனார்,.... போன்ற வீரர்களுக்கு கல் நட்டு வணங்கிய வழக்கமே, பிற்காலத்தில் தமிழ்நாட்டில் பல தெய்வங்கள் நிலைப்பதற்குக் காரணமாயிற்று. நால்வகை தெய்வங்கள் கூட அந்நிலத்து மக்களுக்குத் துணை செய்த வீரர்களின் தலைவர்களாக இருக்கலாம் எனக்கருதப்படுகிறது. வீரர் வணக்கத்தில் இருந்தே தெய்வ வணக்கம் பிறந்தது, என்று சொல்வதற்குக் கூட இடமுண்டு. இவ்வாறு அகநானுறு, வீரர் வணக்கமே தெய்வ வணக்கத்திற்கு அடிப்படையாக அமைந்தது என்று கூறுகிறது. வீரர்களை தமிழர்கள் போற்றி வணங்கிய பண்பாடு இதன் மூலம் வெளிப்படுகிறது.

**பட்டினப்பாலையில் நடுகல் சான்றும் தமிழர் பண்பாடும்:**

"நடுகல்லி னரண் போல
நெடுந்தூண்டிலிற் காழ் சேர்த்திய
குறுங் கூரைக் குடிநாப்பா" (பட்டினப்பாலை:78-80)

போர் முனையில் வீர மரணம் அடைந்தவனுடையவன் நினைவாக நடுகல் காவிரித்துறையில் நடப்பட்டிருக்கிறது. அந்நடுகலினருகில் வேலை நிறுத்தியது போல நீண்ட துண்டில்கோலை சார்த்தி வைத்திருந்தனர். பிறகு அந்நடுகல்லை தெய்வமாக வழிபட்டனர். இவ்வாறு போர் மறவன் வீரமரணம் அடைந்ததை நடுகல் அமைத்து அவனின் தியாகத்திற்காகத் தமிழர்கள் வழிபட்டனர் என்பதை பட்டினப்பாலை என்னும் பத்துப்பாட்டு நூல் கூறுகிறது.

**திருக்குறளில் நடுகல் சான்றும் தமிழர் பண்பாடும்:**

**என்ஐமுன் நில்லன்மின் தெவ்வீர்!**

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

"என்ஐமுன் நில்லன்முன் தெவ்வீர் பலர்என்ஐ
முன்நின்று கல்நின் றவர்" (குறள்:771 அதிகாரம்: 78, படைச்செருக்கு)

போரக்களத்தில் ஒர் நாட்டின் படைவீரன் எதிரி நாட்டு படைவீரர்களைப் பார்த்து "பகைவர்களே! முன்பு என்னுடைய தலைவன் முன் எதிர்த்து நின்று அவனால் வீரமரணம் அடைந்து நடுகல்லாயினார் பலராவர். ஆதலால் நீங்கள் உயிருடன் இருக்கவேண்டின் என்னுடைய தலைவன் எதிரில் போரேற்று நில்லாதீர்கள்! என்று எச்சரிக்கிறான். இதிலிருந்து அவ்வீரன், தன் அரசன் போர்புரிவதில் மிக வல்லவன் என்பதையும் எதிர்க்கும் பகைவீரர்கள் எப்படிப்பட்ட திறமைசாலிகளாயினும், வீழ்ந்துபடுவார்கள் என்றும், தம் அரசனை எதிர்த்தவர் பலர் நடுகல்லாகிவிடுவர் என்றும் விரைந்து அறிவிக்கின்றான்.

**விழுப்புண் படாத நாளெல்லாம் வீணான நாட்கள்**

பண்டைய தமிழர்கள் போரில் ஈடுபடுதலை விரும்பினார்கள். போரில் ஈடுபட்டு முகத்திலும் மார்பிலும் எதிரிகளின் ஆயுதங்களால் விழுப்புண் உண்டாவதை பெருமையாகக் கருதினார்கள். போர் என்ற உடன் தோள்கள் புடைத்து, பூரித்து ஆர்ப்பரிப்பரித்தனர். போர்முரசில் மரங்களின் கிளைகள் மோதியோ, இலை, காய், கனிகள் விழுந்தோ சத்தம் கேட்டால் கூட, ஆகா! போர் அழைப்பே! எனத் துள்ளிக்குதிப்பர். போரில் படும் காயமே புகழின் காயம் என்றும் போர் புண்படாத நாட்களெல்லாம் வாழ்க்கையில் பயனற்று கழிந்த நாட்கள் என வருந்துவார்கள். என்னே! தமிழரின் மாண்பு இதனை வள்ளுவர்

"விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து" (குறள்-776 அதிகாரம்: 78 படைச்செருக்கு)

என்ற குறளில் இயம்புகிறார்.

**புரந்தார் கண்நீர் மல்கல்**

போர்க்களத்தில் வீரன் ஒருவன் விழுப்புண் ஏற்பட்டு இறந்து விடுகிறான். அதனை அறிந்த அரசன் ஓடோடி வந்து, அவ்வீரனைத் தன் மடியில் கிடத்தி, தனக்காக உயிர்த் தியாகம் செய்ததற்காக கண்ணீர் சிந்துகிறான். அக்கண்ணீர் இறந்த வீரனின் உடலை நனைக்கிறது. அரசன் எவ்வளவு உயர்வானவன்! அப்படிப்பட்ட அரசன் ஒரு சாதாரண போர்வீரன் இறந்ததற்கு கண்ணீர் சிந்துகிறான். இந்தகுணம் இறந்த வீரனுக்கு தரும் புகழோ அளவிலடங்கா!. ஆகையால் இப்படிப்பட்ட புகழை அடைய, வீரன் தன்னுடைய இறப்பை யாசித்தேனும் பெறவேண்டும் என்று கீழ்க்காணும் குறளில் கூறுகிறார் நாயனார்.

"புரந்தார்க்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு
இரந்துகோள் தக்கது உடைத்து" (குறள்:780, அதிகாரம்:78 படைச்செறுக்கு)

உருசியாவில் போர்வீரன் ஒருவன் இறந்துவிட்டான் அவனை அலங்கரிக்கப்பட்ட ராணுவ வண்டியில் வைத்து அடக்கம் செய்யும் பொருட்டு வண்டி இழுத்துச் செல்லப்படுகிறது. முதல் நபராக அந்நாட்டு ஜார்ஜ் மன்னன் தனது தலைக் கிரிடத்தை எடுத்து, கையில் வைத்துக்கொண்டு ராணுவ வண்டியைத் தொடர்கிறான். அரசனே செல்லும்போது நாம் எம்மாத்திரம்? என்று அந்நாட்டின் குடிகள் அனைவரும் அரசனைப் பின் தொடர்கிறார்கள். இதிலிருந்து போர்வீரன் ஒரு நாட்டின் அரசனுக்கு இணையாக மதிக்கப்பட்டான் என அறியலாம். இச்செயல் வள்ளுவரின் "படைச்செருக்கு" நோக்குடன் ஒப்பிடத்தக்கது.

**நவகண்ட சிற்பங்கள்**

இக்காலத்தில் ஒருவன் தான் முயலும் செயல் வெற்றி பெற்றால், முடியைக் காணிக்கையாக்குகிறேன். உண்டியலில் பணம் போடுகின்றேன். அலகுகுத்தி தேர் இழுக்கின்றேன்; இனன பிற பொருட்களைப்படைக்கின்றேன் என்று தெய்வத்திடம்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

வேண்டுவதைப் போல, பண்டையகாலத்திலும் மறவர்களும், மற்றவர்களும் தனது நாட்டு அரசன் உடல் நலிந்து மோசமாகி இறக்கும் தருவாயில் இருக்கும் போதும், வேறு நாட்டுடன் போரிடச்சென்றிருந்தால் அவர்போரில் வெற்றி பெறவேண்டும். அப்படி வெற்றி பெற்று வந்தால், தன் உடல் உறுப்புக்கள் அல்லது உயிரையே பலியிடுவதாக தெய்வத்திடம் அரச சபையில் வேண்டிக் கொள்வார்கள்.

அவ்வாறு அரசன் உடல்நிலை தேறிவந்தாலும் போரில் வெற்றி பெற்றுவந்தாலும் தன் வேண்டுதலை நிறைவேற்ற ஒன்பது இடங்களில் வெட்டிக்கொண்டு, முடிவில் தன் கழுத்தில் வெட்டிக்கொண்டு தனது உயிரை பலி கொடுப்பார்கள். அந்த தியாகத்திற்காக அவ்வீரனுக்கு வைக்கப்படுவதே நவகண்ட சிற்பமாகும். இதனைக் கலிங்கத்துப்பரணியில் பார்க்க முடிகிறது.

“சலியாத தனியாண்மைத் தறுகண் வீரர்
தருகவரம் வரத்தினுக்குத் தக்க தாகப்
பலியாக உறுப்பரிந்து தருதும் என்று
பரவுமொலி கடலொலிபோற் பார்க்குமாலோ” (கலிங்கத்துபரணி-தாழிசை 109.)

நடுகற்களும் நவகாண்ட சிற்பங்களும் தமிழகத்தில் மேற்க்குத்தொடர்ச்சி மலை, கிழக்கு தொடர்ச்சி மலைப்பகுதிகளிலும், அதனைச் சுற்றியுள்ள வெளிப்பகுதிகளிலும் அதிக அளவில் ஆய்வாளர்கள் கண்டுபிடித்து வெளிப்படுத்தியுள்ளார்கள்.

கல்வெட்டு ஆய்வாளரும், தமிழக அரசின் அகவை முதிர்ந்த தமிழறிஞர் விருது பெற்றவருமான திரு.சி.க.மணி அவர்கள் கல்லக்குறிச்சி கோட்ட நடுகற்கள் வரலாறு என்ற தனது நூலில் நடுகற்களைப்பற்றியும் நவகண்ட சிற்பங்கள் பற்றியும் மிக அழகாக சிற்ப ஓவியங்களுடன் வெளியிட்டுள்ளார்.

நடுகற்கள், நவகண்ட சிற்பங்கள் மூலம் தமிழர்கள் வீரம் செறிந்தவர்களாகவும் தன்னை ஆளும் மன்னர்களுக்காக தன் உயிரையே தியாகம் செய்யகூடியவர்களாக விளங்கினார்கள் என்பதை அறியமுடிகிறது.

**முடிவுரை**

இதுகாறும் கூறியவற்றிலிருந்து நடுகற்கள், சிவகண்ட சிற்பங்கள் ஆகிய தொல்லியல் சான்றுகள் தமிழர்கள் வீரத்தையும், புகழையும் விரும்பினார்கள் என்றும், தம் அரசன் நலனுக்காகத் தனது இன்னுயிரையே இழக்கத் துணிந்தவர்களாக விளங்கினார்கள் என்றும் அறியலாம்.

பிள்ளையொன்று இறந்து பிறப்பினும் - சதைப்
பிண்டமொன்று பிறந்து தொலைக்கினும்
மூப்பு கொண்டு மடிந்திடினும்
முடிவிலோரு நோய்கண்டு முடிந்திடினும்
போரில் கலந்து விழுப்புண் பெற்று – மானமிகு
வீரர் என மாண்டிடாத பழி துடைப்பதற்காக
வாள் கொண்டு உடலில் கீறி
வான்புகழ் வாழ்வில் சேர்த்த பின்பே
உடலடக்கம் செய்திடும் மானமறபே
அடலேறுகள் மலிந்திடும் தமிழர் மரபு!

என்ற “மானம் காத்த மறவன்” என்ற தலைப்பில் கலைஞர் கூறியபடி, தமிழர்கள் வாழ்ந்தார்கள். இந்நாட்டு மன்னர்களாகிய நாமும் நாடு, மக்கள் செழிக்க வேண்டியதைச் செய்வோம் எனக் கூறி இவ்வாய்வுக் கட்டுரையை நிறைவு செய்கிறேன்.

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**ஆதார நூல்கள்:**

1. மறைமலை அடிகள், பட்டினப்பாலை ஆராய்ச்சி உரை, வெளியீடு: ராமையயா பதிப்பகம்.ஜி-4 சாந்தி அடுக்ககம், 3 ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு ராயப்பேட்டை சென்னை 600014. ஐந்தம் பதிப்பு 2014.
2. சாமி சிதம்பரனார் பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும் வெளியீடு நாம் தமிழர் பதிப்பகம், 10/14 தோப்பு வெங்கடாசலம் தெரு, திருவல்லிக்கேணி சென்னை 600 005. முதற்பதிப்பு ஜுலை 2012.
3. புலவர் குழந்தை, திருக்குறள் புலவர் குழந்தை உரை வெளியீடு: சாரதா பதிப்பகம், ஜி 4, சாந்தி அடுக்ககம், 3 ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு, ராயப்பேட்டை சென்னை 600014. ஏழாம் பதிப்பு 2014.
4. திரு சி.க.மணி கல்லக்குறிச்சி கோட்ட நடுகற்கள் வரலாறு சித்திரைச் செல்வி பதிப்பகம், தமிழகப் பழங்குடி மக்கள் ஆய்வு மையம்,40/1, ராசா நகர் வடக்கு, காந்தி சாலை, கல்லக்குறிச்சி கோட்டம் - 606202. முதற்பதிப்பு 2016.
5. டாக்டர் நாவலர் இரா.நெடுஞ்சொழியன் திருக்குறள் நாவலர் உரை, வெளியீடு நாவலர் நொடுஞ்செழியன் கல்வி அரக்கட்டளை, 4/7 மாசிலாமணித்தெரு, சீத்தாம்மாள் குடியிருப்பு, ஆழ்வார்ப்பேட்டை சென்னை-600018.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தமிழர் பண்பாட்டில் மஞ்சள்
# Turmeric in Tamil Culture

**ரெ. சுப்புலெட்சுமி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
கொங்கு நாடு கலை அறிவியல் கல்லூரி, கோவை.

## Abstract

*The study of the article deals with use of Turmeric in the life of the Tamil People. Turmeric is an antibiotic. It has been used from the age old history of the Tamil people for medicinal purposes. The plant and the root of the plant is used for all sorts of celebrations as a token of healthy welcome. Th people believe if they use it in daily life, they will get ultimate benefit out of it. The women of Tamil Nadu use turmeric as an application and according to the tradition it lengthens life and it is the symbol of long life of the life partner to the woman. It also has other significances. Therefore, the study use of turmeric in tamil society.*

**Keywords:** Turmeric, Tamil Culture, Tradition

**முன்னுரை**

நம் முன்னோர்கள் மதி நுட்பத்தினால் மக்களின் வாழ்வை மேம்படுத்தும் இயற்கைப் பொருட்களை வாழ்வில் இடம்பெறச் செய்வதற்கு அவற்றை மங்கலப் பொருட்களாக்கி, அப்பொருட்களின்றி மனையும், விழாக்களும், சடங்குகளும், சம்பிரதாயங்களும் இல்லை என்னும் வகையில் வாழ்வில் ஒருவித பிணைப்பினை ஏற்படுத்திப் பயன்படுத்தச் செய்து வாழ்வினை மேம்படுத்தியுள்ளனர். அவ்வகையில் நம் நாட்டில் மங்கலப் பொருளாக இடம்பெற்ற மஞ்சளின் மகத்துவத்தை சேலம் சொர்ணபுரியில் நகரத்தார் சங்க ஒன்பதாம் ஆண்டு விழாக் கவியரங்கில் 06-10-74 அன்று திரு டாக்டர் பெ. அண்ணாமலை, எம்.ஏ., பி.எச்.,டி., தலைமையில் மஞ்சள் என்ற தலைப்பில் கவிஞர் அரு. சோமசுந்தரனார் பாடிய கவிதை வாயிலாகவும், பிற சான்றுகளின் வாயிலாகவும் எடுத்துரைப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

தமிழர் பண்பாட்டில் மஞ்சள் என்ற தலைப்பினைத் தேர்ந்தெடுத்ததற்கு

“பஞ்சமெது வந்தாலும் தமிழர் நாட்டின்
பண்பாட்டை ஒருசொல்லில் சொல்க என்றால்
மஞ்சளினைச் சொல்வேன்நான்; இந்த நாட்டின்
மங்கலமாய் இருப்பதுவும் மஞ்சள் தானே!” (ஐரோப்பா, ப:101.)

என்று கவிஞர் அரு.சோமசுந்தரனார் பாடிய பாடலடிகளே காரணம் எனலாம். இப்பாடலடிகளைக் கொண்டு மஞ்சளினைப் பற்றி சிந்தித்த போது ஒரு புத்தகமே எழுதிவிடும் அளவிற்குச் செய்திகள் நினைவிற்கு வந்தாலும் கட்டுரையின் வரையறைக் கருதி எடுக்கச் செய்திகள் மட்டுமே இடம்பெறுகின்றன.

ஒரு சமுதாயம் உருவாவதற்கு அடிப்படைக் குடும்பம். அக்குடும்பத்தினை உருவாக்கும் விழாவான திருமணவிழாச் செய்திகள் தொடக்கமாக அமைகின்றன.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**திருமண அழைப்பிதழ்**

ஒரு பெண்ணை மணமகளாக வீட்டிற்கு வரவழைக்கு முன் இன்னார் பெண்ணை எங்கள் வீட்டு மருமகளாக ஏற்றுக் கொள்கிறோம் என்பதை சமுதாயத்திற்கு அறிவிக்கும் வகையில் அச்சடிக்கும் திருமண அழைப்பிதழில் முதலில் இடம்பெறுவது மஞ்சள் என்பதனை,

"அழைப்பிதழை அனுப்புகையில் மஞ்சள் பூசி
அனுப்புகிறார்; உள்இருப்பைக் கூடே சொல்லும்!" (ஐ. ப.103)

என்றும், அழைப்பிதழ் அச்சடிக்கப்பட்ட தரத்தினைக் கொண்டு செல்வ வளத்தினை மதிப்பிடலாம் என்ற செய்தியும் புலனாகிறது.

**அழைப்பிதழுக்குப் பின் சமுதாயத்தில் பின்பற்றப்படும் சம்பிரதாயங்களில் மஞ்சள்**

**முகூர்த்தக்கால் நடும் விழா**

மணமகன் வீட்டில் நடைபெறும் விழாவாகும். முகூர்த்தக்கால் என்பது வீடு கட்டும்போது சாரம் கட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் நீளமான சவுக்கு போன்ற மரக்கம்பு ஆகும். திருமணத்திற்காக வீட்டிற்கு வெள்ளை அடிக்கும்போது இம்மரக் கம்பிற்கும், உரலுக்கும் வெள்ளைக் காவி வண்ணங்களைத் தீட்டி வைத்துக் கொள்வர். திருமணத்திற்கு ஐந்து அல்லது ஏழு நாட்களுக்கு முன்பு மணமகன் வீட்டில் ஏற்பாடு செய்திருந்த முகூர்த்தக்கால் நடும் விழாவிற்கு வருகின்றவர்களை சந்தனம், குங்குமம் கொடுத்து வரவேற்பர். பின்பு ஆண்கள் முகூர்த்தக்காலின் உச்சியில் மாவிலை, வேப்பிலை, விறலி மஞ்சள், நவதானியம், மல்லிகைப்பூ, வெற்றிலைப்பாக்கு வைத்துக் கட்டுவர். அதனை வீட்டிற்கு முன்பு வடகிழக்குத் திசையில் முகூர்த்தக்கால் நடுவதற்காகத் தோண்டிய குழியில் பசும்பால், கோமியம் ஊற்றி முகூர்த்தக்காலினை நடுவர். அச்சமயத்தில் பெண்கள் மஞ்சள் தடவிய நூலில் விறலி மஞ்சள், வெற்றிலைப் பாக்கு, மல்லிகைப்பூ இவற்றைக் கட்டி இதனை உரலில் கட்டி அலங்கரிப்பர். பின்பு சுத்தம் செய்த உலக்கையிலும் விறலி மஞ்சள் வெற்றிலைப்பாக்கு, பூ கட்டிக் கொண்டு உரலில் விறலி மஞ்சளினைப் போட்டு வயது முதிர்ந்த சுமங்கலிப் பெண்கள் ஒவ்வொருவராக வந்து மஞ்சளினை இடிப்பர். பின்பு இடித்த மஞ்சள் பொடியை மணமகன் வீட்டில் எடுத்து வைப்பர். அதன் பின்பு பெண்களுக்கு, வெற்றிலைப் பாக்கு, பூ, மஞ்சள் கயிறு, கற்கண்டு, தேநீர் கொடுப்பர். வசதி படைத்தவர்கள் சிற்றுண்டி கொடுப்பதும் உண்டு. இவ்விழாவில் முறைமாமன் மேல் முறைப்பெண்கள் சந்தனம், மஞ்சள் தெளித்து விளையாடுவதும் உண்டு.

**திருமண விழாவில் நலுங்கு**

திருமணச் சடங்கில் ஒரு பகுதியான நலுங்கு என்பது மணமக்கள் பாதங்களில் மஞ்சளினைப் பூசிவிடுவது ஆகும். இச்சம்பிரதாயத்தினைப் பற்றி நாட்டுப்புற இயலில் இடம்பெற்ற,

"என்றன் மனத்திற் கிசையுமென் நாதரே
இன்பமுடன் உமது திருப்பாத மலரை
அந்தமுடன் பிடித்து அழகான மஞ்சளால்
அடியேனும் ஆசையுடன் நலுங்குமிட்டேன்" (நா.பு.இ. ப:202)

என்ற பாடலடிகளும் புலப்படுத்தியுள்ளதை அறிய முடிகிறது.

நலுங்கு என்ற சொல்லிற்குக் கழகத் தமிழ் அகராதியில் பொருள் காண முயன்றபோது, நலுங்கு என்ற சொல் தென்படவில்லை. அதில் இடம்பெற்றிருந்த நலங்கு என்ற சொல்லின் பொருள் ஒரு கலியாணச் சடங்கு என்று குறிப்பிட்டிருந்ததன் மூலம் நலங்கு

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

என்பது காலப்போக்கில் நலுங்கு என்று உச்சரிப்பில் மாற்றம் ஏற்பட்டிருக்கலாம் எனத் தோன்றுகிறது.

**திருமணத்தில் தாலி கட்டும் தத்துவம்**

திருணத்தில் தாலி கட்டுவதன் உட்பொருளை விளக்கும் வகையில்,

"… மஞ்சளினைக் கயிற்றினிலே தொங்க விட்டுத்
தஞ்சமென வந்தவட்குத் தாலி கட்டும்
தத்துவத்தை எண்ணுங்கள்; மனைவி என்னும்
மஞ்சளினைச் சூழ்ந்துள்ள கணவன் என்னும்
மாண்புடைய கயிறவனைக் காக்க வேண்டும்" (ஐ. ப:102)

என்று பாடிய கவிதையில் மஞ்சள் மனைவியையும் கயிறு கணவனையும் குறிப்பதாக சுட்டியிருப்பது புலனாகிறது. அடுத்து தாலியினைக் கட்டும்போது மூன்று முடிச்சுப் போடுவதன் காரணத்தைப் பற்றி,

"தாலியினைக் கட்டுகையில் முடிச்சு மூன்றில்
தத்துவத்தை எண்ணுங்கள்; தாரத் துக்கு
வேலியென விளங்குகிற கணவன் எந்த
வேளையிலும் உடலாவி பொருளை ஈயத்
தாலியினைச் சூழ்ந்திட்ட முடிச்சாய் நின்றான்
தாலியது தங்கத்தின் வளர்ச்சி! பண்டை
நாளினிலே மஞ்சளது தொடக்க மன்றோ!
நலமெல்லாம் மஞ்சளிலே அடக்க மன்றோ!" (ஐ.ப:102)

என்ற இப்பாடலில் குடும்பநலன் கருதி பண்டை நாளில் மஞ்சளினை முன் வைத்தனர் என்றும் தற்போது அவரவர் மரபினின்று மாறி தாலியைத் தங்கத்தில் செய்து கொள்வதைச் சுட்டிக் காட்டியிருப்பதும் தெளிவாகிறது.

**திருமணச் சீர்**

திருமணத்திற்குரிய சீர் என்பதனை எவ்விதம் தெரிந்து கொள்வது என்பதைப் பற்றி,

"தேங்காயில் மஞ்சளினைத் தடவி விட்டால்
திருமணத்துச் சீரென்று தெரிந்து கொள்வோம்" (ஐ.ப:104)

என்பதன் மூலமும், திருமணம் முடிந்தபின் பெண்களுக்கு மஞ்சள் தந்து அனுப்பும் முறையை,

"திருப்பூட்டி முடிந்ததுமே பெண் களுக்குப்
பாங்காகச் சிலஊரில் மஞ்சள் தந்து
பண்பாட்டைக் காக்கின்ற பழக்க முண்டு" (ஐ.ப:104)

என்ற வரிகள் மூலம் அறிய முடிகிறது. திருமண அட்சதையால் (மஞ்சள் கலந்த அரிசி) மலர் தூவி மணமக்களை வாழ்த்தும் மரபும் நம்மிடையே உண்டு. இச்செய்திகளிலிருந்து சமுதாயத்தினர் பின்பற்றும் திருமணச் சடங்கு முறைகள் மாறுபட்டிருந்தாலும் திருமணத்தில் முக்கிய இடத்தினைப் பெறுவது மஞ்சள் என்பது உண்மை எனலாம்.

**பெண்களின் மதிப்பை உயர்த்தும் மஞ்சள்**

ஒரு பெண் எப்பொழுது மகாலட்சுமியாகக் காட்சி கொடுக்கிறாள் என்பதை,

"அஞ்சாமல் மஞ்சளினை முகத்தில் பூசி
அரியதொரு குங்குமத்தில் திலக மிட்டுக்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கொஞ்சமொரு மலர்ச்சரமும் கூந்த லிட்டுக்
குணமான மனைவியவள் அருகே வந்தால்
சீதேவி வருவதுபோல் காட்சி தோன்றும்'' (ஐ. ப:101)

என்ற பாடல் வரிகள் மூலம் விளக்கப்பட்டுள்ளது. மேலும் ஆதிகாலத்திலிருந்தே பெண்கள் மஞ்சள் தேய்த்து நீராடுவதை எடுத்துக்காட்டும் வகையில்,

“காவிரியாறு தெய்வீக பலம் மிக்கது… இத்தகைய புண்ணிய நதியில் மஞ்சள் தேய்த்து, மாங்கல்யம் மாற்றி நீராடி வருவது மங்கலமான வாழ்வைத் தரும்'' (தினமலர்: ஆன்மீகமலர் ப:20)

என்ற இச்செய்தியும் அமைந்துள்ளது எனலாம்.

**தாலாட்டுப் பாடல்களில் மஞ்சள்**

முப்பத்து முக்கோடி தேவர்கள் புண்ணிய நதிகளிலும், பொய்கைகளிலும் நீராடுவதாக கூறிக் கொள்ளும் ஐதீகம் நம்மில் உண்டு. அதனடிப்படையில் தாலாட்டுப் பாடல்களில் தெய்வங்களை முன்னிலைப்படுத்தி இறையுணர்வோடு பண்பாட்டையும் உணர்த்தும் வகையில் மீனாட்சி அம்மன் நீராடும் பாங்கினை,

“நாழி நறுக்குமஞ்சள் நாலுவகைப் பச்சைமஞ்ச
நாடெல்லாம் உள்ள மஞ்சள்
அரைச்சு வழிப்பாளாம் அங்கயற்கண் மீனாள்
அஞ்சபவன் தட்டெரம்ப!
பூசிக் குளிப்பாளாம் மீனாட்சி அம்மாள்
பூப்படர்ந்த பொய்கையிலே
தேய்ச்சுக் குளிப்பாளாம் மீனாட்சி அம்மாள்
தேகமெலா பூமணக்க
என்று படிப்பாராம் இங்குள்ள தாய்மார்கள்
எழில் ஒழுகும் மஞ்சளினை!'' (ஐ. ப:105)

என்ற பாடலடிகளில் அமைந்த கருத்தின் மூலம் அறியமுடிகிறது. மேலும் குழந்தைக்குப் பாடும் தாலாட்டுப் பாடலில் மஞ்சள் அரைத்துத் தேய்த்து நீராடுவது முன்னோர் மரபு என்பதனை தொட்டில் பருவத்திலிருந்தே உள்ளுணர்வில் பதியும் வகையில் இத்தாலாட்டுப் பாடல் அமைந்துள்ளது புலனாகிறது. அடுத்து தமிழண்ணல் தொகுத்த தாலாட்டுப் பாடல்கள் என்ற தலைப்பில் உள்ள ஒரு பாடலில் முருகன் வள்ளியின்மேல் ஆசை கொண்டது எப்படி எனப் பல்வேறு கோணங்களில் சிந்தித்துப் பாடிய

“வண்டாடப் பூமலர – வள்ளி
வனங்காக்க கண்டாரோ!
வள்ளி அழகுக்கும் - வள்ளி
வலதுகைத் தேமலுக்கும்
கன்னத்து மஞ்சளுக்கும் - சுப்பையா
கண்டாசை கொண்டாரோ!
உட்கழுத்து மஞ்சளுக்கும் - சுப்பையா
உள்ளாசைப் பட்டாரோ!'' (தாலாட்டு, ப:55)

இப்பாடலிலும் மஞ்சள் முக்கிய இடம் பெற்றதனை அறியமுடிகிறது. மேலும் அடிக்குறிப்பில்,

1. தேமல் - சுணங்கு எனச் சங்க இலக்கியங்களில் சிறப்பிக்கப் பெறுவது.
இத்தேமல் அழகேயாகும்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

2. மஞ்சள் அழகே நம்நாட்டுப் பண்பாடு. மா, பூச்சு அழகன்று!

என்று தமிழண்ணல் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு குறிப்பிட்டதன் காரணம் இன்று தேமல் என்பது ஒரு தோல் நோய் எனப் பொருள் கொள்வதாலும், மஞ்சள் பூசினால் தோல் முரட்டுத் தோலாக மாறிவிடும் என்றும் பாமரர்கள் பூசுவது மஞ்சள் என்றும் கூறிக்கொண்டு நம் பண்பாட்டை மட்டுமல்ல செலவில்லாத மருத்துவக் குணம் வாய்ந்த இயற்கை மஞ்சளினைப் புறக்கணித்து செயற்கைப் பூச்சுக்களை பூசிக் கொண்டு ஒவ்வாமையால் மருத்துவச் செலவினங்களை அதிகரித்துக் கொண்டு வீட்டுப் பொருளாதாரத்தை சீரழிக்கக் கற்றுக் கொண்டோம் என்பதை உணர்த்துவதற்காக இருக்கலாம் எனக் கருத முடிகிறது.

மாப்பூச்சு அழகன்று என்று தமிழண்ணல் குறிப்பிட்டதைப் போல் கவிஞரும் தம் கவிதையில்,

"மஞ்சளினைப் பூசாத மங்கை உண்டா
மகராசி முகராசி மஞ்சள் ராசி
கொஞ்சமே தெரியாதார் இந்த நாளில்
குடம் குடமாய் மாபூசிக் குருதி கெட்டார்" (ஐ. ப:101)

என்று குறிப்பிட்டுள்ளதைக் கவனிக்க வேண்டியதாகிறது.

மஞ்சள் அழகே நம் நாட்டுப் பண்பாடு என்று தமிழண்ணல் சுட்டிக் காட்டும் அழகினைக் கவிஞர் தம் கவிதையில் மஞ்சள் பூசாத பெண்ணின் தோற்றப் பொலிவினைப் புஞ்சை என்றும் மஞ்சள் பூசிய பெண்ணின் தோற்றப் பொலிவினை நஞ்சை என்றும் குறிப்பிட்டுக் காட்டியதை,

"புஞ்சையென இருப்போர்கள் வாழ்வில் மஞ்சள்
புகும்போது நஞ்சையெனப் பொலிகின் றாரே" (ஐ. ப:101)

என்பதன் மூலம் புலனாகிறது. புஞ்சை, நஞ்சையெனக் கூறியதன் காரணத்தை ஆராயும் போது புஞ்சை என்பது புன்செய் நிலம். இந்நிலப்பகுதி நீர்வரத்துக் குறைவான பகுதியாதலால் பசுமை குறைந்து காணப்படும். நஞ்சை என்பது நன்செய் நிலமாகும். இந்நிலப்பகுதி நீர்நிலைகளுக்கு அருகில் அமைந்து மரஞ்செடி கொடிகள் நிறைந்து குளுகுளுவென்று இருக்கும் பொலிவான பகுதியாகும். எனவே புன்செய் நிலத்தின் முன்னே நன்செய் நிலத்தின் தோற்றம் அழகு மிளிரும். அதேபோல ஒரு பெண் மஞ்சள் பூசாதபோது புன்செய் நிலமாகவும், மஞ்சள் பூசியபோது நன்செய் நிலமாகவும் காட்சி கொடுப்பதாகக் கூறப்பட்டதன் உண்மை புலனாகிறது.

இன்னொரு வகையில் சிந்திப்போமேயானால் புஞ்சை, நஞ்சை என யாரையும் கோடிட்டு காட்டியதாகப் புலப்படவில்லை. ஆதலால் புஞ்சையென விளங்கும் திருமணமாகாத ஆண்களின் வாழ்வில் மஞ்சளாகிய (மனைவி) புகும்போது அவர்களின் வாழ்வு நஞ்சையென செழித்தோங்குவதைக்கூட குறிப்பிட்டிருக்கலாம் எனவும் எண்ணத் தோன்றுகிறது.

**வழிபாட்டில் மஞ்சள்**

தெய்வ வழிபாடுகளில் மஞ்சள் முக்கிய இடம் பெறுவதை,

"அறியாத அம்மையினால் வாடு வோர்கள்
அனைவர்க்கும் மஞ்சள்தான் மருத்து வச்சி
குறிப்பாகக் கோயிற்கும் பாபி ஷேகக்
கும்பத்தில் ஊற்றுவதும் மஞ்சள் நீரே
வெறியாட்டில் முருகனையே வரவ ழைக்க
விரைதெளித்து மஞ்சளினைத் தூவு வார்கள்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

வரிப்பாடல் தாலாட்டுப் பாடு வோரும்
வகைவகையாய் மஞ்சளினைப் பாடு வார்கள்'' (ஐ. ப:105)

என்ற பாடலின் வழி அறியமுடிகிறது. இதில் அம்மை என்பது ஒரு நோய் என்றாலும் மாரியம்மன் வந்துள்ளதாகவே முன்னோர் கருதி வந்துள்ளதால் மருத்துவரை அணுகாமல் மஞ்சளையே மருந்தாகப் பயன்படுத்தி குணமடையச் செய்வர். எனவே வழிபாட்டுப் பாடலில் அம்மையும் இடம்பெற்றுள்ளது எனலாம். முருகன் வழிபாட்டிலும் கோயிற் கும்பாபிஷேகத்திலும், இசைப் பாடல்களிலும், தாலாட்டுப் பாடல்களிலும் மஞ்சளின் பெருமையை உணர முடிகிறது.

அடுத்து மருத்துவத்தில் சுக்கின் முக்கியத்துவத்தையும், இல்லறத்தில் மஞ்சளாகிய மனைவியின் முக்கியத்துவத்தையும் எடுத்துக்காட்டும் வகையில்,

''சுழிபோட்டுக் குறிப்பதுவும் மஞ்சள்தானே
சுக்குக்குள் மருத்துவமே அடக்கம்!...
........கணவனுமே அடக்கமடா? மஞ்ச ளுக்கே!'' (ஐ. ப:102)

என்ற இப்பாடலின் கருத்து அமைகிறது எனலாம்.

**நம்பிக்கை**

**பூமணமும் மஞ்சளும்**

மைசூர் மாநிலத்தைச் சேர்ந்த கிராமப் பெண்கள் வயலில் இறங்கி நாற்று நடும்போதும், பெண்கள் வயலில் இறங்கி நாற்று நடும்போதும், பறிக்கும் போதும் கட்டாயம் தலையில் பூ வைத்துக் கொள்ள வேண்டுமாம். அதேபோன்று ஆடவர்கள் ஏர் உழும் போதும், விதைக்கும் போதும், சிறிய மஞ்சளை இடுப்புத் துணியில் முடிந்து வைத்துக் கொள்வார்களாம். மங்களச் சின்னங்களோடு வயலில் இறங்கினால் பூமா தேவி மனம் குளிர்ந்து அமோக விளைச்சலைத் தருவாள் என்ற நம்பிக்கை வெகு காலமாக இங்கு இருந்து வருகிறது! (குமுதம், 04-03-1971, எஸ். ரமணி) என்ற செய்தியும் மஞ்சளின் மங்களத் தன்மையை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

ஆலயங்கள் இல்லாத இடங்களில் வழிபாடு செய்யும் போது மஞ்சளைப் பிள்ளையாராக வைத்து வழிபடுவது உண்டு. அதேபோல்

''நாத்தியவள் சடங்குத் தட்டில்
என்றுமுள மஞ்சளது பிள்ளை யாராய்
இருந்தாசி நல்குகிறார்'' (ஐ. ப:103)

என்ற பாடலடிகளின் மூலம் சீர், சடங்குகளிலும் மஞ்சள் பிள்ளையார் இடம்பெறுவது வழக்கமாக உள்ளதை அறிய முடிகிறது.

சுருக்கமாகச் சொன்னால் நம் முன்னோர்கள் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவனை வணங்கி நிற்பது போல் எங்கும், எதிலும் மஞ்சளை பல்வேறு வகைகளில் பயன்படுத்தி, இறைவனின்றி இயக்கமில்லை என்பதுபோல் மஞ்சளின்றி மனையும், வாழ்வும் இல்லையென மஞ்சளினை வாழ்வோடு வாழ்வாக இரண்டறக் கலக்கும்படிச் செய்ததற்கான காரணங்களை ஆராயும்போது மஞ்சள் உடல், பொருள், ஆவி அனைத்திற்கும் பாதுகாப்புக் கவசமாக இருப்பதனை ஓலைச்சுவடி என்ற நூலில் கண்டறிந்த தகவல்கள் தொகுத்தளிக்கப்படுகின்றன.

**மஞ்சளில் உள்ள குணங்கள்**

1. மஞ்சள் காய்ச்சிக் குடித்தால் மனித உடலுக்கு ஜீவசக்தி கிடைக்கும் என்று ஆயுர்வேதம் கூறுகின்றது. மஞ்சள் கலந்த உணவு வகைகளை உட்கொள்ளும் போது

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

இரத்த அசுத்தத்தால் உண்டாகும் சரும நோய்கள், சிறுநீர் சம்பந்தமான, குடல் கிருமிகள் முதலியவையின் பாதிப்பிலிருந்து விலகலாம். மேலும் உணவு வாயிலாகவோ, வேறு வழியிலோ உடலில் புகுந்த விஷ அம்சங்களை அழிப்பதற்கும் மஞ்சள் உதவுகின்றது. வயிற்றுக் கோளாறு, வாயுக் கோளாறு என்பவையை தணிக்கின்றது. மஞ்சள் சருமத்துக்கு மென்மையும் அளித்து நோயணுக்களை அழித்து அழகையும் அதிகரிக்கின்றது. (ஓ.சு. ப:124)

2. முகத்தில் வந்து சேரும் நோயணுக்களை அழிக்கும் சக்தி மஞ்சளுக்குண்டு என்பது நிருபிக்கப்பட்டுள்ளது. உணவுப் பொருட்களில் இருக்கும் நோயணுக்களை அழித்து சுத்தப்படுத்துவதற்காக உணவுப் பொருட்களில் மஞ்சள் சேர்க்கப்பட்டுள்ளது. நற்குணங்களைக் கொண்ட மஞ்சளின் முக்கியத்துவத்தை பண்டைய மக்கள் அலட்சியம் செய்யாமல் உணர்ந்திருந்தனர். (ஓ.சு. ப:226)
3. சவத்தை தகனம் செய்வதற்காக விறகு அடுக்கி, படுக்க வைத்தால் அதற்குச் சுற்றிலும் மஞ்சள் பொடி விதறும் ஒரு சடங்கு சில இடங்களில் செய்கின்றனர். இதை முற்றிலும் மூட நம்பிக்கை என்றே தள்ளிவிடலாம். ஆனால் இது மிகவும் அவசியம் என்பதை எல்லோரும் புரிந்து கொண்டால் நல்லது. எந்த நோயுமில்லாமல் அல்லது பரவும் நோய் எதுவுமில்லாமல் ஒருவர் இறந்து போனாலும் இறந்து சில மணி நேரத்துக்குள் சவம் செரிக்கத் தொடங்கும். அதிலிருந்து உருவாகும் பல வகையிலான நோயணுக்கள் சுற்றுச் சூழலில் பரவத் தொடங்கும் இதைத் தவிர்ப்பதற்காகவே மஞ்சள் பொடி சுற்றும் இடுவது. (ஓலைச் சுவடி, பக்:276-277)

இதேபோல் கிராமங்களில் ஒருவர் இறந்தவுடன், இறந்தவரின் கண்களை மூடி மஞ்சள் வைத்து விடுவர். இவ்வழக்கத்தை நினைக்கும் போது மேற்கூறியது காரணமாக இருக்கலாம் எனக் கருத முடிகிறது.

> “தூரத்துப் பயணங்கள் கழித்து வரும் குடும்பத்தினர், திருமணம் முடிந்து மணமகன் வீட்டுக்கு வரும் தம்பதிகள், மகப்பேறு முடிந்திருக்கும் தாய் முதலியோரைப் பொதுவாக ஆரத்தி எடுப்பதுண்டு… மஞ்சள் மற்றும் சுண்ணாம்புக்கு கிருமிகளை அழிக்கும் திறன் உண்டு என்பதை நாம் கண்டறிந்துள்ளோம். அந்த நபரின் மேல் வந்து சேர்ந்திருக்கும் விஷ அணுக்களை அழிப்பதே ஆரத்தியின் உத்தேசம் (ஓ.சு. பக்: 287-288)”

மேற்கண்டவற்றின் மூலம் மஞ்சளின் மருத்துவக் குணத்தை எடுத்துச் சொல்லாமல் நடைமுறையில் அன்றாடம் இல்வாழ்விலும், விழாக்களிலும் முதன்மை வகிக்கும் பெண்கள் உபயோகப்படுத்த வேண்டும் என்பதற்காக சிறுவயதிலிருந்தே மஞ்சள் அரைத்துத் தேய்த்துக் குளிக்கச் செய்தும் சமையலிலும், மருத்துவத்திலும் மஞ்சள் சேர்த்துக் கொள்வதை நடைமுறைப்படுத்தியும் வந்ததை நினைக்கும்போது சான்றோர்கள் சமுதாயத்தை வழி நடத்திய பாங்கு புலனாகிறது.

இதுவரை மஞ்சள் குறித்து பல்வேறு தகவல்களை ஆராய்ந்து கருத்துக்களை வெளியிட்டாலும் மஞ்சள் என்ற தலைப்பின் கீழ் ஆய்வு என்பதால் மஞ்சள் - அவப்பெயர் என்ற தலைப்பில் அமைந்த கவிதையை ஆய்வு செய்வதும் அவசியமாகிறது. அவ்வகையில் மஞ்சள் - அவப்பெயர் என்ற கவிதையில்,

> “மஞ்சளெலாம் மங்கலமே என்ற போதும்
> மாறாத கீழ்ப்பொருளும் மயங்கி உண்டு

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

மஞ்சட்கா மாலைஎன நோயைச் சொல்வர்;
மக்களிலே கடன்பெற்றோர் கொடுக்கா விட்டால்
மஞ்சள்தாள் கொடுத்தானென் றுரைக்கின் றார்கள்
மக்களுளம் கெடுக்கின்ற பத்தி ரிக்கை
மஞ்சள்பத் திரிகைஎனச் சொல்லு கின்றார்
மஞ்சட்கும் கீழ்த்திசையில் பொருளை வைத்தார்!" (ஐ. ப:105)

என்பன போன்ற கருத்துக்கள் இடம் பெற்றிருக்கின்றன.

இக்கவிதையில் தரமற்ற உணவு வகைகளை உட்கொள்ளுவதனால் ஏற்படுகின்ற நோயை மஞ்சட் காமாலை எனச் சொல்வதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வாறு அழைப்பதற்கான காரணத்தினை ஆராயும் போது கிராமங்களில் ஒருவரின் கண்கள் மஞ்சள் பூத்து இருந்தாலும் சிறுநீரில் சோற்றுப் பருக்கைகளைப் போட்டுப் பார்க்கும்போது அவை மஞ்சள் நிறமாக மாறினாலும் மஞ்சட் காமாலை இருப்பதாகக் கூறுவர். எனவே இதனடிப்படையில் மஞ்சட் காமாலை நோய் என்பது மஞ்சள் நிறத்தினை அறிகுறியாகக் கொண்டு கண்டறிவதால் மஞ்சட் காமாலை என்று பெயரிட்டிருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது. அடுத்து கடன் பெற்றவரிடமிருந்து வந்த தாள் கடன் கொடுத்தவருக்கு ஏதேனும் ஒரு வகையில் பாதிப்பினை ஏற்படுத்துவதால் அத்தாளினை மஞ்சள் தாள் எனவும், சமுதாயத்திற்கு ஏதேனும் ஒருவகையில் உதவக்கூடிய செய்திகளை விடுத்து, வாழைப்பழத்தில் ஊசி ஏற்றுவதுபோல் தவறான செய்திகளை சரியெனச் சமுதாயத்தினரிடையே பரப்பி, சமுதாய கட்டுக்கோப்பைச் சீர்குலைத்துக் கொண்டிருக்கும் பத்திரிக்கைகளை மஞ்சள் பத்திரிக்கை எனவும் பெயரிட்டுள்ளனர் எனலாம்.

இச்செய்திகளிலிருந்து சகல உயிரினங்களையும் காப்பாற்றுவதே குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்து வரும் காமதேனுவாகிய பசுத்தோலினைப் போர்த்திக் கொண்டு பிற உயிரினங்களை உண்டு வாழும் புலியானாலும், தேவரைப் போல் வேடமிட்டு கயமைச் செயல்களைச் செய்யும் கயவரினாலும் தேவருக்கும், பசுவிற்கும் அவப்பெயர் என்று சொல்லிவிட முடியாது. அதேபோல் மஞ்சட் காமாலை, மஞ்சள் தாள், மஞ்சள் பத்திரிக்கை என்ற இச்சொற்களைக் கொண்டு உடல், பொருள், ஆவி ஆகியவற்றிற்குப் பாதுகாப்புக் கவசமாகத் திகழும் மஞ்சளுக்கு அவப்பெயர் என்ற முடிவுக்கு வர முடியாது எனலாம்.

**தொகுப்புரை**

- தமிழர் பண்பாடு என்றால் மஞ்சள் என்று கவிஞர் அரு. சோவும், தமிழண்ணலும் குறிப்பிட்டுக் காட்டியதற்கான காரணங்களைச் சான்றுகள் காட்டி விளக்கப்பட்டுள்ளன.
- தாவரங்களின் நோயைப் போக்குவதற்கு உற்ற மருந்து மழைநீர் போல உடற்பிணியைப் போக்குவதற்கு உற்ற மருந்து மஞ்சள் என்பதனை அறிய முடிகிறது.
- வியாபார நோக்கில் எண்ணற்ற மாப்பூச்சுகளைச் சந்தைப்படுத்துவதற்கு வருகின்ற விளம்பரங்களைக் கண்டு மதிமயங்கி குடும்ப வருமானத்தில் பெருமளவு செலவழிப்பதை நிறுத்தி இயற்கை நிறமியான மஞ்சளினைப் பயன்படுத்தி, பயன்பெற இக்கட்டுரைச் செய்திகள் வழிகாட்டியாக அமைந்துள்ளன எனலாம்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**துணைபுரிந்த நூல்கள்**

1. ஐரோப்பா - கவிஞர் அரு. சோமசுந்தரன்.
2. நாட்டுப்புற இயல் ஆய்வு - டாக்டர் சு. சண்முக சுந்தரம்.
3. தாலாட்டு (தொகுப்பு நூல்) - தொகுப்பாசிரியர் தமிழண்ணல்.
4. ஓலைச்சுவடி - வெங்கானூர் பாலகிருஷ்ணன்.

**E-ISSN: 2581-7140**
**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

# தொல்தமிழர்களின் பண்பாட்டு அடையாளங்கள்
# Cultural Evidences of the Classic Tamils

**மு.சுபாஷினி,** உதவிப் பேராசிரியர்
தமிழ்த்துறை, ஸ்ரீசாரதா மகளிர் கல்லூரி, பெரம்பலூர்-621 113.

## Abstract

*The article evinces the need and importance of Archaeology. It caters the facts of the Tamil People's age old tradition, lifestyle, agriculture and other facets of life. The idea of the study bring forth the study needed to reinvestigate the fossils, and relics to find out the classic quality of the Tamil people. It putforths many surveys done in the Tamil land such as Aathichanallur, Kodumanal and Ilankai as valid examples. Hence, the study make logical the mutual details from the revelation originate from consistent sources.*

**Keywords:** Cultural, Evidences, Classic Tamils

**முகவுரை**

தொல்லியலை Archaeology எனக்கூறுவர். ஆதிகாலத்தைப் பற்றிய அறிவியல் என்பது இதன் பொருளாகும். தொல்லியல் ஆய்வு என்பது பூமிக்குள் புதையுண்டு மறைந்து கிடக்கும், அல்லது மேற்பரப்பிலே காணப்படும் மனித இனத்தோடு தொடர்புடைய பொருள்களையும், அவர்கள் நாள்தோறும் வாழ்க்கையில் விட்டுச்சென்ற பொருள்களையும் அகழ்ந்தெடுத்து ஆய்வுசெய்து அவர்களின் பழம்பண்பாடுகளைப் பற்றி உய்த்தறியும் ஓர் ஆய்வாகும். இதன் வாயிலாக பண்டைய மக்களின் பண்பாடு, நாகரிகம் அவர்கள் பயன்படுத்திய கருவிகள், தொழில்கள் போன்ற வாழ்க்கை முறையை அறிவதற்கு தொல்லியல் ஆய்வுகள் பெரிதும் துணை நிற்கின்றன. பழங்கால மக்கள் வாழ்ந்த முறையின் அடையாளமாக ஆய்வாளர்கள் அகழாய்வுகள், எழுத்துப்பொறிகள், பாறை ஓவியங்கள் இவைபோன்று பலவிதமான களஆய்வினை மேற்கொண்டு அவற்றை வெளிகொணர்ந்துள்ளனர் அதனை அறியும் வகையில் இக்கட்டுரை அமைந்துள்ளது.

**கற்காலம்**

மனித இனம் தோன்றிய காலத்தில் மக்கள் விலங்குகளுடன் விலங்குகளாகக் காடுகளிலும், மலைகளிலும், குகைகளிலும் வாழ்ந்தனர். தங்களுடைய தற்காப்பிற்காகவும் தேவையான உணவுப் பொருட்களைச் சேகரிப்பதற்காகவும் கல்லால் ஆன ஆயுதங்களைச் செய்யக் கற்றுக்கொண்டனர். கற்களால் ஆன ஆயுதங்களைப் பயன்படுத்திய காலம் **"கற்காலம்"** என்று அழைக்கப்பட்டது. உலகிலுள்ள பல நாடுகளில் கற்கால மக்களின் கல்லாயுதங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இதனடிப்படையில் தமிழகத்திலும் செங்கற்பட்டு, வடஆற்காடு, அரியலூர், கிருட்டிணகிரி மாவட்டங்களில் கற்கால மக்களின் கல்லாயுதங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

> "செங்கல்பட்டு மாவட்டத்தில் திருவள்ளுர் வட்டத்தில் அத்திரம்பாக்கம் என்ற ஊருக்கு அருகில் கோர்த்தலை ஆறு என்ற ஒன்று ஓடுகின்றது. இந்த ஆற்றின்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கரையில் நான்கு ஆற்றுப்படுகைகள் காணப்படுகின்றன. ராபர்ட் புளூஸ் பூட் என்ற நிலவியல் ஆய்வாளர் முதன்முதலில் பழைய கற்காலக் கல்லாயுதங்களைக் கண்டுபிடித்தார்" [1]

(தி.சுப்பிரமணியன்,தமிழகத்தில் பெருங்கற்காலப் பண்பாடு,ப.1)

கற்கருவிகள் பலவகையான கற்களைக் கொண்டு செய்யப்படுகின்றன. எடுத்துக்காட்டாக தீக்கற்கள் செதுக்கப்பட்டு வெட்டும் கருவிகளாகவும், ஆயுதங்களாகவும் பயன்படுத்தப்படுகின்றன. எரிமலைப்பாறைக் கற்களும், மணற்கற்களும் அரைக்கும் கற்களாகப் பயன்பட்டன. அழியக்கூடிய பிற மென்மையான பொருட்களால் செய்யப்பட்டவற்றையைக் காட்டிலும் கற்களால் செய்யப்பட்ட கருவிகள் பல ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னும் அழியாமல் இருக்கின்றன. தொல்லியலில் பயன்படும் மூன்று கால முறையில் கற்காலமே முதல்காலமாகும்.

**தொல்பழங்காலம்**

வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட காலத்தைத் **தொல்பழங்காலம்** எனத் தொல்லியலாளர் அழைக்கின்றனர்.

"ஆதிச் சமூக வரலாற்றில் எழுத்துச் சான்றுகள் தோன்றிய காலத்திற்கு முற்பட்ட காலம் வரலாற்றுக்கு முந்திய காலம் ஆகும். இதனை தொல்பழங்காலம் என்றும், மண்ணியல் காலம் என்றும் அழைப்பர்"[2]

(பேரா.அ.ஹ.முகைதீன் பாதுஷா, தொல்லியல் விதிகளும் வகைகளும், ப.120)

**பழைய கற்காலம்**

மனித வாழ்க்கையின் தொடக்க நிலையை பழைய கற்காலம் என்கிறோம். பழைய கற்காலத்தில் வாழ்ந்த மக்கள் குவார்ட்சைட் எனப்படும் கரடுமுரடான கற்களை வேட்டையாடுவதற்கு பயன்படுத்தினர். "வேட்டையில் ஆண்களும் பெண்களும் பங்கேற்றனர். மடியில் குழந்தையை கட்டிக்கொண்டு ஒரு பெண் அம்புவிடுவது போன்ற ஓவியம் மத்தியபிரதேசத்திலுள்ள **பிம்பேட்கா** குகையில் உள்ளது." [3] (6th Samacheer Kalvi History Study Material in Tamil – 1) பழைய கற்காலம் கற்கருவிகளின் உருவாக்கத்தோடு தொடர்புள்ள வரலாற்றுக்கு முற்பட்ட காலம். இது மனிதர் இப்புவியில் வாழ்ந்த காலத்தின் பெரும்பகுதியை உள்ளடக்குகிறது.

"தர்மபுரி மாவட்டத்தில் செய்த மேற்பரப்பாய்வின்போது இப்பகுதியிலும் பழைய கற்காலக் கருவிகள் கிடைக்க வாய்ப்புகள் உள்ளன என்று கூறியுள்ளார். இதனடிப்படையில் மேற்கொண்ட ஆய்வின்போது கிருட்டிணகிரி வட்டத்திலுள்ள வரட்டனப்பள்ளி மலையடிவாரத்தில் பழையக் கற்காலக் கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன"[4]

(பேரா.சி.கோவிந்தன்,பெ.வெங்கடேஸ்வரன்(மலர்க்குழு), 2010, கிருஷ்ணகிரி மாவட்க் கருத்தரங்க மலர்,ப.66)

பழைய கற்கால மனிதன் தான் வாழ்ந்த குகைகளில் அழகான ஓவியங்களை தீட்டினான். அவற்றில் யானை, கரடி, மான் போன்ற மிருகங்களை வேட்டையாடும் ஓவியங்கள் மற்றும் தங்களது வாழ்க்கை முறையை சித்திரிக்கும் ஓவியங்களையும் தீட்டினான். இறைவன் அல்லது சமயம் குறித்த சிந்தனை பழைய கற்கால மனிதர்களுக்கு இல்லை. இறந்தவர்களை அடக்கம் செய்யும் முறைகளையும் கூட அறிந்திருக்கவில்லை. இறந்தோரின் உடல்கள் விலங்குகளுக்கும், பறவைகளுக்கும் இறையாகவே பயன்பட்டன.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**நுண்கற்காலம்**

நுண்காலம் என்பது சிறிய கல்லாயுதங்களைப் பயன்படுத்தியதால் நுண்கற்காலம் என்று பெயரிடப்பட்டது. நுண்கற்காலக் கருவிகள் ‘தேரிகள்’ எனப்படும் மணல்திட்டுகளில் கண்டெடுக்கப்பட்டன. தாமிரபரணி ஆற்றின் கரையில் நுண்கற்காலக் கல்லாயுதங்கள் சேகரிக்கப்பட்டன.

> “கிருட்டிணகிரி மாவட்டத்தில் மயிலாடும்பாறை என்ற இடத்தில் செய்யப்பட்ட அகழாய்வில் நுண்கற்காலக் கருவிகள் கிடைத்துள்ளன. நுண்கற்காலக் கருவிகள் சுண்ணாம்பு மண்ணுடன் ஒட்டிக் கற்களாகக் கிடைத்தன. இதை உடைத்து நுண்கற்காலக் கருவிகள் சேகரிக்கப்பட்டன. கூர்முனைகள், சுரண்டிகள், சீவு கத்திகள் போன்றனவும் கிடைத்துள்ளன”[5]
> (தி.சுப்பிரமணியன், தமிழகத்தில் பெருங்கற்காலப் பண்பாடு,பக்.5-6)

நுண்கற்காலத்தின் காலம் கிமு.10,000க்கும் கி.மு.4000க்கும் இடைப்பட்டது என்று கூறலாம்.

**புதிய கற்காலம்**

புதிய கற்கால மனிதர்கள் காட்டு மிருகங்களுடன் வாழ்ந்த மக்களின் வாழ்க்கையில் பல புதிய சிந்தனைகள் உருவாயின. ஒரு குறிப்பிட்ட இடத்தில் தங்கி வாழ்ந்தனர். ஆடு, மாடு உள்ளிட்ட கால்நடைகளை வளர்த்தனர். வேட்டையாடுவதைத் தொழிலாகக் கொண்ட நிலையிலிருந்து சற்று முன்னேறி, வேளாண்மை செய்யவும், அதில் கிடைக்கும் தானியங்களை உட்கொள்ளவும் பழகியிருந்தனர். விலங்குகளை வேட்டையாடி கையில் பிடிப்பதற்கு வசதியாக கூர்மையான கருவிகளை உருவாக்கினர். இது போன்ற புதிய மாற்றங்களை உருவாக்கியதால் இக்காலம் புதிய கற்காலம் என்று அழைக்கப்படுகிறது. தமிழகத்தில் மட்டுமின்றி உலக நாடுகளிலும் புதிய கற்காலத்தில் இத்தகைய நிலையே நிலவியது. எனவே இக்காலத்தைத் தொல்லியல் ஆய்வாளர்கள் புரட்சிகரமான காலம் என்றும் கற்காலத்தின் ‘மறுமலர்ச்சிக் காலம்’ என்றும் புகழ்கின்றனர்.

> “கைக்கோடரி, கல் சுத்தி போன்ற கருவிகள் அகழாய்வுகளில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவ்வகை மக்கள் சுமார் 4,000 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்திருக்கக்கூடும் என்கின்றனர் ஆய்வாளர்கள்”[6]
> **(http://tamil.thehindu.com)**

எஸ்.ஆர்.ராவ், பி.நரசிம்மையா போன்றவர்கள் தமிழகத்தின் பல பகுதிகளை ஆய்வு செய்தும் அகழாய்வு செய்தும் புதிய கற்கால மக்களின் வாழ்க்கை முறைகளை வெளியிட்டனர்.

**இரும்புக் காலம்**

இரும்பை உருக்கி இரும்புக் கருவிகள் செய்தனர். எனவே இவர்களையும், இப்பண்பாட்டையும் இரும்புக்காலப் பண்பாட்டைச் சேர்ந்தவர்கள் என்று அழைப்பதே முறையாகும். இம்மக்கள் இரும்புத் தாதுவைப் பிரித்தெடுக்கும் கலையைக் கற்றிருந்தனர் என்பதற்குச் சான்று அகழாய்வுகளில் கிடைத்த ஊது உலைகளும், உலைக்கலங்களுமே ஆகும்.

> “மக்களின் இருப்பிடத்தையும் செய்யும் தொழிலின் அடிப்படையிலும் அமைந்த குறியீடுகள் பின்னர் வணிகர் தொடர்பால் ஏற்பட்ட நட்பு, திருமணம் என ஒரு குழுக்கூட்டம் இன்னொரு குழுக்கூட்டத்துடன் இணைந்ததால் ஏற்பட்ட இரண்டு குறியீடுகள்; அடுத்து இணைக் குறியீடுகள் குறித்து விளக்கப்பட்டுள்ளது”[7]
> (ச.செல்வராஜ், அழகன் குளம், மாங்குடி குறியீடுகள் ஓர் ஆய்வு (கட்))

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

சித்திர எழுத்துகளுக்கும் குறியீடுகளுக்கும் ஓர் ஒப்பிட்டு ஆய்வு செய்து, குறியீடுகள் காலத்தால் முற்பட்டது என்பதை பொருந்தல் அகழாய்வு அடிப்படையில் விளக்கம் அளிக்கப்பட்டுள்ளது.[8] (கா.ராஜன், பொருந்தல் அகழாய்வு செய்திக்குறிப்பு, ஆவணம் இதழ், 20.2009). பல்வேறு விதமான தொழிற்பட்டறைகள் பெருங்கற்காலம் முதல் தமிழகத்தில் இருந்து வந்துள்ளன என்பதை கொடுமணல் பொருந்தல், மாங்குடி போன்ற அகழாய்வுகள் வழியாகத் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

மணிகள் தயாரித்தல், சங்கு வளையல்கள் தயாரித்தல், மட்கலன்கள் செய்தல், வணிகம், அயல் நாட்டுத் தொடர்பு, விவசாயத்தின் அதிக அளவு உற்பத்தி, அதனை சேமித்துவைத்தல் என பல்வேறு செய்திகள் இவ்வாய்வின் வழியாக அகழாய்வுச் சான்றுகளின் துணையோடு உறுதி செய்யப்பட்டுள்ளது.

**நினைவு சின்னம்**

ஐவகை நிலங்களின் அமைப்புக்கேற்ப குறியீடுகளும், நினைவுச் சின்னங்களும் பண்டையோர் அமைத்துக் கொண்டனர். வடமாநிலங்களில் காணப்படும் நினைவுச் சின்னங்களையும், தென் மாநிலங்களில் காணப்படும் நினைவுச் சின்னங்களையும் பகுத்து ஆய்வு செய்யப்படுகிறது. இப்பண்பாட்டுக் காலத்தை அந்நினைவுச் சின்னங்களில் காணப்படும் தொல்பொருட்களின் அடிப்படையில் பகுத்து ஆய்வு செய்தால்தான் தமிழகப் பண்பாடு தெளிவுபெறும்.

தாய்தெய்வ வழிபாடு சிறப்பிக்கப்பட்டுள்ளது. தமிழக அகழாய்வுகளில் தாய்தெய்வத்தின் சுடுமண் உருவங்கள் கிடைத்ததைக் குறிக்கலாம். இதற்குச் சான்றாக கீழ்வாலை ஓவியங்களும், அதற்கேற்ப காணப்படும் மனித வடிவில் அமைந்த குத்துக்கல் நினைவுச் சின்னங்களையும் குறிக்கலாம். இவை வளமைச் சடங்குக்காக ஏற்படுத்துப்பட்டு பின்னர் தமிழகத்தில் தாய்தெய்வ வழிபாடு இன்றியமையாத இடத்தையும் பெற்றுள்ளது எனலாம்.

**வரலாற்றுக் காலத்தில் காணப்பட்ட புதிய செய்திகள்**

எழுத்துகளின் வளர்ச்சி பற்றி பலரும் குறிப்பிட்டிருந்தாலும், அகழாய்வில் கிடைத்த நெடுங்கிள்ளி என்ற எழுத்துப் பொறித்த மட்கலன் சிறப்பு வாய்ந்த ஒன்றாகும். தமிழகத்தில் இதுவரை சங்ககால மன்னர்களின் பெயர் பொறித்தவற்றில் சேரர், பாண்டியர்கள் மட்டுமே கிடைத்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும். முதன்முதலாக தமிழக அகழாய்வுகளில் சங்ககாலச் சோழர் பெயர் பொறித்த மட்கலன் கிடைத்திருப்பது சிறப்புக்குரிய முதன்மைத் தகவலாகும்.

கல்வெட்டுகளில், புகளூர் கல்வெட்டில் இளங்கடுங்கோ, மாங்குளம் பாறைக் கல்வெட்டில் நெடுஞ்செழியன், ஐம்பை கல்வெட்டில் தகடூர் அதியமான்; இவற்றோடு காசுகளில், கொல்லிப்பாறை மாக்கோதை பெருவழுதி, குட்டுவன் கோதை பெயர்களையும் பல்வேறு வகைகளில் எழுத்துகளின் வளர்ச்சியை அவர்கள் வெளியிட்ட காசுகள் மற்றும் கல்வெட்டுகள் வழியாக பெறப்பட்டுள்ளன. இது போன்று தமிழகத்தில் பெருங்கற்காலத்திற்கு பின்னர் அதாவது சங்ககாலத்தில் எழுத்துகள் பெரிதும் வளர்ச்சியடைந்துள்ளதைப் பல ஆய்வுகளில் கிடைத்த எழுத்துப் பொறித்த மட்கலன்கள் நமக்கு தெளிவுபடுத்தியுள்ளன. குறிப்பாக தேரிருவேலி, அரிக்கமேடு, திருகாம்புலியூர், அழகரை, அழகன்குளம் போன்றவற்றைக் குறிப்பிடலாம்”[9] (ஏ.சுப்பராலு, மண்கல தமிழ்பிராமி எழுத்துப் பொறிப்புகள், ஆவணம் இதழ் 18, 2010) இவ்வகழாய்வுகளில் சங்ககாலக் கட்டுமானங்கள் கண்டறிந்து வெளிக்கொணரப்பட்டது. இவற்றில் சாயத்தொட்டிகள், குடிநீர் கால்வாய்கள், பௌத்த விகாரம், படகுத்துறை போன்ற பல கட்டுமானச் செய்திகள் தெளிவாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

செங்கற்களின் அளவுகள், அதன் தன்மை போன்றவற்றையும், செங்கற்களைக் கொண்டு கட்டுமான அமைப்பு காணப்பட்ட விதம் குறித்தும் ஆய்வுகள் செய்யப்பட்டுள்ளன. கங்கை கொண்டசோழபுரத்ததில் தலைபகுதியையும், உடற்பகுதியையும் மாற்றி அமைத்துக் கட்டும் கட்டுமான அமைப்பை பயன்படுத்தியுள்ளனர் என்பது விளக்கப்பட்டுள்ளது. இந்த அமைப்பு முறையானது கட்டடத்துக்கு உறுதியை சேர்க்கும் என்பதும், இரண்டு சுவர் அமைப்பு முறையில், இடைவெளியாக 55 செ.மீ.விட்டும், இந்த இடைப்பட்ட பகுதியிலும், அடித்தளத்திலும் மணல் நிரப்பியுள்ளனர் என்பதும் அறியப்பட்டுள்ளது. இது கட்டடத்தைக் குளிர்ச்சியாக வைத்திருக்க உதவும் என்பர். இது போன்ற கட்டுமான அமைப்புகள் கோயில் கட்டுவதிலும், அரண்மனை அமைப்பதிலும் பின்பற்றினர். இதனை கங்கைகொண்ட சோழபுரம், படைவீடு, தலைச்செங்கோடு போன்ற அகழாய்வுகளில் வெளிக்கொணரப்பட்ட கட்டடப் பகுதிகளில் காணப்பட்ட செய்திகள் கொண்டு உறுதிசெய்யப்பட்டுள்ளன.[10] (சீ.வசந்தி, தலைச்செங்கோடு அகழாய்வு, தமிழ்நாடு அரசுத் தொல்லியல் துறை, சென்னை, 2013)

பண்டையோர் கால்வாய் அமைப்பதற்குத் தனிக் கவனம் செலுத்தியுள்ளனர். இதுவரை அகழாய்வுகளில் நான்குவிதமான வாய்க்கால்கள் வீட்டு உபயோத்துக்கான கட்டுமானமாக அமைத்துள்ளனர் என்ற புதிய தகவல்கள் இத்தொடரின் வழியாக வெளிப்படுத்தப்பட்டுள்ளது. அவை 1. செங்கற்களை அடுக்கி கால்வாய் அமைத்து அதனை நீர்த்தொட்டிக்குக் கொண்டு வந்து இணைத்தல். 2. சுடுமண் குழாய்களை இணைத்து குடிநீர்க் குழாய்களை அமைத்தல்; இரண்டு சுடுமண் குழாய்களுக்கு இணைப்பாகக் காரைப்பூச்சு பூசுவது. 3. கற்பலகைகளைக் கொண்டு கால்வாய் அமைத்த, அதனை கற்பலகைகளைக் கொண்டே இறுக மூடி அதன் மீது காரைப்பூச்சு பூசி தூய்மையாக நீர் செல்லத்தக்க வகையில் அமைத்தல். 4. கழிவுநீர்களை வெளியேற்ற கற்பலகைகளில் மையப்பகுதியை பள்ளமாக அமைத்த நிலத்தில் பதித்து, இதனை திறந்த நிலையில் அமைத்துள்ளமை இவை அனைத்தும் அகழாய்வுகளில் கிடைத்த புதிய தகவலாகும்.

ஏரிகளில் அமைத்த வாய்க்கால் கட்டுமானமும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். அகழாய்வுகளில் பல்வேறு காலக்கட்டத்தைச் சார்ந்த மன்னர்கள் வெளியிட்ட காசுகள் மண்ணடுக்குகளில் சேகரிக்கப்பட்டுள்ளன.[11] (பா.ஜெயக்குமார், நாகப்பட்டினம் அகழாய்வு, ஆவணம் இதழ், 20.2009,தஞ்சாவூர்) அவை காலத்தைக் கணிக்கப் பெரிதும் துணை நிற்கின்றன. சங்ககால பாண்டியர்கள், ரோமானியர்கள் காசுகள் எனப் பலவும் அகழாய்வுகளில் சேகரிக்கப்பட்டுள்ளன.

சோழர்கள் காலத்துக்குப் பின்னர் விஜய நகர மன்னர்களும், நாயக்கர்களும், செஞ்சி, மதுரை நாயக்கர்களும் எவ்வாறு ஆட்சியைத் தொடர்ந்தனர் என்பதற்கு மண்ணடுக்குகளில் கிடைத்த இத்தகைய நாணயங்கள் சான்றாக அமைந்துள்ளன.

> “அயல் நாட்டோடு தொடர்புடைய மட்கலன்களாகிய போர்ஸ்லைன் செலடைன் போன்ற மட்கலன்கள் சீனதேசத்தோடு கொண்ட உறவைத் தெளிவுபடுத்துவதையும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது”[12] (ச.செல்வராஜ், சீனதேசத்து மட்கலன்கள், கல்வெட்டு காலாண்டு இதழ்,83, தமிழ்நாடு அரசுத் தொல்லியல் துறை, 2013)

தமிழகத்தில் மேற்கொண்ட ஆழ்கடல் அகழாய்வுகள் வழியாக, சங்ககால பூம்புகார் மட்டுமின்றி 18-19ம் நூற்றாண்டைச் சேர்ந்த சிதைத்த போர்க்கப்பல்கள், தொல்பொருள்களாக ஈயக்கட்டிகள், வெடிமருந்துப் பொருட்கள் அடங்கியப் பெட்டிகள் உடைந்த பீரங்கி எனப் பல தொல்பொருட்கள் சேகரிக்கப்பட்டுள்ளன. மேலும் இந்த ஈயக்கட்டிகள் மேலே அவற்றின்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

வருடம் மற்றும் யாருடையது என்பதை குறிக்கும் வாசகம் எனக் குறிப்பிடத்தகுந்த செய்திகள் காணப்படுகின்றன. சங்ககாலம் மட்டுமின்றி 19-ம் நூற்றாண்டில் பெற்ற வளர்ச்சியையும் மாற்றங்களையும் அறிய இவ்வாய்வு உதவுகின்றன.

**ஆதிச்சநல்லூர் மக்களின் பண்பாடு**

ஆதிச்ச நல்லூர் திருநெல்வேலியிலிருந்து 24 கி.மீ தூரத்தில் உள்ள சிறிய கிராமம். பதினேழாம் நூற்றாண்டு இஸ்லாமியப் படையெடுப்புகளின்போது நகைகளையும், காசுகளையும் புதைத்து வைக்கும் வழக்கம் உருவானது. பின்னர் பிரிட்டிஷ் ஆட்சி காலத்தில் புதையல் எடுப்பது ஒரு மனநோய் அளவுக்கு தமிழ்ச் சமூகத்தைப் பீடித்தது. இவ்வாறு கண்ட இடங்களில் தோண்டிக்கொண்டிருந்த காலத்தில் மேய்ச்சல் மக்கள் இந்த குன்றில் இருந்து சில தங்க நகைத்துண்டுகளை தோண்டி எடுத்தனர். பின்னர் இங்கே தேடுதல் வேட்டை ஆவேசமாக நடந்தது. இதனால் புதைபொருள் ஆய்வாளர்கள் களத்துக்கு வந்தனர். பிரிட்டிஷ் ஆய்வாளரான அலெக்சாண்டர் ரெயா இங்கே விரிவான தொல்லியழாய்வுகளை நடத்தினார். இதன்வழி மக்கள் வாழ்ந்த முறையைக் கண்டறிந்தனர்.

ஆதிச்ச நல்லூரில் கிடைத்த தொல்லியல் பொருட்களை கொண்டு அங்குள்ள மக்களின் பண்பாட்டை **கமில சுவலபில்** கீழ்வருமாறு வகைப்படுத்துகிறார்.

1. ஆதிச்ச நல்லூரில் வாழ்ந்த மக்கள் போர் வீரர்களாக இருந்தனர்.
2. குதிரையை பயன்படுத்த கற்றிருந்தனர்.
3. இரும்பை உருக்கவும் வார்க்கவும் அதை வைத்து போர்க் கருவிகள் செய்யவும் அவர்களுக்கு தெரிந்திருந்தது.
4. முருகனை தெய்வமாக வழிப்பட்டனர். ஆதிச்ச நல்லூரில் சிறிய வேல் முருகு வழிபாட்டின் எச்சம்.
5. ஆதிச்ச நல்லூர் மக்கள் இயலும், இசையும் கற்று போரின்போதும், போர்பறையை சடங்குகளிலும் இசையாக இசைக்கத் தெரிந்தவர்கள்.
6. ஆதிச்ச நல்லூர் நாகரிகம் ஒரு நெல் நாகரிகம்.[13]

(நசீர் அலி, Classical Tamil Love poetry, Partridge Publishing, p.19)

**கொடுமணல் அகழாய்வு**

ஈரோடு மாவட்டத்தில் நொய்யலாற்றின் இருகரைகளில் கொடுமணல் அமைந்துள்ளது. சங்க இலக்கிய நூல்களில் ஒன்றான பதிற்றுப்பத்தில் கொடுமணல் (கொடுமணம்) சிற்றூர் பாடப்பெற்றுள்ளது. ‘கொடுமணல் பட்ட நெடுமொழி ஒக்கலொடு’... என்று நீள்கிறது கபிலரின் பாடல். கபிலர் பாடலில் கல்மணி, அணிகலன்களைப் புகழ்வதற்கேற்ப இன்றைக்கு ஆற்றங்கரை போன்ற இடங்களில் வண்ண வண்ணக் கல்மணிகள், முதுமக்கள் தாழிகள், பிராமி எழுத்துகளுடன் கூடிய மண்பாண்ட ஓடுகள் தொல்பொருள் ஆய்வின் மூலம் கண்டறியப்பட்டுள்ளன.

ஆய்வுகளில் இரும்பை உருக்கப் பயன்படுத்திய உலையின் பகுதிகள், இரும்புச் சிட்டங்கள், இரும்பு வாள், இரும்பு அம்பு முனைகள், செப்பு உலோக அம்பு முனைகள், வில், கோடாரி என்று தொல்பொருட்கள் பலவும் கண்டறியப்பட்டன. கொடுமணல் மக்கள் இரும்பை உருக்கி ஆயுதங்கள் செய்யும் தொழில்நுட்பத்தை 2000 ஆண்டுகளுக்கு முன்பே அறிந்திருந்தனர் என்று உலகுக்கு அறிவித்தனர் ஆய்வாளர்கள்.

> “வடஇந்தியாவிற்கும் தமிழகத்திற்கும் கி.மு.நான்காம் நூற்றாண்டு முதலே வணிக தொடர்பு இருந்துள்ளதை இந்த அகழாய்வு உறுதி செய்கிறது. அதோடு இந்த பகுதியில் பல இன மக்கள் வாழ்ந்தற்கான சான்றுகள்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கிடைத்தள்ளது. தமிழ் பிராமி , பிராகிருதப் பெயர்கள் உள்ள பானைகள் அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளன. ஒரு இடத்தில் பத்மாசன நிலையில் ஒரு எலும்புக்கூடு காணப்படுகிறது. (இதே போன்ற ஒரு எலும்புக்கூடு மதுராந்தகத்திற்கு அருகிலுள்ள பெரும்பேர் என்னும் இடத்திலும் கண்டெடுக்கப்பட்டுள்ளது"[14] (http://wwwfrontline.in/stories)

**பாறை ஓவியங்கள்**

தொல்பழங்கால மக்கள் குகைகளிலும் குகைகளைப் போன்ற அமைப்பையுடைய தாழ்வான பாறைகளிலும் தங்கினர். உலகிலுள்ள பல நாடுகளில் பாறை ஓவியங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவை அக்கால மக்களின் உணர்வுகளை வெளிப்படுத்தும் வகையில் அமைந்துள்ளன.

அக்கால மக்களின் முதன்மையான தொழில் வேட்டையாடுதல்; வேட்டைக்குச் செல்லும்போது இனக்குழுவின் குலக்குறியை வரைந்து வணங்கிச் சென்றால் அவர்கள் எண்ணிய விலங்கு, வேட்டையில் கிடைக்கும் என்று நம்பினர். வேட்டைக்கு செல்லும்போது எந்த விலங்கு கிடைக்கவேண்டுமென்று விரும்புகின்றார்களோ, அந்த மிருகத்தின் உருவத்தைப் பாறையில் வரைந்துவிட்டு அந்த மிருகம் விரைவில் கிடைக்கும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் ஓவியங்கள் வரையப்பட்டன.[15] (தி.சுப்பிரமணியன், தமிழகத்தில் பெருங்கற்காலப் பண்பாடு,ப.179)

தமிழகத்தில் பல மாவட்டங்களில் பாறை ஓவியங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. மல்லபாடி, கீழ்வாலை, செத்தவரை, சிறுமலை, அழகர்மலை, ஆலும்பாடி, கொல்லூர், திருமயம் போன்ற பல இடங்களில் பாறை ஓவியங்கள் காணப்படுகின்றன.

**மல்லபாடி**

தமிழகத்தில் முதன்முதலில் 1980இல் மல்லபாடி ஓவியம் சென்னைப் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த தொல்லியல் துறையினரால் கண்டுபிடிக்கப்பட்டது. மல்லபாடியில் பல குகைகள் உள்ளன. அவற்றில் ஒன்றில் பாறையின் விதானத்தில் வெள்ளை வண்ணத்தில் ஓவியம் வரையப்பட்டுள்ளன. குதிரைமேல் அமர்ந்த நிலையில் இரண்டு வீரர்கள் நீண்ட வேல் ஒன்றை ஊன்றி சண்டை செய்யும் காட்சி காணப்படுகிறது.[16] (மேலது நூல், ப.181)

**கீழ்வாலை**

விழுப்புரத்திற்கு அருகிலுள்ள கீழ்வாலை என்ற ஊருக்கு அருகில் உள்ள ரத்தப்பாறை என்ற இடத்தில் தொல்பழங்கால ஓவியங்கள் உள்ளன. இங்குள்ள ஓவியங்கள் மூன்று பகுதிகளாக காணப்படுகின்றன. குதிரை மீது அமர்ந்த மனித உருவம், அதன் அருகில் கடிவாளத்தைப் பிடித்த நிலையில் மற்றொரு உருவம், அதன் அருகில் முதல் மனிதனுடன் கைகளை இணைத்த நிலையிலுள்ள மற்றொரு மனிதனின் உருவம் ஆகியன தீட்டப்பட்டுள்ளன. வீரர்களைப் போன்று இருவரின் கைகளிலும் குறுவாள் காணப்படுகின்றன.

இரண்டாவது ஓவியம் படகில் நான்கு மனிதர்கள் பயணம் செய்வதுபோன்று தீட்டப்பட்டுள்ளது. கையில் நீண்ட துடுப்பைப் பிடித்து நிற்கின்ற உருவம் இக்குழுவின் தலைவனைப் போன்று காட்டப்பட்டுள்ளான். இங்குள்ள ஓவியங்களில் சிவப்பு வண்ணம் காணப்பட்டபோதும் ஓவியங்களில் காணப்படும் கருவிகள், குறியீடுகள் பெருங்கற்காலத்தைச் சார்ந்தவை என்று கூறலாம்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**செத்தவரை**

கீழ்வாலையின் அருகில் உள்ள செத்தவரை ஐயனார் மலையிலும் குகையைப் போன்ற பாறையின் விதானப் பகுதியில் ஓவியங்கள் காணப்படுகின்றன. இங்குள்ள ஓவியங்களில் மானின் உருவம், மீன் வடிவம், கைவிரல் வடிவம் போன்றன குறிப்பிடத்தக்கன. மானின் உருவத்தை கோலில் தொங்கவிட்டு தீயில் சுடுவதுபோன்ற அமைப்பில் காணப்படுகின்றது. வளமையின் எச்சமாக மீன் உருவம் தெளிவாகக் காட்டப்பட்டுள்ளது. காட்டு எருமை, மீன் போன்றவை செங்காவி வண்ணத்தில் தீட்டப்பட்டுள்ளன. இவை தற்போது தமிழகத் தொல்லியல் துறையின் பாதுகாக்கப்பட்ட சின்னங்களாக ஆக்கிப் பாதுகாக்கப்படுகின்றன.[17] (மேலது நூல்,ப.182) இது போன்ற பல மாவட்டங்களில் பாறை ஓவியங்கள் தொல்தமிழர் வாழ்ந்த முறையை பறைசாற்றும் முகமாக அமைந்துள்ளது.

**இறந்தோரை அடக்கம் செய்யும் முறை**

பழங்கால மக்கள் இறந்தவரை அடக்கம் செய்யும் முறையை முதன்முதலில் புதிய கற்கால மக்களே பயன்பாட்டில் கொண்டுவந்தனர். இப்பழக்கம் புதிய கற்கால மனிதனை அடுத்து வந்த பெருங்கற்காலத்தில் நினைவுச் சின்னங்களாக உருவாக்கும் வழக்கம் பரிணாம வளர்ச்சிப் பெற்றது. பெரிய பெரிய கற்களைக் கொண்டு நினைவுச் சின்னங்களை அமைத்தான். பெருங்கற்கால நினைவுச் சின்னங்கள் உலகிலுள்ள பல நாடுகளில் காணப்படுகின்றன. ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு வகையான ஈமச்சின்னங்கள் காணப்படுகின்றன. ஆனால் பெரும்பாலான எல்லாச் சின்னங்களும் பெரிய கற்களைக் கொண்டு உருவாக்கப்பட்டதால் இதை கிரேக்க மொழியில் "மெகாலித்திக்" என்று பெயரிட்டனர். 'மெகா' என்றால் பெரிய என்றும், 'லித்திக்' என்றால் 'கல்' என்றும் பொருள் உள்ளது. தமிழகத்திலும் 'பெருங்கற்காலம்' என்று பெயரிடப்பட்டது.

ஆதிமனிதன் இறந்தோரை அடக்கம் செய்வதற்கு ஈமச்சின்னங்களாக தாழி, பேழை, தாங்கி, கல்திட்டை, வாயில், பதுக்கை போன்ற பலவகைகளை பயன்படுத்தினான்.

**பதுக்கை**

பதுக்கை என்பது தரையின் கீழே குழியை வெட்டி அதில் கற்பலகைகளைக் கொண்டு கல்லறை அமைத்து இறந்தோரை அடக்கம் செய்யும் முறையாகும்.

"கொடுமரம் தேய்த்தோர் பதுக்கை"[18] (கலி.12)

என்பன 2500 ஆண்டுகளுக்கு முற்பட்ட பெருங்கற்படையைக் குறிக்கும் சங்க இலக்கியத் தொடர்கள். பூமிக்குள் பதுங்கியிருப்பது அல்லது பதுக்கப்பட்டிருப்பது 'பதுக்கை' ஆயிற்று. இவை வீரம்காட்டி மாய்ந்த வீரர்களுக்குப் புதிதாக எடுக்கப்பட்டது என்பதை புறநானூற்றுப் பாடல் ஒன்று 'வம்பப்பதுக்கை' என்று கூறுவதன் வாயிலாக அறியலாம்.

"செந்தொடை பிழையா வன்கணாடவர்
அம்புவிட வீழ்ந்தோர் வம்பப் பதுக்கை"[19] (புறம்.3)

என்று பதுக்கை என்ற சொல்லை சங்ககால சமூகம் பயன்படுத்தியுள்ளமையை புலவர்கள் பதிவுசெய்துள்ளனர்.

**தாழிகள்**

தொல்லியல் ஆய்வில் மிகவும் சிறப்பிடம் பெறுவது 'தாழிகள்' ஆகும். தமிழ்நாட்டில் இவை பலவகைகளாகக் காணப்படுகின்றன. இவை கூர்முனைத் தாழிகள், கால்கள் உடைய தாழிகள், விலங்குருவத் தாழிகள் எனப் பலவகைப்படும். சங்க இலக்கியங்களில் இவை கலம், தாழி, கவிசெந்தாழி, ஈமத்தாழி, தாழிய பெருங்காடு, முதுமக்கள் தாழி, மன்னர்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

மறைத்த தாழி எனப் பலவாறு அழைக்கப்படுகின்றன. (அகம். 129, புறம். 228, 236, 256, 364, பதிற். 44)

தாழிப் புதையல் 2500 ஆண்டுகளுக்கு முற்பட்ட ஒரு வழக்கமாகும். கி.பி.2,3ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் அவ்வழக்கம் மறைந்துவிட்டது. தாழிகள் பல மிகப் பெரியவைகளாக இருந்த காரணத்தால்,

மா இருந்தாழி (நற்.271)
ஓங்கு நிலைத்தாழி (அகம்.275)
கண்ணகன் தாழி (புறம்.228)

எனக் குறிக்கப்பட்டுள்ளன. இவை கைகளாலும், சக்கரங்களாலும் செய்யப் பெற்றிருந்தன. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் இறந்தான். மிகப் பெரும் புகழ் கொண்ட இவனுக்கு மிகப் பெரிய தாழி அல்லவா வனைய வேண்டும். உலகையே சக்கரமாகக் கொண்டு, இமய மலையையே மண்ணாக வைத்துப் பெரிய தாழியை வனைய வேண்டும். இது உன்னால் முடியுமா? என்று வேட்கோவனைப் பார்த்து வினவுகிறார் ஐயூர் முடவனார் என்னும் புலவர்,

"அன்னோன் கவிக்கும் கண்ணகன் தாழி
வனைதல் வேட்டனை யாயின் எனைய தூஉம்
இருநிலம் திகிரியாப் பெருமலை
மன்னா வனைதல் ஒல்லுமோ நினைக்கே"[20] (புறம்.228)

என்கிறது. கணவன் மனைவி இருவரையும் ஒன்றாகத் தாழியில் அடக்கம் செய்ய வேண்டும். அதனால்,

"வியன்மலர் அகன்பொழில் ஈமத்தாழி
அகலிதாக வனைமோ"[21] (புறம்.256) என்றும் புறநானூற்று பாடல் குறிப்பிடுகிறது.

தாழி வனைவோர் 'கலம் செய்கோ' எனப்பட்டனர். சங்ககால சோழ மன்னர்கள் தாழிப் புதையல் வழக்கத்தை ஏற்படுத்தினர் என்று மூவருலாக் கூறுகிறது.

"பதுமக் கடவுள் படைப்படையக் காத்த
முதுமக்கள் சாடி முதலோன்"[22] (குலோத். உலா-12)

என்று பண்டைச் சோழன் ஒருவன் புகழப்படுகிறான். என்று இறந்தவரை பலமுறைகளில் அடக்கம் செய்தனர் என்பதை சங்க இலக்கியம் குறிப்பிடுவதை மெய்பிக்கும் வகையில் இன்றளவில் தொல்லியல் ஆய்வாளர்கள் தங்கள் நுட்பமான ஆய்வின் வாயிலாகப் பண்டையோர் வாழ்ந்த முறையை சான்றுடன் எடுத்துரைப்பதை உணர முடிகிறது. (https://vairamani.Lakshmi.blogspot.com)

**நிறைவுரை**

பண்டையோர் வாழ்ந்த முறையை இந்நிலம் பொதிந்து வைத்துப் பாதுகாத்திருக்கின்றன என்பதை தொல்லியல் ஆய்வுகள் வாயிலாக அறியமுடிகிறது. 'மண்ணுக்கும் கீழே மற்றொன்றும் இருக்கிறது' என்பதற்கேற்ப ஆதிமனிதன் பயன்படுத்திய அனைத்துப் பொருட்களையும் காணமுடிகிறது. மனிதன் இடத்திற்கு இடம் மாறுபட்ட வாழ்க்கை முறையையும், அவர்களின் அறிவிற்கு ஏற்ப தொழிலையும் ஏற்படுத்திக் கொண்டு வாழ்ந்திருக்கின்றனர். 'ஏடறிந்த வரலாறு அனைத்தும் வர்க்கப் போராட்டங்களின் வரலாறே' ஆகும். ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த ஒரு சமூகத்தை அச்சமூகத்தில் புழங்கிய பொருட்களைக் கொண்டு ஆராய்ந்து, அக்காலக்கட்டத்தில் இருந்த பொருள்களுக்கேற்ப

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

அறிவியல் நுண்ணோக்குடன் கருவிகளைத் தயாரித்து செம்மையுற வாழ்ந்திருந்தனர் என்று தொல்லியல் ஆய்வாளர்களின் ஆய்வுகள் வாயிலாக பழங்கால மக்களின் பண்பாட்டு முறையை அறிய முடிகிறது.

**நூற்பட்டியல்**

1. தி.சுப்பிரமணியன் — தமிழகத்தில் பெருங்கற்காலப் பண்பாடு
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
அம்பத்தூர், சென்னை – 600 098
மூன்றாம் பதிப்பு,டிசம்பர்-2018.
2. கே.வி.இராமன் — தொல்லியல் ஆய்வுகள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
அம்பத்தூர், சென்னை – 600 098
பதிப்பாண்டு – 2014.
3. சி.இளங்கோ — தமிழகத் தொல்லியல் ஆய்வுகள் கீழடி வரை
அலைகள் வெளியீட்டகம்
இராமநாதபுரம், சென்னை – 600 089.
4. இராசு.பவுன்துரை — தமிழக பாறை ஓவியங்கள்
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை
5. ஆறுமுக சீதாராமன் — அளகுடி தமிழகத் தொல்லியல் சான்றுகள்
(தொகுதி – 4)
தனலெட்சுமி பதிப்பகம், தஞ்சாவூர் – 2008.
6. கா.ராஜன் — தொல்லியல் நோக்கில் சங்ககாலம்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை – 2010.
7. துளசிராமன் — கொடுமணல் அகழாய்வு
சிறு வெளியீடு, தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் – 1988.
8. அ.ஹ.முகைதீன் பாதுஷா — தொல்லியல் விதிகளும் வகைகளும்
திருநெல்வேலி சுல்தான்ஸ் பப்ளிகேஷன்ஸ்,
2009.
9. சி.இளங்கோ — தமிழ்ச் சமூகவியல் ஆய்வுகள்
அலைகள் வெளியீட்டகம்
இராமநாதபுரம்,
சென்னை – 600 089.
10. கீழடி அகழாய்வு — தமிழ் விக்கிபீடியா, 2014.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தரணியெல்லாம் தமிழர் வாழ்ந்த தடம்
# The Traces of Tamilar on the Globe

**கோ. சுர்ஜித் மற்றும் மு. அசோக்குமார்**, 822, பஜனை கோயில் தெரு, தேர்வழி காலனி, கும்முடிப்பூண்டி, திருவள்ளுர் மாவட்டம் -601201

## Abstract

*The article evinces* the traces of Tamilar on the Globe**.** *It caters the facts of the Tamil People's age old tradition, lifestyle, agriculture and other walks of life. The idea of the study bring forth the study needed to reinvestigate the fossils, and relics to find out the classic antiquity of the Tamil people. It putforths many sites such as Aathichanallur, Kodumanal and Ilankai as valid examples. Hence, the study gives details from the consistent sources.*

**Keywords:** Traces, Tamilar, Globe

**முன்னுரை**

"எங்கள் வாழ்வும் எங்கள் வளமும் மங்காத தமிழென்று சங்கே நீ முழங்கு" என்னும் வாய்மொழிக்கினங்க என்றும், மங்கிப்போகாத தமிழரின் பெருமைகளை, எப்போதும் மானுடவாழ்க்கையின் சங்கானது முழங்கிக்கொண்டே இருக்கிறது. இத்தரணியில் எவ்விடம் திரும்பினாலும் தமிழர்களின் பெருமையும், பிற தேசங்களில் வணிகம் செய்த்தற்கான தடையங்களும், வாழ்ந்ததர்கான ஆதாரங்களும் ஏராளமாக உள்ளன. அப்படி ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு, தமிழன் கடல் கடந்து வணிகம் செய்வதற்காகவும், ஆட்சிசெய்வதற்காகவும் சென்றுவந்த பகுதிகளில் அவர்கள் விட்டுச்சென்ற எச்சங்களின் மூலம் அவர்களுடைய தனித்துவத்தையும், பெருமையையும் அறிந்துக்கொள்ள முடிகின்றன. இப்படி தமிழர்கள் கடல்கடந்து சென்றுவந்த நாடுகளைப்பற்றியும், அவர்கள் அந்நாடுகளில் ஆட்சிசெய்த்தற்கான ஆதரங்களைப் பற்றியும் உணர்த்துவதே இக்கட்டுரையின் நோக்கம்.

**தமிழர் வணிகம்**

செல்வச்செழிப்புடைய ஆதித் தமிழர், மாபெரும் கடலைக்கடந்துச் செல்லும் திறமைக்கொண்டவர்களாக இருந்தனர். பெரும்பாலும் தமிழர்கள் வணிகத்தின் காரணமாகவே கடல்கடந்து வேறு தேசங்களுக்கு சென்றனர் என பல குறிப்புகள் கூறுகின்றன. அவர்கள் நாவாய் என்று அழைக்கப்படும் மிகப்பெரிய கப்பலில், கடல்கடந்து பிற தேசங்கள் சென்றதாக பல தகவல்கள் உள்ளன. தமிழ்ச்சொல்லான நாவாய் என்ற சொல் கிரேக்கத்தில் நாஸ் என திரிந்தது. லத்தீனில் நேவிஸ் என்று உருமாறியது. இன்று இது ஆங்கிலத்தில் நேவி என அழைக்கப்படுகிறது. "திரைகடல் ஓடியும் திரவியம் தேடு" என்னும் ஔவையின் சொல்லுக்கினங்க சங்க காலத்திலேயே தமிழர்கள் வணிகம் செய்வதற்காக ஆமைகளின் உதவியோடு கடல் கடந்துச்சேன்று பல தேசங்களில் தங்களுடைய ஆட்சிமையை நிலைநிறுத்தியுள்ளனர் என்பது புலப்படுகிறது.

"நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி
வளிதொழில் ஆண்ட உரவோன் மருக

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

களி இயல் யானைக் கரிகாலன் வளவ
சென்று அமர்க் கடந்த நின் ஆற்றல் தோன்ற"

இவ்வரிகள் புறநானூற்றில் 66 வது பாடலில், வெண்ணிப்பறந்தலைப் போரில் வெற்றி பெற்ற முதல் கரிகால பெருவளவனை வெண்ணிக்குயத்தியர் என்னும் பெண்பாற்புலவர் பாடிய வரிகள் ஆகும். கி.பி 3 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இப்பாடலின் முதல் வரியினில் நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி கடலில் கப்பலைச் செலுத்த காற்றினை திறம்பட கையாண்ட மன்னர்களின் வழி வந்தவனே, என்று கரிகால வளவனை புகழ்ந்து பாடுகிறார். இப்பாடலின் வாயிலாக தமிழர்கள் கி.பி.3 ஆம் நூற்றாண்டுக்கு முன்னர் இருந்தே வணிகத்திற்காக பல நாடுகளுக்குச் சென்றுவந்துள்ளனர் என தெரியவருகிறது.

2000 ஆண்டுகளுக்கு முன் சங்க காலத்தில் கிழக்குக்கரையில் துறைமுகங்கள் அமைத்து ரோமாபுரி, சீனா மற்றும் பல கிழக்காசிய நாடுகளிலும் வணிகம் செய்திருக்கிறான் தமிழன். காஞ்சி, மாமல்லபுரம், பூம்புகார், நாகபட்டினம் தஞ்சாவூர், மதுரை, கரூர், தொண்டி என நம் எல்லா ஊர்களும் சங்ககாலத்தில் செல்வ செழிப்போடு இருந்திருக்கின்றன.

இதேப்போல் தமிழர்கள் கடல் கடந்து வெற்றிவாகை சூடி அங்கு ஆட்சி செய்ததை மகாகவி பாரதியார் இவ்வண்ணம் கூறுகிறார்,

சிங்களம் புட்பகம் சாவகம் - மாகிய
தீவு பலவனுஞ் சென்றேறி - அங்கு
தங்கள் புலிக்கொடி மீன்கொடியும் நின்றும்
சால்புக் கண்டவர் தாய்நாடு

அதுமட்டமின்றி தமிழகத்தின் வடகிழக்குப் பகுதிகளில் தமிழர்கள் வணிகம் செய்ததற்கான பல சான்றுகள் உள்ளன. தமிழ்நாட்டிலிருந்து வங்கதேசம், பர்மா, மலேசியா, கம்போடியா, லவோசு, வியட்நாம் ஆகிய நாடுகளில் தமிழர்கள் சங்ககாலத்திலேயே வணிகம் செய்துள்ளனர். இதன்காரணமாகவே தமிழர்களுக்கும் அந்நாட்டு மக்களுக்கும் இடையிலான மொழி, மரபு, பண்பாடு, உளவு போன்றவை நெரும்பாலும் ஒன்று போலவே உள்ளது.

**தாய்லாந்து**

தொல்தமிழர் தென்கிழக்கு ஆசிய நாடுகளிலும் பரவினார்கள் என்பதற்கான பல சான்றுகள் உள்ளன. 2500 ஆண்டுகளுக்கு முன்பாகவே தாய்லாந்தில் தமிழர்கள் தடம்பதித்ததற்கான சுவடுகள் ஏறாளம் உள்ளன. தாய்லாந்திற்கு அண்மைக்காலத்தில் தான், அங்குள்ள "தாய்" என்ற இன மக்களின் பெயரால் அது தாய்லாந்து என பெயர் பெற்றது குறிப்பிடத்தக்கதாகும்.

**1) வாட்நா மியாங் கோயில் கல்வெட்டு**

தாய்லாந்தில் உள்ள நக்கோன்ஸி தம்மாரத் என்ற நகர அருங்காட்சியகத்தில் "தகு வாபா" என்னுமிடத்தில், "வாட்நா மியாங்" என்ற கோயிலில் கி.பி. 8-9 ஆம் நூற்றாண்டில் பல்லவர்களால் வெட்டப்பட்ட கல்வெட்டு ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டில் தமிழகத்தைச்சேர்ந்த வணிகர்கள் திருமாலுக்கு குளம் வெட்டி கோவில் கட்டிய செய்திகள் சொல்லப்படுகிறது. இவ்வணிகக்குழுவினர் மணிக்கிராமத்தைச் சேர்தவர்கள் எனவும், அவர்களுக்கு "சேனாமுகம்" என்ற பாதுகாப்புத் தமிழர்படை துணையாக இருந்தது எனவும், மணிக்கிராமத்தார் அந்தக்குளத்துக்கு "அவனி நாரணன்" என பெயர் வைத்தனர் எனவும் அக்கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்தக்கல்வெட்டைக் வரலாற்றறிஞர் கே.ஏ.நீலகண்ட சாஸ்திரியார் ஆய்வு செய்து, இது மூன்றாம் நந்திவர்ம பல்லவ மன்னனின் காலத்துக்குறியதாக இருக்கலாம் என தெரிவித்தார். அதுமட்டுமின்றி நந்திவர்மனின் பட்டப்பெயர்களில் "அவனி நாரணன்" என்பதும் ஒன்றாகும். இதன் காரணமாகவே அங்கு

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

வெட்டப்பட்ட குளத்திற்கு அவனி நாரணன் என பெயர் சூட்டியிருக்கலாம் என்றும் கூறியுள்ளார்.

**1) பூ கே தாங் பானை ஓடுகள் :**

2006 ஆம் ஆண்டு தாய்லாந்தில், பூ கே தாங் என்னுமிடத்தில் நடந்த அகழ்வாரய்ச்சியின் போது கி.பி 2-ம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழி எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் கண்டுபிடிக்கப்பட்டன. அதில் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துக்கள், தமிழி எழுத்துக்கள் தான் என்பதைத் தமிழ்நாடு தொல்லியியல் அறிஞர் ஐராவதம் மகாதேவனும், வாசிங்டன் பல்கலைக்கழப் பேராசிரியர் ரிச்சர்ட் சாலமனும் உறுதி செய்தனர். இங்கு கிடைக்கப்பட்ட பானை ஓடுகளில் “துறவு” என பொறிக்கப்பட்டிருந்தது.

**2) தமிழி பொறிக்கப்பட்ட தொடுகல்**

தாய்லாந்தில் “க்லோங் தோமிடேரியன்” என்னுமிடத்தில் கி.பி.3-4 ஆம் நூற்றாண்டைச்சேர்ந்த தமிழி எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட தொடுகல் ஒன்று கண்டறியப்பட்டுள்ளது. இத்தொடுகல்ளில் “பெரும்பட்டன்” என பொறிக்கப்பட்டிருந்தது. “பெரும்பட்டன்” என்பது கைவினை கலைஞர்கள் (அ) கொல்லர்களை குறிப்பதாகும். கொல்லர்கள் இத்தொடுகல்லினை தங்கள் தொழிலிற்காக பயன்படுத்துவர் என்பது குறிப்பிடத்தக்கது. இத்தொடுகல்லின் மூலம் சங்ககாலத்திலேயே தமிழகத்தைச்சேர்ந்த பல பொற்கொல்லர்கள் மற்றும் கைவினை கலைஞர்கள் தாய்லாந்திற்கு குடிப்பெயர்துள்ளது தெரியவருகிறது. அதுமட்டுமின்றி இவ்விடத்திலேயே தமிழகத்தைச்சேர்ந்த சதுரவடிவ செப்பு நாணயம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இந்நாணயத்தின் ஒருபுறம் புலி சின்னமும் மற்றோரு புறம் குதிரை மற்றும் யானையுடன் கூடிய தேர்ச் சின்னமும் பொறிக்கப்பட்டுள்ளது. இந்த நாணயம் கி.பி. 1 முதல் 3-ம் நூற்றாண்டைச்சேர்ந்த சங்க கால சோழர்களால் பயன்படுத்தப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

இதே அகழாய்வில் மற்றொரு கி.பி 6-ம் நூற்றாண்டைச்சேந்த வட்டவடிவிலான செப்பு நாணயமும் கண்டுபிடிக்கபட்டுள்ளது. இந்நாணயத்தின் ஒருபுறம் எருது நின்ற நிலையிலும் மறுபுறம் பாய்மரக்கப்பல் துடுப்புடன் கடலில் பாய்வது போலவும் பொறிக்கப்பட்டுள்ளது. தமிழத்தில் பல்லவர்கால நாணயங்களில் எருது சின்னம் இருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இவற்றின் மூலம் இந்த நாணயங்கள் சங்ககாலத்திருந்தே தாய்லாந்தில் வணிகத்தின் மூலம் புழக்கத்திலிருப்பது தெரியவருகிறது.

இவைகள் மட்மின்றி தமிழர்களால் பொறிக்கப்பட்ட நிறைய சமசுகிருத கல்வெட்டுகளும் தாய்லாந்தில் காணப்படுகின்றன.

**எகிப்த்**

எகிப்தியர்களின் நாகரீகம் 5000 ஆண்டுகள் பழமையானது. எகிப்து ஆராய்ச்சியாளர்களில் பிலிண்டஸ் பெட்ரி என்ற ஆய்வாளர் எகிப்தியர்களின் பூர்வீகம் பற்றி ஆய்வு செய்யும் போது சேகரித்த மண்டை ஓடுகள் மூலமாக, எகிப்தில் முதன்முதலாக வந்த தொன்மை மக்கள் இந்தியாவின் தென்பகுதியை சார்ந்தவர்களாகவே இருக்க வேண்டும் என்றார். எகிப்து, செங்கடலில் உள்ள அல்கோசிகாதீம், பெர்னிக்கோ என்ற 2 துறைமுகங்களில் பானை ஓடுகள் கண்டெடுக்கப்பட்டன. இப்பானை ஓடுகளில் கோரா, பூமான் என்ற தமிழ் மன்னர்களின் பெயர்கள் தமிழி எழுத்துக்களினால் பொறிக்கப்பட்டிருந்தது.

2006-ஆம் ஆண்டு ஓமன் நாட்டின் கொர்ரோரி என்ற பகுதியில் நிகழ்ந்த அகழாய்வில் சுமார் 2000 ஆண்டுகள் பழமையான பானை ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. அப்பானையின்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

மேல் "நந்தை கீரன்" என்று தமிழி எழுத்துக்களால் பொறிக்கப்பட்டிருந்தது குறிப்பிடத்தக்கதாகும்.

எகிப்தின் "பாசிர் அல் கோதிம்" என்ற இடத்தில் நிகழ்ந்த அகழாய்வுகளில் தமிழி எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் கிடைத்துள்ளன. அதுமட்டுமின்றி தமிழர்களின் மரபு சார்ந்த வேட்டையாடும் கருவியான வளரியை பயன்படுத்தும் வழக்கம் எகிப்து பழங்குடியினரிடம் இருந்துவந்துள்ளது.

**சீனா தமிழ் கல்வெட்டு**

சீன நாட்டில் உள்ள காண்டன் நகரில் சூவன்செள் என்னும் துறைமுக நகர் உள்ளது. இந்த காண்டன் நகரில் கி.பி 1260-ம் ஆண்டில் கட்டப்பட்ட திருக்காதலீஸ்வரர் என்னும் சிவன் கோயிலில் தமிழில் எழுதப்பட்ட கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. தமிழ்நாட்டில் பழமையான கோவில்களில் கல்வெட்டுகள், ஏறாளம் இருப்பது அனைவருக்கும் தெரிந்த ஒன்றே. ஆனால், சீனாவில் உள்ள இச்சிவன் கோயிலில் இருக்கும் இக்கல்வெட்டு மிகவும் சிறப்புடையதாக உள்ளது. கி.பி 1260-ம் நூற்றாண்டில் சீனாவை ஆட்சிசெய்து வந்த குப்லாய்காண் என்னும் அரசனால் இக்கோவில் கட்டப்பட்டது என இக்கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டின் இறுதியில் சீன மொழியில் தமிழ் என பொறிக்கப்பட்டிருக்கிறது.

**இந்தோனேசியாவில் கிடைத்த தமிழ் கல்வெட்டுகள் (சுமத்ரா)**

ஜகர்தா அருங்காட்சியகத்தில் இரண்டு தமிழ் கல்வெட்டுகள் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது. அதில் லோபோ தொய்வா என்னுமிடத்திலிருந்து, மிகவும் சிதலமடைந்த நிலையில் தமிழ் எழுத்துக்களுடன் இருக்கும் தமிழ் கல்வெட்டு கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டினை ஆராய்ந்த பேராசிரியர் சாஸ்திரி அவர்கள் இக்கல்வெட்டு கி.பி. 1075-1125 ஆம் நூற்றாண்டைச்சேர்ந்த முதலாம் குலோத்துங்கன் காலத்துக்குறியது எனவும், வணிக்கத்திற்காக சோழர்கள் இங்கு குடிப்பெயர்ந்திருக்கலாம் எனவும் கூறியுள்ளார்.

மற்றொரு கல்வெட்டில் மத்தியில் ஒரு சிற்பமும், அதை சுற்றி எழுத்துக்களும் பொறிக்கப்பட்டுள்ளன. கி.பி. 1258-1275 ஆம் நூற்றாண்டைச்சேர்ந்த இக்கல்வெட்டின், மேல் பகுதியில் சிறு விநாயகர் உருவமும், தமிழ் மற்றும் ஜாவா மொழியில் எழுத்துக்களும் உள்ளது. இதில் சேனாதிபதி திபான்கரன் என்ற பெயர் உள்ளது. இதன் மூலம் தமிழர்கள் வணிகத்திற்காக இங்கு குடிபெயர்ந்து கோயில் கட்டி வாழ்ந்திருக்கலாம் என அறிந்துக்கொள்ள முடிகிறது.

இதுமட்டுமின்றி சுமத்ரா இந்தோனேசியாவிலுள்ள ஜாவா (சாவகம்) தீவில் மிகஉயர்ந்த மலைகளில், இரண்டு மலைகள் மட்டும் தமிழ்ப்பெயரினைக் கொண்டுள்ளன. ஒன்று பாண்டியமலை, மற்றொன்று செமேரு மலை என்பதே ஆகும், தற்போதும் இப்பெயர்கள் வழக்கில் உள்ளன. இந்த சாவா தீவைப்பற்றி ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றான மணிமேகலையில் குறிப்பிட்டுளளனர். தமிழகத்திற்கும் சாவா தீவிற்கும் இடையே நீர் வழிபோக்குவரத்துக்கள் இருந்ததையும் மணிமேகலை குறிப்பிட்டுள்ளனர்.

**நியூசிலாந்தில் தமிழ் கப்பல் மணி**

நியூசிலாந்து தலைநகர் வெலிங்டன் அருங்காட்சியகத்தில் காட்சிக்காக வைக்கப்பட்டுள்ளது ஒரு அதிசய மணி. தமிழ் எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட இந்த மணியானது தமிழர் கடல் ஆதிக்கத்தை நிருபிக்கின்றது. "முகைதீன் வக்குசுடைய கப்பல் உடைய மணி" இது தான் இந்த மணியில் பொறிக்கப்பட்டிருக்கும் வாசகம் ஆகும். 15 ஆம் நூற்றாண்டைச்சேர்ந்த இம்மணியை 1836 ஆம் ஆண்டு வில்லியம் கோல்ன்சோ என்பவர் கண்டுபிடித்தார். இம்மணியின் மூலம் தமிழர்களின் கடல்கடந்துச் செல்லும் ஆற்றலை

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

அறிந்துக்கொள்ள முடிகிறது. நியூசிலாந்தை 1769 ஆம் ஆண்டு இங்கிலாந்தைச் சேர்ந்த சேம்ஸ் குக் என்பவர் கண்டுபிடித்தார் என்பது உலக வழக்கமாக உள்ளது. அதற்கு முன்னதாகவே தமிழர்கள் நியூசிலாந்தைக் கண்டுபிடித்துவிட்டனர் என்பது நாம் அனைவரும் அறிய வேண்டிய உண்மையாகும்.

**வியட்நாம் கல்வெட்டு**

வியட்நாமில் வியட் மே-சன் என்னுமிடத்தில் ஒரு பாறை உள்ளது. இப்பாறையின் இரண்டு பக்கத்திலும் தமிழி எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் திருமாறன் என்ற பாண்டிய மன்னன் வியட்நாம் நாட்டை ஆண்டான் என்பதை இக்கல்வெட்டின் மூலம் அறிய முடிகிறது. இக்கல்வெட்டின் ஆட்சி ஆண்டு முதலிய விவரங்கள் கல்வெட்டின் பெரும்பகுதி அழிந்து விட்டதின் காரணமாக கிடைக்கவில்லை.

இருப்பினும், எழுத்து அமைப்பின் அடிப்படையில் இக்கல்வெட்டு கி.பி. 2 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக தொல்லியியல் அறிஞர்கள் கருதுகின்றனர். இந்தக்கல்வெட்டில் தனக்குச்சொந்தமான வெள்ளி, தங்கம், தானியக்குவியல் மற்றுமுள்ள அசையும், அசையா சொத்துக்கள் அனைத்தையும் தமக்கு நெருங்கிய மக்களுக்கு பொதுவுடமையாக்குவதாகவும், எதிர்கால மன்னர்கள் இதை மதித்து நடக்க வேண்டும் என்று ஆணை பிறப்பிப்பதாகவும் கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது. மேலும் "இது வீரனுக்கு தெரியட்டும்" என்று கல்வெட்டு வரிகள் பாதியில் முடிகிறது. இந்த திருமாறனைக் குறித்து மிகவும் குறைவான தகவலே கிடைத்துள்ளது. ஆனால் வியட்நாம், கம்போடியா, லவோசு ஆகிய நாடுகளில் 1300 ஆண்டுகளுக்கு நிலவிய தமிழ் சாம்ராஜ்யத்தின் முதல் மன்னன் இவன் என்பதை சீனர்களின் வரலாறும் உறுதி செய்கிறது. தொல்காப்பியத்தை அரங்கேற்றிய இடைச்சங்க கால மன்னன் நிலந்தரு திருவில் பாண்டிய என்று பனம்பாரனாரின் பாயிரம் கூறுகிறது. பல நாடுகளை வென்று தந்ததால் "நிலந்தரு" "திரு பாண்டியன்" ஸ்ரீமாறன் என்று பெயர் ஏற்பட்டிருக்கலாம் எனவும் ஒரு கூற்றுள்ளது.

**முடிவுரை**

"கல்தோன்றி மண்தோன்றா காலத்தே
முன்தோன்றி மூத்தகுடி தமிழ்குடி"

என்னும் பெருமைக்குச் சொந்தக்காரர்கள் நாம், மேல் சொன்ன கூற்றுகள் மட்டுமின்றி இன்னும் எத்தனை எத்தனையோ தமிழ் கல்வெட்டுகளும், தமிழர் நாகரீகமும் பூமிக்குள் புதையுண்டு கிடக்கின்றன. இவைகளையெல்லாம் வெளிக்கொண்டு வந்து உலகிற்கு தெறியப்படுத்துவதும், இதுவரையில் கண்டுபிடிக்கப்பட்டதை எல்லாம் பாதுகாப்பதும் நம்முடைய கடமையாகும். அதுமட்டுமின்றி இந்தியாவில் மட்டும் சுமார் 70,000 கல்வெட்டுகள் மேல் இருக்கின்றன. அதில் சுமார் 45,000 கல்வெட்டுகள் தமிழில் உள்ளது குறிப்பிடத்தக்கது. தமிழர்களின் பெருமை தமிழகம், இந்தியா மட்டுமில்லாது உலகமெங்கும் பரவிக்கிடக்கின்றன.

தமிழராய் இருப்பதில் பெருமைக்கொள்வோம் !!!
தமிழராய் வாழ்ந்திட முயற்சி கொள்வோம் !!!

**பார்வை நூல்கள்**

1. இராமகிருட்டிணன்.ஆ. *தமிழக வரலாறும் பண்பாடும்*, சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை-625 001.
2. காசிநாதன். நடன. *தமிழர் தெய்வங்கள்*, தென்றல் நிலையம், சிதம்பரம் -608 001.

**E-ISSN: 2581-7140**

**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

3. சுப்பிரதணியன் ச.வே. *தொல்காப்பியம்* (தெளிவுரை), மணிவாசகர் பதிப்பகம், சென்னை -600 018.
4. தட்சிணாமூர்த்தி.அ. *தமிழர் நாகரிகமும் பண்பாடும்*, யாழ் வெளியீடு, சென்னை -600 040.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# பெருங்கல் புதைகுழி அகழாய்வுகள்
# Megalithic Archaeological Excavations

**முனைவர் நா.சுலோசனா,** உதவிப் பேராசிரியர், தமிழ்மொழி (ம) மொழியியல் புலம்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை - 113.

## Abstract

*Tamil culture is an ancient culture. Now the people are living in the southern part of Indian sub-continent. The place has been surveyed in relation to archaeological basis for many times by many individual archaeologists, geologists and archaeologicasl departments of many governments. India as named after the independence from the Britishers had done in continuation of the archaeological sites and survey. They have found the cultures of the Tamils are the very oldest civilization in the Indian history. The excavations at Aathichanallor, Kodumanal, Keeladi, Ravimangalam and other places are very notable and had evidences of the Megalithic age. Hence, this paper tries to bring out the informations related to the domain topic.*

**Keywords:** Megalithic, Archaeological, Excavations, Tamil Civilizations

தமிழ்ச் சமூகத்தின், ஒரு வரலாற்றின் புகழையும், மேன்மையான நாகரிகத்தையும், தொன்மையையும் பண்பாட்டையும் வெளிக்கொணர உதவும் கல்வியே தொல்லியல் ஆகும். தொன்மையின் ஆழத்தையும் வளர்ச்சியையும் பழங்கால மக்கள் விட்டுச்சென்ற தடயங்களான கருவிகள் அன்றாடப் புழங்குபொருள்கள், கட்டிடங்கள், கோயில்கள், அரண்மனைகள், கோட்டை, கொத்தளங்கள், வாணிக ஏற்றுமதிக்கான துறைமுகங்கள், நாணயங்கள், சிற்பங்கள், ஓவியங்கள், செப்பேடுகள், ஓலைச்சுவடிகள், மண்டையோடுகள், முதுமக்கள் தாழிகள், புதைபொருள்கள் அகழாய்வுகள் இவையாவும் தமிழரின் தொன்மையைப் பறைசாற்றும் தொல்லியல் சான்றுகளாகின்றன.

சங்க இலக்கியப் பாடல்கள் எழுந்த காலத்தைத்தான் நாம் தமிழர்களின் தொன்மைக்கும் பண்பாட்டிற்கும் சான்றாகக் கூறுகிறோம். அதையும் கடந்து தமிழரின் தொன்மை பல நூற்றாண்டுகளுக்கு முற்பட்டது என்றும் சங்கப் பாடல்களுக்கு வரலாற்றுச் சான்றுகளாகவும் தொல்லியல் அகழாய்வுகளில் கிடைத்த பொருள்கள் உறுதிபடுத்துகின்றன. கீழடியில் செய்யப்பட்ட மிகக்குறைந்த அகழாய்வுகளே தமிழரின் தொன்மையை முந்தைய நூற்றாண்டுகளுக்குக் கொண்டு செல்லும்போது இன்னும் அங்கேயுள்ள தொல்லியல் களங்கள் முழுவதையும் அகழாய்வுகள் செய்தால் இன்னும் பல வரலாற்றுச் சான்றுகள் தமிழரின் பண்பாட்டுக்கும் தொன்மைக்கும் வலுசேர்ப்பதாய் அமையும். அந்த வகையில் ஆதிச்சநல்லூரில் நடைபெற்ற பெருங்கற் புதைகுழிகள் குறித்த அகழாய்வுகளை ஆய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

**தொல்லியல்**

"'Archaeology' என்ற ஆங்கிலச் சொல்லுக்குத் தொல்பொருளியல் அதாவது பழமையான பொருள்கள் எனப் பொருள்படும். Archaios என்ற கிரேக்கச் சொல்லுக்கு பழமை

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

ஆரம்பம் என்று பொருள். 'Logos' என்ற சொல்லுக்கு இயல் அல்லது அறிவியல் பூர்வமாக என்று பொருள். இவ்விரண்டு சொற்களையும் இணைத்து 'Archaeology| என்ற சொல் உருவாக்கம் பெற்றது.'' (தொல்லியல், முனைவர் தி.மனோன்மணி, முனைவர் தி.செல்வநாயகி, ப.2) அதாவது பழமையானவற்றை அறிவியல் கண்ணோட்டத்துடன் ஆராய்ந்து வெளிப்படுத்தும் கல்வி 'ஆர்க்கியாலஜி' என்று பொருள்படுகிறது.

வரலாற்றுச் சான்றுகளுள் முதன்மையானதும் முக்கியத்துவம் வாய்ந்ததுமாக இருப்பது தொல்லியல் சான்றுகளே ஆகும். பண்டைய சமுதாயத்தினை அறிந்துகொள்ள தொல்லியல் பெரிதும் துணைபுரிகிறது. இதன்வழி ஆட்சிசெய்த மன்னர்கள், நாட்டின் வளம், வணிகம், சமூகப் பொருளாதார மேம்பாடு, சமயவரலாறு என அனைத்தையும் முழுமையாக அறிந்து கொளதற்குத் தொல்லியல் பேருதவி புரிகிறது. இதற்குத் தொல்லியலாளர்களின் அர்ப்பணிப்பு உணர்வும் கடமையுமே முதன்மையாகின்றன.

அகழாய்வுகள், கல்வெட்டுகள், பாறை ஓவியங்கள், செப்பேடுகள், ஓலைச்சுவடிகள் போன்றனவும் தமிழரின் தொன்மைக்கு வரலாற்றுச் சான்றுகளாகின்றன. இச்சான்றுகளுக்குத் தொல்லியலாளர்களின் பங்களிப்பு அளப்பரியது.

**தொல்லியல் எச்சங்கள்**

''ஒவ்வொரு குக்கிராமத்திலும் பழங்குடிகள் வாழும் மலைப்பகுதிகளிலும் இந்தியாவின் வரலாறு நுட்பமான முறையில் எழுதப்பட்டுள்ளது. எழுத்தாக அல்லாமல் தொல்லியல் எச்சங்களாக வரலாறு இருக்கிறது. தொல்லியல் எச்சங்களை வெளிக்கொணர சிறப்புத் திறன்கள் தேவை. மொழியியல், கட்டிடக்கலை, மானுடவியல், சமூகவியல், திறன்களுடன் உரிய வரலாற்றுப் பார்வையுடன் அணுகினால் அவற்றை வெளிக்கொணர முடியும்'' (tamil.thehindu.com) என்பது வரலாற்றாசிரியர் டி.டி.கோசாம்பி அவர்களின் நம்பிக்கைக் கூற்றாகும். நவீன இந்திய வரலாறு எழுதுதலில் அறிவியல் பார்வையைத் தொடங்கி வைத்தவர் அவரே. அவரைத் தொடர்ந்து இர்பான் ஹபீப், ரொமிலா தாப்பர் உள்ளிட்டோர் வரலாற்று ஆய்வுகளை மேற்கொண்டு வருகின்றனர். ஆனால் சுமார் 40 ஆயிரம் ஆண்டுகால தொல்லியல் எச்சங்கள் தமிழகத்தில் புதைக்கப்பட்டிருக்கின்றன. இவற்றை மீட்டெடுத்து ஆய்வுக்கு உட்படுத்தி தமிழரின் தொன்மையைப் பறைசாற்றுவது என்பது மாபெரும் சவாலாக இருக்கிறது.

பழைய கற்கால, பெருங்கற்கால, புதியகற்கால, நுண்கருவிகள் கால, இரும்புக்கால அகழாய்வுகள், கடல்சார் அகழாய்வுகள், புதிய தொழில்நுட்பங்கள், கல்வெட்டியல், ஓலைச்சுவடிகள் ஆவணப்படுத்துதல் எனத் தமிழகத்தின் தொல்லியல் ஆய்வுகள் விரிந்துகொண்டே செல்கின்றன. அகழாய்வுகளில் தொடர்பான பல துறைகளை ஒன்றிணைத்துச் செயல்படுத்துவதே விரிவான ஆய்வுகளுக்கு வழிவகுக்கும்.

**பெருங்கள் புதைகுழிகள்**

இறந்தவர்களை அகன்ற குழிகளிலோ வேறுமுறையிலோ புதைக்கும் வழக்கம் வரலாற்றுக் காலம் முன்பே இருந்தது. புதிய் கற்காலம் முடிந்த பின் தொடங்கிய காலம் பெருங்கல் புதைவுகள் காலம் (Megalithic Age) எனப்பட்டது. இக்காலத்தில் மக்கள் பயன்படுத்திய பொருள்களைப் பிணக்குழிகளிலிருந்து எடுத்தனர். இப்பொருள்களை ஆராய்ந்ததின் வழி தமிழரின் தொன்மை புலப்படுகிறது. தொகரப்பள்ளி, பையம்பள்ளி, ஆதிச்சநல்லூர், வல்லம், கொடுமணல், பிரமகிரி எனப் பல இடங்களில் 200-க்கும் மேற்பட்ட புதைவுகள் கண்டெடுக்கப்பட்டன. இப்புதைவுகள் குகைவட்டங்கள், குழிவட்டங்கள் என இரண்டு வடிவங்களில் அடையாளம் காணப்பட்டன. குகைவட்டம் கல் பலகையால்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

உருவாக்கப்பட்டது. குழிவட்டங்கள் தாழிகளால் ஆனது. தாழிகளிலிருந்து கண்டெடுக்கப்பட்ட பொருள்கள் அன்றைய மக்களின் பயன்பாட்டை எடுத்துரைக்கிறது.

**தொல்லியல் அறிஞர்கள்**

இராபர்ட் புருஸ்புட் என்னும் நிலப்பொதியியல் அலுவலர் 1863 - ஆம் ஆண்டு சென்னையிலுள்ள பல்லாவரத்தில் 'கைக்கோடரி' ஒன்றைக் கண்டுபிடித்தார். மேலும் அத்திரம்பாக்கம் எனும் ஊரில் புதை படிவத்தில் உடைந்த மனிதக் கால் எலும்பை பழைய கற்காலக் கருவிகளுக்கு இடையில் கண்டுபிடித்து பழங்கற்கால மனிதன் வாழ்ந்த தொன்மையான பகுதிகளை உலகிற்கு உணர்த்தினார்.

தொல் பொருள்களைச் சேகரிக்கும் பொருட்டு 19 - ஆம் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் பரவலாகப் பல இடங்களில் கள ஆய்வுகளும், அகழாய்வுகளும் மேற்கொள்ளப்பட்டன.

இருபதாம் நூற்றாண்டின் இடைப்பட்ட காலத்தில் 1940 - களில் சர் மார்டிமர் வீலர் என்பவர் அறிவியல் சார்ந்த அகழாய்வு முறைகளை இந்தியத் தொல்லியலில் புகுத்தினார். இவரது காலத்தில் தட்சசீலம் ஹரப்பா, புதுச்சேரி அருகிலுள்ள அரிக்கமேடு ஆகிய இடங்கள் அகழாய்வுகளுக்கு உட்படுத்தப்பட்டன. தமிழர்களுக்கும் ரோமானியர்களுக்குமான வர்த்தகம் நடைபெற்றது என்னும் கருத்தை முதன்முதலில் முன்வைத்தவர் இவரே. முசிறி, தொண்டி, காவேசிபூம்பட்டிணம், கொற்கை, அரிக்கமேடு இவையெல்லாம் சங்க கால துறைமுகங்கள் என்ற அடிப்படையில் அரிக்கமேட்டில் ஆய்வை மேற்கொண்டு அங்கு கிடைத்த பொருள்களை வைத்து சங்க காலம் என்பது கி.மு. முதலாம் நூற்றாண்டைச் சார்ந்தது என்று கருதினர்.

"அரிக்கமேட்டில் ரௌலட்டேட்வேர் (Rouletted Ware), அரிக்டேன் வேர், மது ஜாடி போன்ற மட் பாண்டங்கள் கிடைத்ததால், இந்த மூன்றுமே ரோமானிய மட்பாண்டங்கள் என்பது வீலரின் கருத்தாகும். ஆனால் ரௌலட்டேட் வேர் ரோமன் மட்பாண்டம் கிடையாது. இது இந்தியாவின் கீழக் கடற்கரை, தென்கிழக்கு ஆசியாவில் கிடைக்கிறது. ஆனால் ரோமன் பொருள்களோடு ரௌலட்டேட் வேரையும் ஒப்பிட்டு அதுவும் கி.மு. முதலாம் நூற்றாண்டு என உறுதி செய்துவிட்டார்கள். இக் கருத்தின் வழி இந்தியர்கள் ரோமானியர்களுக்கிடையேயான கடல் வழி வாணிபம் (Maritime Trade) தான் தமிழகத்தில் அரசு உருவாக்கத்திற்கு வெரும் காரணமாக இருந்தது என்ற கருத்தும் உருவானது." (muttaram.blogspot)

ராபர்ட் சுவெல் (Robert Sewell) என்பவர் மதுரைக்கருகில் மாங்குளத்தில் சில கல்வெட்டுகளைக் கண்டறிந்து இது அசோகர் காலத்து பிராமி எழுத்துக்கள் (கி.மு. 3 -ஆம் நூற்றாண்டு) என்பதைக் கண்டறிந்தார்.

தமிழ்க்குடியின் தொன்மையான முதல்பெரும் தொல்பொருள் சான்றும் உலகின் முதல் நாகரீகமும் கொண்டது ஆதிச்சநல்லூர். இது திருநெல்வேலியிலிருந்து திருச்செந்தூர் செல்லும் வழியில் தாமிரபரணி ஆற்றின் கரையில் அமைந்துள்ளது. இது இறந்தவர்களைப் புதைத்த இடம் 114 ஏக்கரில் 4 அடிக்கு ஒருவர் வீதம் தாழிகளில் இறந்தவர்களைப் புதைத்துள்ளனர். இதுவே உலகிலேயே மிகப்பெரிய இடுகாடாகும்.

ஏறத்தாழ கி.மு.10 ஆம் நூற்றாண்டுக்கு முன்பாகவே நமது மக்கள் நாகரிகத்தோடு வாழ்ந்தனர் என்றபதைப் பறைசாற்றுகிறது. இதை முதன்முதலில் கண்டுபிடித்தவர் ஜெர்மனி நாட்டைச் சேர்ந்த டாக்டர் காஜர் என்பவர்தான். இவர் 1876 - ஆம் ஆண்டு இந்தப் பகுதிகளில் ஆராய்ச்சி செய்து தமிழரின் தொல் நாகரிகத்தைக் கண்டு பிடித்தார். அவர் கண்டுபிடித்தவற்றில் பல பொருள்கள் ஜெர்மனியில் உள்ள பெர்லின் அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டிருக்கிறது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

பிரெஞ்சு நாட்டைச் சேர்ந்த லூயி வேப்பிக்கியூ என்ற அறிஞர் 1903 ஆம் ஆண்டு ஆதிச்சநல்லூர் வந்து சில தாழிகளைத் தோண்டி எடுத்தார். அப்போது கிடைத்த மண்வெட்டி, கொழு போன்ற பொருள்களைப் பாரிசுக்குக் கொண்டு சென்றார். இப்படி மேலை நாட்டிலிருந்து வந்த அறிஞர்கள் எல்லோரும் தமது அகழாய்வில் கிடைத்த பொருள்களைத் தத்தமது நாடுகளுக்குக் கொண்டு சென்றுவிட்டனர். அவையெல்லாம் கிடைத்தால் தமிழரின் நாகரிகம் இன்னும் 'தொன்மையானது' என்பதை நிரூபிக்க உதவும்.

1905 - ஆம் ஆண்டு சென்னை அருங்காட்சியக மதிப்புறு துணைக் கண்காணிப்பாளர் அலெக்சாந்தர் ரீயா இவர். ஆதிச்சநல்லூரில் நுணுக்கமாக அகழாய்வு செய்து ஒரு பட்டியல் தயாரித்துக் கொடுத்ததோடு பொருள்கள் அனைத்தையும் சென்னை அருங்காட்சியகத்தில் இடம்பெறச் செய்தார்.

பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழர்கள் இரும்பின் பயன்பாட்டை அறிந்தவர்களாக இரும்பு தொடர்பான தொழில்களை உருவாக்கியவர்களாக இருந்து அனைத்துத் தொழிலுக்கும் முன்னோடிகளாக விளங்கினர் என்பது விளங்குகிறது. தமிழகத்திற்கு வெளிநாடுகளிலிருந்து இரும்பு வந்திருக்கலாம் என்ற நீலகண்ட சாஸ்திரியாரின் கூற்றையும் வட இந்தியத் தொடர்பால் செம்பு, வெண்கலம் இரண்டும் தமிழகத்திற்கு வந்தன என்ற தீட்சதரின் கூற்றையும் தள்ளி கி.மு. 7 -ஆம் நூற்றாண்டு என்பதை கி.மு.10 -ஆம் நூற்றாண்டு என ஆதிச்சநல்லூர் அகழாய்வுகள் மெய்ப்பிக்கின்றன.

சகர்மேன் என்ற அறிஞர் ஆதிச்சநல்லூரில் கிடைத்த மண்டை ஓடுகள் பற்றி ஆய்வு செய்து அதில் ஆஸ்திரேலிய பழங்குடி மக்களின் மண்டை ஓடு ஒன்று இருந்ததைக் கண்டறிந்து நம் முன்னோர்கள் ஆஸ்திரேலியா நாட்டு பழங்குடி மக்களோடு தொடர்பு கொண்டிருந்ததையும், ஆஸ்திரேலியா தென் இந்தியாவோடு இணைந்திருந்தது என்ற கருத்தையும் வெளியிட்டுள்ளார். ஆஸ்திரேலிய பழங்குடி மக்கள் பயன்படுத்திய பூமராங் (வளரி) என்னும் ஒருவகை ஆயுதம் தமிழகத்தில் கிடைத்துள்ளதும் குறிப்பிடத்தக்கது. பகைவர் மீது எறிந்தால் அவர்களைத் தாக்கிவிட்டு வீசியவர்கள் கைக்குத் திரும்ப வரும் ஒருவகை ஆயுதம் தான் பூமராங் ஆகும்.

தென்னிந்தியாவின் பூர்வகுடிகள் என்றும் அவர்கள் மத்திய தரைக்கடல் மக்கள் தென் இந்தியா வரும் முன்னர் இருந்தே தென் இந்தியாவில் வாழ்ந்து வருவதாகவும் ஆய்வாளர் செரோம் சேக்கப்புசன் கூறுகிறார். ஆதிச்சநல்லூரில் கிடைத்த எலும்புக் கூடுகள் மொனாக்கோ பகுதியில் கிடைத்த மேலை பழங்கற்கால ஆரிகனேசியன் பண்பாட்டு பெண்ணின் மண்டை ஓட்டுடன் ஒத்து வருவதாகவும் கூறியுள்ளார். ஆதிச்ச நல்லூரில் கிடைத்த தொல்லியல் பொருள்களைக் கொண்டு அங்குள்ள மக்களின் பண்பாட்டை வகைப்படுத்தியுள்ளார் கமில் சுவலபில். இந்தியத் தொல்லியல் ஆயவாளர் சத்தியமூர்த்தி ஆதிச்சநல்லூரின் (பெருங்கற்புதைகுழி) காலம் கி.மு. 1000 ஒட்டியே இருந்திருக்க வேண்டும் என்று கணித்துள்ளார். இது அமெரிக்க கார்பன் காலக் கணக்காய்வின்படி உறுதி செய்யப்பட்டது. ஆதிச்சநல்லூர் பழந்தமிழரின் பொற்காலமாக விளங்கியுள்ளது என்பது புலப்படுகிறது.

ஆதிச்சநல்லூரில் செய்த அகழாய்வில் டாக்டர் கால்டுவெல்லுக்கும் முக்கியமான பங்கு உண்டு. 1876 -இல் ஜாகர், 1903 -இல் எம்.லோனிசு லாபிக்கு, 1899 - 1906 அலெக்சாந்தர் .ரீ, 1914 ஆம் ஆண்டு ஆண்டர்சன் ஆகியோரின் பங்கு குறிப்பிடத்தகுந்ததாகும்.

"சுடுவோர் இடுவோர் தொடுகுழிப் புதைப்போர்
தாழ்வாயின் அடைப்போர் தாழியில் கவிப்போர்"

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

என மணிமேகலை.(6:66-67) குறிப்பிடுகிறது. முதுமக்கள் தாழிகளும், நடுகற்களும் பெருங்கற்கால நினைவுச் சின்னங்களாகத் திகழ்கின்றன.

பிராமி, பிராகிருதம் போன்ற தமிழ் வரி வடிவங்களை வைத்தும் அதனுடைய காலம் கணக்கிடப்படுகிறது. அசோகரது பிராமி கி.மு. 3 -ஆம் நூற்றாண்டு என்றால் தமிழ் பிராமி அதற்கும் 100 ஆண்டுகள் முந்தியது என கி.மு. 2 ஆம் நூற்றாண்டாகக் கொள்ளப்படுகிறது.

பொதுவாக தொல்லியல் துறை அகழாய்வுகள் பெருங்கற்படைச் சின்னங்கள் எனக் கருதப்படும் ஈமக்காடுகளில் நடந்திருக்கின்றன. 1960 களில் நடந்த தொல்லியல் ஆய்வுகள் ஆதிச்சநல்லூர், குன்னத்தூர், கொடுமணல் என்று எல்லா அகழாய்வுகளிலும் ஈமக்காடுகள் குறித்துப் பதிவு செய்வது, ஆவணப்படுத்துவது என்று மட்டுமே இருந்தன. இதைச் சங்க காலத்தோடு தொடர்புபடுத்தினர். ஆனால் மக்கள் வாழ்ந்த வாழ்விடம் ஆராயப்படவில்லை என்பது தொல்லியலாளர்களின் கருததாகும்.

புலவர் செ.ராசு அவர்களின் கூற்றுப்படி 'கொடுமணல் பட்ட வினைமான் அருங்கலம்' என்ற அடியிலுள்ள கொடுமணல் தான் 'கொடுமணல்' ஆக இருக்கலாம் என்ற கருத்தை வைக்கிறார். "பூம்புகார், பொருந்தல், ஆதிச்சநல்லூர், அரிக்கமேடு, கொடுமணல் அகழாய்வுகள் புதையிடமாகத் தான் இருக்கின்றன. ஆனால் கீழடியில் தூண்கள், தொழிற்சாலைகள், கட்டுமானங்கள், எல்லாம் இருந்த ஒரு நகரம் கண்டுபிடிக்கப்படுள்ளது. ஹரப்பா நாகரிகத்துக்கு இணையான தொல்லியல் களம் தென்னிந்தியாவில் மட்டும் தான் இருக்கிறது." ஏனத் தொல்லியல் ஆய்வாளர் படைப்பாளர் சு.வெங்கடேசன் குறிப்பிடுகிறார்.

கீழடி அகழாய்வில் 70 - க்கும் மேற்பட்ட தமிழ்பிராமி, பிராகிருத, சமற்கிருத எழுத்துக்களும், ஆப்கான் நாட்டின் தூது பவளமும், ரோமானிய மண்பாண்டமும் 2500 ஆண்டு முன்பான தமிழப் பாரம்பரியத்தையும் சுட்டுவதால் பல வணிக மற்றும் வரலாற்று ஆராய்ச்சிகளுக்குப் புதியதொரு வழிகோளாக அமைகிறது. சங்க இலக்கியத்திலுள்ள மதுரை கீழடிதான் என்பது நிருபனமாகிறது. "கீழடியில் 110 ஏக்கர் நிலத்தில் வெறும் 50 செண்ட் வரைக்கும் தான் அகழாய்வு செய்திருக்கிறார்கள் முழுமையும் ஆராய்ச்சி செய்ய இன்னும் பத்து, இருபது வருடங்கள் தேவைப்படும், அதனால் இதில் தமிழக அரசின் தொல்லியல் துறையும் இணைந்து கொள்ள வேண்டியது தேவை. இந்த 110 ஏக்கரில் பல இடங்கள் தனியார் வசம் இருப்பதால் அரசு தலையிட்டு விரைவில் அந்த நிலங்களைக் கைப்பற்ற வேண்டும். அப்போதுதான் தொல்லியல் பொருள்கள் பாதுகாக்கப்படும் என்று விகடனுக்கு அளித்த பேட்டியில் சாகித்ய அகாடமி எழுத்தாளர் சு.வெங்கடேசன் கூறியுள்ளார். (www.visai.in /2017/03/07).

கல்வெட்டு மூத்த அறிஞர் ஐராவதம் மகாதேவன். இலக்கிய அறிஞர் புலவர் செ.ராசு, கல்வெட்டு அறிஞர் பேரா.சுப்பராயலு கடல் அகழாய்வு அறிஞர் பேரா.ராஜன், அமர்நாத் இராமகிருஷ்ணன் நடன காசிநாதன் ஆர்.பாலகிருஷ்ணன், சு.வெங்கடேசன் ஒரிசா பாலு போன்றவர்களின் தொல்லியல் ஆய்வு நூல்களும் தமிழர் பண்பாட்டிற்கு அடித்தளமிட்டிருக்கின்றன.

தமிழ்நாடு கேரளா எல்லையிலுள்ள இடுக்கி, பழனி, குமுளி, தேனி, தேக்கடி, கம்பம், போடி போன்ற ஊர்ப்பெயர்கள் மத்தியப்பிரதேசம் மற்றும் வடமாநிலங்களில் இருப்பதையும், ஒரிசா - ஆந்திரா எல்லையிலுள்ள கொராபுட் மாவட்டத்திலுள்ள சுமார் 463 ஊர்களில் பெயர்கள் நைஜிரியாவில் உள்ளதையும் ஆர்.பாலகிருணன் அவர்கள் வெளியிட்டுள்ளார். இடம்பெயர்வின் காரணமாக புலம்பெயர்ந்த மக்களின் எச்சங்களாக சங்க இலக்கியத்திலுள்ள ஊர்ப்பெயர்கள் உலகம் முழுவதும் பரவியிருப்பதைத் தமது ஆய்வின் மூலம்

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கண்டறிந்துள்ளார். (www.sramakrishnan.com) இதன் மூலம் தமிழ்மொழி உலகளாவிய தழுவலைப் பெற்றுள்ளன என்பது புலப்படுகிறது.

“சங்க இலக்கியச் சான்றுகள் தமிழரின் தொன்மையைப் பறைசாற்றுகின்றன என்றாலும் அகழாய்வுகளில் கிடைத்த சான்றுகளில் காணப்படும் பெயர்கள் சங்க இலக்கியத்தில் காணப்படவில்லை. அதனால் சங்க இலக்கியம் என்பது தமிழ்ச் சமூகத்தை முழுமையாக வெளிப்படுத்துகிற இலக்கியமல்ல. அது வணிகத்தைப் பற்றி சொல்லுகிறது. யவனர்கள் பற்றி சொல்லுகிறது. செங்கடல் பகுதியில் தமிழர்கள் இருந்திருக்கிறார்கள் என்பதைப் பற்றி குறிப்பிடப்படவில்லை. ஓமனில் இளங்கீரன் கீரன் என்ற பெயர் கொண்ட ஒரு மட்பாண்டம் கண்டெடுக்கப்பட்டுள்ளது. இதுதான் முதன்முதலாக அரேபிய தீபகற்பத்தில் கிடைத்த தமிழ் வணிகர்களைப் பற்றிய குறிப்பாகும்.” (mutaram.blogspot) இப்படியாகத் தொல்லியல் ஆய்வுகளின் நீட்சி நுட்பமான ஆய்வுகளுக்கு அடித்தளமிடுகின்றன.

**முடிவுரை**

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை தனியாகவும் இந்தியத் தொல்லியல் துறையுடன் இணைந்தும் தமிழ்நாட்டில் முப்பது இடங்களில் அகழய்வுகள் செய்துள்ளன. ஆரம்பகால தொல்லியல் களங்கள், மத்திய் கால தொல்லியல் களங்கள், அண்மைய கால அகழாய்வுகள் என மூன்று கட்டங்களாக அகழாய்வுகள் நடைபெற்று தமிழரின் தொன்மையை ஆய்வு செய்யும் பணிகள் நடைபெற்று வருகின்றன. ஆர்.டி.பானர்ஜீ, தயாராம் சாணி, கே.என். தீட்சத், ஈ.ஜே.எச்.மத்கே, கே.என்.யூரி, கியூ.எம்.மொனீர், சர் ஜான்மார்சல், மாதோ, சரூப் வாட்ஸ், என்.ஆர்.ராவ், ஆர்.பி.கண்டா, போன்ற இந்திய தொல்லியல் அறிஞர்களாலும் தமிழ்நாட்டுத் தொல்லியல் அறிஞர்களின் அகழாய்வுகளாலும் தமிழரின் பல உண்மைகள் புலப்பட்டிருக்கின்றன. பண்பாடும் தொன்மையும் இன்னும் பல நூற்றாண்டுகளுக்கு முந்தையது என நிருபிக்கும் ஆய்வுக்கானக் களங்கள் பல தமிழ்நாட்டில் உள்ளன. இவையெல்லாம் முழுவதுமாக கார்பன் கணக்கீடுக்கு உட்படுத்தினால் முழுமையான உண்மை தரப்படும். இதன் வழி தமிழரின் மேன்மை புலப்படும்.

**பயன்பட்ட நுல்கள்**

1. தொல்லியல், முனைவர் தி.மனோன்மணி, முனைவர் தி.செல்வநாயகி என்.சி.பி.எச்., வெளியீடு, 2010
2. தமிழ்நாட்டுத் தொல்லியல் அகழாய்வுகள், சு.இராசவேலு, கோ.திருமூர்த்தி, பண்பாட்டு வெளியீட்டகம், சென்னை, 1995.
3. பண்டைத் தமிழ்ச் சமூகம், கார்த்திகேசு சிவத்தம்பி, என்.சி.பி.எச்., வெளியீடு, 2010.
4. தமிழகப் பண்பாடு, அ.கா.பெருமாள், என்.சி.பி.எச். வெளியீடு.
5. தொல்பழங்காலம், தி.சுப்ரமணியன், என்.சி.பி.எச். வெளியீடு.
6. சிந்து சமவெளி திராவிடப் பண்பாட்டின் அடித்தளம், ஆர்.பாலகிருஷ்ணன், பாரதி புத்தகாலாயம், சென்னை.
7. Wikipedia.org
8. மாற்றுக்கல்வி.வலைப்பு, 22.08.2017

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# கல்வெட்டுகளால் அறியலாகும் பத்துப்பாட்டு புலவர்களும் மன்னர்களும்
# Bards and Kings of Pattupattu Comprehended through Culverts

**கு.சீனிவாசன்,** முனைவர்பட்ட ஆய்வாளர்,
தமிழியல் துறை, அண்ணாமலைப்பல்கலைக்கழகம்-608002.

## Abstract

*The article ponders over the explanation of culverts and relates the connection between archaeology and culverts. Then it speaks of the Kapilakunrru. 'Pattinapalai' and Uruthirakannanar are taken as objectives and a short discussion is there. After that 'Malaipadumkadam' is explained with reference to the Pandian King Maravarman and his valour and his love on Tamil language that he showed while demolishing the Chola territory. Then a glance on the Adiyamans gives a hint on their feats. Hence, the study make clear the unified specifics from the elucidation found on the culverts.*

**Keywords:** Bards, Kings, *Pattupattu*, Culverts

**முன்னுரை**

பத்துப்பாட்டு என்பது சங்க இலக்கியங்கள் என்று குறிப்பிடப்படும் பழந்தமிழ் நூல்களின் தொகுப்புகளுள் ஒன்றாகும், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, இவை இரண்டும் பதினெண் மேல்கணக்கு நூல்களாகும். இவற்றுள் *திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு,பட்டினப் பாலை, மலைபடுகடாம்* ஆகிய பத்து நூல்கள் அடங்கிய தொகுப்பே பத்துப்பாட்டு என வழங்கப்படுகிறது. இவை அனைத்தும் இன்று ஒரே தொகுப்பாகக் குறிப்பிடப்படுகின்ற போதிலும், இவை ஒன்றுக்கொன்று தொடர்பற்றவை, வெவ்வேறு ஆசிரியர்களால் பல்வேறு கால கட்டங்களில் இயற்றப்பட்டவை. பத்துப்பாட்டு எனச் சேர்த்துக் குறிப்பிடும் வழக்கமும் பிற்காலத்தில் எழுந்ததென்பதே பலரது கருத்து. பத்துப்பாட்டு பாடியுள்ள சில புலவர்களைப் பற்றி கல்வெட்டுச் செய்திகளும் கூறுவதாக அமைந்துள்ளது. இதனை அறிவதாகவே இக்கட்டுரை அமைகிறது.

*பத்துப்பாட்டு* என்னும் இத் தொகுதியிலுள்ள நூல்கள் சங்க இலக்கியங்களுள் சிறப்பிடம் பெறுபவை. இவற்றில் பழந்தமிழ் நாட்டின் வாழ்க்கை முறை, பண்பாடு பற்றிய பல அரிய தகவல்கள் பொதிந்து கிடக்கின்றன. வரலாற்றுச் சம்பவங்கள், அரசர்களினதும் வள்ளல்களினதும் இயல்புகள், பொது மக்களின் காதல் வாழ்க்கை,அக்காலக் கலைகள், நகரங்கள் பற்றிய தகவல்கள், இயற்கை பற்றிய வருணனைகள் போன்றவை தொடர்பான பல தகவல்களை இவற்றிலிருந்து பெற முடிகின்றது. பத்துப் பாட்டு நூல்களில் இயற்கைக்கு முரண்பட கற்பனைகளோ பொருந்தா உவமைகளோ காணப்பெறவில்லை. பண்டைத் தமிழ்ர் வாழ்வை உள்ளது உள்ளபடிக் கட்டும் காலக் கண்ணாடியாக இவை விளங்குகின்றன.

'முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வள மதுரைக் காஞ்சி-மருவினிய

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கோல நெடுநல் வாடை கோல்குறிஞ்சிப்பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து"

என வரும் பழம்பாடல், பத்துப்பாட்டு நூல்கள் எவை என்பதை மிகத் தெளிவாகக் காட்டும்.இந்த அரிய தொகுப்பிற்கு நச்சினார்க்கினியர் உரை எழுதியுள்ளார்.

"நூறடிச் சிறுமை நூற்றுப் பத்தளவே
ஏறிய அடியின் ஈரைம் பாட்டு
தொடுப்பது பத்து பாட்டெனப் படுமே"

அதுவே, அகவலின் வருமென அறைகுவர் புலவர் (பன்னிருபட்டியல் 266-267) என்பது இதன் இலக்கணமாகும்.

**தொல்லியலும் கல்வெட்டுகளும்**

தொல்பழங்காலத்தைப் பற்றி ஆய்வு செய்தலையே தொல்லியல்அல்லது தொல்பொருளியல் என்கிறோம். தொன்மையான காலத்தில்வாழ்ந்த மக்களின் வாழ்க்கைமுறை, தொழில்கள், வாணிகம்,வேளாண்மை, அரசியல், நுண்கலைகள் முதலியவைபற்றி அவர்கள்விட்டுச் சென்ற எச்சங்களான கல்வெட்டுகள், கட்டடங்கள், காசுகள்,செப்பேடுகள் முதலியவற்றின் அடிப்படையில் ஆய்ந்தறிதலேதொல்லியலின் முதன்மையான நோக்கம். தொல்லியலைஆங்கிலத்தில் 'ஆர்க்கியாலஜி' எனக்குறிப்பிடுவர். தொல்லியல் ஆய்வுகள் இல்லையெனில் மனிதனின் கடந்துவந்தபாதையும் அவனுடைய வரலாற்றையும் அறிய இயலாது. மேலும் தமிழர்களின் பெருமைமிக்க வரலாற்றுக்குச் சான்றாக இருப்பவை, கல்வெட்டுகள் மற்றும் செப்பேடுகளும் ஆகும். இவை கோயில்கள் மலைகள் என எங்கெல்லாம் தமிழ் மன்னர்கள் கால் பதித்தனரோ, அங்கெல்லாம் கல்வெட்டுகளை வெட்டிப் பொதித்து வைத்துள்ளனர். இதுவரை பல ஆயிரம் கல்வெட்டுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. பெரும்பாலான கல்வெட்டுகள் பிராமி எழுத்து, வட்டெழுத்து பழங்காலத் தமிழ் எழுத்துகளில் உள்ளது என்பர். 'கல்வெட்டுகள் என்பன கோயில்களிலுள்ள சுவர்கள், கற்பாறைகள், மலைக்குகைகள், வெற்றித்தூண்கள் மண்டபங்கள், படிமங்கள், நடுகற்கள் முதலானவற்றில் வரையப் பெற்றிருக்கும் கல்லெழுத்துகளேயாகும். செப்பேடுகளையும் கல்வெட்டுகள் என்ற தலைப்பின் கீழ் அடக்கிக் கொள்வது பொருந்தும். கல்வெட்டுகளில் காணப்படும் செய்திகள் அல்ல. அவையனைத்தும் நம் முன்னோர்களுடைய உண்மை வரலாறுகனை யுணர்த்தும் பழைய வெளியீடுகளே' என்று கல்வெட்டறிஞர் தி.வை. சதாசிவபண்டாரத்தார் கூறுகிறார்.

**தொன்மைக்காலம் என்பதற்கான காலவரையறை**

மனிதன் நாடோடியாக வாழ்ந்த காலத்திலிருந்து வரலாற்றுக்குமுந்தைய காலம்வரை உள்ள காலத்தையே தொன்மைக்காலம்என்கிறோம்.அவ்வப்போது திட்டமிட்டுச் செய்யப்படும் ஆய்வுகளின் போதுதற்செயலாகக் கிடைக்கும் தடயங்கள், எச்சங்களின் உதவியுடனோதொன்மைக்கால நிகழ்வுகளைத் தொல்லியல் ஆய்வாளர்கள்கண்டறிகிறார்கள்.

**கபிலரும் கபிலக்குன்றும்**

கபிலர் பத்துப்பாட்டில் குறிஞ்சிப் பாட்டு என்னும் பாடலைப் பாடியுள்ளார்.இப்பாடல். 261 அடிகளாலான இப்பாடல் அகப்பொருள் சார்ந்த பாடலாகும். கபிலர் குன்று என்பது கபிலர் வடக்கிருந்து உயிர் துறந்த இடமாகும். இது தமிழ்நாட்டில் கள்ளக்குறிச்சி மாவட்டத்தில் திருக்கோவிலூர் பேரூராட்சி அருகே அமைந்துள்ளது. நண்பரும் வள்ளலும் ஆன மன்னன் பாரியின் மறைவுக்கு பிறகு, பாரிமகளிர் அங்கவை சங்கவை என்பவர்களை திருக்கோவிலூர்பார்ப்பான் ஒருவனுக்குத் திருமணம் செய்து வைத்துவிட்டு, தென்பெண்ணை ஆற்றில் உள்ள ஒரு குன்றில் வடக்கு பக்கம் அமர்ந்து உண்ணா நோன்பிருந்து உயிர்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

துறந்தார் என்பர். திருக்கோவிலூரின் தென் பெண்ணையாற்றில் அமைந்துள்ள "கபிலர் குன்று" (கபிலக்கல்) என்னும் இடத்தில் கபிலர் உயிர்துறந்தார் என ஆராய்ச்சியாளர்கள் உறுதி செய்துள்ளனர். திருக்கோவிலூர் பேருந்து நிலையத்திலிருந்து இரண்டு கி.மீட்டரில் வீரட்டானேசுவரர் கோயிலின் அருகில் தென்பெண்ணையாற்றின் நடுவில் "கபிலர்குன்று" உள்ளது. கபிலர்குன்று என இன்று அழைக்கப்பட்டாலும் "கபிலக்கல்" என்றே இந்த இடத்தைக் கல்வெட்டுக் குறிப்பிடுகின்றது.

பறம்பு மலையில் வாழ்ந்த கபிலர் பார்ப்பனர்களிடம் பாரி மகளிரை ஒப்படைத்து விட்டு வடக்கிருந்து உயிர்விட்டார் என இலக்கியங்கள் குறிப்பிடும் பொழுது (புறம் 236,) திருக்கோவிலூர் வீரட்டானேசுவரர் கோயிலின் கருவறையின் வடபுறச்சுவரில் உள்ள முதலாம் இராசராசசோழனின் ஆட்சியில் கி.பி. 1012 –ல் வரையப்பெற்ற கல்வெட்டொன்று கூறுகின்றது. அகவற்பாவில் அமைந்துள்ள அக்கல் வெட்டுப் பகுதி,

"வன்கரை பொருது வருபுனற் பெண்ணைத்
தென்கரை யுள்ளது தீர்த்தத் துறையது
மொய்வைத் தியலு முத்தமிழ் நான்மைத்
தெய்வக் கவிதை செஞ்சொற் கபிலன்
மூரிவண் தடக்கைப் பாரிதன்னடைக்கலப்
பெண்ணை மலையற் குதவிப் பெண்ணை
அலைபுன லழுவத் தந்தரிட் சஞ்செல
மினல்புகும் விசும்பின் வீடுபேறெண்ணிக்
கனல்புகுங் கபிலக் கல்லது புனல்வளர்
பேரெட்டான வீராட் டானம்
ஆனைத்தினு மநாதி யாயது" (தெ.க. தொகுதி 7, 863)

எனும் தொடர்கள் இடம்பெற்றுள்ளன. சங்கப்பாடல் கபிலர் வடக்கிருந்து உயிர் நீத்தார் எனக் கூறும் போது, கல்வெட்டானது தீயில் இறங்கி உயிர் நீத்தார் என்கிறது. இக்கல்வெட்டில் இராசராசனின் தாய் வானவன் மாதேவி மலையமான் குலத்தில் தோன்றியவர் எனவும், மலையமான் குலத்திற்கு வீரட்டானேசுவரர் கோவில் குலதெய்வம் எனவும் அறிய முடிகிறது. அதுபோல் அக்கோயிலின் பெருமையைச் சொல்லும்பொழுது கோயிலின் அருகே உள்ள பெண்ணையாற்றில் உள்ள கபிலக்கல்லில் கபிலர் உயிர்நீத்தார் எனவும் கூறுகிறது.

**பட்டினப்பாலையும் உருத்திரங்கண்ணனாரும்**

பத்துப்பாட்டு எனும் தொகை நூல்களுள் ஒன்று கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பட்டினப்பாலை. இதில் சோழ நாடு, காவிரி ஆறு, கரிகாலனின் வீரம், வெற்றி, காவிரிப்பூம்பட்டினம், கடல் வணிகம், வாணிகச் சிறப்பு முதலிய பல வரலாற்றுச் செய்திகள் கூறப்பட்டுள்ளன. கடற்கரை ஊரான காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்பு பற்றி பேசுவதால் இது "பட்டினப்பாலை" எனப்பட்டது. இதன் பாட்டுடைத் தலைவன் கரிகாலன் என்பது "சோழன் கரிகாற்பெருவளத்தானைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடியது" எனும் நச்சினார்க்கினியர் உரையால் அறியலாம். சோழ மன்னன் கரிகாலன், பட்டினப்பாலையை இயற்றிய புலவர்க்கு பதினாறு நூறாயிரம் பொன் பரிசு கொடுத்தான் என்பதைக் கலிங்கத்துப்பரணி கூறுகிறது.

"தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர் பொன்
பத்தொடு ஆறு நூறாயிரம் பெறப்
பண்டு பட்டினப்பாலை கொண்டதும்"

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

இச் செய்தி,

“பாடியதோர் வஞ்சி நெடும் பாட்டால் பதினாறு
கோடி பொன் கொண்டது நின் கொற்றமே”

எனத் தமிழ்விடு தூதிலும் பாராட்டப் பெற்றிருக்கின்றது. இது மட்டுமல்ல, பட்டினப்பாலை அரங்கேறிய 16 கால் மண்டபத்தையும் கரிகாலன் பரிசாகக் கொடுத்துவிட்டான். இச்செய்தியை சங்கர சோழன் உலா, தமிழ்விடு தூது, பாண்டி மண்டல சதகப் பாடல்களும் குறிப்பிடுகின்றன. மேலும் 108 வைணவத் தலங்களுள் ஒன்றான திருவெள்ளறை திருக்கோயிலில், ”நாழி கேட்டான் வாசல்“ எனப்படும் வாயிலின் சுவரில் காணப்படும் கல்வெட்டு தமிழ் இலக்கியத்தைப் போற்றிய அரிய செய்தியைக் கூறுகிறது.

சோழ மன்னரது ஆட்சி வலிமைக் குன்றியவுடன் பாண்டிய மன்னர்களில் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி.1216-1238) சோழ நாட்டின் மீது படையெடுத்து பெரும் பகுதியை அழித்தான். ஆனால் பட்டினப்பாலை அரங்கேற்றப்பட்ட தன் நினைவாக இருந்த 16 கால் மண்டபத்தை அப்படியே விட்டுவிட்டான் பாண்டிய மன்னன் என்பதை கீழ்க்காணும் கல்வெட்டுப் பாடல் கூறுகிறது. இப்பாடலின் வழி, தமிழின்பால் கொண்டிருந்த ஈடுபாட்டின் காரணமாக அம் மண்டபத்தை அழிக்காமல் பெருமை சேர்த்தான் பாண்டிய மன்னன் என்ற உண்மை விளங்குகிறது. அக்கல்வெட்டானது வருமாறு,

“வெறியார் துவளத் தொடைச்செய
மாறன் வெகுண்டதொன்றும்
அறியாத செம்பியன்
காவிரி நாட்டில் அரமியத்துப்
பறியாத தூணில்லை கண்ணன்
செய் பட்டினப் பாலைக்கன்று
நெறியால் விடுந்தூண்
பதினாறு மேயங்கு நின்றனவே” (செந்தமிழ்-தொ.41, ப- 21)

எனவரும் இறுதிப் பகுதியால், பட்டினப்பாலையை அரங்கேற்றிய மண்டபம் ஒன்று சோழநாட்டில் இருந்தமை சுந்தரபாண்டியன் கல்வெட்டு உணர்த்துவது தெரியவருகிறது.

**மலைபடுகடாம்**

திருவண்ணாமலைக் கல்வெட்டொன்றில் ‘நல்லிசைக் கடாம்புனை நன்னன் வெற்பு’ என்ற தொடர் குறிக்கப்படுகிறது. செங்கம் ரிசபேசுவரர் கோயில் கல்வெட்டில் ‘பண்டே மலைகடாம் பாண்டுண்ட மால்வரை’ என்ற தொடர் குறிக்கப்படுகிறது. இவ்விரு தொடர்களிலும் பத்துப்பாட்டில் ஒன்றான மலைபடுகடாம் பற்றியும், அதன் பாட்டுடைத் தலைவன் நன்னன் சேய் நன்னன் பற்றியும் குறிப்புகள் வருகின்றன.

“நல்லிசைக் கடாம்புனை நன்னன் வெற்பில்
வெல்புக ழனைத்தும் மேம்படத் தங்கோன்
வாகையும் குரங்கும் விசைய முந்தீட்டிய
அடல்புனை நெடுவேல் ஆட்கொண்ட தேவன்” (தெ.க. தொகுதி 1, 69)

என்பதாகும். இதில்,‘நல்லிசைக் கடாம்புனை நன்னன்’ என்ற தொடர் ‘இனிய ஓசையமைந்த மலைபடுகடாம் என்னும் நூல்கொண்டு புகழ் எய்திய நன்னன்’ என்று பொருள்படுதல் அறிக. அன்றியும், இதில் குறிக்கபெற்ற நன்னன் வெற்பு என்பது மலைபடுகடாத்தில் ‘நீரகம் பணிக்கும் அஞ்சுவரு கடுந்திறற் - பேரிசை நவிரம்’ எனவும், ‘வாய்வளம்பழுநிக் -

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கழைவளர்நவிரம்' எனவும் சிறப்பித்துக் கூறப்பெற்றுள்ள நவிரமலையாதல் வேண்டும் என்பது பல கல்வெட்டுகளால் அறியப்படுகின்றது என்று தி.வை. சதாசிவபண்டாரத்தார் கூறுகிறார்.

**சிறுபாணாற்றுப்படை அதியமானும் ஜம்பை கல்வெட்டும்**

தமிழ்நாடு-கர்நாடக எல்லையில் இருந்த ஒரு நாட்டை ஆண்டோர் அதியமான்கள். இவர்கள் நாட்டின் தலைநகர் தகடூர் என்பதாகும். இது இன்றைய தர்மபுரி ஆகும். இப்போது அதியமான் கோட்டை தகடூரில் உள்ளது. இவர்கள் தமிழ்நாட்டின் மிகப் பழைய மரபொன்றைச் சார்ந்தவர்கள் எனக் கருதப்படுகிறது. சங்கப் பாடல்களிலே அதியமான்கள் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. சங்கப் புலவரான ஔவையாருக்கு நெடுமான் அஞ்சி என்னும் அதியமான் என்பவன் நெருங்கியவனாக இருந்தான் என்று சங்கப் பாடல்கள் காட்டுகின்றன. இந்த அதியமானால் வெட்டப்பட்ட கல்வெட்டு ஒன்று கண்டு பிடிக்கப்பட்டு உள்ளதாக அறியப்படுகிறது. இக் கல்வெட்டு அதியமானை ஸதியபுதோ என்றும் குறிப்பிடுகிறது. மேலும் விழுப்புரம் மாவட்டம், திருக்கோவிலூர் வட்டத்தில் ஜம்பை உள்ளது. இக்கல்வெட்டு உள்ள இடத்திற்குத் தாசிமடம் என்று பெயர். இது 1981 ல் தொல்பொருள் ஆய்வுக் குழுவினரால் கண்டுபிடிக்கப்பட்டது.

ஸதிய புதோ அதியன் நெடுமான் அஞ்சி ஈத்த பாளி

செய்தி:

ஸத்திய புத்திரன் அதியன் நெடுமான் அஞ்சி என்பவர் தானமாகக் கொடுத்தே பாளி (சமணர் படுக்கை)

தகடூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த சங்க காலச் சிற்றரசர் அதியமானின் கல்வெட்டு.கடையெழு வள்ளல்களுள் ஒருவர் அவ்வரசனே பாளியைக் கொடுத்துள்ளான் இவர் மலையமான் திருமுடிக்காரியுடன் போரிட்டு வெற்றி பெற்றதாக இலக்கியம் கூறுகிறது. இலக்கியச் செய்தியை மெய்ப்பிப்பது போன்று திருமுடிக்காரியின் தலைநகரான திருக்கோயிலூர் பகுதியில் உள்ள ஜம்பையில் இக்கல்வெட்டு கிடைத்துள்ளது. இக்கல்வெட்டு அவனது வெற்றியின் நினைவாகப் பொறிக்கப் பெற்றிருக்கலாம்.அசோகரது கல்வெட்டுக்களில் மூவேந்தருக்கு இணையான அண்டை அரசுகளுள் ஒருவராகக் குறிப்பிடப்பெற்றுள்ளார்.

**முடிவுரை**

பன்னெடுங்கால தமிழ்ச் சமுதாயத்தின் வரலாற்றின் ஆவணமாக விளங்குபவை சங்க இலக்கியங்கள் ஆகும். இவற்றைப் பற்றிய ஆய்வு இலக்கியத்தளத்தில் மட்டுமே ஆராயப்பட்ட நிலை மாறி அவற்றைக் கல்வெட்டு தொல்லியல் சான்றுகள், நாணவியல் ஆதாரங்கள், மொழியியல் சான்றுகள், இந்திய வரலாற்றியல் சான்றுகள் எனும் பல ஆதாரங்களின் அடிப்படையில் பரவலான தளத்தில் ஆராயும் சூழல் இன்று உருவாகியுள்ளது. அந்த வகையில் பத்துப்பாட்டில் கூறப்படும் மன்னர்கள் மற்றும் புலவர்களை பற்றியும் கல்வெட்டுச் செய்திகள் துணைகொண்டு விளக்கப்பட்டது.

**ஆய்வுக்கு பயன்பட்ட நூல்கள்**

1. தி.வை. சதாசிவபண்டாரத்தார், இலக்கிய ஆராய்ச்சிகளும் கல்வெட்டுகளும்.
2. பெ.அர்த்தநாரிஸ்வரன், கல்வெட்டு வழி பண்பாட்டியல்.
3. நடனகாசிநாதன், கல்வெட்டியல்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# ஆதித்தமிழர் அருந்ததியர் வரலாறு: கல்வெட்டுக்கள் வழிக் கட்டமைத்தல்
# Adi Tamilar Arunthathiyinar Chronology: Infrastructuring Via Culvert Perspective

**முனைவர். ச.சீனிவாசன்,** தமிழ் இணைப்பேராசிரியர்
ஸ்ரீ வெங்கடேஸ்வரா கல்லூரி, (தில்லிப் பல்கலைக்கழகம்), புது தில்லி- 110 021

## Abstract

*The article propagates to draw out the historical evidences of the Aruntathiyinar caste based on the culvert and other related facts collected from the ancient times to the present. The idea centers that the Aruntathiyinar are one of the ancient sect of Tamil people. There are many of the sources that say the people have their distinct reputation and role in the society. The history of Tamil Nadu has been written from the high class people only. So, there is bias in the chronology. This study focuses to find out history from down to earth of the Tamil society. Nevertheless, the purpose of the article is to bring out the glimpses from the archaeological evidences from temples, culverts and other sources.*

**Keywords:** Adi Tamilar, Arunthathiyinar, Chronology, Culvert Perspective

உலகத்திலுள்ள ஒவ்வொரு சாதியைப் பற்றி சமூக மானிடவியல், இனவரலாறு வழக்காற்றியல் மற்றும் கல்வெட்டியல் ஆய்வுகள் நிகழ்த்தவேண்டியது இன்றைய காலகட்டத்தின் மிகத் தேவையான ஒன்றாக உள்ளது. ஏற்கனவே எழுதப்பட்ட வரலாறு என்பது பெரும்பாலும் அரசர் மற்றும் ஆதிக்க சாதித் தலைவர்களின் வரலாறாகவே இருக்கிறது. தற்பொழுது எழுத்து வடிவில் இருக்கும் வரலாறு மிகுதியும் மேல்தட்டு வர்க்கத்தினரால் எழுதப்பட்டிருப்பதுடன் மேட்டிமைப் பார்வையுடன் எழுதப்பட்டுள்ளது.

**எழுதப்பட்ட வரலாறுகளின் இயல்புகள்**

பொதுவாகத் தமிழக வரலாற்றை எழுதியவர்கள் அரச மரபினரின் வரலாற்றைச் சொல்வதிலேயே அதிகக் கவனம் செலுத்தியுள்ளனர். சங்க காலம் குறித்து எழுதிய என். சுப்பிரமணியன், பல்லவர் காலம் பற்றி எழுதிய மா. இராசமாணிக்கனார், சோழர் காலம் பற்றி எழுதிய சதாசிவப்பண்டாரத்தார், கே. ஏ. நிலகண்ட சாஸ்திரி போன்றோரின் பார்வைகள் தமிழக வரலாற்றை அரச மரபினரின் வரலாறாகவே சொல்லியிருக்கின்றன. விஜயநகரப் பேரரசைப் பற்றியும் நாயக்க மன்னர்கள் பற்றியும் எழுதிய டி.வி. மகாலிங்கம், எஸ். கிருஷ்ணசாமி ஆகியோரின் நூல்களிலும் அத்தகைய பார்வைகளே கிடைக்கின்றன. அரசர்கள் வழங்கிய பிரம்ம தேயங்கள், தானங்கள், உரிமைகள், தண்டனைகள் பற்றிய செய்திகளைப் பதிந்து வைத்த கல்வெட்டுக்களையும், அரசர்களின் பரம்பரைகளைச் சொல்லும் செப்பேடுகளையும் பயன்படுத்தி எழுதப்பட்ட வரலாறுகள் அப்படித்தான் இருக்க முடியும் என்கிறார் அ. ராமசாமி. ‘கீழ்த்தட்டு மக்களின் வரலாறு தான் உண்மையான மக்களின் வரலாறாக இருக்க முடியும் அதைத் தவிர்த்து அரசர்களின் வரலாறு கற்பிக்கப்பட்டது, தவறானது’. என்கிறார் வெ.பன்னீர் செல்வம்.

A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**கீழிருந்து எழுகின்ற வரலாறு**

இன்றைய காலகட்டத்தில் வரலாற்றைக் கீழிருந்து (History from below) எழுத வேண்டும் என்று வரலாற்று அறிஞர்களும் சமூகவியல் அறிஞர்களும் வலியுறுத்தி வருகின்றனர். எழுதப்பட்ட தலித் வரலாற்றிலும் தமிழக 'அருந்ததியர்' வரலாறு அதிகமாக இடம்பெறவில்லை. ஆனால் அருந்ததிய மக்களுக்கென்று கௌரவமான கடந்த காலமும் தனித்ததொரு நீண்ட வரலாறும் இருந்திருக்கிறது. அது திட்டமிட்டே எழுதப்படாமல், பதிவுசெய்யப்படாமல் மறைக்கப்பட்டுள்ளது. தமிழக மக்கள் வரலாறு நடு நிலைமையுடன் பதிவு செய்யப்படவில்லை என்று கருத இடமுள்ளது.

ஒடுக்கப்பட்ட சமூக மக்களின் வரலாற்றை எழுதப்பட்ட வரலாறுகளிலிருந்து காண்பது ஒருபக்கச் சார்புடையதாகவே இருக்கும். மாறாகத் தலித் மக்களின் வரலாற்றைக் கல்வெட்டுக்களின் துணைகொண்டு மீட்டுருவாக்கம் செய்வதுதான் முறையானதாகவும் உண்மையானதாகவும் இருக்க முடியும். அந்த வகையில் வரலாற்றில் புறக்கணிக்கப்பட்ட தமிழக ஆதிகுடிகளான அருந்ததியர்களின் வரலாற்றை கல்வெட்டுக்கள் வழிக் கட்டமைக்க முடியும். இந்திய மானிடவியல் மதிப்பகம் வெளியிட்டுள்ள 'இந்திய மக்கள்' (People of India) என்னும் இனவரைவியல் ஆய்வின்படி தமிழகத்தில் 364 சமூகங்கள் உள்ளதாக அறிய முடிகிறது. கல்வி மற்றும் வேலை வாய்ப்புகளில் இட ஒதிக்கீடு செய்வதற்காகப் பழங்குடியினர், தாழ்த்தப்பட்டோர், பிற்படுத்தப்பட்டோர், மிகவும் பிற்படுத்தப்பட்டோர் எனத் தமிழ் நாட்டில் வாழும் சாதியினர் குறித்துப் பட்டியல் ஒன்றைத் தமிழ்நாடு அரசு உருவாக்கியுள்ளது. (Primary Census Abstract-1995). இப்பட்டியலில் இடம் பெற்றுள்ள சாதிகளில் 78 சாதியினர் தாழ்த்தப்பட்ட சாதியினராக வகைப்படுத்தப்பட்டுள்ளனர். இவற்றைப் பட்டியலிடப்பட்ட சாதிகள் (Scheduled Castes) என்று அரசுப் பதிவேடுகள் குறிக்கின்றன. இவ்வெழுபத்தியெட்டு சாதியினருள் பள்ளர், பறையர், சக்கிலியர் ஆகிய மூன்று சாதியினரும் பிற தாழ்த்தப்பட்ட சாதியினரை விட எண்ணிக்கையில் மிகுதியாக உள்ளனர்.

மேற்குறிப்பிட்ட மூன்று சாதிகளுள் முக்கியமானது 'சக்கிலியர்' சாதியாகும். தமிழ்-தெலுங்கு மொழி பேசும் இச்சாதியினர் தமிழ்நாடு முழுவதும் பரவி வாழ்ந்தாலும் தமிழகத்தின் மேற்கு மாவட்டங்களில் அதிக அளவும் தெற்கு மாவட்டங்களில் ஓரளவும் வாழ்ந்து வருகின்றனர். தமிழ் நிலப்பகுதியில் சக்கிலியர், மாதாரி, மாதிகா, பகடை, தோட்டி, தொம்மன், செம்மான், ஆதி ஆந்திரர், ஆதி கர்நாடகர், மாதியவார், முரசர், அருந்ததியர் என்று பல பெயர்களில் அழைக்கப்படுகின்ற இச்சாதியினர் தங்களை 'அருந்ததியர்' என்ற பெயரால் அழைக்கபடவே விரும்புகின்றனர். அருந்ததியர், சக்கிலியர், மாதாரி, மாதிகா, பகடை, தோட்டி, ஆதி ஆந்திரா ஆகிய சாதிகளை ஒருங்கிணைத்து 'அருந்ததியர்' என்று தமிழக அரசு ஆணை பிறப்பித்துள்ளது. (G.O.Ms.No.55. Personal and Administrative Reforms (S), 8th April, 2010). தமிழ் நாட்டிலுள்ள அருந்ததியர்களை அவர்கள் பேசும் மொழி அடிப்படையில் தெலுங்கு பேசும் அருந்ததியர், கன்னடம் பேசும் அருந்ததியர், தமிழ் பேசும் அருந்ததியர் என மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

ஆதிக்க சாதியினருக்குச் சமமான இன வரலாறு அருந்ததிய இனத்தாருக்கும் இருக்கிறது என்னும் உண்மை கல்வெட்டியல் ஆய்வு மூலம் வெளிப்படும். தமிழகத்தில் சக்கிலியர் (அருந்ததியர்) இனத்தினர் தலித் சமூகத்தினராக அறியப்படுகின்றனர். இச் சமூகத்தினர்க்கெனப் பூர்வீக வரலாறு, கதைகள், கதைப்பாடல்கள், இலக்கியங்கள், கொண்டாட்டங்கள் முதலானவை காணக் கிடைக்கின்றன. இவற்றின் வழி இம்மக்களின் மரபு,

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019
Available at: www.ijtlls.com

சமூக வரலாறு மற்றும் பண்பாட்டு வேர்களைக் கண்டறியும் வாய்ப்பு உள்ளது. தமிழகத்தின் ஆதி குடிகளான சக்கிலியர்-அருந்ததியர் பற்றிய சமூக வரலாற்றைக் கல்வெட்டுக்கள், பட்டயங்கள் வழிக் கட்டமைப்பதாக இக் கட்டுரை அமைகிறது.

**கல்வெட்டுகள் காட்டும் அருந்ததியர் வரலாறு**

கிருஷ்ண தேவராயர் காலத்தில் தான் (1509-1529) அதாவது 16-ஆம் நூற்றாண்டில் தான் சக்கிலியர்கள் தமிழ் நாட்டில் குடியேறினார்கள் என்ற கருத்து நிலவுகிறது. ஆனால் பதினாறாம் நூற்றாண்டிற்கு முன்னரே தமிழ் நாட்டில் சக்கிலியர்கள் வாழ்ந்ததற்கான கல்வெட்டுச் சான்றுகள் கிடைத்துள்ளன. அவை காலவாரியாக இங்கே பதிவு செய்யப்படுகின்றன. "சேலம் மாவட்டம் டேனிஷ் பேட்டையிலிருந்து இராமமுர்த்தி நகர் செல்லும் வழியில் கேட்டநாயக்கன் புதூர் என்னும் இடத்தில் 'பெரியசக்கிலிச்சி ஏரி' என்ற பெயரில் ஏரி ஒன்று உள்ளது. அதன் கரையில் ஒரு மதகின் அருகில் இரண்டு கல்வெட்டுக்கள் உள்ளன. அவை ஏரியின் உட்பக்கமாக உள்ளன. அவற்றை அந்த ஊர்ச் சேரி மக்கள் பெரிய சம்பம்மா, சின்னச் சம்பம்மா என்ற இரு பெண் தெய்வங்களாகப் பாவித்து வணங்கி வருகின்றனர். அவ்விரண்டு கற்களும் கி.பி. எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த வட்டெழுத்தில் அமைந்துள்ளன. இரண்டு கல்வெட்டுக்களின் வாசகமும், 'ஸ்ரீ கிடங்கல் புலியார்மகனல்லி ஓட்டை கண்டது' எனத் தொடங்குகிறது.

இந்தக் கல்வெட்டு வாசகத்திலிருந்து சில அரிய உண்மைகள் புலப்படுகின்றன. அந்த ஏரியின் பழைய பெயர் 'ஸ்ரீ கிடங்கல்' என்பதாகும். 'கிடங்கல்' என்பது நீர் நிலையைக் குறிக்கும். அதில் நல்லி என்பவன் ஒரு மதகு வைத்துள்ளான். மதகை ஓட்டை எனக் குறிப்பிட்டுள்ளார்கள். நல்லியின் தகப்பனார் பெயர் புலியார். இன்றுவரை அதனைச் சக்கிலியர் தமது தெய்வமாக வணங்கி வருவதால் இப்பெருமகன் அந்தக் குலத்தைச் சேர்ந்தவர் எனக் கருதலாம். மதகு வைத்த செய்தி எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்ததால் ஏரி அதற்கு முந்திய காலத்தது என்பதும் புலனாகும். தமிழ் வட்டெழுத்துக் கல்வெட்டுக்களில் அருந்ததியர் பற்றிய குறிப்புக்கள் இடம் பெறுவதனடிப்படையில் அருந்ததியர்கள் தமிழகத்தின் பூர்வ குடிகள் என்ற முடிவுக்கு வர முடிகிறது.

விழுப்புரம் மாவட்டத்திலுள்ள செஞ்சிக்கோட்டையின் ஒரு பகுதியாக 'சக்கிலி துர்க்கம்' என்ற மலைக்கோட்டை உள்ளது. இது இயற்கை அரண்களால் ஆனது. சந்திரகிரி என்ற அருந்ததிய மன்னனின் பெயரிலான 'சந்திரகிரிக் கோட்டை' பின்னாளில் செஞ்சிக் கோட்டை என அழைக்கப்பட்டிருக்க வாய்ப்புள்ளது. கோட்டையின் முகப்புப் பலகையில் உள்ள 'சக்கிலி துர்க்கம்' என்ற பதிவு இதனை உறுதிப்படுத்துகிறது. 11 மற்றும் 12-ஆம் நூற்றாண்டில் தமிழ் நாட்டில் அருந்ததியர்கள் வாழ்ந்ததற்கான ஆதாரங்களாகச் சில கல்வெட்டுச் சான்றுகள் கிடைத்துள்ளன. திருவண்ணாமலை மாவட்டத்தில் உள்ள செங்கத்தில் உள்ள ரிஷபேஷ்வரர் கோவில் கல்வெட்டில் கீழ்க்கண்ட வரிகள் இருக்கின்றன. 'நியாயத்தாரும் பன்னிரண்டு பணிமக்களுமுள்ளிட்ட பெரும் வேடரும் பாணரும் பறைமுதலிகளும் செக்கிலியரும் இறுளரும் முள்ளிட்ட அனைத்துச் சாதிகளும் அந்தணன் தலையாக அறிப்பான் கடையாக உள்ளுப்பட்ட அனைத்துச் சாதிமாற்கு'. (South Indian Inscription, Vol.7, p.49). இக்கல்வெட்டின் காலம் கி.பி.1258 ஆகும்.

திருவண்ணாமலைக் கல்வெட்டில் பின்வருமாறு காணப்படுக்கிறது. 'பசு விடுகையாலும் ஐந்தலை மணியிடுகையாலும் மெகடுக்குகைய்க்கு சக்கிலிக்கு தெரிசனம் காட்டி தொலாலே செய்த திருவடி நிலைக்கு மெகடுக்குகைய்க்கு பத்துக்குப் பொத செம்பொன்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

அறுகழஞ்சுயிடுகையாலும்' (South Indian Inscription, Vol.7, p.68). இக்கல்வெட்டில் குறிப்பிடப்பட்டிருக்கும் ஆண்டு கி.பி.1202 ஆகும்.

கர்நாடகாவின் தமிழ் நாட்டு எல்லையாயில் இருக்கும் கோலார் மாவட்டத்தின் சிந்தாமணித் தாலுக்காவிலுள்ள கைவாரா என்னுமிடத்தில் உள்ள தமிழ்க் கல்வெட்டு ஒன்றில் கீழ்க்கண்டவாறு குறிப்பிடப்பட்டுள்ளது. 'ஜொம்மண்ண உடையார் மகமை மக்க திரை கார்த்திகை பாடி உள்ளயும்…நாட…நாய் ஆடு திரை தாம…கை தெண்டம் உண்டிகை எ…யும்…காணிபட்டு நார் எண்ணெய் நால் எருது நார் பசு நால் எருமை நளி…ந்த…தாகு இரும்பு சக்கிலித்திரை வெற்றிலை…மை மற்றுமும் ஊர்…பா…காணிக்கயும் சர்வ மானியம் ஆக' (Epigraphy of Carnatika vol.10) இக்கல்வெட்டில் குறிப்பிடப்பட்டிருக்கும் ஆண்டு கி.பி.1374 ஆகும்.

திருவண்ணாமலையில் கிடைத்துள்ள இன்னொரு கல்வெட்டு இவ்வாறு குறிப்பிடுகிறது. '…செப்பத்தத்துக்கு துணை நிலமாக இட்ட கிழன் மேலாய்க் கிடக்கும் வாவைக்கும் வடக்கில் நாலடியில் கிழைவாவையில் கீழ்வரம்புக்கு வடக்கும் மெல்பார்க்கெல்லை வடக்கின் நாலடியர் வடவரம்புக்கும் சக்கிலியன் குண்டிலுக்கும் பெருநான் கெல்லை நத்தத்தில் நாறுகாலுக்குக் கிழக்கும் வடபார்க்கெல்லை…' (South Indian Inscription, Vol.8, p.36). இக்கல்வெட்டின் காலம் கி.பி.1030 ஆகும்.

ஜெயவீரதேவன் தனது 'செருப்பு' என்னும் நூலில் சக்கிலியர் குறித்த இன்னொரு கல்வெட்டுச் சான்றைப் பதிவு செய்துள்ளார். (2010: 27) அது பிற்காலச் சோழர் காலக் கல்வெட்டு ஆகும். அக்கல்வெட்டில், 'எனக்கு சரி இன்னாத சக்கிலியன் செருப்பும் எடுத்துத் தம்பலமும் தின்றவனாவேன்.' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

திருவரங்கக் கோவில் கல்வெட்டில், 'முதலாம் குலோத்துங்கன் ஆட்சியேறிய அடுத்த ஆண்டில் அதாவது, அம்மன்னன் ஆட்சிப்பொறுப்பேற்ற இரண்டாவது ஆண்டான கி.பி. 1071-ஆம் ஆண்டு நித்த வினோத வளநாடு என்று அழைக்கப்பட்ட இன்றைய பாபநாசம், நன்னிலம் பகுதிகளில் அமைந்திருந்த இராசமகேந்திர சதுர்வேதி மங்கலம் என்ற பிரம்மதேய பார்ப்பன கிராமங்களில், வலங்கைக்கும் இடங்கைக்கும் இடையே நேரடியாக ஒரு மாபெரும் போராட்டம், கைகலப்பு, கலவரம் நடந்தது. இந்தப் போராட்டத்தில் வலங்கைப் பிரிவில் பறையரும் இடங்கைப் பிரிவில் அருந்ததியரும் பள்ளரும் கலந்து கொண்ட செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. இதே முதலாம் குலோத்துங்கனது ஆட்சியில் 1091-ஆம் ஆண்டும் இது போல வலங்கைக்கும் இடங்கைக்கும் இடையே சண்டை நடந்துள்ளதைக் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. பார்ப்பனர்கள் வேளாளர்களின் ஆதிக்க அதிகாரத்திற்கு எதிராக வலங்கை 98 சாதியினரும் இடங்கை 98 சாதியினரும் இணைந்து ஓர் ஒப்பந்தம் செய்து அவர்களை எதிர்த்ததாக ஆடுதுறைக் கல்வெட்டு கூறுகிறது. வடபாதி மங்கலத்தில் வலங்கையும் இடங்கையும் இணைந்து ஒப்பந்தம் செய்து அரசதிகாரத்திற்கு எதிராகப் போராடும் போது அடக்குமுறைக்கு ஆளாகி இவர்கள் ஊரைவிட்டு வெளியேறியதாகக் கல்வெட்டு கூறுகிறது. (எழில் இளங்கோவன், அருந்ததியர் வரலாறும் பண்பாடும், 2002 : 37-38)

இங்குத் தரப்பட்டுள்ள கல்வெட்டுக்களில் காலத்தால் முந்தியது கி.பி. 1030-ஆம் ஆண்டின் கல்வெட்டு ஆகும். அக்கல்வெட்டில் ஒரு குறிப்பிட்ட இடத்தின் பெயர் 'சக்கிலியன் குண்டில்' என வழங்கப்படுவதை கல்வெட்டு குறிப்பிடுகிறது. ஒரு இடத்திற்கு அவ்வாறு பெயர் வழங்கப்பட்டதை முன்னிட்டு சக்கிலியர்கள் அதற்கும் வெகுகாலத்திற்கும் முன்பாக அங்கு வாழ்ந்திருக்கிறார்கள் என்பதை நாம் உறுதியாக அறிந்து கொள்ளலாம். சோழர்காலக்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கல்வெட்டு ஒன்று பறை முதலிகளும், சக்கிலிமுதலிகளும், கைக்கோள் முதலிகளும், வெள்ளாள முதலிகளும் கிராம சபையில் இடம் பெற்றிருந்ததை சுட்டிக் காட்டுகின்றது.

கி.பி. 1397- ஆம் ஆண்டு செங்கல்பட்டு மாவட்டக் கல்வெட்டொன்றில் 'சக்கிலிப்பட்டடை (iw)' (தோல் தொழிற் கூடம்) என்ற சொல்லாட்சி கிடைத்துள்ளது. (ஆ. சிவசுப்பிரமணியன். 'படித்துப் பாருங்களேன்', அமராவதி: வரலாறு, தொல்லியல், கல்வெட்டு, நாணயவியல் நூல் குறித்த கட்டுரை, உங்கள் நூலகம், செப்டம்பர் 2017, பக்:7) ராமநாதபுரம் மாவட்டம் திருப்புல்லாணி தாலுகாவில் 'சக்கிலியன் குடியிருப்பு' என்ற சிறிய கிராமமும், திருநெல்வேலி மாவட்டம் வாசுதேவநல்லூர் அருகில் 'சக்கிலியன் காணி' என்ற ஒரு இடமும், தருமபுரி மாவட்டம் அரூர் தாலுகாவில் 'சக்கிலிபட்டி' என்ற கிராமமும், திருவண்ணாமலையிலுள்ள செஞ்சிக்கோட்டை அருகில் 'சக்கிலியன் குன்று' -உம், தூத்துக்குடி மாவட்டம் ஓட்டப்பிடாரம் தாலுகாவில் உள்ள ஆவாரங்காடு கிராமத்தில் 'சக்கிலியன் குளமும்' வழக்கில் இருப்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

### நெறித்துணை நூல்கள்

1. சண்முகன். ச கொடுமுடி, 1994. பழந்தமிழர் பொறியியல் நுட்பங்கள்- முதல் பகுதி, சென்னை: மீனா கோபால் பதிப்பகம்.
2. தர்ஸ்டன்,எட்கர். (தமிழில் க. ரத்தினம்), 2003 (1975), தென்னிந்தியக் குலங்களும் குடிகளும் (தொகுதி ஐந்து), தஞ்சாவூர்: தமிழ்ப் பல்கலைக்கழகம்.
3. பன்னீர்செல்வம்,வெ. 2008, அருந்ததியர் யார்?- ஒரு வரலாற்றுப் பார்வை, கோயம்புத்தூர்: வாகை பதிப்பகம்.
4. மதிவண்ணன். ம, 2012, அறிஞர்களின் புரளியும் அருந்ததியர் வரலாறும், வெள்ளைக் குதிரை (ஜூலை-ஆகஸ்டு, 2012) இதழிலுள்ள கட்டுரை, கோவை.
5. மாற்கு, 2001, அருந்ததியர்: வாழும் வரலாறு, பாளையங்கோட்டை: நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மையம்.
6. ரகுபதி.கோ. 2008. தீண்டப்படாதவர்களின் தீண்டப்பட்ட அறிவியல் தொழில் நுட்பம், பக்.8-15. புதுவிசை, ஏப்-ஜுன், 2008).
7. ராமசாமி. அ. 2009. ரவிகுமார், மீளும் வரலாறு: அறியப்படாத நந்தனின் கதை நூலுக்கு எழுதிய மதிப்புரை, சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.
8. Dumont, Louis (Translated from French by M.Moffatt.L. and A.Morton). 1986. A South Indian Sub-caste: Social organization and religion of the Piramalai Kallar. Delhi: Oxford University Press.
9. Krishnamoorthy. A. 2017. Arunthathiyar: The Grate Leather Workers of Tamil Nadu-Life & History> Chennai: Nagalagam Publication.
10. Moffat, Michael. 1979. An Untouchable Community in South India: Structure and Consensus. Princeton, NewJersey: Princeton University Press.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies 
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தமிழக வரலாற்றில் முதல் தீப்பாய்ந்தம்மன்
# The First Woman who Committed Sati in Tamil Nadu History

**முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை,**

பேராசிரியர் & இயக்குநர், தமிழ்ப்பண்பாட்டு மையம், அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி-3.

## Abstract

*The purpose of the study is to bring out the traces of the first woman who committed sati in the chronicle of Tamil Nadu. Woman who entered sati are revered as woman of high repute and chaste. They are later given status as county deities. Some small temples at Theepenjayi Amman Temple at Cuddallore road and in Venkitammal memorial temple at Perumalpatti of Virudhunagar District are certain examples such incidents of sati practice. Thus, this article brings down the related evidences through the culverts and temple evidences.*

**Keywords:** First Woman, Sati, Tamil Nadu History

தமிழர்களின் தெய்வ வழிபாட்டு மரபில் தீப்பாய்ந்த அம்மன் என்னும் பெண் தெய்வத்திற்குத் தனித்ததோர் இடமுண்டு. கணவன் இறந்தவுடன் அவனுடன் சிதையில் ஒன்றாகவோ, அல்லது தனித்து நெருப்பு மூட்டியோ இறந்து படும் மகளிரையும் இடுக்கணுடைய புறச்சூழலில் இருந்து தற்காத்துக் கொள்வதற்காகத் தீப்பாய்ந்தவர்களையோ தீப்பாய்ந்தம்மன் என்னும் பெயரில் வழிபடும் மரபு உண்டு. இருபதாம் நூற்றாண்டிலும் கணவனோடு உடன்கட்டை ஏறியவர்கள் கடவுளாகவே கருதப்பெற்றனர். தீப்புகுந்து உயிர் துறந்தவர்கள் தீப்பாய்ந்தம்மன் என்ற பெயரில் பல கோயில்களில் தெய்வங்களாக வழிபடப் பெறுகின்றனர். சான்றாகத் தென்னார்க்காடு மாவட்டம் கடலூர் குடந்தைச்சாலையில். உள்ள தீப்பாஞ்சாயி அம்மன் கோயில், தென்னார்க்காடு மாவட்டம், சிதம்பரம் வட்டம், புதங்குடி என்னும் கிராமத்திலிருக்கும் தீப்பாய்ந்தம்மன் கோயில், விருதுநகர் மாவட்டம், பெருமாள்பட்டியிலுள்ள தீப்பாய்ந்தம்மன் கோயில் போன்றவற்றைக் கூற இயலும். பெருமாள்பட்டியைச் சேர்ந்து வெங்கிட்டம்மாள் என்னும் பெண்ணின் கணவர் சாப்டூர் மலையில் மாடு மேய்க்கச் சென்றபொழுது பாம்பு தீண்டி இறந்துபட்டார். இதனையறிந்த வெங்கிட்டம்மாள் சாப்டூர் சமீன்தாரிடம் சென்று நான் என் கணவர் சிதையில் விழுந்து தீக்குளிக்கப்போகிறேன். அதனால் நீங்கள் சந்தனக் கட்டை வழங்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அதற்கிணங்க சமீன்தாரும் பெருமாள்பட்டிக்கு வண்டி நிறையச் சந்தனக்கட்டையை அனுப்பி வைத்தார்.

வெங்கிட்டம்மாளும் கணவருடன் உடன்கட்டை ஏறினார். வெங்கிட்டம்மாள் தீப்பாய்ந்த இடத்தில் அவருக்குக் கோயில் கட்டப்பட்டுள்ளது. இன்றும் ஒவ்வோர் ஆண்டும் சித்ரா பௌர்ணமியன்று நடக்கும் தீ வளர்ப்பு விழாவிற்கு சமீன் பரம்பரையைச் சேர்ந்தவர்கள் சந்தனக்கட்டை, மல்லிகைப்பூ, பட்டுப்புடவை ஆகியவற்றைக் கொண்டு வந்து கொடுக்கும்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019
Available at: www.ijtlls.com

வழக்கத்தைப் பின்பற்றி வருகின்றனர். தீப்பாய்ந்த வெங்கிட்டம்மாள் இனத்தைச் சார்ந்தவர்கள் பிறக்கும் பெண் குழந்தைகட்கு வெங்கிட்டம்மாள் என்று பெயரிடும் மரபைப் பின்பற்றி வருகின்றனர்.(தகவலாளி வெங்கிட்டம்மாள் பெருமாள்பட்டி, 23-10-13) இங்ஙனம் கணவன் சிதையில் தீப்பாய்ந்து இறந்த மகளிர்க்குக் கோயில் எடுத்து வழிபடல் என்னும் மரபு உள்ளநிலையில் முதல் தீப்பாய்ந்தம்மன் யாரொனெும் தேடலுக்குக் கிடைத்த விடை பெருங்கோப்பெண்டு என்பதாகும். இப்பெருங் கோப்பெண்டு எனும் முதல் தீப்பாய்ந்தம்மன் குறித்து விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**வரலாற்றில் பெருங்கோப்பெண்டு**

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்க இலக்கியமாகிய புறநானூற்றில் ஒல்லையூர் என்னும் பகுதியை ஆண்ட பூதப்பாண்டியன் என்னும் பாண்டிய மன்னனின் மனைவியாகப் பெருங்கோப்பெண்டு என்னும் பெண்மகள் சுட்டப் பெறுகிறார். இவர் தம் அன்புக் கணவனைச் சிறுபொழுதும் பிரிந்து இருக்க விழையாதவள். கணவன் பூதப்பாண்டியனும் மனைவி மாட்டுக்கருத்தொருமித்த காதல் கொண்டவன். அவனோடு பொருதழிக்க வந்த மாற்றாரை வஞ்சினம் மொழிந்தழிக்கின்றபொழுது. ‘பேரமர் உன் கண் இவளினும் பிரிக' என்கிறான். இத் தொடர் பெருங்கோப்பெண்டு, பூதப்பாண்டியனின் இல்லற மாண்பிற்கு எடுத்துக்காட்டாகும். அறிவும் ஆற்றலும் புலமையும் ஒரு சேர வாய்க்கப் பெற்ற பேரரசி பெருங்கோப்பெண்டு. அவள் கணவன் இறந்த செய்தி செவியகம் கேட்டதும் கணவனுடன் உடன்கட்டை ஏற முற்படுகிறார். அங்கிருந்த அமைச்சர், புலவர் உள்ளிட்டோர் தடுத்த போது பெருங்கோப்பெண்டு,

> **“பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டீமம்**
> **நுமக்கரி தாகுக தில்ல எமக்கெம்**
> **பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற**
> **வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை**
> **நள்ளிரும் பொய்கையும் தீயுமோ ரற்றே” (புறநா.247:11-15)**

எனக் கூறி எரியிடைப்புகுந்தாள். பத்தினிப் பெண்டிருக்குப் பொய்கையும் தீயும் ஒத்த தன்மையாயினமையை இந்நிகழ்வு காட்டும். பெருங்கோப்பெண்டு எரி புகுதலைக் கண்ட பேராலவாயர் எனும் புலவர், அரண்மனையில் தன் கணவனைச் சிறிது பொழுதும் காணாது கழியினும் வாடிப்போகும் பெருங்கோப்பெண்டு அவன் இறந்த சூழலில் அணங்குடை தேவி முற்றத்து நீர் வடிந்த மயிர் முதுகில் புரளப் புறங்காட்டைப் பார்த்துக் கண்கள் கழலா நிற்பாள் என்பர் மதுரைப் பேராலவாயர். இதனை,

> **.......................... அணங்குடை முன்றிலின்**
> **நீர்வார் கூந்த லிரும்புறந் தாழப்**
> **பேரஞர்க் கண்ணன் பெருங்காடு நோக்கித்**
> **முழவுகண் டுயிராக் கடியுடை வியனகர்ச்**
> **சிறுநனி தமிய ளாயினும்**
> **இன்னுயிர் நடுங்குந்த னிளமைபுறங் கொடுத்தே. (புறநா.247:4-9)**

என்னும் அடிகள் புலப்படுத்தும். இங்ஙனம் வரலாற்றில் முதன்முதல் தீப்பாய்ந்த பெண்ணாகப் பெருங்கோப்பெண்டு விளங்குகிறார். தீப்பாய்ந்தவர்களைத் தெய்வமாக வழிபடுவது தமிழர் வழக்காதலால் பெருங்கோப்பெண்டிற்குக் கோயில் உள்ளதா என்று தேடியபொழுது பெருங்கோப் பெண்டிற்கு மட்டுமன்றி அவள் சிதை புகுந்தவிடத்திருந்த புறங்காட்டுக்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கொற்றியாகிய காளிக்கும் சேர்த்துச் ஒலியமங்கலம் என்னும் ஊரில் கோயில் உள்ளதை அறியமுடிந்தது.

இங்ஙனம் எரிமூழ்கும் பெண்களுக்குக் கோயில் எடுத்துடன், எரிமூழ்கிய பெண்கள் ஏனைய பெண்களுக்கு இவ்வுலக வாழ்வில் நன்மையளிப்பார்கள் எனவும் நம்பப்பட்டது. இத்தகைய பெண்களுக்கு அளிக்கப்பட்ட எல்லையற்ற உயர்வும், தெய்வீகத் தன்மையின் ஏற்றமும், ஒருங்கே அவர்களை உயர்த்திக் காட்டியதுடன், நோயுற்ற காலத்திலும், துன்புற்ற காலத்திலும் இப்பெண்களிடம் ஏனையோர் அருள் வேண்டி நின்றனர். இவர்கள் உடன்கட்டை ஏறிய இடத்தில் நினைவுச் சின்னங்கள் எழுப்பப்பட்டன. இவ்வாறு கணவனுடன் மாய்ந்த பெண்களுக்கு நினைவுச் சின்னம் எழுப்பும் வழக்கம் இருந்ததை.

**“அருந்தவர்க்காயினும் அரசர்க்காயினும்**
**ஒருங்குடன் மாய்ந்த பெண்டிர்க் காயினும்**
**நால் வேறு வருணப் பால்வேறு காட்டி**
**....சுடும ணோங்கிய நெடுநிலைக் கோட்டமும்” (மணிமேகலை,6:54-59)**

என்னும் மணிமேகலை அடிகள் உணர்த்தும்.

**திருக்கோயில் அமைவிடம்**

இன்றைய புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள ஒலியமங்கலம் என்னும் ஊரிலேயே பெருங்கோப்பெண்டு மங்கலநாயகி என்னும் பெயரில் கோயில் கொண்டுள்ளாா். இவ் ஒலியமங்கலம் சங்க காலத்தில் ஒல்லையூா் என அழைக்கப்பட்டது. கடைச் சங்ககாலத்தில் பாண்டிய நாட்டின் வடவெல்லைப் பகுதியாகிய ஒல்லையூா் நாட்டைப் பகைவரிடமிகுந்து பூதப்பாண்டியன் கைப்பற்றியமையால் ஒல்லையூா் தந்த பூதப்பாண்டியன் என்று அழைக்கப்பெற்றான். இவ்வொல்லையூரினைக் கல்வெட்டுகள் “கோனாடான கடலடையாத இலங்கை கொண்ட சோழ வளநாட்டுத் தென்கோனாட்டு ஒல்லையூர்க்கூற்றத்து ஒலிய மங்கலம் எனக் குறிக்கின்றன.(புதுக்கோட்டை மாவட்டக் கல்வெட்டு.349,386,541). அன்றைய ஒல்லையூா் நாடே இன்று ஒலிய மங்கலம் என அழைக்கப்பெறுகிறது. ஒலிமங்கலம் எனும் ஊரில் உள்ள தெய்வம் எனும் அடிப்படையில பெருங்கோப்பெண்டு மங்கல நாயகி என அழைக்கப்பெறுகிறாா்.

**திருக்கோயில் அமைப்பு**

ஒலியமங்கலம் பெரிய கண்மாயின் கீழ்க்கரையில் அமைந்துள்ள கற்கோயிலில் மங்கலநாயகியின் கருவறை கிழக்கு சோக்கிச் சதுர வடிவில் அமைந்துள்ளது. இதன் அருகிலேயே பத்திரகாளி என்னும் பெயரில் தனித்த கருவறையில் காளியின் கருவறை அமைந்துள்ளது. பெருங்கோப்பெண்டாகிய மங்கலநாயகி, காளி ஆகிய இருவா் சன்னதிகளையும் இனைத்து மகா மண்டபம் மற்றும் சபா மண்டபம் ஆகியவையும் இடம் பெற்றுள்ளன. பழங்கோயில் கற்கோவிலாகும். கருவறை அா்த்தமண்டபத்தோடு கூடிய கற்கோயில் காலவெள்ளத்தில் சிதைந்து பழுதுபட்டுப் போதைால் அவ்விடத்திலேயே புதிய கோயில் கட்டப்பட்டுள்ளது.

**மங்கலநாயகி எனும் பெருங்கோப்பெண்டின் திருவுருவ அமைதி**

தனித்த கருவறையில் அமைந்துள்ள, மங்கல நாயகி 18 அங்குல உயரத்தில் 9 அங்குல அகலத்தில் கல்திருமேனியாகக் காட்சியளிக்கிறாள். அருள் பொழியும் கண்கள். தலையில் கரண்டமகுடம் அணிந்து. நாற்கரத்தினளாய் வல, இடமேற்கரத்தில் அங்குசமும் பாசமும் ஏந்தி வல இடக் கலங்களில் அபய உபய முத்திரைகளோடு காட்சி தருகிறாள். பொதுவாக மங்கலச் சக்திகளுக்கு மலா்க்கரமும் தொங்கிய கரமுமாகவே காட்டுவா் சிற்பிகள்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

ஆழ்ந்து நோக்கின் வாழ்வாங்கு வாழ்ந்து தெய்வநிலை எய்தியக் காலும் கரங்கள் இரண்டாகவே படைக்கப்படுகின்றன. பாஞ்சாலி, திரெளபதியம்மன் ஆன போதும், கண்ணகி தெய்வமான போதும் இருகரத்தினரே. அவர்கள் பின்னர்க் காளியின் அம்சமாகவும் பெருஞ் சக்தியாகவும் மக்களால் வழிபடப்பெறும் நிலையில் கூடுதல் கரங்கள் காட்டப்பட்டன. வேறு வழியாகப் பார்க்கும் போது சிவனொடு சக்தி இணைந்திருக்கும் கோயில்களிவெல்லாம் சக்தி இருகரத்தினளாகவே காட்டப்படுவள். அதே சக்தி உலகைக் காக்கும் பேரன்னையாக உருக்கொண்டு தனிக் கோயிலில் எழுந்தருளும் போது கூடுதல் கரங்கள் படைக்கப்படுகின்றன. இங்ஙனமே பூதப் பாண்டியன் தேவியும் தனிப் பெருஞ் சக்தியாக வளர்ந்து ஒலியமங்கலத்தின் உயிர்ப்பைக் காக்கும் அன்னை ஆனபோது மிகுகரங்கள் அமைந்துள்ளன.

மங்கல தேவி அரசியாதலால் கழுத்தணியாகச் சரப்பளி, தோள்வளை, கடகம் முன்கை வளைல்கள் எல்லாம் அழகுற அணியப்பட்டுள்ளன. மேலும் முலைக்கண் வார்க்கச்சும், இடையணியும் முச்சரடும் முத்து மணிமாலையும், பட்டாடை, பாத சலங்கைகளும் அவரை அலங்கரிக்கின்றன. சுகாசன தேவியான மங்கல நாயகியின் வலக்கால் பாதத்தை விரிதாமரை தாங்கியுள்ளது.

இக்கற்படிமம் மட்டுமன்றி மகாமண்டபத்தின் மேல் தளத்தில் சுதைப்படிமமாகச் சாலவாரத்தில் கிழக்கு முகமாகச் சுகாகன தேவியாகவே மங்கலநாயகி வடிக்கப்பெற்றுள்ளார். கல்திருப்பணியை விட சுதைத் திருப்பணியில் அம்மனின் தோற்றம் அழகுக் கொஞ்சிக் கிடக்கிறது. வண்ணங்கள் தீட்டப்பட்ட அந்நாயகி முகத்தைப் பார்க்கும் போது பூதப் பாண்டியன் தேவி பெருங்கோப்கொண்டு உயிரோடு வந்து அரசு கொலுவீற்றிருப்பதாகவே தோன்றுகிறது. ஏகதள விமானத்தின் நாற்புறங்களிலும் அன்னையின் திருமேனி இடம் பெற்றுள்ளது. ஏகதள விமான தேவியர்களும் கரு வறையில் எழுந்துள்ள மூலவரைப் போலவே சுகாசன தேவியர்களாகவே காட்டப்பட்டுள்ளனர். சடாமகுடம் தரித்துப் பின்புறத்தில் ஒளிவட்டக்கோடு உயர்வாகக் காட்டப்பட்டுள்ளது.

**பத்திரகாளி திருவுருவம்**

பத்திரகாளி அன்னை இடது காலை மடக்கிப் பீடத்தின் மீது வைத்து வலது காலைத் தொங்கவிட்டுச் சுகாசனத்தில் அமர்ந்திருக்கின்றாள் தொங்கும் பாதம் விரிந்த தாமரை மலரில் உள்ளது. தலையில் கிரீட மகுடம் சூடியுள்ளாள். அழகிய எரிமுடி காட்டப்பட்டுள்ளது. முகத்தில் கருணை ஒளியும் அமைதியும் குடிகொண்டுள்ளன. கழுத்தைச் சரப்பளியும் காதினைக் குண்டலமும், மார்பினை முலைவார்க் கச்சு, உதரபந்தம், நூல்கள் ஆகியன அணி செய்கின்றன. இடையில் ஒட்டியாணம் உள்ளது. பத்திரகாளி அம்மன் வல, இட மேற்கரங்களில் உடுக்கை பாசம் கொண்டும் கீழ்க்கரங்களில் வலக்கையில் சூலத்தையும் இடக்கையில் உபயமுத்திரையும் காட்டி நிற்கின்றாள்.

**வழிபாட்டு மரபு**

மங்கலநாயகி, பத்திரகாளி ஆகிய இருவருக்கும் நாள்வழிபாடு உண்டு. இவ்விருவருக்கும் பொதுவாக நாவல்மரம் தலவிருட்சமாக உள்ளது. அம்மரத்தினை வெட்டினால் தீங்குவரும் என்ற நம்பிக்கை மக்களிடம் வேரூன்றியுள்ளது.

**நிறைவாக**

தீப்பாய்ந்தம்மன் என்றும் பெண் தெய்வ வழிபாட்டு மரபில் முதல் தீப்பாய்ந்த பெண்ணாகப் பெருங்கோப்பெண்டு விளங்குகிறாா். ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பு பெருங்கோப்பெண்டிற்கு எழுப்பப் பட்ட கோயில் இன்றைய புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள ஒலியமங்கலம் என்னும் ஊரில் இன்றும் காணக்கிடக்கின்றது. இங்கு மங்கலநாயகி

**E-ISSN: 2581-7140**

**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

என்னும் பெயரில் பெருங்கோப்பெண்டு தெய்வமாக வழிபடப் பெறுகிறார். இதில் இன்னொரு சிறப்பு பெருங்கோப்பெண்டு சிதைபுகுந்த ஈமக்காட்டிலிருந்த அணங்குக்கும் பெருங்கோப்பெண்டுடன் கோயில் அமைக்கப்பட்டு அவள் பத்திரகாளி என்னும் பெயரில் வழிபடப்பெறுவதும் தமிழர்களின் பண்பாட்டு மரபு பேணலுக்குச் சிறந்த சான்றாகும் மற்றைய தெய்வங்களைப் போலவே மங்கலநாயகி பெருங்கோப்பெண்டிற்கும், காளிக்கும் நாள்வழிபாடு நடைபெறுவதும் தலவிருட்சமாக நாவல்மரம் உள்ளமையும் இவ் வழிபாட்டு மரபின் சிறப்பினைப் புலப்படுத்தும்

**(இந்தக் கட்டுரை ரூசா - கட்டம் 2.0 (நிதி ஒப்புதல் கடித எண்: கு.24-51.∵.2014-U, Policy (TNMulti-Gen) கல்வித்துறை, இந்திய அரசு, நாள்:09.10.2018) ஆய்வுத் திட்டத்திற்காக எழுதப்பெற்றது.)**

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# கல்வெட்டுக்களில் சோழர்கால பெண்கள்
# Women of the Chola Period in Culverts

**செ. செந்தாமரை,** உதவிப்பேராசிரியர், வரலாற்றுத்துறை,
ஸ்ரீ மீனாட்சி பெண்கள் கலைக் கல்லூரி, மதுரை

## Abstract

*Tamil nadu is rich for culture and the times of the Chola kings are very much notable for its gradual rise in all sorts of life. The kings and the local administrators deputed by the king edicted many culverts to retain their acts in the history. So there are enormous culverts that speak of the life and its values to the people. Women are the integral part of the society life without them is nothing for a society. The chola's time are very noted for sculptiog and culvert cutting. There are lots of evidences speaking on women of all cadres. Informations on queeesn administrators, house wifes, slum women and devadasis were seen in the culverts. Hence, this paper tries to bring out informations of women from the culverts*

**Keywords:** Life Ethics, Tamil Culture, Valluvar

உலகம் வியக்கும் பெருங்கோயில்கள் மிகுந்த திருநாடு தமிழ்நாடு. ஊர்தோறும் கோயில்கள் இருந்தாலும் சோழநாட்டுக் கோயில்களுக்குத் தனிச்சிறப்பு உண்டு. சோழப் பேரரசர்களின் காலத்தில் கோயில்கள் வளர்ந்தன. நாட்டுக்கு வளம் சேர்த்தன. சோழர்கள் சிவபக்தர்களாக விளங்கினர் சைவ சமயத்தின் மீது ஆழமான பற்றுக் கொண்டிருந்த அவர்கள் நூற்றுக்கணக்கான சிவன் கோயிரகளைக் கட்டினர். ஒரு நாட்டின் கடந்தகால வரலாறு பண்பாடு பழக்கவழக்கங்கள் இவற்றை அறியத் துணை நிற்கும் வரலாற்றுச் சான்றுகளுள் கல்வெட்டுகள் முக்கிய இடம் பெறுகின்றன.

சோழர் காலக் கல்வெட்டுகள் கோயிலில் பூசை செய்வதற்கும், திருவமுது அளிப்பதற்கும், நித்திய நைமித்திங்களுக்கு வழங்கப்பட்ட கொடையைப் பற்றியும் பேசுகின்றன. பொதுமக்கள் சிலர் அளித்துள்ள கொடைகள் பற்றியும் குறிப்பிடுகின்றன. கொடைகள் செய்யப் பெற்றவர்களுள் சோழ அரசிகள், பெண்கள், தேவரடியர், பிராமணப் பெண்கள், தளிச்சேரிப் பெண்களின் பெயர்களும் கல்வெட்டில் அதிக அளவில் காணப்படுகின்றன. சோழர்கள் காலத்தில் சைவசமயம, வைணவசமயம், சமண சமயம் மற்றும் பௌத்த சமயம் தழைத்தோங்கியது.

### சோழர்கள் கால மகளிர் நிலை

சோழர்கால மகளிர் சமூக வாழ்க்கையிலும் செயற்பாடுகளிலும் கட்டுபாடுகள் இன்றிச் சுதந்திரமாக வாழ்ந்தனர் என்பதை கல்வெட்டுகளிலும் இலக்கியங்களிலும் காணலாம். சோழர்கள் காலத்தில் பெண்கள் சமஉரிமை பெற்றிருந்ததோடு மட்டுமல்லாமல் அதிகாரிகளாகவும் பணியாற்றியிருந்தார்கள். பெண்கள் சொத்துக்களில் சமஉரிமை பெற்றிருந்ததால் கோயில்களுக்கு கொடைகள் அளித்தனர்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**மகளிருக்கு சொத்துரிமை**

அக்கால சமுதாய அமைப்பில் பெண்களுக்கு சொத்துரிமை இருந்தது என்பதற்குக் கல்வெட்டு சான்றுகள் உள்ளன. திருமணத்தின் போது பெண்ணுக்கு சீதனமாக பொருளும் நிலமும் அவளுடைய தந்தையால் அளிக்கப்பட்டது. சீதனமாக மனைவிக்குக் கிடைத்தவற்றை விற்கும் உரிமை கணவனுக்கு இல்லை. கணவன் இறந்தபின் அவனது சொத்தில் மனைவிக்கும் பங்கிருந்தது. அப்படி தனக்கு உரிமையாக கிடைத்த நிலங்கள் சிலவற்றை மோகணாண்டதிரு என்பவள் கோவிலுக்கு கொடுத்தாள் என கல்வெட்டுச் செய்தி குறிப்பிடுகின்றன.

**உடன்கட்டை ஏறுதல்**

சோழர்கள் காலத்தில் கணவனை இழந்த பெண்கள் உடன் கட்டை ஏறி உயிர் நீத்த நிகழ்ச்சிகள் சிறிய அளவில் நிகழ்ந்துள்ளது என்பது கல்வெட்டு குறிப்புகளில் இருந்து அறியப்படுகிறது. முதலாம் பராந்தகன் காலத்தில் வீர சோழ இளங்கோவேள் என்ற கொடும்பாளுர் குறுநில மன்னனின் மனைவியான கங்கம்மா தேவியார் உயிர் நீத்த செய்தியை அல்லூர் கல்வெட்டு கூறுகிறது. முதலாம் இராசராசனுடைய தாயார் வானவன் மாதேவி தன் கணவன் சுந்தரசோழன் இறந்தவுடன் உடன்கட்டை ஏறிய செய்தியை திருக்கோவலூர் கல்வெட்டு கூறுகிறது. முதலாம் இராஜேந்ததிர சோழனின் மனைவி வீரமாதேவியார் என்பவரும் உடன்கட்டை ஏறினார் என்று பிரம்மதேசத்தில் உள்ள கல்வெட்டு கூறுகின்றது. நவில நாட்டு அழகிய சோழன் என்பவன் மறைந்து போன தன் மகனுடன் அவன் மனைவி உடன் கட்டை ஏறியதன் நினைவாக நந்தவனம் அமைத்தான்.

**அரசியர்**

சோழ அரசிகள் அரசர்களுக்கு இணையான உரிமை பெற்றிருந்ததால் தனிப்பட்ட முறையில் கோயில்கள் எழுப்பவும் கோயில் திருப்பணி செய்யவும் பொதுநலப்பணிகளில் ஈடுபடவும் உரிமை பெற்றருந்தனர்.

கண்டாராதித்த சோழனின் மனைவி செம்பியன் மாதேவி பல கோயில்களை எழுப்பியுள்ளார். கண்டாராதித்தன், பராந்தகச் சோழன், அரிஞ்சயன், உத்தமசோழன், முதலாம் இராசராசன் ஆகிய ஆறு மன்னர்களின் ஆட்சியை கண்டவர். சுமார் 60 ஆண்டு காலம் இறை மற்றும் கலைப்பணியில் ஈடுபட்டு ஏறக்குறைய 80 ஆண்டுகாலம வாழ்ந்தவா. தன்னை இறைபணியிலும் கலைப்பணியிலும் ஈடுபடுத்திக் கொண்டவர். இவர் கோனேரி இராசபுரம், திருக்கோடிக் காவல், அனங்கூர், செம்பியன் மாதேவி, ஆடுதுறை, குத்தாலம், திருவாரூர், திருவையாறு, விருத்தாசலம், திருவக்கரை போன்ற ஊர்களிலும் கோவில்களை கட்டியும் ஆலயங்களை கற்றளியாக்கியவர். பல கோயில்களுக்கு கொடை நல்கியும் ஏராளமான நிலங்களை இறையிலி நிலங்களாக வழங்கியுள்ளார். பல கல்வெட்டுகளில் செம்பியன் மாதேவி, உடைய பிராட்டியார், கண்டராதித்த தேவரின் தேவியார், உத்தமசோழ தங்களாச்சியார் என்றும் பல பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன. சிவ பக்தரான செம்பியன் மாதேவி திருவேள்விக்குடி திருப்புறம்பியம் கோயில்களுக்கு வெள்ளிக்கலசம் திருமழப்பாடி கோயிலுக்கு நிலங்கள் கொடையாகவும், செம்பியன் மாதேவிக் கோயிலுக்கு ஆபரணங்கள், திருவெண்காடு கோயிலுக்கு பல கொடைகளையும் கொடுத்துள்ளார்.

சமயப் பணியில் மிக முக்கிய இடம பெற்ற மறறொரு சோழஅரசி குந்தவை பிராட்டியார் ஆவார். இராசராச சோழனின் தமக்கையான குந்தவை ஏராளமான கொடைகளை கோயில்களுக்கு வழங்ககியுள்ளார். இக்கொடைகளைப் பற்றி தஞ்சை பிரகதீசுவரா கோயில் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. இக்கோயிலில் தம் தந்தை சுந்தர சோழனின் படிமத்தையும்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

தம் தாய் வானவன் மாதேவியின் படிமத்தையும் எழுந்தருளச் செய்தார். அவற்றிற்கு நிவந்தமாக பெரும் கொடையையும் வழங்கியுள்ளார். தஞ்சை நகரில் சுந்தர சோழ விண்ணகர ஆதுலர் சாலை என்னும் மருத்துவமனையையும் தம் தாய் தந்தையரின் நினைவாக நிறுவியுள்ளார். அம்மருத்துவமனையை நடத்துவதற்கு மருத்துவ காணியாக நிலத்தையும் அளித்துள்ளளர். தஞ்சை பிரகதீசுவரா கோயிலுக்கு பல அறக் கொடைகளையும் வழங்கியுள்ளார். தாதாபுரத்தில் இரவிக்குல மாணிக்க ஈசுவரம் என்ற சிவாலயத்தையும், குந்தவை விண்ணகர் ஆழ்வார் என்னும் திருமால் கோயிலையும் எடுப்பித்தார். மேலும் குந்தவை ஜீனாலயம் என்னும் சமணக்கோயிலையும் கட்டியுள்ளார்.

ஒலகமாதேவியார் இராசராசனின் பட்டத்தரசியாக விளங்கியவர். இவர் தஞ்சை பிரகதீசுவரா கோயிலுக்கு பிச்சதேவர் திருமேனியை எழுந்தருள்வித்தார். இது 15½ விரல் உயரமும் 10 விரல் அகலமும் உடையது. மேலும் பொன்னாலும் மணிகளாலும பல ஆபரணங்களை கொடையாக அளித்துள்ளார். ஒலகமாதேவிச்சரம் என்ற திருக்கோயில் திருவையாறில் இவ்வம்மையாரால் எடுப்பிக்கப்பட்டது. இத்திருக்கோயில் உத்தரக்கையிலாயம் என வழங்கப்பட்டது. இராசராசனின் 24-ஆம் கல்வெட்டுகள் இவர் அளித்த கொடைகள் பற்றி விவரிக்கின்றன. ஒலவிடங்கத் தேவர்க்கு பொன்னாலும் மணியாலும செய்யப்பட்ட ஆபரணங்கள் 18-ம் நம்பிராட்டிக்கு 19-ம் சுப்பிரமணிய தேவருக்கு 6-ம் அளித்துள்ளார். திருப்பரிகலங்கள் பொன்னால் மடலும் வட்டிலும் சாமரைக்கைகளும் வெண்கலத்தில் தட்டு சட்டுவம் எரிமணி தூபமணி முதலியணவும் அளிக்கப்பட்டன.

**அதிகாரிச்சிகள்**

சோழர்காலகத்தில் அரசிகளுக்கு பெண்கள் அதிகாரிகளாக பணியாற்றியுள்ளனர். அவர்கள் அதிகாரிச்சி என அழைக்கப்பட்டனர். ஒலகமாதேவி இட்ட ஆணையை எருதன் குஞ்சரமல்லி என்ற அதிகாரிச்சி நிறைவேற்றியுள்ளார் என திருவையாறு கல்வெட்டுக்கள் குறிப்பிடுகிறது. ராஜாதிராஜன் காலத்தில் சோமயன் அமித்திரவல்லி என்ற அதிகாரிச்சியும் இரண்டாம் இராசாதிராசன் மனைவி திரைலோக்கியமுடையாளுக்கு பொன்நங்கை என்ற அதிகாரிச்சியும் பணியாற்றியுள்ளனர் என்று திருமழப்பாடி கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. முதலாத் குலோத்துங்க சோழனின் தேவியாரின் அதிகாரிச்சி பற்றி திருப்புகலூர் கல்வெட்டு குறிப்பிடுகின்றன. சோழர்காலப் பெண்கள் அதிகாரிச்சிகளாக பணியாற்றியது நிர்வாகத்தில் பெண்கள் பணியாற்றியது பெண்களின் நிர்வாகத் திறமையை காட்டுகிறது.

**தளிச்சேரிப்பெண்கள்**

சோழர்கள் காலத்தில் இசை நடனம் கூத்து போன்ற கலைகளில் வல்ல பெண்கள் பலர் திருக்கோயில்களில் பல பணிகளில் ஈடுபட்டு வந்தனர் என்பதை கலவெட்டுச் சான்றுகளால் அறியலாம். இவர்கள் தளிச்சேரிப் பெண்டுகள், தளியிலார், பதியிலார், வழியிலார், தேவரடியார், தலைக்கோலிகள் எனப் பல பெயர்களால் அழைக்கப்பட்டனர். தளிச்சேரி என்பது சோழர் காலத்தில் இருந்த நடனப்பெண்கள் இருந்த குடியிருப்புப் பகுதியாகும். கோயிலின் அருகில் இவர்களுக்கு வீடுகள் உருவாக்கப்பட்டது. தஞ்சைப் பெருவடையார் கோயில் திருத்தொண்டிற்காக வடக்குத் தெற்காக அமைக்கப்பட்ட தெருக்களில் இராசராசன் தளிச்சேரிப் பெண்களை குடியமர்த்தினார். அத்தெருக்களில் அப்பதியிலார் வாழ வரிசை வரிசையாக வீடுகள் அமைத்துக் கொடுத்தான் என்றும் ஒவ்வொறு தளிச்சேரிப் பெண்களுக்கும் ஒவ்வொரு வேலி நிலம் வழங்கப்பட்டது என்றும் தஞ்சை கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. திருக்கோவிலூரிலுள்ள திருவீரட்டானேச்சுவரர் கோயிலில் நாடக மகளிர் முப்பத்திரண்டு பேர் தொண்டு புரிந்து வந்த செய்தி அவ்வூரிலுள்ள முதலாம்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

இராசராசன் கல்வெட்டொன்றில் இடம் பெற்றுள்ளன. திருக்கோயிற் பணிபுரியும் பெண்கள் பல வகையினராக இருந்த போதிலும் அவர்களுக்குப் பொதுப் பெயராகத் தேவரடியார் என்ற பெயரே பிற்காலத்தில் வழங்கப்பட்டது.

**தேவரடியார்**

சோழர்கள் காலத்தில் கோயில்களில் திருஅலகிடல், திருமெழுகிடல், திருவமுதுக்கரிய அரிசியைத் தூய்மை செய்தல், மலர் தொடுத்தல் போன்ற திருப்பணிகளை செய்தவர் தேவரடியார்கள். இவர்களுள் சிலர் தேவாரம் திருவாசகம் ஓதுபவராகவும், இசையில் வல்லுநராகவும், நடனம் கூத்து போன்ற கலைகளில் சிறந்த பயிற்சி உடையவராகவும் இருந்தனர். தஞ்சை பெருவுடையார் கோயிலுக்காக பல கலைகளில் சிறப்பெய்திருந்த நானூறு தேவரடியார்களை முதலாம் இராசராசன் தஞ்சைக்கு அழைப்பித்தார் என கல்வெட்டுச் செய்தி கூறுகிறது. திருவொற்றியூரில் திருவாதிரை விழாவின் போது தேவரடியார்கள் திருவெம்பாவை ஓதினர். தேவரடியார்களின் இசை நடனம் போன்ற கலைப்பணிகளை பாராட்டி நிலமும் பொன்னும் கொடைகளாக அளிக்கப்பட்டன. தேவரடியார்கள் கோயில்களுக்கு கொடைகள் அளித்தனர். திருவொற்றியூரில் உள்ள முதலாம் இராசராசனுடைய கல்வெட்டு நாகன் பெருற்காடன் என்பாருடைய மனைவியும் தேவரடியாருமான சதுரசன் சதுரி என்பாள் திருக்கோயிலில் விளக்கெரிக்க 95 ஆடுகள் கொடையளித்தாள் என்று கூறுகிறது. பிரம்மதேசம் கோயிலில் விளக்கெரிக்க 32 பசுக்களையும் ஒரு காளைளையும் தேவரடியாள் சாணி ஒற்றி ஆழ்வி என்பாள் நிவந்தமளித்தாள் எனவும் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

**வேளங்களும் உரிமை மகளிரும்**

சோழர்கள் வெளிநாடுகளிலுருந்து பொன்னும் பொருளும் அள்ளி வருவதோடு அந்நாட்டு இளம்பெண்களையும் வீரர்களையும் சிறைப்பிடித்து வருவதை மிகுந்த பெருமையாக கருதினர். அப்படி சிறைப்பிடிக்கப்பட்ட பெண்கள் அரசனுடைய உரிமை மகளிர் வாழ்ந்த அப்பகுதிகள் வேளம். என அழைக்கப்பட்டன. அருள்மொழித் தேவர் வேளம், இராசராசத் தெரிந்த பாண்டித் திருமஞ்சன வேளம், பஞ்சவன் மாதேவியார் வேளம் போன்ற வேளங்கள் இருந்தன.

**பெண்டாட்டி**

மன்னர்களுக்கும் அரச குடும்பத்தினருக்கும் பணி செய்வதற்கென்றே பணியாளர் அமர்த்தப்பட்டிருந்தனர். அப்பணியாளர்கள் பெரும்பாலும் பெண்களாகவே இருந்தனர். அவர்களுக்கு பொதுவாக பெண்டாட்டி எனப் பெயர் வழங்கி வந்தது. இப்பணிப்பெண்கள் நீராட்டு அறையிலும், மடைப்பள்ளியிலும், பள்ளியறையிலும், காவலராகவும் பணிபுரிந்தனர். இவர்கள் அணுக்கி அணுக்கியர் என்றும் அழைக்கப்பட்டனர் இராசேந்திர சோழ சேவர் அணுக்கி சூற்றிய பஞ்சவன் மாதேவி இராசேந்திர சோழ தேவ அணுக்கியர் பல்லவன் பட்டாலி நங்கை இராசகேசரி வேளத்துப் பெண்டாட்டியான அணுக்கள் மகாமல்லி பெரிய வேளத்துப் பெண்டாட்டியான திரு இராசேந்திர சோழன் அணுக்கி சாத்தன் ராமதேவி போன்ற பெயர்கள் வழங்கப்பட்டன.

**பிராமணப் பெண்கள்**

சோழர்கால சமுதாயத்தில் பிராமணர்கள் உயர்ந்த இடத்தில் வைத்துப் போற்றாப்பட்டகர் அவர்கள் குடியமர்ந்து வாழ அகரம் அக்ரகாரம் என்ற குடியிருப்புகளையம் சதுர்வேதி மங்கலம் என்று வழங்கப்பட்ட தனிக்கிராமங்களையும் சோழ மன்னர்கள் உருவாக்கித் தந்தனர். பிராமணர்கள் வாழ்ந்த சதுர்வேதி மங்கலத்து அவைகள் சபைகள் என்றழைக்கப்பட்டன. பிராமணப் பெண்களுக்க தனிச் சிறப்பு சமுதாயத்தில் இருந்தது. பிராமணப் பெண்களும் கோயில்களுக்கு கொடைகளை பற்றி கல்வெட்டுகள் மூலம்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

அறியலாம். தயன் வடுகி என்னும் பிராமணப் பெண் 12½ கழஞ்சு பொன் உடையார்குடி அனந்திஸ்வரா் கோயிலுக்கு வழங்கினார். பராந்தக சோழ கல்வெட்டு ஒன்றில் காளி நிலி என்னும் பிராமண பெண் ஒரு மா அளவுடைய நிலத்தை விளக்கெரிக்க தஞ்சாவூரிலுள்ள ஸ்ரீநிவாச நல்லூா் போயிலுக்கு நிவந்தமளித்தார். சமதி கொரி என்ற பெண் 45 ஆடுகளை திருவிடைமருதூா் திருவிசாலூா் கோயிலுக்கு அளித்தார். பிராமணப்பெண்ணான மாதிச்சானி என்பவா் அளித்த கொடைகள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

**முடிவுரை**

சோழா்காலத்தில் பெண்களின் நிலை முந்தைய காலத்தைவிட சிறப்பாகவே இருந்தது. பெண்கள் மீது அளவு கடந்த கட்டுபாடுகள் விதிக்கப்படவில்லை. கற்பு ஒழுக்கம் பெண்களுக்கு அணிகலன்களாகக் கருதப்பட்டன. பெண்கள் சொத்துரிமை பெற்றிருந்தனா். உடன்கட்டை ஏறும் வழக்கம் அரச குடும்ப மகளிரிடையே காணப்பட்டது. திருவிழாக்களின் போது கூத்து நிகழ்த்தியதோடு கலைகள் செல்வம் மற்றும் செல்வாக்கு மிக்கவா்களாக பெண்கள் திகழ்ந்தனா். அரசா்களுக்கு மட்டுமின்றி அரசிகளுக்கும் பள்ளிப்படை கோயில்களை எடுத்துள்ளனா். சோழ அரண்மனைககளில் பெண்கள் பணிபுரிந்துள்ளனா். பெண் துறவிகள் பலா இருந்தததையும் கல்வெட்டுகள் காட்டுகின்றன. அரசிகள் பெயரில் ஊா்களும் சேரிகளும் ஏரிகளும் வாய்க்கால்களும் ஏற்படுத்தப்பட்டமை சோழா்கள் காலத்தில் பெண்களுக்கு சமஉரிமை கொடுக்கப்பட்டது கல்வெட்டுகள் மூலம் தெளிவாகிறது.

**துணை நூற்பட்டியல்**

1. சோழப்பெருவேந்தா், தமிழ் நாட்டு வரலாறு, தமிழ் வளா்ச்சி இயக்ககம், சென்னை, 2000 காலம் (கி.பி 900-1300)
2. சதாசிவ பண்டாரத்தாா், பிற்கால சோழா் சரித்திரம், ஸ்ரீசெண்பகா பதிப்பகம், சென்னை, 2011
3. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி, சோழா்கள், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை.
4. வில்லிபுரம் மகேஸ்வரன், சோழா் காலத்துக் கோயிலும் சமூகமும், குமரன் புத்தக இல்லம், கொழும்பு, சென்னை 2008
5. வி.சா.குருசாமி, தென்னாட்டுத் திருக்கோயிற் தேசிகா் தருமபுர ஆதின கல்வெட்டுக்கள் பல்கலைக்கழகம், மாயூரம், 1965
6. சோம சுந்தரம் பிள்ளை, சோழற் கோயிற் பணிகள். தஞ்சை கூட்டுறவு மின்னியக்கி பதிப்பகம், கரந்தை, 1941
7. பாலுச்சாமி, கல்வெட்டுக்கள், அண்ணாமலை நகா், 1983

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# இராமநாதபுரம் அரண்மனை இராமலிங்க விலாசம் ஓவியங்கள் கூறும் செய்திகள்

# Informations from the Rama Vilasa Paintings of the Ramnad Palace

**ம.செய்யது இப்ராஹிம்,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
வரலாற்றுத்துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம் - 608002.

## Abstract

*The aim of the paper is to interpret the Rama Vilasa Paintings in the Ramnad Palace. The article culls out the Sethupatis who guarded the Sethu, means Ramnad, a costal area in the Eastern Tamil Nadu whereby threats may come fron Lanka. The details of the study shows that how the sethupathis come to the land and got accreditation from the Nayak kings and evolved into the rulers of the area. Moreover, they are known for their artistic love and the preservation of culture through the paintings in the palace. The paintings of 'Bhagavatham', 'The Ramayana', and on Krishna and his life events are very good examples in the paintings of the palace. Hence, the paper unveils the facts from the paintings.*

**Keywords:** Copper Plates, Kasakudi, Tamil Kings

இராமேசுவரம் கடற்கரைப் பகுதியைக் காக்கவும் இராமேசுவரம் சென்று வரும் புனித பயணிகளுக்குப் பாதுகாப்பு அளிக்கவும், மதுரை நாயக்க மன்னர்களால் கி.பி. 1601-க்கு பிறகு நியமிக்கப்பட்டவர்களே பிற்காலத்தில் சேதுக்குத் (கரைக்கு) தலைவர்கள் என்ற பொருளில் பழைய இராமநாதபுரம் மாவட்டத்தினை ஆண்டவர்களே சேதுபதிகள் என அழைக்கப்பட்டனர்.[1] பாண்டியர், சோழர்களுக்குப் பின்னர் இராமேசுவரத்தையும் அதனையொட்டிய கடற்கரைப் பகுதிகைளையும் பகைவர்களிடமிருந்து காந்து நின்ற பெருமை சேதுபகுதிகளுக்கு உண்டு. இதனால் "சேதுக்காவலர்கள்" என இவர்களை அழைத்தனர்.[2]

சோழநாட்டிலிருந்து வந்த இச்சேதுபதிகள் முதலில் திருமயம் பகுதிகளில் தங்கினர். அதன் பின்னர் இராமநாதபுரம் பகுதிக்கு இடம் பெயர்ந்தனர் என்று கருதுகின்றனர் என வரலாற்றாசிரியர்கள் கருதுகின்றனர். சேதுபதி மன்னர்களது அரசினை நிறுவிய பெருமைபடைத்த உடையான் சடைக்கன் சேதுபதி இராமநாதபுரத்திற்கு மேற்கே அமைந்த போகளூர் என்றழைக்கப்பட்ட ஊரினைத் தலைநகரமாகக் கொண்டு ஆண்டார்.[3] இவர்வழி வந்தவர்கள் கி.பி. 1795 வரை இராமநாதபுரம் பகுதியை ஆண்ட தன்னாட்சி மன்னர்களாக விளங்கினர். சேதுபதிகள் இராமேசுவரம் சென்றுவரும் புனித பயணிகளுக்குத் தங்குமிடம், உணவு, பாதுகாப்பான பயணவசதி செய்து கொடுத்தனர்.[4] வழிப்பறியிலிருந்து அவர்களைக் காத்தனர். இராமேசுவரம் செல்லும் வழியில் வைகையாற்றைக் கடப்பதற்கும், மண்டபம் தோணித்துறைக்கும் பாம்பனுக்கும் இடையிலுள்ள கடலைக் கடப்பதற்கும் இலவசப் படகுவசதி இப்புனித பயணிகளுக்குச் செய்து கொடுத்தனர்.

இராமேசுவரம் கோயிலிலுள்ள பெரும்பாலான கட்டடங்கள் சேதுபதிகளால் உருவானவையே. இராமேசுவரம் திருக்கோயில் திருச்சுற்றை கி.பி. 15-ஆம் நூற்றாண்டிலேயே

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

உடையான் சேதுபதி கட்டினார்.[5] இராமேசுவரம் கோயிலின் உலகப் புகழ்பெற்ற மூன்றாம் பிரகாரத்தினை உருவாக்கியவர்கள் சேதுபதி மன்னர்கள். கி.பி.1678-க்குப் பிறகு சேதுபதிகளின் தலைநகரமாக இராமநாதபுரத்தைக் கிழவன் சேதுபதி மாற்றினார்.[6] தலைநகரமாக இராமநாதபுரம் மாறுவதற்கு முன்பு மண்ணாலான சிறிய கோட்டைக்குள் இந்நகரம் இருந்தது. மண்கோட்டையைச் செவ்வக வடிவில் அமைந்த கற்கோட்டையாக்கினார் கிழவன் சேதுபதி.

இராமநாதபுரம் கோட்டைக்குள் சேதுபதிகள் அமர்ந்து ஆட்சிபுரிந்து ஆட்சிப்பீடமே இன்று இராமலிங்க விலாசம் என்று அழைக்கப்படுகிறது.[7] இராமேசுவரம் ஈசனின் மீது கொண்ட பக்தியின் வெளிப்பாடாக தமது அரண்மனைக்கு “இராமலிங்க விலாசம்” என்று பெயரிட்டுள்ளனர். வரலாற்றுச் சிறப்பும் கலைச் சிறப்பும் வாய்ந்த இராமலிங்க விலாசத்தினைத் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையினர் கி.பி. 1978 முதல் தொல்லியல் சின்னமாகப் பாதுகாத்து வருகின்றனர்.

தமிழ்நாட்டில் இத்துணையளவு ஓவியங்கள் நிறைந்த அழகுமிக்க அரண்மனை வேறு எங்கும் இல்லை. இராமலிங்க விலாசத்தின் சுவர்களிலும் மேல்விதானங்களிலும் கி.பி.18-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தினைச் சார்ந்த வண்ண ஓவியங்கள் காணப்படுகின்றன. இவை சேதுபதிகளின் அகவாழ்வையும் புறவாழ்வையும் ஆன்மீக வாழ்வையும் சித்தரிக்கின்றன.[8]

இராமலிங்க விலாசத்திலுள்ள வண்ணவோவியங்கள் சேதுபதிகளின் வாழ்வையும் வரலாற்றையும் விளக்கும் வரலாற்றுக் கருவூலம். இவ்வண்ண ஓவியங்கள் ஆன்மீகத்தின் மீது சேதுபதிகள் கொண்ட பற்றைக் காட்டுகின்றன.[9] சேதுபதி காலத்து நாகரிகத்தையும் பண்பாட்டையும் புரிந்து கொள்ள துணை செய்யும் அரிய சான்றுகளாகத் திகழ்கின்றன.[10]

சேதுபதிகளின் அரசியல் வாழ்வை விளக்கும் காட்சிகள், அன்றாட வாழ்வில் அவர்களது நடைமுறைகள், பொழுதுபோக்குகள், அவர்களது அகவாழ்வைச் சித்தரிக்கும் சுவையான காட்சிகள், இராமாயண, பாகவதக் காட்சிகள், தமிழகத்தின் முக்கியமான சமயத்தலங்கள் ஆகியவை இராமலிங்கவிலாச ஓவியங்களில் இடம்பெற்றுள்ளன.[11]

இராமலிங்க விலாசத்தில் நுழைந்தவுடன் காணப்படும் மகாமண்டபத்தின் தென்பகுதிச் சுவர்களில் சேதுபதி தஞ்சை மன்னரோடு போர் புரியுமட் காட்சி முத்துவிஜய ரெகுராத சேதுபதியின் பவனி, அயல்நாட்டினரைச் சந்தித்தல் போன்ற ஓவியங்கள் காணப்படுகின்றன.[12] இம்மண்டபத்தின் மற்ற பகுதிகளில் தமிழகத்திலுள்ள முக்கியமான இறைத்தலங்களும் பல இறைவனது உருவங்களும் இடம் பெற்றுள்ளன.

மகாமண்டபத்தினை அடுத்துள்ள அர்த்தமண்டபச் சுவர்களில் கிருஷ்ணனின் பிறப்பை விளக்கும் காட்சிகள், ஆயர்பாடியில் கிருஷ்ணன் புரிந்த வீரச் செயல்கள். கிருஷ்ணனின் பட்டாபிசேகம் போன்ற காட்சிகள் இடம்பெற்றுள்ளன.

அர்ந்தமண்டபத்தினை அடுத்துளள்ள இராமரிபீடம் எனப்பட்ட கருவறை மண்டபத்தின் சுவர்களில் இராமபிரானின் பிறப்பு தொடங்கி சீதையை மணம் முடிக்கும் வரையிலான இராமாயணக் காட்சிகள் ஒன்றையடுத்து ஒன்றாக இடம்பெற்றுள்ளன.[13] இராமாயண, பாகவத காட்சிகளின் அடியில் பெரும்பாலும் தமிழிலும் சில இடங்களில் தெலுங்கிலும் காட்சிகள் பற்றிய விளக்கும் அக்கால பேச்சுமொழியில் எழுத்தப்பப்பட்டுள்ளன.[14] இராமர் பீடத்தின் மேல் விதானங்களின் வில்வளைவுகளில் இராணி தொடர்பான அந்தப்புரக் காட்சிகள், சேதுபதி இராஜராஜேஸ்வரியிடம் செங்கோல் வாங்குதல், இராமாயணம் படித்தல், மதுரை நாயக்க மன்னரான முத்துவிசயரங்க சொக்கநாத நாயக்கர், முத்துவிசய ரெகுநாத சேதுபதிக்கு

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

இரத்தினப் பட்டாபிசேகம் செய்தல், சேதுபதியின் பவனி, எண்திசைக் காவலர்கள் உருவங்கள் போன்ற அரிய காட்சிகள் இடம்பெற்றுள்ளன.

மாடியிலுள்ள அறைச் சுவர்களில் சேதுபதி இசை கேட்டல், நடனம் காணுதல், தனது அன்பான தேவியரோடு அவர் கூடி மகிழும் அகவாழ்வுக் காட்சிகள் சிறப்பான முறை வண்ணவோவியமாக வரையப்பட்டுள்ளன.

**புறவாழ்வு ஓவியங்கள்**

இராமலிங்க விலாசத்தின் முன்மண்டபத்து தென்பகுதி சுவரில் மராட்டியர்க்கும் சேதுபதிக்கும் நடந்த போர்க்காட்சிகள் அற்புதமாகச் சித்தரிக்கப்பட்டுள்ளன.[15] இவற்றில் பீரங்கிகள், துப்பாக்கிகள் இடம் பெற்றுள்ளன. சேதுபதியும் மராட்டிய அரசரும் தத்தம் படையுடன் அணிவகுத்துக் கடுமையாகப் போர் புரிகின்றனர். பீரங்கிகள் ஒவ்வொன்றிலும் அவற்றின் பெயர்கள் எழுதப்பட்டுள்ளன.

**அகவாழ்வு ஓவியங்கள்**

முன்மண்டபத்தின் தென்சுவரில் போர்க்காட்சியை அடுத்து சேதுபதி அவரது தேவியரோடு கொலுவீற்றிருக்கும் காட்சிகள் இடம்பெற்றுள்ளன. சேதுபதியை வெளிநாட்டவர் பலர் வந்து சந்திக்கும் காட்சிகள் இதில் இடம்பெற்றுள்ளன.

இராமர் பீடப்பகுதியில் விதானத்தில் சேதுபதியின் அகவாழ்வையும் விளக்கும் காட்சிகளும் உள்ளன. இவற்றில் சேதுபதி பல்வேறு கோலங்களில் அழகுற கொலுவீற்றிருக்கும் காட்சிகள், பல்லக்கில் பவனி வரும் காட்சிகள் இடம்பெற்றுள்ளன.[16] இவற்றில் குறிப்பிடத்தக்க காட்சி ஒன்று இராஜராஜேஸ்வரியிடமிருந்து சேதுபதி செங்கோல் வாங்கும் காட்சியாகும். ஐரோப்பியர் ஒருவர் சேதுபதிக்கு வணங்கி பரிசளிக்கும் காட்சி இதில் இடம்பெற்றுள்ளது. சேதுபதி வயதான ஒருவர் முன்னர் அமர்ந்து பக்தியுடன் இராமாயணம் கேட்கும் காட்சியும் இராமர் பீடம் பகுதியில் உள்ளது. இவ்வோவியத்தில் சேதுபதிக்கு முன் உள்ள இராமாயண ஓலைச் சுவடியில் “ஸ்ரீராமநிவேகதி” என்று எழுதப்பட்டுள்ளது. வயதானவர் கையில் உள்ள ஓலைச் சுவடியில், “ஸ்ரீராமஜெயம்” என்று எழுதப்பட்டுள்ளது. இராமர்பீட விதான ஓவியங்களில் பல்வேறு அலங்காரங்களுடன் சேதுபதி காட்சியளிக்கின்றார்.[17]

இராமர்பீடத்திலும் அதற்கு மேல்புற மாடியிலும் சேதுபதியின் அகவாழ்வை விளக்கும் ஓவியங்கள் இடம்பெற்றுள்ளன. இராமர்பீடப் பகுதியில் சேதுபதியும் இராணியும் மன்மதன் இரதி போல சித்தரிக்கும் காட்சிகள் இடம் பெற்றுள்ளன. மேற்புற மாடியில் சேதுபதியும் அவரது இராணியும் பல்வேற நிலையில் அகவின்பத்தை துய்க்கும் காட்சிகள் ஓவியமாக பெரிய அளவில் சுவரில் வரையப்பட்டுள்ளன. சேதுபதி தேவியர் குளத்தோடு நீராடுதல், பெண்களுடனும் தேவியரோடும் கைக்கோர்த்து யானையைப் போலவும், குதிரையைப் போலவும் பெண்கள் ஒன்று திரண்டு அமைய அவற்றின் மீது சேதுபதியும் இராணியும் மன்மதன் போலவும், இரதியைப் போலவும் மலர்கணைகளுடன் காட்சியளிக்கின்றனர். பல்வேறு வடிவங்கள் கொண்ட மதுக் குடுவைகளின் நடுவே சேதுபதியும் இராணியும் வீற்றிருக்கின்றனர். சேதுபதி தனது தேவியோடு இருக்கும் பள்ளியறைக் காட்சிகள், வேட்டைக் காட்சிகள் இங்குள்ள ஓவியங்களில் இடம்பெற்றுள்ளன. மாடியறை ஓவியங்களில் சேதுபதி ஓய்வு நேரங்களில் ஆடல், பாடல் கேட்டும் கண்டும் மகிழும் காட்சிகள் அழகுறக் காட்டப்பட்டள்ளன. இங்கு கண்ணாடி முன்னர் தன் அழகைக்காணும் ஆடல் மகளின் உருவம் ஒன்றும் இடம்பெற்றுள்ளது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019
Available at: www.ijtlls.com

**இராமாயண ஓவியங்கள்**

இன்று இராமர்பீடம் என்று அழைக்கப்படும் அகமண்டபப் பகுதியில் சுவர்களில் இராமாயணக்கதை தொடர்ச்சியாக வரையப்பட்டிருக்குக்கிறது. பாலகாண்டத்தில் இராமாயணத்தை வால்மீகி எழுதக் காரணமான, கிரௌஞ்சவதம் தொடங்கி, இராமன், இலட்சுமணன், பரதன், சத்ருகன் ஆகியோரது திருமணத்தோடு முடியவுள்ள முக்கிய காட்சிகள் இதில் இடம் பெற்றுள்ளன. கிரௌஞ்ச பறவையைக் கொன்ற வேடனை வால்மீகி சபித்தது, பிரமதேவன் சொன்னபடி இராமர் கதையை வால்மீகி இயற்றியது, இலவகுசலர்களுக்கு இராமாயணக்கதை சொன்னது முதலிய காட்சிகள் முதல் பகுதியில் இடம்பெற்றுள்ளன. தசரதன் கலைக்கோட்டு முனிவரை அழைத்து வரச்செய்து, புத்திரகாமேடி யாகம் செய்தது, யாகத்திலிருந்து அக்கினிதேவன் மூலம் கிடைத்த பிண்டத்தை உண்ட தசரதன் தேவியர்க்குக் குழந்தைகள் பிறந்தது. குழந்தைகளுக்குக் காதுகுத்தி கொண்டையிட்டது. சிலம்பம், வில்வித்தை, குதிரையேற்றம், யானையேற்றம், ரதயேற்றம் போன்ற பல்வகை வித்தைகளை இராமன், இலட்சுமணன் முதலியோர் கற்றது போன்ற காட்சிகள் இடம்பெற்றுள்ளது. தொடர்ந்து விசுவாமித்திர் இராமன், இலட்சுமணரை தாம் செய்யும் யாகத்தைக் காக்க அழைத்துச் சென்றது.[18] யாகத்தை அழிக்க வந்த அசுரர்களோடு தாரகை என்ற அரக்கியையும் வதம் செய்தது, விசுவாமித்திரர் இராமர், இலட்சுமணரை மிதிலைக்கு அழைத்துச் செல்லும் வழியில் கல்லாய் கிடந்த அகலிகை இராமர் கால்பாட்டு சாபவிமோச்சனம் பெற்றது, மிதிலைக்கு இராமன் சென்று வில் ஒடித்து சீதையை மணம் முடித்தது போன்ற காட்சியோடு இராமாயண ஓவியம் நிறைவடைந்துள்ளது.

**பாகவத ஓவியங்கள்**

இராமலிங்க விலாசத்தின் முன்மண்டபத்திணை அடுத்துள்ள மகாமண்டபத்திலும், அதனையொட்டியுள்ள முன்மண்டபத்தின் வடக்குப் பகுதியிலும் உள்ள சுவர்களில் கிருஷ்ணனின் வாழ்வை விளக்கும் நிகழ்ச்சிகள் இடம்பெற்றுள்ளன. கிருஷ்ணன் தேவகி வயிற்றில் பிறப்பான் எனக் கருதி கம்சன் அவள் அவற்றில் பிறந்த குழந்தைகளை ஒவ்வொன்றாக கொல்லும் காட்சிகள், வசுதேவன் தனக்குப் பிறந்த கிருஷ்ணன் ஆயர்பாடிக்கு எடுத்துச் சென்று அங்கு வைத்துவிட்டு, யாசோதைக்குப் பிறந்த துர்க்கையை எடுத்துக்கொண்டு திரும்புதல், கம்சன் துர்க்கையைக் கொல்ல முயலும்போது அவனிடமிருந்து தப்பி கிருஷ்ணன் ஆயர்பாடியில் வளருகின்றான் என்று சொல்லி மறைந்தது போன்ற காட்சிகள் முதலில் இடம்பெற்றுள்ளன.

அடுத்து ஆயர்பாடியில் நந்தகோபன் தாளம் செய்தது, ஆயர் பாடியில் வளரும் கிருஷ்ணனைக் கொல்ல கம்சன் பல முயற்சிகள் செய்தது ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. இவற்றில், கிருஷ்ணன் பேச்சி (பூதகி) என்ற அரக்கி மார்பில் நஞ்சு தடவி பாலுட்ட வந்தபோது, அவளைக் கொன்றது, தன்னை ஆகாயத்தில் எடுத்துச் சென்ற அரக்கனை அழித்தது, மருதமரம் வில்சமரமாய் நின்ற மது, கைடபரை அழித்தது, அவர்களுக்குச் சாபம் தீர்த்தது, விளாமரம், கொக்கு முதலியோரை அழித்த காட்சிகள் இடம்பெற்றுள்ளன. இவற்றோடு கண்ணன் குழந்தை வடிவாய் இருந்தபோது ஆயர்பாடியில் நடத்திய குழந்தைக் குறும்புகள் இடம்பெற்றுள்ளன.[19] தனது தோழர்களோடு ஆயர்மகளிர் சேர்த்து வைத்த தயிரையும், வெண்ணையும் கண்ணன் கவரும் காட்சிகள் அழகிய முறையில் சித்தரிக்கப்பட்டுள்ளன.

தொடர்ந்து கண்ணனின் புல்லாங்குழல் ஓசையைக் கேட்டு மயங்கிய ஆயர்பாடிக் காட்சி, யமுனை ஆற்றங்கரையில் குளித்துக் கொண்டிருந்த பெண்களின் ஆடையைக்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கண்ணன் கவர்ந்த காட்சி, தேவேந்திரனுக்கு ஆயர்பாடியில் இருந்தவர்கள் படைத்த உணவை கண்ணன் மாயமாய் மலைக்குள்ளிருந்து உண்ட காட்சி இடம் பெற்றுள்ளன. கோபம் கொண்ட இந்தரன் அடைமழை பெய்வித்து ஆயர்பாடியை அழிக்க முற்பட்டபோது கண்ணன் கோவர்த்தன கிரியைக் குடையாய் பிடித்து ஆயர்பாடியைக் காத்த காட்சியும், இந்திரன் கிருஷ்ணன் அவதாரத்தை அறிந்த காட்சியும், கிருஷ்ணனுக்கு அனைவரும் சேர்ந்து பட்டாபிசேகம் செய்த காட்சியும், பாகவத ஓவியத்தின் இறுதியில் இடம் பெய்யுள்ளன.

**ஓவியங்களின் மூலம் அறியும் பண்பாடு**

சேதுபதி அரண்மனையில் வரையப்பட்ட ஓவியங்களில் மெல்லிய ஆடைகளை ஆண்களும். பெண்களும் இங்குள்ள ஓவியங்களில் அணிந்து காட்சியளிக்கின்றனர். மெகலாயரைப் போன்று தலைப்பாகையினை இவர்கள் அணிந்துள்ளனர். தெலுங்கு நாட்டுப் பண்பு ஒவ்வொரு ஓவியக் காட்சியிலும் ஊடுருவிக் காணப்படுகின்றது. தெலுங்கு நாட்டு பண்பு ஒவ்வொரு ஓவியக் காட்சியிலும் ஊடுரவிக் காணப்படுகின்றது. தெலுங்கு நாட்டு ஓவியம் மற்றும் சிற்பங்களில் காணப்படுவது போல் இங்குள்ள ஓவிய மாந்தர் ஆடைகள் அணிந்து கொண்டையிட்டிருக்கின்றனர். ஓவியங்கனின் அடிக்குறிப்புகள் சில தெலுங்கு எழுத்துக்களில் தெலுங்கு மொழியிலும் எழுதப்பட்டுள்ளன.

ஓவியங்கள் பளிச்சிடும் வண்ணத்தில் உள்ளன. ஆண், பெண் உருவங்கள் சதைப்பிடிப்புடன், பருமனாகப் பக்கவாட்டில் நிற்பதுபோல் வரையப்பட்டுள்ளன. பெண்கள் அணியும் ஆடைகள் மிகுந்த வேலைபாடுகளுடன் பல்வேறு வகையும் வண்ணமும் கொண்டதாய் காண்பவர் கண்ணைக் கவரும் முறையில் உள்ளன. பிற நாட்டுக் கலாச்சாரப் பண்புகள் மறவர் நாட்டு ஓவியங்களில் எத்துணையளவு தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது என்பதை அறிய இராமலிங்க விலாச ஓவியங்கள் சிறந்த ஓவிய வரலாற்றுக் கருவூலமாகத் திகழ்கின்றன.

இருபதாம் நூற்றாண்டில் இராமநாதபுரம் அரண்மனையிலிருந்து ஆட்சிபுரிந்த முத்துராமலிங்க சேதுபதி, பாஸ்கர சேதுபதி ஆகியோரின் வண்ணப்படங்கள், இக்காட்சியகத்தில் உள்ளன. இவை அம்மன்னர்களின் காலத்தில் இருந்த ஓவியர்களால் வரையப்பட்டவை. இவற்றோடு இப்பகுதி பாளையக்காரர், சிவகங்கை அரசர் ஆகியோரது வண்ண உருவப்படங்களும் இடம்பெற்றுள்ளன.

**ஓவியங்களின் காலம்**

இவ்வோவியய்கள் அனைத்தும் முத்துவிஜயரெகுநாத சேதுபதி காலத்தில் (கி.பி. 1713-1725) தீட்டப்பெற்றவை. இவரே இவ்வோவியங்களில் பல இடங்களில் இடம்பெற்றுள்ளார். இராமலிங்க விலாசத்தில் காணும் ஓவியங்களின் காலம் பற்றி கருத்து வேறுபாடுகள் உள்ளன. இவற்றை மிகவும் பிற்பட்ட காலத்தினைச் சார்ந்தது எனச் சிலர் கருதுகின்றனர். இவ்வோவியங்களல் அவற்றின் காலத்தினை அறிய இரண்டு முக்கிய குறிப்புகள் உள்ளன.

இவ்வோவியங்கள் அனைத்திலும் கி.பி. 1706-லிருந்து 1730 வரை ஆட்சிபுரிந்த முத்துவிசய ரகுநாத சேதுபதியின் உருவங்களே திரும்பத்திரும்ப இடம்பெற்றுள்ளன. இவரது சமகாலத்தவராக மதுரையில் ஆட்சிப்புரிந்த மூத்த விஜயரங்க சொக்கநாத நாயக்கர், முத்துவிஜய ரகுநாத சேதுபதிக்கு இரத்தின பட்டாசிசேகம் செய்யும் காட்சி ஒன்று இராமர்பீடம் விதானத்தில் காணப்படுகிறது. இதன் மூலம் இவ்வோவியங்கள் 18 ஆம் ஆண்டு நூற்றாண்டு தொடக்க காலத்தில் தீட்டப்பட்டவை என்பது திண்ணமாகிறது.[20]

இதனடியில் முத்துவிஜய ரகுநாத சேதுபதிக்கு விஜயரங்க சொக்கநாத நாயக்கர் அய்யன் இரத்தினப் பட்டாபிசேகம் செய்கிறது. ("ராச ஸ்ரீ விசயரங்க சொக்கனாத நாயக்கர்,

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

விசைய ரகுநாதச் சேதுபதி அவர்களுக்கு ரத்ந பட்டாபிசேகம்") என்ற வாசகம் எழுதப்பட்டுள்ளது. மேலும், இக்கூற்றினை உறுதி செய்கிறது.

முத்துவிசைய ரகுநாத சேதுபதி கி.பி. 1700க்கும் 1710க்கும் இடையில் தஞ்சை மராட்டியரோடு போரிட்ட காட்சி முன்மண்டப தென்பகுதியில் கிழக்குச் சுவரின் விரிவாக இடம்பெற்றுள்ளது. எனவே இவ்வோவியங்களும் அனைத்தும் கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தீட்டப்பெற்றிருக்க வேண்டும் இராமாயண பாகவத ஓவியங்களின் அடியில் அவற்றை பற்றிய விளக்கக் குறிப்புகள் மக்கள் பேச்சு வழக்கில் தமிழில் எழுதப்பெற்றுள்ளன. இசை ஓலைச் சுவடியில் எழுதப்பட்டது போல குறில் நெடில் பாகுபாடின்றி குறிலாக மட்டும் எழுதப்பட்டுள்ளன. மெய்யெழுத்துக்களுக்குப் புள்ளி இடம்பெறவில்லை. அக்கால மறவர் நாட்டின் பேச்சுமொழியை அறிந்துகொள்ள இவ்வோவியக் குறிப்புகள் சிறந்த சான்றாய் உள்ளன.

சேதுபதி மன்னர்கள் தமிழக அரசியல் பொருளாதாரம் சமூகம் மற்றும் சமய வாழ்வில் ஏற்படுத்திய தாக்கங்களையும், விளைவுகளையும் எடுத்துக்காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும். அத்துடன் சேதுபதி மன்னர்கள் ஓவியங்களை மேம்ப்பாட்டிற்கு, எடுத்துக் கொண்ட முயற்சிகள் சமகால பண்பாட்டினை அடையாளம் காட்டுவதாக இக்கட்டுரை அமைக்கின்றது.

சேதுபதி அரண்மனை ஓவியங்கள் நுண்கலை வளர்ச்சியை பறைசாற்றும் விதமாக அமைந்துள்ளது. மேலும் அயல்நாட்டினர் வெக்கப்படவேண்டிய நிலையில் தமிழக இருப்பதை அறிய முடிகிறது. இவ்ஓவியங்கள் தமிழர்களின் சமூகம், சமூகஅமைப்பு பண்பாடு கலாச்சாரம், சமயம், நாகரீகம், மற்றும் நுண்கலைகளில் சேதுபதி மன்னர்கள் காட்டிய ஆர்வம் ஆகியவற்றை இக்கட்டுரை மூலம் அறிய முடிகின்றது.

**துணைபுரிந்த நூற்கள்**

1. T. Rajaram Rao, The Manual of Ramnad Samasthanam, 1891,pp. 35-37.
2. A. Nelson, The Manual of Madura Country, 1861, pp.76-78.
3. S. Thiruvenkatachari, The Sethupatis of Ramnad, Karaikudi, 1959, pp. 98-99.
4. R. Sathyanatha Ayyar, The History of Madurai Nayaks, 1928,pp. 108-110.
5. S. Seashore, Sethupathi's of Ramnad, 1974, unpublished Ph.D., Thesis, pp. 214-219.
6. A. Ramasamy, Tamilnadu District Gazetteers Ramanathapuram, Madras, 1972, pp. 56-60.
7. S. Kathirvel, A History of the Maravas – 1700-1802, Madurai, 1977., pp. 92-94.
8. R. Nagaswamy, Ramanathapuram District – An Archaeological Guide, Ramanathapuram, pp. 115-119.
9. சோலைமலை, இராமநாதபுரம் மாவட்டம், சென்னை, 1972, pp. 112-117.
10. இரா. நாகசாமி, இராமலிங்க விலாசம், துணை மடல், சென்னை, 1979, pp. 171-178.
11. மீ. மனோகரன், கிழவன் சேதுபதி, சிவகங்கை, 1983, pp. 34-36.
12. எஸ். எம். கமால், சேதுபதி மன்னர் செப்பேடுகள், இராமநாதபுரம், 2003, pp. 87-89.
13. எஸ். எம். கமால், சேதுபதி மன்னர் வரலாறு, இராமநாதபுரம், 2003, pp. 212-215.
14. எஸ். எம். கமால், சேதுபதி மன்னர் கல்வெட்டுகள், இராமநாதபுரம், 2002, pp. 198-200.

**E-ISSN: 2581-7140**
**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

15. எஸ். எம். கமால், இராமநாதபுரம் மாவட்டம் வரலாற்றுக் குறிப்புகள், இராமநாதபுரம், 1984, pp. 67-70.
16. புலவர் செ. இராசு, சேதுபதி செப்பேடுகள், தஞ்சை, 1994, pp. 156-158.
17. எஸ். கந்தசாமி, சேதுபதிகளின் கலைப்பணி, மதுரை, முனைவர் பட்ட ஆய்வேடு, pp. 143-145.
18. கு. சேதுராமன், இராமேசுவரம் கோயில், மதுரை, 2000, pp.187-188.
19. ஆறுமுக சீதாராமன், சேதுபதி காசுகள், தஞ்சை, 2005, pp. 116-118.
20. இரா. ப. கருணானந்தன், இராமலிங்க விலாசம் இராமாயண ஓவியக் குறிப்புகள், தொல்லியல் துறை, சென்னை, 1990, pp.56-59.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தற்கால தொல்லியல் ஆய்வுப் போக்குகள்
# The Present Scenario of Archaeology Today

**ந.செல்வராஜ்,** கௌரவ விரிவுரையாளர், தமிழ்த்துறை,
தா்மபுரம் ஞானம்பிகை அரசு மகளிர் கலைக்கல்லூரி, நாகப்பட்டினம்.

## Abstract

*The idea of the paper is to find out the present scenario of the Archaeological developments. In the world, it is the only field that brings out the truth of the older civilizations to the scholarly world. The study also aids to show the history of the ancient people with rhe remnants of the sites. Hence, the study helps to cull down the state of archaeology and its neo state through evident sources.*

**Keywords:** Present Scenario, Archaeology Today

**முன்னுரை**

பழங்கால வரலாற்றை ஆதாரப்பூர்வமாக உறுதிப்படுத்த முனைகின்ற ஆய்வுகள் பல நடைபெறுகிறது. அவற்றுள் ஒன்றாகக் கருதப்படுவது தொல்லியல் ஆய்வுப் போக்குகள். இத்தொல்லியல் ஆய்வுகள் மூலமே ஒரு வரலாற்றுக்கு முற்பட்ட மனித வாழ்க்கையை அறியமுடிகிறது. அதாவது தெளிவான எழுத்துச் சான்றுகள் இல்லாத கற்கால வரலாற்றையோ அல்லது அதற்கு அடுத்தக்கால கட்டமான சங்க மக்களின் வாழ்க்கையை பாடல்களில் உள்ள இடங்களைத் தோண்டி மக்கள் பயன்படுத்திய பழம்பொருள்களைக் கண்டறிந்து அவர்களின் நாகரீகத்தை அறியமுடிவது தொல்லியத்துறையின் பணியாக உள்ளது. அத்தகைய தொல்லியல் பணிகள் இன்றையகால கட்டத்தில் எத்தகையவாறு நடைபெறுகின்றது என்பதை எடுத்துரைப்பதே

“தற்கால தொல்லியல் ஆய்வுப் போக்குகள்” என்ற இக்கட்டுரையாகும்.

**தொல்லியல் - அகழாய்வு என்பதன் பொருள்**

மனிதன் வாழ்ந்த ஆதிகாலத்தை அறிந்துகொள்ளும் அறிவியல் ஆய்வுமுறை தொல்லியல் எனப்படும். இதனை, “பண்டைய காலத்தில் மனிதன் விட்டுச் சென்ற பொருள்களை அடிப்படையாகக் கொண்டு அம்மனிதனின் வரலாற்றைக் கூறும் இயல் தொல்லியல் எனப்படும்” (வாழ்வியல் களஞ்சியம், 10, ப.939). இதனையே தொல் பொருளியல், தொல்பொருள் குறித்த ஆய்வு எனவும் கூறுவர். இதனை “மனித வரலாற்றை கட்டியெழுப்ப உதவும் சாதனங்களில் வரலாறு, தொல்லியல் போன்ற துறைகள் முக்கியத்துவம் பெறுகிறது” (தொல்லியல் ஆய்வும் ஆதிக்குடிகளும், ப.5) என்ற கூற்றின் மூலம் தொல்லியல் என்பதன் பொருள் அறிந்துகொள்ளமுடிகிறது.

கிரேக்க மொழியிலிருந்து தோன்றிய ஆர்க்கியாலாஜி (யுசஉாயநழடழபல) என்ற சொல்லில் யுசஉாயந என்பது பழமை என்பதையும் டுழபநள என்பது அறிவியல் அல்லது கோட்பாடு என்பதாகக் குறிக்கிறது. அதாவது இலக்கியம், கல்வெட்டு, நாணயம்,

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

தொல்பொருள்கள், செப்பேடுகள், வெளிநாட்டவர் குறிப்புகள், நேர்காணல் (வாய்மொழி வரலாறு) ஆகியவற்றின் மூலமே வரலாறு எழுதப்படுகிறது. அத்தகைய வரலாறை எழுத உதவும் ஒரு சான்றாக தொல்லியல் உள்ளது.

**தொல்லியல் ஆய்வு நிகழ்த்தும் விதம்**

பழங்காலத்தில் புதையல் கண்டறிவதற்கு நிகழ்த்தப்பட்ட நிகழ்வுகளின் இறுதி வடிவமாக தொல்லியல் ஆய்வுகள் திகழ்கிறது. அதாவது தொழில்நுட்ப வளர்ச்சி பெற்ற இக்காலத்தில் ஓரிடத்தில் தொல்பொருள் நிகழ்த்துவதற்குறிய தடங்கள் (எச்சங்கள்) இருப்பதை, நிலத்தை ஊடுருவும் ராடார்கள், துணைக்கோல் வெளிப்படுத்தும் படங்கள் போன்ற தொலையுணர்தல் முறைகள் மூலம் ஓரளவு துல்லியமாகவே அறிந்துகொள்ளமுடியும். பின்னர் பரவலாகத் தோண்டும் வகை, ஆழத் தோண்டும் முறை, சுற்றகழாய்வு (block method) நீள்குழி அகழாய்வு, சவக்குழி அகழாய்வு, நீருக்கடியில் அகழாய்வு என பல வகைகளில் அகழாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

**தொல்லியல் வகைகள்**

புவியியல், காலப்பகுப்பு மற்றும் பொருள் அடிப்படையில் தொல்லியல் இரு வகைப்படுத்தப்படுகிறது. புவியியல் அடிப்படையில் தொல்லியலானது கிரீஸ் ரோமபுரி தொல்லியல், அமெரிக்கத் தொல்லியல், இந்தியத் தொல்லியல், பழங்கால எகிப்துத் தொல்லியல், ஆப்பிரிக்கத் தொல்லியல் என பிரிக்கிறார்கள். கால அடிப்படையில் தொல்லியலானது வரலாற்றுக்கு முற்பட்ட காலம், வரலாற்றுக்காலம் எனப் பல பாகுபாடு செய்யப்படுகிறது. வரலாற்றுக்கு முந்தைய காலம் கீழ்க்கண்டவாறு பகுக்கப்படுகிறது.

1. பழைய கற்காலம் கி.மு. 500000 முதல் கி.மு. 10000 வரை
2. நுண்கற்காலம் கி.மு.10000 முதல் கி.மு. 3000 வரை
3. புதிய கற்காலம் கி.மு. 3000 முதல் கி.மு.1000 வரை
4. பெருங்கற்காலம் கி.மு.1000 முதல் கி.மு.300 வரை.

இதனைப் போன்றே பொருள் அடிப்படையில் பொருளாதாரத் தொல்லியல் (Economic Archaeology), இனமரபுத் தொல்லியல் (Ethno Archaeology), நீரடி அகழாய்வு தொல்லியல் (Under-Water Archaeology), ஆகாய நிழற்படத் தொல்லியல் (Aerial Archaeology), அழிவு மீட்புத் தொல்லியல் (Salvage Archaeology) எனப் பிரிக்கப்படுகிறது.

**தொல்லியல் பல்வேறு உட்கூறுகள்**

தொல்லியல் பல்வேறு உட்கூறுகள் கொண்டுள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை களஆய்வு, அகழாய்வு, நாணயவியல், கல்வெட்டியல், தொன்மைக் கட்டடக் கலை, உருவவியல், கலை, சிற்பக்கலை ஆகியவை ஆகும். இவையாவும் எழுத்துச்சான்றுகள் இல்லாத கால தொன்மை வரலாற்றை அறியவும் சான்றுகளாகும். எனவே, தொல்லியலார்கள் இத்தைகய உட்கூறுகளையே பெரிதும் எடுத்துக்காட்டுகின்றனர்.

**தமிழகத்தில் தொல்லியல் ஆய்வுகள்**

தமிழகத்தில் தொல்லியல் ஆய்வுகள் பெரும்பாலும் தமிழ் இலக்கியச் சான்றுகளில் சொல்லப்படுகின்ற இடங்களும் தமிழகத்தில் ஆட்சி நடைபெற்ற இடங்களிலுமே பெரிதும் ஆய்வுகள் நடத்தப்படுகின்றன. அத்தகைய ஆய்வுகள் அரசின் அனுமதியுடன் குறிப்பிட்டவாறு நடைபெறுகின்றன. அவற்றுள் கோவா மத்திய கடல் ஆராய்ச்சி நிறுவனத்துடன் இணைந்து பூம்புகார் கடல் பகுதியில் ஆழ்கடல் ஆய்வு நான்கு கட்டங்களாக நடத்தப்பட்டது. அங்கு மூழ்கிய கப்பல் பகுதி ஒன்றும் மனிதனால் கட்டப்பட்ட கட்டடம் ஒன்றும் கண்டறிந்துள்ளது. இதுபோன்றே இலக்கிய குறிப்புகளால் அறியப்படுகின்ற ஊர்ப்பெயர்களான கோவை மாவட்டத்தின் ஆனைமலை, மதுரையின் கோவலன்பொட்டல், விருதுநகர் மாவட்டத்தின்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

திருத்தங்கல், இராமநாதபுரம் மாவட்ட அழகன்குளம் மற்றும் தொண்டி, தேரிருவேலி, ஈரோடு மாவட்ட கொடுமணல் போன்று பல இடங்களில் அகழாய்வு இதுவரை செய்யப்பட்டுள்ளன.

இந்திய தொல்லியல் துறை (ASI) உதவியுடன் பல்லாவரம், அத்திரம்பாக்கம், சித்தன்னவாசல், பழனி, அரிக்கமேடு, ஆதிச்சநல்லூர் உள்ளிட்ட பல இடங்களில் அகழாய்வு செய்துள்ளது.

**தற்கால தொல்லியல் ஆய்வும் - அரசியலும்**

தற்கால தொல்லியல் ஆய்வுகள் நடைபெறுகின்ற இடங்களான திருவண்ணாமலை ஆண்டிப்பட்டி (2004 - 2005), விழுப்புரம் மரக்காணம் (2005 - 2006), திருவள்ளூர் பரிகுளம் (2005-2006), கரூர் நெடுங்கூர் (2006-2007), மதுரை மாங்குளம் (2006 - 2007), நாகப்பட்டினம் செம்பிகண்டியூர் (2007 - 2008), சிவகங்கை கீழடி (2015 - 2019) உள்ளிட்ட இடங்களில் பெறுகின்றன.

தொல்லியல் ஆய்வுகளுக்கு முன் இந்திய வரலாறாகப் பல கற்பனைக் காலங்களை வரையறுத்துள்ளனர். அவை சமய நூல்கள், புராண வரலாறுகள், காப்பியங்கள், இதிகாசங்கள், வாய்மொழிக் கதைகள் உள்ளிட்டவற்றால் இதுவரை இந்திய வரலாறு கட்டமைத்துள்ளனர். அதன்படி எவ்விதச் சான்றுகளும் இல்லாத காலத்தைக் கட்டமைத்துள்ளனர். மாறாக தொல்லியல் சான்றுகளால் நிறுவப்பட்டுள்ள சிந்துவெளி ஆராய்ச்சி அரிக்கமேடு உள்ளிட்ட பலவகைப்பட்ட சான்றுகளின் அடிப்படையில் வரலாற்றைக் கட்டியெழுப்பாமல் அதை அப்படியே மூடிமறைக்கும் செயல்கள்தான் இன்றைய நாட்கள் வரை நடந்துவருகின்றது. சான்றாக இந்திய வரலாற்றில் சான்றாதாரங்களே இல்லாத (புராண அடிப்டையில்) வேதகாலத்தை முன்வைத்தும் ஆரியப் பாண்பாட்டின் வழி திராவிட நாகரிகத்தில் வந்தடைந்துள்ள கடவுள் என்ன வழிபாட்டுக் கூறுகள் என்று எவையுமில்லாத சான்றுகளே தற்கால தொல்லியல் ஆய்வுகள் எடுத்துக்காட்டுகின்றன.

இத்தகைய ஆய்வுகளின் வெளிப்பாடானது இன்றைய (உருவமற்ற இயற்கையை வணங்கிய) திராவிட நாகரிகத்தை சற்றும் வெளிவந்துவிடாத வகையில் அவற்றை முடக்குகின்ற வேலையை மத்திய (ஆரிய பார்ப்பனிய) அரசு தொடர்ந்து செய்துவருகின்றது. மேலும் தொல்லியல் அதிகாரிகள் துறைமாற்றங்கள் மற்றும் இடமாற்றம் செய்யப்பட்டும் தொடர்ந்து ஆய்வுகளைப் புறக்கணிக்கும் போக்கு இன்றைய அளவில் அதிகமாக உள்ளது. இவற்றுக்கு முழு முதல் காரணமாகத் திகழ்வது ஆரியர்கள் யார் என்பதும் அவர்கள் வழி திராவிட நாகரிகத்தில் கலந்துள்ள வழிபாட்டு முறைகளும் சடங்கு சம்பிரதாய நடைமுறைகளும் திராவிடர்களின் செயல்பாடுகளல்ல அவை திணிக்கப்பட்டவையே என்ற உண்மையை எள்ளவும் தெரிந்துவிடக்கூடாத வகையில் அதிகார அமைப்பு செயல்பட்டு வருகின்றன.

**தொல்லியல் ஆய்வுகளின் பயன்பாடுகள்**

பொதுவாக தொல்லியல் ஆய்வுகள் மறைந்துபோன சமூக வரலாற்றைக் கட்டமைக்க பெரிதும் உதவுகின்றது. அதாவது ஆய்வுகளின் போது முதுமக்கள் பயன்படுத்தியப் பொருட்கள் கண்டறியப்படுகின்றன. அவற்றைக் கொண்டு முதுமக்கள் வாழ்ந்த காலங்களை அறிதல், வரலாற்றை அறிதல், முதுமக்கள் பயன்படுத்திய பொருட்கள் அறிதல், பண்டைய கால வணிக உறவுகள் பண்டமாற்று நடைபெற்ற இடங்களை அறிதல் மற்றும் புழங்குப்பொருட்கள் போன்றவை தொல்லியல் ஆய்வுகளால் அறியப்படுகின்றவையாகும்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**முடிவுரை**

தற்கால தொல்லியல் ஆய்வுப் போக்குகள் என்ற தலைப்பிலமைந்த இந்த ஆய்வுக் கட்டுரையானது தொல்லியல் என்பதன் பொருள் என்வென்றும் தொல்லியல் துறையின் பணிகள் போன்றவை அறியமுடிந்தது. மேலும் ஆய்வுப் போக்குகளில் தொடர்ந்து குறுகீடுசெய்துவருகின்ற அரசியல் செயல்பாடுகள் போன்றவையும் இக்கட்டுரையின் வாயிலாக அறியமுடிகின்றது.

**பார்வை நூல்கள்**


1. புலியூர்கேசிகன். *புறநானூறு* (தெளிவுரை), கங்கை புத்தக நிலையம்,சென்னை -600 017.
2. விவேகானந்தன்.சிவ. *குமரி நாட்டில் சமணம்*, காவ்யா பதிப்பகம், சென்னை -600 024.
3. வேங்கடசாமி.மயிலைசீனி. *சமயங்கள் வளர்த்த தமிழ்*, ஸ்ரீ குமார் அசோசியேட்ஸ், சென்னை -600 014.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# கசாக்குடிச் செப்பேடுகள்
# The Copper Plates of Kasakudi

**முனைவர் மு.செல்வி,** உதவிப் பேராசிரியர்,
தமிழ்த்துறை, காமராஜ் கல்லூரி, சுயநிதிபிரிவு, தூத்துக்குடி – 628 003.

## Abstract

*The aim of the writing is to bring forth the details inscribed in the Copper Plates of Kasikudi. The facts tell about the Pallava, Chola, Pandia and Chalukya kings. Their donations, philanthrophic acts, and titles are clearly seen through copper plates. We can also know about some of the facts on the conquering feats of the Pallava and other kings through them. Hence, the paper discloses the derivated facts from the sources.*

**Keywords:** Copper Plates, Kasakudi, Tamil Kings

**முன்னுரை**

பொன், வெள்ளி, வெண்கலம், இரும்பு, ஈயம், செம்பு முதலிய பல உலோகங்களில் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டாலும் செம்பின் பயன்பாடே மிகவும் அதிகமாகும். செம்பில் எழுதப்பட்டவைகளை செப்பேடு, செப்புப் பட்டயம், தாமிரப்பட்டயம், தாமிர சாசனம், பட்டயம் எனப் பல்வேறு பெயர்களில் அழைக்கின்றனர். எழுதப்படும் செய்திகட்கு ஏற்ப செம்புத் தகடுகளைச் சமம் ஆக வெட்டி சதுரம் அல்லது நீள் சதுர வடிவில் அமைப்பர். பின்னர் அதன்மீது கூர்மையான இரும்பு உளி கொண்டு செதுக்கி எழுத்துக்களைப் பொறிப்பர். செப்பேடுகளில் முதலில் மங்கல மொழியும், வாழ்த்துச் செய்யுளும், காணப்பெறும். பிறகு அறக்கொடை வழங்கிய அரசனின் வழிமுறைகள், முன்னோர்கள் ஆற்றிய வீரச் செயல்கள் விரிவாகக் கூறப் பெற்றிருக்கும். பிறகு ஒருவனுடைய விண்ணப்பித்தின் மீது மற்றோர் அதிகாரியை ஆணத்தியாகக் கொண்டு அரசன் வழங்கிய தானமும் அதன் பயன்களும் விவரிக்கப் பெற்றிருக்கும். அறத்தைப் பெறுபவர்களுடைய விவரங்கள் கொடுக்கப் பெற்றிருக்கும். இறுதியில் அதிகாரிகள் கையொப்பமும், அவ் அறத்தைக் காப்பார் அடையும் பயனும், காவாதார் பெறும் துன்பமும் சொல்லப் பெற்றிருக்கும். பல சமயங்களில் அறக் கொடையை எழுதியவர் பெயரும், செப்பேட்டை வெட்டிய சிற்பியின் பெயரும்கூடச் சொல்லப் பெற்றிருப்பது உண்டு. சில சமயங்களில் அரசன் கையொப்பமும் காணப்பெறும். பல்லவர் செப்பேடுகள் முப்பதில் எட்டாவதாக இடம்பெறும் கசாக்குடிச் செப்பேடுகளை ஆராய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

**நந்திவர்ம பல்லவ மன்னனுடைய கசாக்குடிச் செப்பேடுகள்**

பதினொரு ஏடுகளில் பொறிக்கப் பெற்றுள்ளன. காரைக்காலுக்கு அருகில் கசாக்குடி என்ற ஊர் அமைந்துள்ளது. “1879இல் பூமியிலிருந்து கிடைத்தது. புதுச்சேரியைச் சேர்ந்த ஜீல்ஸ் தேலா போன் என்னும் பிரெஞ்சுக்காரர் கண்டெடுத்தார். வாகூர்ச் செப்பேடுகளை வெளிக் கொணர்ந்தவரும் இவரே. இது இப்போது சென்னை அருங்காட்சியகத்தில் பாதுகாப்பாக வைக்கப் பெற்றுள்ளது” என்று புலவர் ந.வெங்கடேசன் “புதுச்சேரி மாநிலச் செப்பேடுகள்” (ப.22) என்னும் நூலில் குறிப்பிடுகிறார். முதல் ஏடும் இறுதி ஏடும் ஒருபக்கம்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

மட்டுமே எழுதப் பெற்றுள்ளது. ஏனைய ஒன்பது ஏடுகள் இருபக்கங்களிலும் எழுதப் பெற்றுள்ளன. ஆக, இருபது பக்கங்களில் உள்ளன. கடைசி பக்கத்தில் ஐந்து வரிகளும், ஏனைய பக்கங்களில் ஏழு ஏழு வரிகளும் ஆக மொத்தம் 138 வரிகள் உள்ளன. சமஸ்திருதம் தமிழ் ஆகிய இரு மொழிப் பகுதிகளைக் கொண்டுள்ளது.

**சமஸ்கிருதப் பகுதி**

இது காவியம் போன்று உரைநடையிலும் செய்யுளிலும் எழுதப் பெற்றுள்ளது. தொடக்கத்தில் கடவுள் வாழ்த்தாக ஒன்பது சுலோகங்கள் உள்ளன. முதலில் பரப்பிரம்மத்தையும், பின்னர் திருமாலின் திருவிக்கிரம அவதாரத்தையும், மூன்றாவதாகத் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளையும் தனித்தனிச் சுலோகங்களில் வாழ்த்தப்பட்டுள்ளது. நான்காவது சுலோகம் அரிகரனுக்கு வணக்கம் தெரிவிக்கிறது. மற்றொரு சுலோகத்தால் திருமகளையும், வேறொன்றால் பகவதியையும், அடுத்த சுலோகத்தில் கணேசனையும் வணங்கியிருக்கிறது. எட்டாம் சுலோகம் பல்லவ குலத்தை வாழ்த்துவதாக அமைக்கப் பெற்றுள்ளது. ஒன்பதாம் சுலோகம் செப்பேடு அமைத்த அரசனான நந்திவர்மனைப் புகழ்ந்துரைக்கிறது. பின்னர், வம்சத் தலைவர்கள், புராணங்களில் வரம் பிரம்மா, பிரகஸ்பதி, சம்யு, பரத்வாஜர், துரோணர், அசுவத்தாமன் ஆகியோர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு சுலோகத்தால் வருணிக்கப் பெற்றுள்ளது.

இந்திரனால் அனுப்பப் பெற்ற மேனகை என்னும் தேவ மாதிடம் அசுவத்தாமனுக்கு மகனாகப் பல்லவன் பிறந்ததை 17 ஆம் சுலோகம் சுட்டுகிறது. அடுத்து சத்திரியர்களின் பெருமையை விரித்துக் கூறுகிறது. அந்த வம்சத்தில் அசோகவர்மன் தோன்றினான் என்ற செய்தியை சுலோகம் 19 கூறுகிறது.

பின்னர் பல்லவர்களைப் புகழ்ந்து விரிவாக உரைநடையில் கூறப்பெற்றுள்ளது. 34ஆம் வரி முதல் 50 ஆம் வரி வரை அந்த வம்சத்தில் கந்தவர்மன், கவந்தவர்மன், காணகோபன், விஷ்ணுகோபன், வீர கூர்ச்சன், வீரசிம்மன், சிம்மவர்மன், விஷ்ணுசிம்மன் முதலியோர் வெற்றிப் புகழுடன் ஆண்டு வானுலகம் சென்றனர். இதிலே பல்லவர்கள குமாரக் கடவுளுடன் பலவாறு ஒப்பிட்டுக் காட்டப்பட்டுள்ளது. பின் அவனிசிம்மன் என்போன் தோன்றினான். இன்னும், மாளவத்தையும், பிறகு களப்பிர, மாளவ, சோழ, பாண்டிய மன்னர்களையும், சிங்கள, கேரள வேந்தர்களையும் வெற்றி கொண்ட செய்தி கூறப்பட்டுள்ளது. பின்னர் முதலாம் மகேந்திரவர்மன், வாதாபி கொண்ட நரசிம்மவர்மன், இரண்டாம் மகேந்திரவர்மன், முதலாம் பரமேஸ்வரவர்மன், இரண்டாம் நரசிம்ம வர்மன், இரண்டாம் பரமேசுவரவர்மன் ஆகியோர் குறிக்கப்பட்டுள்ளனர்.

பரமேசுவர வர்மனுடைய ஸ்தானத்தில் நந்திவர்மன் ஆண்டுவந்தான் என்ற செய்தி ஒரு சுலோகத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. சிம்ம விஷ்ணுவின் தம்பியான பீமவர்மன் அவனுக்கு முன் ஆறாம் தலைமுறையில் வந்த முன்னோர் பீம வர்மன், புத்தவர்மன், ஆதித்தியவர்மன், கோவிந்த வர்மன், ஹிரண்ய வர்மன், நந்திவர்மன் என்ற முறையில் வம்சம் முறையாக விரிவுடன் கூறப்பட்டுள்ளது.

தானம் வழங்கிய அரசனான நந்திவர்மனுடைய புகழ செய்யுளாகவும் உரைநடையாகவும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

**நந்திவர்மனின் செய்தி**

நந்திவர்மனின் இருபத்தி இரண்டாம் ஆட்சி ஆண்டில், இந்தச் செப்பேடு வழங்கப்பட்டுள்ளது. ஊற்றுக்காட்டு கோட்டத்திலுள்ள, ஊற்றுக்காடு நாட்டில், கொடுகொள்ளி என்ற கிராமத்தில், தேவதாயங்கள் (கோயிலுக்குக் கொடுத்த இடங்கள்) பிரம்மதேயங்களை

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

(பிராமணர்களுக்குக் கொடுத்த இடங்கள்) நீக்கி விட்டு மீதி உள்ள நிலங்கள் உள்ளப் பகுதிக்கு ஏகதீர மங்கல கிராமம் என்று பெயரிடப்படுகிறது. இந்தப் புது கிராமத்தை பாரத்வாஜ கோத்திரத்தில் பிறந்து, சாந்தோக சூத்திரத்தைப் பின்பற்றுபவரும் நல்ல பிராமணனுமான சாம வேதி ஜ்யேஸ்டபாத சோமயாஜி என்வபவருக்கு பிரம்மதேயமாக அளிக்கப்படுகிறது.

"இந்த நிலதானம் கொடுக்க வேண்டும் என்று விண்ணப்பம் செய்வதன், முக்கிய மந்திரியான பிரம்மயுவராஜன் இதே அரசனுடைய 33ஆம் ஆட்சி ஆண்டில் வழங்கப்பட்ட புல்லூர்ச் செப்பேடுகளிலும் இந்த பிரம்மயுவராஜனின் பெயர் காணப்படுகிறது. ஆகவே இவன், இளவரசனாக இருக்கவே வாய்ப்பு அதிகம்" என்று முனைவர் மு.ராஜேந்திரன் பல்லவர் காலச் செப்பேடுகள் (ப.194) என்னும் நூலில் குறிப்பிடுகிறார். சமஸ்கிருதப் பகுதியை எழுதியவர் கவி திருவிக்கிரமன். இதில் அரசனின் ஆணையை கோரசர்மன் (ஆணத்தி) நிறைவேற்றி வைப்பான் என்றும், நிலத்தினுடைய நான்கு எல்லையும், தானம் பெற்றவரின் உரிமைகளும், தானம் செய்வதன் புண்ணியம், தடுப்பதால் வரும் பாவமும் சொல்லப்பட்டுள்ளது.

**தமிழ்ப்பகுதி**

தமிழ்ப்பகுதி எழுதியது பரமேஸ்வர மகாகாஷ்டகாரி. இதில் தானம் பெற்றவன் முழு கிராமத்தையும் பெறவில்லை என்றும், கிராமத்தின் கோயில் நிலங்கள், பிராமணர்களுக்கான நிலங்கள் தவிர, மற்றவர்களின் நிலங்கள் ஒன்று சேர்க்கப்பட்டு சோமயாஜிக்கு வழங்கப்பட்டுள்ளது என்றும் கூறப்பட்டுள்ளது. இதிலிருந்து ஒவ்வொரு நிலத்திற்கும் தனியான உரிமையாளர் உரிமை சாசனம் இருந்துள்ளது என்பதை அறிய முடிகிறது.

**சிம்ம விஷ்ணு குறித்த செய்தி**

சிம்மவிஷ்ணு இலங்கையை (சிங்களம்) வென்றவன் என்று இச்செப்பேடு சொல்கிறது. சிம்மவிஷ்ணுவின் காலத்தில் நடந்ததாகச் சொல்லப்படும் நிகழ்வுகள் சிம்மவிஷ்ணுவின் சிங்களப் படையெடுப்பிற்குக் தொடர்புடையதாகும். சிங்கள அரசன், இரண்டாம் கஸ்யபன் இறந்த பிறகு அவன் மகன் மானவர்மனுக்கு அரசப் பதவி கிடைக்கிவல்லை. அவனுடைய பங்காளி ஒருவன் ஆட்சியைக் கைப்பற்றியதால், வட இலங்கையில் சில காலம் சுற்றித் திரிந்துவிட்டு, காடுவெட்டி என்ற புகழ்ப் பெயருடைய சிம்மவிஷ்ணுவின் காஞ்சிபுரத்திற்கு வந்து அடைக்கலமானான். சிம்மவிஷ்ணுவும் மானவர்மன் வயதில்தான் இருந்தான். இருவரும் நண்பர்களாகி நெருக்கமாயினர்.

ஒருமுறை இருவரும் யானையில் சென்று கொண்டிருக்குபோது பாதி இளநீர் குடித்த சிம்மவிஷ்ணு, தனக்குப் பின்னால் உள்ள பணியாளரிடம் கொடுப்பதாக நினைத்து மீதி இளநீரைக் கொடுத்தான். மானவர்மனும், நண்பன்தானே தருகிறான் என நினைத்து, வாங்கி மீதி இளநீரைக் குடிக்கப் பார்த்தான். திரும்பிப் பார்த்து சுதாரித்த சிம்மவிஷ்ணு, தவறிழைத்து விட்டதை நினைத்து நண்பனிடம் மன்னிப்புக் கேட்டு, இளநீரை வாங்கித் தானே மீதியையும் குடித்தானாம். நண்பன் மானவர்மன்மீது, சிம்மவிஷ்ணுவிற்கு அன்பு கூடியது.

ஒருமுறை, சாளுக்கிய அரசன் வல்லபன் காஞ்சி மீது படையெடுத்தான். சிம்மவிஷ்ணு இலங்கையிலிருந்து விருந்தினராக வந்துள்ள நண்பனைப் போருக்குத் தன்னுடன் அழைத்துச் செல்லாமல், தானே கிளம்பி விட்டான். சிம்மவிஷ்ணு இந்தப் போரில் வென்றால்தான், தனக்கு சிங்கள அரசைப் பெற்றுத்தர முடியும் என்று கருதி மானவர்மனும் போரில் கலந்து கொண்டான். இதுவும் காடுவெட்டி சிம்ம விஷ்ணுவை மனம் இளக வைத்தது.

பெரும்படை திரட்டி சாளுக்கியனை வென்ற சிம்மவிஷ்ணு மானவர்மன் தலைமையில் தனது படையை சிங்களம் அனுப்பினான். பல்லவர் படை வென்றது. மானவர்மன் சிங்கள

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

அரசனானான். பின்பு ஏதோ காரணத்தால், ஆட்சி இழந்து மீண்டும் சிம்மவிஷ்ணுவிடம் அடைக்கலமானான். இந்த முறையும் பல்லவபடை மானவர்மனோடு சென்றது. சிம்மவிஷ்ணுவும் சிங்களம் போவதாக இருந்தது. ஏனோ கடைசி நேரத்தில் போகவில்லை. ஆனால் அவன் அனுப்பிய பல்லவ படை மானவர்மனை மீண்டும் சிங்கள ஆட்சியில் அமர்த்தியது. இந்த சாசனம் வழங்கிய நந்திவர்மன் சிம்மவிஷ்ணுவின் நேரடி வழித்தோன்றல் அல்ல. சிம்மவிஷ்ணுவின் தம்பி பீமவர்மனின் வழிவந்தவனாகும்.

**சாளுக்கிய அரசன் புலிகேசியின் செய்தி**

பல்லவர்களுக்குள் அண்ணன் - தம்பி பிரச்சனை நடந்தது போன்று, சாளுக்கிய அரசிலும் நடந்திருக்கிறது. புலிகேசியின் தந்தை இறந்தபோது, அவன் சிறுவனாக இருந்தான். ஆகவே புலிகேசியின் தந்தையின் தம்பி, மங்களேசன் அரச உரிமையை ஏற்றான்.

சித்தப்பா மங்களேசனுக்கு அண்ணன் மகன் புலிகேசி வாலிப வயதடைந்தும் அவனிடம் ஆட்சியை ஒப்படைக்க மனம் வரவில்லை. தனக்குப் பிறகு தனது மகன், ஆட்சிக்கு வரவேண்டும் என நினைத்தான். இதனால், புலிகேசிக்கும், அவனது சித்தப்பன் மங்களேசனுக்கும் யுத்தம் மூண்டது. மருட்டூர் என்ற கிராமத்தை தானமாக வழங்கிய சாசனத்தில், புலிகேசி தன் சித்தப்பன் மங்களேசன், தன்னிடம் ராஜ்ஜியத்தையும், உயிரையும் கொடுக்க வேண்டியதாயிற்று என்று கூறியிருக்கிறான். "மங்களேசனை வென்றதை மஹாகூடம் மகுடேஸ்வர ஆலயத் தூணிலும் புலிகேசி பதிவு செய்திருக்கிறான்" என்று டாக்டர் மு. ராஜேந்திரன் "பல்லவர் காலச் செப்பேடுகள்" (ப.196) எனும் நூலில் குறிப்பிடுகிறார்.

**முடிவுரை**

பூமிதானத்தில் சிறந்த தானம் இருந்ததுமில்லை, இருக்கப் போவதுமில்லை. அதை அபகரிப்பதினின்றும் உயர்ந்த பாவம் இருந்ததுமில்லை. இருக்கப் போவதுமில்லை என்றும், தான் கொடுத்ததோ பிறன் கொடுத்ததோ எதுவாயினும், அபகரிக்கும் ஒருவன் அறுபதினாயிரம் ஆண்டு மலத்தில் புழுவாகப் பிறந்து உழல்வான் என்றும், மங்களம் உண்டாகட்டும், ஸ்ரீபரமேச்வரன் என்னும் மஹா காஷ்டக்காரியினால் எழுதப் பெற்றது என்றும் ஸ்வஸ்தி சித்தி உண்டாகட்டும் என்றும் செப்பேட்டின் இறுதிப் பகுதி கூறுகிறது.

கி.பி 754-இல் நந்திவர்மனின் 23ஆம் ஆட்சியாண்டில் எழுதப்பட்ட கசாக்குடிச் செப்பேட்டின் மூலம் கந்தவர்மன், கவந்தவர்மன் உள்ளிட்ட பல பல்லவ மன்னர்கள் குறித்த செய்திகளையும், நந்திவர்மப் பல்லவனது புகழையும், சாளுக்கிய மன்னர் புலிகேசி பற்றிய தகவல்களையும் அறிய முடிகிறது.

**நூற்பட்டியல்**

1. S.R. Balasubrahmanyam, Early Chola Art, Madras, 1966, ப.89.
2. கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி, *சோழர்கள்*, Vol-I, சென்னை, 1989 ப.151.
3. Chronological List of Inscriptions the Pudukkottai State, Govt. Museum, Chennai, 2002, CLI, 38, ப.4.
4. மேலது, CLI, 51, ப.8.
5. Inscriptions (Texts) of the Pudukkottai State Arranged According to Dynasties, Govt of TamilNadu – 2002, IPS NO, 81, ப.30.
6. K.R. Venkatarama Ayyar, Manual of the Pudukkottai, Vol.II, Commissioner of Museum, Govt of Tamilnadu, 2002, ப.998.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தமிழர் பண்பாட்டிலிருந்து தற்காலத்தில் மறைந்து சென்று கொண்டிருக்கும் மரபுரிமைகள்- வடஇலங்கை மையமாகக் கொண்ட ஆய்வு
# A Study on Northern Lanka- Vanishing Classical Antiquity from the Tamil Culture

**டினோசா இராஜேந்திரன்**, வரலாற்றுத்துறை,
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம், இலங்கை.

## Abstract

*Tamil Culture evolves from the various facets of Tamil related sources and ethics. These are the royal individuality of Tamil culture. Tamil chronology dates back many thousand years. The resources that show us the relics of Tamil culture and society have classical quality and rights. This quality has been brought from the ancestors to the present successors. This can be tabled under archaeological, architectural, tradition, craftship and nature classical quality. Today Tamil culture is losening its quality by the advent of globalization. Most of the present generation fails to preserve the Tamil vestiges and rely meaningless. Hence, the study dedicates to find out the forgotten antiques and the ways to preserve and to preach the needs of preservation to the younger generation of Tamil society.*

**Keywords:** Antique rights, Transformation, Preservation, Successors, Evidences

### ஆய்வின் அறிமுகம்

தமிழ்கலாச்சாரம், தமிழ்மக்களின் பண்பாடு ஆகும். இவ்வாறு காணப்படும் தமிழ்கலாச்சாரம் இந்தியா, இலங்கை, உள்ளிட்ட பல இடங்களில் பரவி காணப்படுகின்றது. இவ்வாறு பரவலாக காணப்படும் தமிழர்களின் பண்பாட்டினை தீர்மானிக்கும் கூறுகளாக மொழி, இலக்கியம், இசை, நடனம், நாட்டுப்புறகலை, தற்காப்பு, ஓவியம், சிற்பம், விளையாட்டு, ஆடைகள், உணவு, தத்துவங்கள், மரபுகள், சடங்குகள், அறிவியல் என பல கூறுகள் தமிழரின் பண்பாட்டிற்கு அடையாளங்களாக இருக்கின்றது. இத்தகைய அடையாளங்கள் நம்முன்னோர்களால் அளிக்கப்பட்டது. இதனை தமிழர் பாரம்பரிய அம்சங்கள் எனவும் அழைக்கலாம். இவ்வாறு காணப்படுகின்ற அம்சங்களில் அல்லது அடையாளச்சின்னங்கள் அனைத்தும் முன்னோர்களின் வரலாற்றையும் அவ் வரலாற்றின் அதிசய தன்மையினையும் அறிவதற்கு உதவுகின்றது.

ஒரு சமுதாயத்தின் மரபுரிமை என்பது அதன் வரலாற்றை உண்மையாகவே உணரக்கூடிய ஒரு வழிமுறையாகும். இது உண்மையில் கடந்த காலத்தின் வரலாற்றை எடுத்துக்காட்டுகின்றனவேயன்றி ஒரு கதையாக விளங்கவில்லை. இத்தகைய மரபுரிமைகள் தமிழர் வரலாற்றை பொறுத்த வரையில் கடந்த காலத்தின் வரலாற்றினை எடுத்து காட்டுவதில் அதிக பங்களிப்பு செலுத்துகின்றது. அந்த வகையில் வடஇலங்கை 3000 ஆண்டுகளுக்கு இடைப்பட்ட கால வரலாறுகொண்ட மரபுரிமைச் சின்னங்களைக் கொண்டுள்ளது. இலங்கையினை பொறுத்த வரையில் வட இலங்கை என்பது தற்போதைய யாழ்ப்பாணம், கிளிநொச்சி, மன்னார், முல்லைத்தீவு, வவுனியா, ஆகிய 05 மாவட்டங்களிகளை

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

உள்ளடக்கியதாகும். இவ்வாறு காணப்படும் வடஇலங்கையில் காணப்படும் சின்னங்கள் எவை என்பதனை தெளிவுபடுத்தும் அச்சின்னங்கள் எவ்எவ் காரணங்களால் வழக்கொழிந்து வருகின்றது என்பதனை வெளிப்படுத்துவதற்காகவும் இவ் ஆய்வு மேற்கொள்ளப்படுகின்றது.

**நோக்கங்கள்**

இவ் ஆய்வின் நோக்கங்களாக பின்வருவன அமைகின்றது.

01) வட இலங்கையில் காணப்படும் மரபுரிமைகள் எவை என்பதனை கண்டறிவதும்,
02) வடஇலங்கையில் காணப்படும் மரபுரிமைச் சின்னங்கள் எவ் எவ் காரணங்களால் மறைந்து வருகின்றது என்பதனை கண்டறிவதும்,
03) இத்தகைய மரபுரிமை சின்னங்களை பாதுகாக்க எத்தகைய நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம் என்பதனை கண்டறிவது இவ் ஆய்வின் நோக்கங்களாகும்.

**கருதுகோள்**

உலக மயமாக்கலினால் தமிழர் வரலாற்றில் பல ஆயிரம் ஆண்டுகளாக பேணப்பட்டுவரும் மரபுரிமைகள் வழக்கெழிந்து கொண்டிருக்கின்றது.

**பகுப்பாய்வு**

மரபுரிமை என்பது “எமது முன்னோர்களால் பாரம்பரியமாக பின்பற்றி வைத்த சின்னங்களையும் பாவனை பொருட்களையும் மரபுரிமை என்று கூறலாம்.” மரபுரிமை என்பது தொடர்பில் பலர் பல்வேறான கருத்தக்களை கூறினாலும் இன்று இவ் கருப்பொருள் வரலாறு, தொல்லியல் துறையுடன் தொடர்புபடுத்தப்பட்டு விளக்கப்படுவதனை காணமுடிகின்றது. உதாரணமாக, வெயிலர், ஹேல் ஆகியோரரின் கூற்றுப்படி பண்பாடு, மரபுரிமை, கலைகள் ஆகியன நீண்ட காலமாக சுற்றுலாத் துறைக்கு கவர்ச்சியை வழங்குவனவாக இருந்து வருகின்றன. அண்மைக் காலத்தில் மரபுரிமைகளிலும் கலைகளிலும், ஆர்வம் கொண்டவர்களைக் கவர்வதற்கு அதிகளவு பயன்படுகின்றது என குறிப்பிட்டுள்ளனர். இவ்மரபுரிமையை இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.



E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

1. **இயற்கை மரபுரிமை:** இயற்கைப் பொருட்களைக் குறிக்கும். ஒரு நாட்டு தாவரங்கள், மிருகங்கள், புவி அமைப்பு, தாதுப்பொருட்கள், பௌதீக நில, நீர் அம்சங்கள், வரலாற்றிற்கு முற்பட்ட மனித வரலாறு, புவி வரலாறு போன்றவற்றை உள்ளடக்கும் இயற்கை மரபுரிமையானது Physical and Biological Geological and Psychological, Natural Sites” என மூன்று அம்சங்களைக் கொண்டுள்ளது.
2. **கலாசார மரபுரிமை:** 1871ம் ஆண்டு நுனறயசன டீரசநெவவ வலடழச என்பவர் கலாசார பண்பாடு என்பது “Culture is that complex whole which includes knowledge beliefs, Art, moral, law, Custom and any other capabilities and habits acquitted man as a member of Society” என கூறுகின்றார்.

இதன் அடிப்படையில் மரபுரிமை என்பது கடந்த காலத்திலிருந்து கொண்டு வரப்பட்ட தனித்தவமானதும், ஈடுகொடுக்க முடியாததுமான ஒன்றாகும் என்பது தெளிவாகின்றது. இத்தகைய மரபுரிமையை பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

இவ்வாறு காணப்படும் மரபுரிமைகளில் தமிழர் கலாச்சாரத்துடன் தொடர்புடையதாக காணப்படுகின்ற தொண்டுணரக் கூடிய மரபுரிமைகளில் கவனம் செலுத்துவது இன்றியமையாததாகும். அந்த வகையில் வடஇலங்கை பொறுத்தவரையில் பல ஆயிரம் ஆண்டுகளாக காணப்பட்ட மரபுரிமை சின்னங்களை பின்வரும் அடிப்படையில் வகுப்பது பயனுடையதாகும். தமிழ் மக்களின் வாழ்வியலுடன் தொடர்பான மரபுரிமைகள்:

1) வரலாறு சார்ந்த மரபுரிமைகள்
2) வாழ்வியல் சார் மரபுரிமைகள்

எனும் தலைப்பின் கீழ் மரபுரிமைகளினை வகுப்பதன் மூலம் தமிழ் மக்களின் வாழ்வியலுடன் வரலாற்றுடனும் தொடர்புடைய மரபுரிமைகளை இனங்காண்பது இலகுவானதாக அமையும். தமிழ் மக்களின் வாழ்வியலுடன் தொடர்புடைய மரபுரிமைகளில் தமிழ்மொழி, உணவு, ஆடை, பாவனைப் பொருட்கள், விழாக்கள், சடங்குகள் என பல்வேறு அம்சங்கள் தாக்கம் செலுத்துகின்றது. தமிழ் மக்களினுடைய வாழ்வில் செல்வாக்கு செலுத்துகின்ற மரபுரிமைகளாக பின்வருவனவற்றை குறிப்பிடலாம்.

**உதாரணம்**: மந்திரமனை, அரச தலைநகர், சங்கிலியன் தோப்பு கல்தோரண வாசல், சுமைதாங்கிகள், கீரிமலை நகுலேஸ்வரம், நல்லூர், இராசதானிகால ஆலயங்கள், மடம், யாழ்ப்பாண கோட்டை, ஊர்காவற்றுறை கடற்கோட்டை, வெளிச்சவீடு என பல மரபுரிமைச் சின்னங்கள் வரலாறு சார்ந்தவையாக இருக்கின்றன. இவற்றினை அரச, தனியால் நிறுவனங்கள் தமது கவனத்தின் கீழ் வைத்துள்ளமை குறிப்பிடத்தக்கது. எனினும் தமிழ் மக்களின் வாழ்விலுடன் தொடர்ப்புபட்ட பல பொருட்கள் இன்று வழக்கொழிந்து வருகின்றது. தமிழருடைய வாழ்வியல் என்கின்ற போது தமிழர் ஆரம்ப காலம் தொட்டு தமது வாழ்க்கையில் பயன்படுத்திய பொருட்களை குறிப்பிடலாம். அந்த வகையில் தமிழர் வாழ்வியலிருந்து இன்று மருகிவரும் பொருட்களாக பின்வருவனவற்றை குறிப்பிடலாம்.



E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கொத்து, அம்மி, பெட்டகம், அரிக்கன் விளக்கு, அரிவாள், அலுமாரி, ஆட்டுக்கல், உரல், உறி, கலப்பை, குத்துவிளக்கு, பாக்குவெட்டி, மத்து, திரிகணை, தடுக்கு, தேங்காய் துருவி, செக்கு, கூசா, கட்டை வண்டி என பல்வெறு பொருட்கள் பாவனையை இன்று காணமுடியாதுள்ளது. எனவே வரலாறு சார்ந்த விடயங்களை பாதுகாக்கும் அளவிற்கு தமிழருடைய வாழ்வியலில் செல்வாக்கு செலுத்திய பொருட்களை பாதுகாக்க தவறிவிட்டோம் என்பது குறிபபிடத்தக்கது.

தமிழரின் வாழ்வியலில் ஏற்பட்டிருக்கும் மாறுதல்கள் எமது வரலாற்றை திசைமாற்றி கொண்டிருக்கின்றது. ஏனெனில் நமது முன்னோர்கள் எமக்களித்த பொக்கிஷமான பொருட்களை எல்லாம் இன்று பயன்படுத்தாமல் அதற்கு மாற்றீடாக நாகரிக பொருட்கழைள பாவித்து வருகின்றோம். நாகரிகம் மாறமாற நாடும் சேர்ந்து மாறுவது இயல்பாகிவிட்டாலும் - இம்மாறுதலானது எமது பாரம்பரியத்தை மறந்து நகர்கின்றது என்பதற்கு சரியான உதாரணமாக இவ் வழக்கொழிந்து வருகின்ற பொருட்கள் அமைகின்றன.

**உதாரணம்** - ஐ (அம்மி, உரல், ஆட்டுக்கல் என்பது தமிழரின் உணவினை திறம்பட செய்வதற்கு பயன்படுத்தப்பட்டது இன்று அதற்குப் பதிலாக நவநாகரிப் பொருளைப் பயன்படுத்துகின்றோம்.)

**உதாரணம்** - ஐஐ ஒளியினை வியாபித்து அதற்கேற்ப வீடுகளில் கடாஷ்சத்தினை பெறுவதற்காக இயற்கை ஒளியை முன்னோர் அதிகளவில் நாடினர். அம்மரபு தற்போது மருவி மின்சாரத்தில் இயக்கப்படுகின்றது)

இவ்வுதாரணங்கள் மூலம் தமிழ் மக்கள் பயன்படுத்திய பல்வேறு பொருட்கள் இன்று எமது வாழ்வியலில் இருந்து புறக்கணித்து வருகின்றமை தெளிவாகிறது.

**தமிழ் பண்பாட்டிலிருந்து மருவிவரும் பொருட்களை பாதுகாப்பது எப்படி**

உள்ர் சமூக நிறுவனங்கள்
அபிவிருத்தி நிறுவனங்கள்
பல்கலைக் கழகங்கள்
மரபுரிமை நிதியங்கள்
மரபு வழியான மரபுரிமைச் சொத்துக்களை பாதுகாப்பவர்கள்
அரச தொண்டு நிறுவனங்கள்
தனியார் துறையினர்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

மரபுரிமைகளை பாதுகாப்பது என்பது சாதாரண மக்களிலிருந்து அரச பணியாளர்கள் வரை அனைவருக்கும் உரித்துடைய ஒன்றாகும். அந்த வகையில் தமிழர்களின் வாழ்வியலிலிருந்து மருவிக்கொண்டு வரும் பல்வேறு பொருட்களை பாதுகாப்பது இன்றியமையாதது எனலாம். இவற்றை பாதுகாப்பதற்கு முதலில் மருவிவரும் பொருட்களை சேகரித்து அவற்றின் பயன்பாட்டுச் சிறப்பு அதனால் ஏற்படும் தேக ஆரோக்கியம் உள்ளிட்டவற்றை மக்களுக்கு தெரியப்படுத்தல் அவசியமானதாகும். ஏனெனில் நாகரிக மாற்றம் எனும் பெயரில் மாறிக்கொண்டிருக்கின்ற எமது சமுதாயத்தை முற்றிலும் மாற்றமடையாது தடுப்பது ஒவ்வொருவரின் தலையாய கடமை எனலாம்.

கடந்த காலத்தில் எமது பண்பாடு எவ்வாறு இருந்தது என்பதனை அறிவதற்கு ஆதாரமாக விளங்குகின்ற அரிய பொக்கிசங்களினை பாதுகாத்து புதிய சந்ததியினரிடம் அவற்றை ஒப்படைக்க வேண்டும். எனவே அவ்வாறு ஒப்படைப்பதற்கு குறித்த பொருட்களை பாதுகாக்க வேண்டும். கலாச்சார சொத்துக்களின் முகாமைத்துவத்தின் மூலமாக நாட்டு மக்களுக்கு விளக்கமளித்து விழிப்புணர்வை ஏற்படுத்தி அவற்றினை முழுவதுமாக பாதுகாத்து கொள்வது ஒவ்வொருவரின் கடமை ஆகும். இத்தகைய தமிழர் பண்பாட்டுடன் தொடர்புடைய மரபுரிமைகளில் கவனம் செலுத்துவதன் மூலம் தமிழ் சமுதாயத்தின் பெறுமதியை உலகறிய செய்வதுடன் நாகரிக மயமாகி எமது பாரம்பரியத்தை மறந்து வரும் தமிழரின் பழக்கத்தையும் மாற்ற இயலும். இவற்றை தற்போது மருகிவரும் சந்தர்ப்பங்களில் பாதுகாத்தால் மட்டுமே அவற்றை எதிர்கால சந்ததியினர் மத்தியில் கொண்டு சேர்க்கலாம் என்பதனை அனைவரும் உணர்ந்து செயற்படுத்தல் வேண்டும்.

**முடிவுரை**

தமிழர் பண்பாட்டினை பொறுத்தவரையில் அவர்களுடைய பண்பாடுகள், பழக்க வழக்கங்கள், பாவனைப் பொருட்கள் உள்ளிட்டவற்றினால் பல மரபுரிமைகளை தமக்கானவையாக பிரகடனப்படுத்தியதுடன் அவற்றின் தனித்துவத்தினையும் பேணிவந்தனர். எனினும் மாறிவரும் சமூகமாற்றமானது இன்று பல்வேறு விடயங்களில் நாகரிகத்தன்மையினை புகுத்தி அதற்குரிய தனித்துவத்தினை மாற்றிவருகின்றது. அந்த வகையில் தமிழர் பண்பாட்டினைப் பொறுத்தவரையில் பாரம்பரியமாக பாவித்து வந்த பாவனைப் பொருட்கள் மருவிக் கொண்டு வருவதனை காணலாம். இவ்வாறு மருகிவருகின்ற பொருட்கள் தமிழர்களை திடமாகவும், ஆரோக்கியமாகவும் மனநிறைவுடனும் இருப்பதற்கு உருவாக்கப்பட்டவை ஆகும். எனினும் இன்று இத்தகைய நம்பிக்கை, இத்தகைய சிந்தனை மக்கள் மத்தியில் மருவிக்கொண்டு செல்கின்றது. இவ்வாறு மருவிவரும் மரபுரிமை மீது செல்வாக்கு செலுத்தும் பிரதான காரணியாக அமைவது நவநாகரிகமாற்றம் ஆகும். நாகரிகம் என்று கூறி எமது ஆரோக்கியமான தமிழ் சமுதாயத்தை பின்னடையச் செய்து வருகின்றோம் என்பதனை இவ் ஆய்வு தெளிவுபடுத்துகின்றது. இத்தகைய மாற்றங்களை குறைத்து முடிந்தளவிற்கு எமது முன்னோர் எமக்களித்த பொக்கிஷமான பாவனைப் பொருட்களை பயன்படுத்த வேண்டும். அத்துடன் எமது எதிர்கால சந்ததியின் சிறப்பான எதிர்காலத்திற்காகவும் இவ்முயற்சியை அனைவரும் ஒன்றிணைந்து செயலாற்றுவது தமிழராய் பிறந்த ஒவ்வொருவரினதும் கடமை என்பதை வலியுறுத்துவது இவ் ஆய்வின் மிகப் பெரிய பயன் எனலாம்.

**E-ISSN: 2581-7140**
**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

**உசாத்துணை நூல்கள்**

01) புஸ்பரட்ணம்.ப., 2012, யாழ்ப்பாண வாழ்வியல், கலைக்கேசரி எக்ஸ்பிரஸ், நிஸ்பேப்பர் லிமிட்டட்.
02) இரகுபதி.பொ., 2005, புலரி, "கடற்கோட்டை", இதழ் 3.
03) பாலச்சந்திரா.எச.கே., 2011, "யாழ்ப்பாணத்து மரபுரிமைச் சின்னங்களின் பாதுகாப்பு" யாழ்ப்பாணத்தில் உள்ள மரபுரிமை மையங்களின் மீள்புனரமைப்பும், முகாமைத்துவமும் பற்றிய வேலைப்பட்டறை, யாழ்ப்பாணம், இலங்கை.
04) ஜெயதிஸ்ஸ.கேரத், 2011, "வரலாற்றுச் சிறப்புமிக்க பட்டினங்கள், நகரங்களின் பாதுகாப்பு" யாழ்ப்பாணத்தில் உள்ள மரபுரிமை மையங்களின் மீள்புனரமைப்பும், முகாமைத்துவமும் பற்றிய வேலைப்பட்டறை, யாழ்ப்பாணம், இலங்கை.
05) மண்டாவல. பிஸாந்த, பி., 2011, "மரபுரிமையின் தத்துவங்கள், முகாமைத்துவம், மரபுரிமை முகாமைத்துவம்" யாழ்ப்பாணத்தில் உள்ள மரபுரிமை மையங்களின் மீள்புனரமைப்பும், முகாமைத்துவமும் பற்றிய வேலைப்பட்டறை, யாழ்ப்பாணம், இலங்கை.
06) ஞானப்பிரகாசர். சுவாமி., 1928, யாழ்ப்பாண வைபவ விமர்சனம், அச்சுவேலி.
07) Silva.R.K. De., Beumer.W.G.M. 1988> Illustrations and views of Dutch Ceylon, 1603 – 1796, Serenadib publication, 48 Uplands way, London.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019
Available at: www.ijtlls.com

# பண்டைய தொல்பொருள் சான்றுகள் மூலம் அறியப்படும் தமிழர் பண்பாடு (சுடுமண் கலை வடிவங்கள்)

# Tamil Culture through Ancient Archaeological Evidences (Wrought Art Models)

**ஏ.தமிழரசு**, முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை-08.

## Abstract

*The paper tries to scrutinize the evidences based on archeology related to Tamil Culture. The richness of Tamil culture has been accepted by the world scholars of archaeological department that Tamil culture is a one of ancient origin. Most of the cultures from ancient civilizations seem with the remnants of Tamil culture. The Harappa, Mohenjadaro, Sumeria, Lothal, Aatichanallor, Kodumanal seems to be similar in the town architecture and usage of clay pots. It is lucidly seen that there are lots of evidences to prove the civilizations are of one origin. The art models are also of similar structures and composition. Therefore, the study brings out the fact related to the study.*

**Keywords:** Tamil Culture, Ancient Archaeological Evidences, Wrought Art Models

பண்பாடு என்ற சொல்லே மற்ற உயிரினங்களிடமிருந்து மனிதர்களை தனியாக பிரித்துக் காட்டுகிறது. பண்பாடு என்ற சொல்லானது மனிதனோடு மட்டுமே தொடர்புடையது. பண்பாடு என்பது வாழ்க்கை முறையாகவும் அவ்வாழ்விற்கான ஓர் அர்த்தமாகவும் அமைகிறது. பண்பாட்டின் வழியாகவே மனிதர்கள் தங்களின் வாழ்வியலை வெளிபடுத்துகின்றார்கள். அதன் மூலமாகவே மனிதர்களின் மேம்பாடும் சமூக மேம்பாடும் முழுமையடைகிறது.[1] சமூகம் என்பது மனிதன் தனித்து வாழ்வதில்லை தன்னைப்போன்ற பிற மனிதர்களுடன் ஏதேனும் ஒரு வகையில் சேர்ந்து வாழ வேண்டியவனாய் இருக்கிறான். சமூகம் என்பது மனிதர்களின் கூட்டு வாழ்க்கையினைக் காட்டுவதாகும்.[2] பண்பாடு என்பது தனிமனிதர் என்ற வட்டத்தினை கடந்து ஒரு சிறுகுழு என்ற அளவில் அமைகிறது. இதனை ஒரு குடும்பத்தின் பண்பாடகக் கருதமுடிகின்றது.

மனிதன் பிறந்த நாட்கள் முதல் கொண்டு அவன் இறக்கின்றநாள் வரை அவனது பண்பாட்டை சமுதாயவயமாக்கம் (Socialization) பண்பாட்டுவயமாக்கம் (Enculturation) மூலம் கற்கிறான். பிரான்ஸ் போவாஸ் என்பவர் பண்பாடு என்னும் கருத்தாக்கத்தின் முக்கியத்துவத்தினை கணிதவியலின் ‘சுழியம்’ (Zero) என்னும் கருத்தாக்கம் எவ்வளவு முதன்மையானதோ அவ்வாறே மானிடவியலும் பண்பாடு என்னும் கருத்தாக்கம் மிகவும் முதன்மையாகிறது என்று கூறுகிறார்.[3] பொதுவாக பண்பாட்டினை மனிதர்களின் கூட்டு வாழ்க்கையின் வளர்ச்சியினையும், அறிவுத்திறன் வளர்ச்சி ஆகியவற்றினை பண்பாடு என்று கருதமுடிகிறது. நம்முடைய தமிழ்ப் பண்பாடு என்பது மிகவும் பழமையுடன் சிறப்பும் வாய்ந்த ஒன்றாகும்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

"கல்தோன்றி மண்தோன்றா காலத்தே வாலோடு முன்தோன்றிய மூத்தக்குடி தமிழ்குடி" என்று தமிழரின் சிறப்பினை அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். ஆம் இவற்றின் அடையாளங்கள் தமிழ்நாட்டில் மிகுதியாக காணப்படுகிறது. அவை தொல்லியல அகழாய்வுகள், மேற்பரப்பாவினால் வெளிக் கொணரப்படுகின்றது. பண்டைய தமிழகத்தில் மக்கள் நாடோடி வாழ்வினை கடந்து குழுவாழ்க்கை முறையினை தொடர்ந்து நாகரீகத்தன்மையுடன் வாழ்ந்தனர் என்பதை விளக்கும் வகையில் இங்கு காணப்படும் தொல்லியல் சான்றுகள் ஏராளம். பழையகற்காலம் முதல் சங்ககாலம் வரை பல எச்சங்கள் தொல்லியல் வாயிலாக காணமுடிகிறது. காட்டு மிராண்டியாக வாழ்ந்த காலத்திலேயே நம் தொல்குடி மக்கள் கற்களை கொண்டு ஆயுதங்களை செய்யும் அறிவுத்திறன் படைத்தவர்கள் என்பதற்கு சான்றாகவும், தமிழ்நாடு வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தின் பிறப்பிடம் என்ற கருத்திற்கு இணங்க நம் தமிழகத்தில் சென்னைக்கு அருகிலுள்ள பல்லாவரம் மலைப் பகுதிகளில் இராபட்புரூஸ்புட் என்பவர் 1863-ல் கைக்கோடரி ஒன்றினைக் கண்டுபிடித்தார். அத்திரம்பாக்கம் என்ற ஊரில் உடைந்த புதைவடிவ மனிதர் கால் எலும்பை பழங்கற்காலக் கருவிகளுக்கு இடையில் கண்டுபிடிக்கப்பட்டது இதனால் தமிழ்நாடு பழங்கற்கால மனிதன் வாழ்ந்த தொன்மையான பகுதிகளைக் கொண்டுள்ளது என இதன்மூலம் உலகிற்கு தெரியவந்தது.[4]

செங்கற்பட்டு, அத்திரம்பாக்கம், குடியம், வடமதுரை ஆகிய இடங்களில் தமிழ்நாடு அரசு அகழாய்வின் மூலம் கிடைத்த கல் ஆயுதங்கள் மூலம் மனிதர்கள் பண்டைய காலத்தில் வாழ்ந்தனர் என்பது விளங்குகின்றது.[5] கற்காலத்தில் வாழ்ந்த மனிதர்களின் ஈமச்சின்னங்களில் கிடைத்த மனித எலும்பு கூடுகளை வைத்து மனிதர்கள் கூட்டு வாழ்வினை வாழ்ந்தனர் என்பது அறியமுடிகிறது. ஆனால் அவர்களுக்கு பின் வாழ்ந்த மக்கள் நாகரீகத்துடனும், பண்பாட்டுடனும் வாழ்ந்தனர் என்பதை அவர்கள் விட்டு சென்ற கலை படைப்புகளான பாறை ஓவியங்கள், குறியீடுகள், சுடுமண் மட்பாண்டங்கள், சுடுமண் உருவங்கள் நமக்கு உணர்த்துகின்றன. பாறைஓயங்கள் தமிழ்நாட்டில் வடக்கிலிருந்து தெற்கு வரை காணப்படுவதால் இங்கு இனக்குழு வாழ்வியலை பண்டைய கால மக்கள் மேற்கொண்டனர் என்று அறியமுடிகின்றது. அவர்கள் வரைந்த பாறை ஓவியங்கள் வேட்டையாடுதல், மனித உருவங்கள், குழு நடனம் விலங்கு உருவங்கள் சிவப்பு நிறம் கொண்டும் வெள்ளை நிறம் கொண்டும் கோட்டோவியமாக வரையப்பட்டுள்ளதை இன்றும் நம்மால் காணமுடிகிறது.

தொல்மாந்தர்கள் விலங்குகளிடமிருந்தும், இயற்கை சீற்றங்களிலிருந்தும் தம்மை பாதுகாத்துக்கொள்ள இயற்கையாக அமைந்த குகைகளிலும், பாறைகளின் தாழ்வான பகுதிகளிலும் வாழ்ந்தனர். இத்தகைய இயற்கையையே தொடக்க காலத்தில இவர்கள் வழிபடத் தொடங்கினர். காற்று, மழை, சூரியன், போன்றவற்றை வழிபட்டதுடன் இறந்தவர்களை வழிபடும் வழக்கமும், குலக்குறி வழிபாடும், தாய்தெய்வ வழிபாடும் அவர்களிடம் காணப்பட்டது. தான் கண்ட காட்சிகளையும், நிகழ்வுகளையும் தாங்கள் இருந்த குகைகளில் ஓவியங்களாகவும், குறியீடுகளாகவும் வரைந்தனர்.

தமிழ்நாடு முழுவதும் பாறை ஓவியங்கள் (நீலகிரி, தர்மபுரி, மதுரை, சிறுமலை, கொடைக்கானல்) போன்ற பல்வேறு இடங்களில் காணப்பட்டாலும் விழுப்புரம் மாவட்டம் திருக்கோவிலூர் வட்டத்தில உள்ள கீழ்வாலை என்ற பகுதியில் காணப்படும் விலங்குகள் உருவங்கள், பறவைகள் உருவங்கள், குறியீடுகள் மற்றும் மனித உருவங்கள் கொண்ட பாறை ஓவியங்கள் அவர்கள் மேற்கொண்ட சமூக வாழ்வு நிலையையும், இனக்குழு வாழ்க்கையினையும் தெளிவாக காட்டுகின்றன. மேலும் இங்கு காணப்படும் குறியீடுகள் சிந்து

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

வெளி நாகரீகத்தில் கிடைத்த குறியீடுகளுடன் ஒத்துள்ளது என தொல்லியல் அறிஞர்கள் ஒப்பிடப்பட்டுள்ளனர். விலங்குகளை தங்களுடன் வேளாண் தொழிலுக்கு பயன்படுத்தி கொண்டிருந்தனர் என்பதையும், நீர்நிலைகளை கடந்து செல்ல படகினை பயன்படுத்தியுள்ளனர் என்பதையும் இங்கு காணப்படும் பாறை ஓவியங்கள் நன்கு உணர்த்தகிறது. பெண்களை தெய்வமாக வணங்கியுள்ளனர் என்றும் தாய்தெய்வ வழிபாட்டினை உடையவர்களாக இருந்தனர் என்பதையும் இங்கு காணமுடிகிறது.[6]

பாறை ஓவியங்களில் உள்ள குறியீடுகள் பின்னாளில் குலக்குறியீடுகளாக்கப்பட்டன. பின்பு அக்குறியீடுகள் தொல்பழங்கால் மக்கள் பயன்படுத்திய சுடுமண்ணாலான பானை ஓடுகளிலும் வரையப்பட்டன. சுடு மண்ணாலான பானை ஓடுகள் கிடைக்கப் பெற்ற இக்காலத்தினையே புதிய கற்காலம் என்று அழைக்கப்பட்டது. சுடுமண்ணால் பானை வனைதல் மட்டுமின்றி சுடுமண்ணாலான உருவங்கள செய்யும் கலையும் இக்காலத்தில் தொடங்கியது என்பதனை தமிழகத்தில் பல்வேறு இடங்களில் மேற்கொள்ளப்பட்ட தொல்லியல் அகழாய்வுகள், மேற்பரப்பாய்வுகள் வாயிலாக கிடைக்கப் பெற்ற சுடுமண் சிற்பங்கள் சான்றாக திகழ்கின்றன. புதியகற்காலம், பெருங்கற்காலத்தினை தொடர்ந்து சங்ககாலத்திலும் இக்கலை வளர்ச்சி பெற்று இருப்பதை சங்க இலக்கியங்களிலும் சுடுமண் கலையினைப் பற்றிய பல செய்திகளை காணமுடிகிறது. சிலப்பதிகாரத்தில் " கண்ணுள் விலை தெரு மண்ணீட்டாளரும்" (5.30) என்றும் மணிமேகலையில் மண் கொண்டு பொம்மைகள் செய்யும் கலைஞர்கள் பற்றி வருகிறது.

"நுண்மான் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனை பாவையற்று" (குறள் 407)

எனத் திருக்குறளில் சுடுமண் சிற்பக்கலை குறிக்கப்பட்டுள்ளது. மணிமேகலையில் பல தொழில் புரிவோர் பற்றி குறிப்பிடும் போது இவர்களைப் பற்றி மண்ணைக் கொண்டு சிற்பங்களை செய்யும் சிற்பியர் என்று குறிப்பிடுகிறது.[7]

இந்தியாவில் குறிப்பாக சிந்து சமவெளி நாகரீக காலத்தில் ஹரப்பா, மொகஞ்சதாரோ, லோத்தல் ஆகிய இடங்களில் கிடைத்த சுடுமண் உருவங்கள் உலகப்புகழ் பெற்றவை இவை சுமார் கி.மு 3000 ஆண்டுகளுக்கு முற்பட்டவையாகும். வட இந்தியாவை ஆண்ட மௌரியர், குஷாணர், குப்தர் போன்ற அரச மரபினர் காலத்தில் சுடுமண் கலையானது உண்னத நிலையை அடைந்திருந்தது. தமிழகத்தில் நடைபெற்ற பெரும்பாண்மையான் அகழாய்வுகளிலும் மேற்பரப்பு அகழாய்வுகளிலும் சுடுமண் உருவங்கள் கிடைத்துள்ளன. குறிப்பாக பையம்பள்ளி, கொற்கை, ஆதிச்சநல்லூர், சேந்தமங்களம், போளுவாம்பாட்டி, போரூர், கரூர், காவிரிப்பூம்பட்டினம் போன்ற ஊர்களில் சுடுமண் உருவங்கள் கிடைத்துள்ளன.[8] கற்காலம் முதல் வரலாற்றுக் காலம் வரை வாழ்ந்த பண்டைய தமிழக மக்கள் நாகரீகத்துடனும் பண்பாட்டினையும் கொண்டுள்ளனர் என்பது இங்கு காணப்படும் நுண்கலையின் வாயிலாக கற்காலம் முதல் சங்ககாலம் வரை தமிழரின் பண்பாட்டினை அறிந்துகொள்ள முடிகிறது.

**துணைநூற்பட்டியல்**

1. பக்தவத்சலபாரதி, பன்பாட்டு மானிடவியல், முதற்பதிப்பு - 2011.
2. பேராசிரியர் அரங்க.சுப்பையா, சமூகவியல் அறிஞர்களும், கோட்பாடுகளும் - 2003.
3. Merwyn S.Garbarino, Socio Cultural Theary in Anthropology, (New York : Holt, Rinebart and Wiston - 1977.

**E-ISSN: 2581-7140**

**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

4. சு. இராசவேலு, கோ. திருமூர்த்தி, தமிழ்நாட்டுத் தொல்லியல் அகழாய்வுகள்.
5. மேலது,
6. கோ.கிருஷ்ணமூர்த்தி, கீழ்வாலை பாறை ஓவியங்கள் அமைப்பும் உள்ளடக்கமும், சமூகவிஞ்ஞானமும், காலாண்டு ஆய்விதழ்.
7. முனைவர் சீ. வசந்தி, தமிழக அகழாய்வில் சாதனைகள் - 1999.
8. மேலது.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 277
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தொல்லியற் களமாக விளங்கும் கொடுமணல்

Kodumanal the Archaeological Site

**முனைவர். ப. திலகவதி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
நவரசம் கலை அறிவியல் மகளிர் கல்லூரி, ஈரோடு.

**Abstract**

*The paper tries to scrutinize the evidences based on archeology related to Tamil Culture at Kodumanal. It seems to be similar in all archaeological sites. Therefore, the study brings the facts related to the study.*

**Keywords:** Kodumanal, Tamil Culture, Ancient Archaeological Evidences

தமிழகத்தின் வராலற்றில் தனக்கெனத் தனியிடம் பெற்றது கொங்குநாடு. பழங்காலம் முதல் மூவேந்தர்களின் ஆட்சிக்குட்பாடாது, கொங்குநாடு தனி நாடாகவே இருந்து வந்துள்ளது. கொடுமணல், முட்டம் முதலான இடங்களில் நடைபெற்ற தொல்லியல் ஆய்வுகள், சங்க இலக்கியங்கள், பழங்கால நாணயங்கள், கல்வெட்டுக்கள், செப்பேடுகள், மரபுச் செய்திகள், இந்நாட்டின் மாந்தர் வாழ்வியல் ஆகியன கொண்டு கொங்குநாட்டு மக்களின் நாகரிகத்தையும், பண்பாட்டையும், வரலாற்றையும் அறியலாம். கொங்குநாடு காடுகளும், ஆநிரைகளையும் நிரம்பப்பெற்றது. அதேபோல் கனிமவளமும், வனவளமும் செழிப்புற்றிருந்தது. ஆகவே கொங்குநாடு மேலைநாட்டுடன் வாணிபத் தொடர்பு கொண்டிருந்தது. கொடுமணல், கீழடி போன்ற இடங்களில் நடைபெற்ற அகழாய்வுகள் இதனை உறுதி செய்கின்றன. கொடுமணலில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சித் தரவுகளும், கள ஆய்வில் உற்று நோக்கல் மூலம் பெறப்பட்ட தரவுகளின் அடிப்படையில் 'கொடுமணல்' தொன்மையான வரலாற்றுச் சிறப்புமிக்க ஊராக சங்ககாலம் முதற்கொண்டு விளங்கி வருவதை அறிந்து கொள்ள முடிந்தது.

### கொங்கு நாட்டின் எல்லைகள்

ஒரு நாட்டின் எல்லைகளும், இயற்கை அமைப்பும் முதலுறுப்பாகக் கருதப்படுகின்றன. எல்லைகள் இருப்பிடத்தையும், இயற்கை அமைப்பினையும் அதன் வளத்தையும் காட்டுகின்றன.

"மதிற்கரை கீட்டிசை தெற்குப் பழனி மதிகுடக்குக்
கதித்துள வெள்ளி மலைபெரும் பாலை கவின்வடக்கு
விதித்துள நான்கெல்லை சூழ வளமுற்றும் மேவி விண்ணோர்
மதித்திட வாழ்வு தழைத்திரு நீள் கொங்கு மண்டலமே" (கொ.ச.பா.2)

என்று கொங்குமண்டல சதகம் கிழக்கு மதிற்கரையும், தெற்கு பழனி, மேற்கு வெள்ளிமலை (வெள்ளியங்கிரி), வடக்கு பெரும்பாலை எனக் கொங்கு நாட்டின் எல்லைகளாகக் குறிப்பிடுகிறது. கொங்கு நாடு 'தென்கொங்கு', 'வடகொங்கு' என இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்ததைத் தமிழ் இலக்கியங்களும், கல்வெட்டுக்களும் உறுதிப்படுத்துகின்றன.

கோவை, பல்லடம் ஆகிய வட்டங்களின் தென் பகுதிகளும், பொள்ளாச்சி, உடுமலைப்பேட்டை, தாராபுரம், கரூர், குளித்தலை, பழநி, திண்டுக்கல் வட்டங்களும் தென் கொங்கு நாடாகும். வடகொங்கு என்பது கோவை, பல்லடம் வட்டங்களின் வடக்குப் பகுதிகளும், அவினாசி, கோபி, பவானி, ஈரோடு, சேலம், நாமக்கல் முதலான

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

வட்டங்களுமாகும். இவ்விரு கொங்கிற்கும் நொய்யலாறும், நொய்யல் காவிரியுடன் கலந்தபின் கிழக்கிலுள்ள காவிரியாறும் எல்லைகள்என்று தூரன் நல். நடராஜன் குறிப்பிடுவார்.

**சங்க இலக்கியச் சான்றுகள்**

'கொங்கு' என்பதற்குக் கழகத்தமிழ் அகராதி பொன், பூந்தாது, தேன், மலர், மணம், மரம், நாடு என்ற பல பொருள்களைத் தருகிறது.இங்கு பொன் மிகுதியாகக் கிடைத்ததால் கொங்கு (பொன்) நாடு என்று வழங்கிற்று என்பர். மேலும் கொங்கு நாட்டில் அமைந்துள்ள ஊதியூர் மலையில் பதினெண் சித்தர்களுள் ஒருவரான கொங்கணச் சித்தர் மூலிகைகளில் 'பொன்' விளைவித்தார் என்ற செவிவழிச் செய்தியும் உண்டு. கொங்கின் வடஎல்லைப் பகுதியில் இன்றைய 'கோலார்' இருந்ததும் அறியத்தக்கது.

'இயலெறி பொன்னிற் கொங்குசேர் புரைப்ப
உணிக்களப் பொற்றுகள் போல்' (அகம்-142)

என்று அகநானூறு குறிப்பிடுகிறது. இதில் 'கொங்கு' என்றால் 'பூந்துகள்' என அறியப்படுகிறது.

**கொங்கு நாட்டு கனிம வளம்**

கொங்கு நாட்டு கனிமப் பொருட்களை உலோகம் என்றும், உலோகம் அல்லாதவை என்றும் இரு வகைப்படுத்துவர். கொங்கு நாட்டில் இரும்பு, அலுமினியம், மாங்கனிஷ், ஜிப்ஸம், சுண்ணாம்புக்கல், கல்நார், காக்காபொன், கோலக்கல், மணிக்கற்கள், க்வாட்ர்ஸ், ஜிர்கான், வெங்கச்சாங்கல், நீலக்கல், மக்னீஷியம் போன்ற கனிமங்கள் கிடைக்கின்றன. கொங்கு நாட்டுக் கனிமப்பொருட்களைக் கொண்டு செய்யப்பெற்ற கைவினைப் பொருட்கள் மத்தியதரைக்கடல் நாடுகளில் நடைபெற்ற அகழ்வாய்வுகளில் கண்டறியப் பட்டுள்ளன.

**கொங்கு நாட்டின் பழமை**

தமிழகம் வரலாற்றுக்கு முந்தைய காலகட்டம் என்பது பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் பழமையானது. எனவே அக்காலகட்டத்தை வரலாற்றாசிரியர்கள் அந்தந்த காலத்திலிருந்த மக்கள் பயன்படுத்திய பொருள்களைக் கொண்டு முப்பெரும் பிரிவுகளாகப் பகுத்துள்ளனர். அவை,

| வரலாற்றுக் காலம் | | |
|---|---|---|
| கற்காலம் | செம்புக்காலம் (அல்லது) வெண்கலக்காலம் | இரும்புக்காலம் |
| முதற்கற்காலம் | | |
| இரண்டாம் கற்காலம் | | |
| மூன்றாம் கற்காலம் | | |

என மேலும் மூன்று பிரிவுகளாகப் பகுத்துள்ளனர். இக்காலங்கள் ஒவ்வொன்றும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளைக் கொண்டதாக வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுவர். கொங்கு நாட்டுப் பகுதியில் கிடைக்கக் கூடிய கற்காலப் பொருள்களைச் சான்றாக கொண்டு அதன் பழமையை அறியலாம்.

**கற்காலப் பொருட்கள்**

முதல் இரண்டாம் கற்காலப்பொருட்கள் குறைவாகவே கிடைத்துள்ளன. முதல் கற்காலத்தில் கற்களைக் கூர்மைப்படுத்தி பயன்படுத்தியுள்ளனர். இரண்டாம் கற்காலத்தில் கற்களை துளை செய்து மரப்பிடிகளை இட்டு பயன்படுத்தியுள்ளனர். கூர்மைப்படுத்தப்பட்ட ஈட்டி, வாள் போன்றவற்றில் கைப்பிடிகள் அமைக்கப்பட்டிருத்தல் வேண்டும். அகழாய்வுகளில்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கண்டுபிடிக்கப்பட்ட பொருட்களில் துளைகள் அமைக்கப்பட்டிருந்தன. கொங்கு நாட்டில் மூன்றாம் கற்காலப் பொருட்கள் அதிகம் கிடைத்துள்ளன. அவற்றில் பெரும்பாலானவை சுத்தி, உரைகல், ஆட்டுக்கல் ஆகியவையாகும். இவை பெரும்பாலும் சேர்வராயன்மலை, கல்வராயன்மலை, கொல்லிமலை, பர்கூர்மலை முதலிய மலைப்பிரதேசங்களில் இருந்து கிடைத்துள்ளன. இன்றும் இம்மலைகளில் மலைவாழ் மக்களின் வசிப்பிடம் அமைந்துள்ளது. நாட்டுப்புற ஆய்வு, மொழி ஆய்வு செய்யக் கூடியவர்கள் அங்குள்ள பண்பாடு, மொழி, புழங்கு பொருட்கள் ஆகியவற்றை ஆய்வு செய்து வருகின்றனர். மேலும் அங்கு அகழ்வாய்வுகளும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

**சங்கஇலக்கிய கொடுமணம் - கொடுமணல்**

ஈரோடு மாவட்டம், பெருந்துறை வட்டம், சென்னிமலைக்கு மேற்கே 15 கி.மீ தொலைவில் நொய்யல் நதியின் வடகரையில் அமைந்துள்ள இவ்வூர் சங்க காலத்தில் சிறப்புற்றிருந்த வணிகப் பெருநகராகும். சங்க இலக்கியமான பதிற்றுப்பத்தில் இவ்வூர் கொடுமணம் என்றழைக்கப்படுகிறது. சங்க காலத்தில் அரிய கற்களால் ஆன அணிகலன்களை உற்பத்தி செய்யும் தொழிற்கூடமாக விளங்கியிருந்ததை,“கொடுமணம் பட்ட...... நன்கலம்” (பதிற்றுப் பத்து-67) எனச் சங்கப் புலவர் கபிலரும்,“கொடுமணம் பட்ட வினைமான் அருங்கலம்” (பதிற்றுப் பத்து- 74) என அரிசில்கிழாரும் குறிப்பிடுவதன் மூலம் அறிய முடிகிறது. இவ்வூர் சேரரின் தலைநகரமாக விளங்கிய கரூரையும், அவர்களது சிறப்புப் பெற்ற மேலைக் கடற்கரை துறைமுகமான முசிறிப்பட்டினத்தையும் இணைக்கும் பெருவழியில் அமைந்துள்ளது.

இப்பெருவழி பிற்காலக் கல்வெட்டுக்களில் “கொங்கப் பெருவழி” என அழைக்கப்படுவதன் மூலம், இப்பெருவழியில் ஏராளமான வெள்ளி மற்றும் தங்க ரோம நாணயங்கள் கத்தாங்கண்ணி, சூலூர், வெள்ளலூர், வேலந்தாவளம், கொடுமணல் போன்ற இடங்களில் கிடைத்ததன் மூலம் இது உறுதிப்படுத்தப்படுகிறது.

கொடுமணலில் 2013 ஆம் ஆண்டு நடைபெற்ற அகழ்வாராய்ச்சியில் 15 ஹெக்டேர் பரப்பளவு உள்ள வாழ்விடப் பகுதியில் 9 அகழாய்வுக் குழிகளும் 40 ஹெக்டேர் பரப்பளவுள்ள ஈமக்காட்டில் ஒரு ஈமச்சின்னமும் அகழப்பட்டன. இவ்வகழ்வாய்வில் வெளிப்போந்த பண்பாட்டு எச்சங்கள் இவ்வூர் இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட மக்களின் வாழ்க்கை முறையைப் பற்றி எடுத்துரைக்கின்றன.

**கொடுமணலில் தொழிற்கூடங்கள்**

சங்க காலத்தில் அரிய விலையுயர்ந்த கற்களால் ஆன அணிகலன்களை உற்பத்தி செய்யும் தொழிற்கூடமும், செம்பு, இரும்பு மற்றும் எஃகு உருக்கப்பட்டதற்கான தொழிற்கூடங்களும், கருப்பு, சிவப்பு மட்பாண்டங்கள் உருவாக்கும் இடங்களும், நெசவுத் தொழில் செழிப்புற்றிருந்ததை நூல் நூற்கப் பயன்படுத்தப்பட்ட தக்களி மூலமும், சங்கினால் பொருட்கள், வளையல்கள் செய்யும் சங்கு அறுப்பு தொழிற்கூடங்களும், யானை தந்தத்தால் ஆன அணிகலன்கள் செய்யும் முறையும் இங்கு இருந்ததை அகழாய்வின் வழியாக அறிய முடிகிறது. இத்தொழிற் கூடங்கள் சுமார் 500 ஆண்டுகள் இங்கு நின்று நிலைத்துள்ளது. கொடுமணலில் உருவாக்கப்பட்ட அணிகலன்களைப் பெறுவதற்காக இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் இருந்து வணிகர்கள் வந்துள்ளனர்.

**ரோம் நகரத்துடன் வாணிகம்**

ரோமானியர்கள் மேற்கு கடற்கரை பகுதியில் வந்து தங்கி வாணிகம் மேற்கொண்டனர். ரோமானியர்கள் மேற்கு கடற்கரைப் பகுதியான பாலக்காட்டு கணவாய் வழியாக கொடுமணல்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

வந்தனர். அங்கு வியாபார ரீதியாக தங்கியிருந்தபோது கொடுமணலில் உருவாக்கப்பட்டு வரும் அணிகலன்கள் குறித்து அறிந்தனர். இந்த அணிகலன்கள் செய்யும் தொழிற்கூடத்தைப் பார்த்து ரோமானியர்கள் வியந்தனர்.

கலைநயத்துடன் உருவாக்கப்பட்ட அணிகலன்களை ரோமானிய நாணயங்களைக் கொடுத்து வாங்கிச் சென்றனர். கொடுமணலுடன் வியாபாரத் தொடர்பில் ரோமானியர்கள் இருந்ததற்கான அடையாளமாக இன்றும் இந்தப் பகுதியில் இந்தியாவிலேயே அதிகமான ரோம்நாணயங்கள் இங்கு கிடைத்து வருகிறது. கொடுமணலில் அணிகலன்களை உருவாக்க அமைக்கப்பட்ட தொழிற்கூடங்கள் நாளடைவில் அழிந்து போனது. தற்பொழுது அகழ்வாராய்ச்சிகள் மூலமாக அணிகலன்களை உருவாக்கிய தொழிற்கூடங்களும், அணிகலன்களும் கிடைத்து வருகிறது.

**விலையுயர்ந்த அணிகலன்கள்**

பண்டைய காலத்தில் இந்தப் பகுதியில் வாழ்ந்த மக்களின் முக்கியத் தொழிலாக அணிகலன்கள் தயாரிப்பு தொழில் இருந்துள்ளது. அகழாய்வு குழிகளில் கல்மணிகள், சங்கு, யானைத் தந்தம், செம்பு உள்ளிட்டவைகள் கொண்டு அணிகலன்கள் தயாரிக்கப்பட்டிருப்பதும் அவைகளைத் தயாரிக்க உருவாக்கப்பட்ட தொழிற்கூடமும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

இத்தொழிற் கூடங்கள் குறிப்பாக பச்சைக்கல், நீலக்கல், பளிங்கு, கார்னீலியன், அகேட், அமெதிஸ்ட் போன்ற அரிய கற்களை கொண்டு உருவாக்கப்பட்ட தொழிற்கூடம் அதன் பல்வேறு படிநிலைகளில் கண்டெடுக்கப்பட்டுள்ளது.

ஈமக்காட்டில் ஒரு கல்லறையில் 218 சூதுபவழ மணிகளால் உருவாக்கப்பட்ட இரண்டு அணிகலன்கள் கண்டுபிடிக்கப்பட்டன. இவை விலைமதிப்பற்ற வைடூரிய கற்களும், பளிங்கு கற்களும் ஆகும். அதே போல் சங்கு வளையல்கள், கழுத்தணிகள் அறுத்தெடுக்கப்பட்டுள்ளன. மேலும் யானைத்தந்தத்தால் ஆன அணிகலன்களும், அதற்கான மூலப்பொருட்களும் கிடைத்துள்ளன.

கொடுமணல் அருகே படியூரில் ‘பெரில்’ என்ற பச்சைக் கற்களும், சிவன்மலையில் ‘சபையர்’ என்ற நீலக்கல்லும், வெங்கமேடு, அரசம்பாளையம் ஆகிய பகுதிகளில் ‘குவார்ட்ஸ்’ என்ற பளிங்குக் கல்லும் அதிக அளவில் கிடைத்தது. இந்த கற்களை அறுக்க ‘குறுந்தம்’ என்ற கல்லைப் பயன்படுத்தி வந்துள்ளனர். குறிப்பாக பளிங்கு கற்களை குறுந்தம் என்ற கல்லைக்கொண்டு அறுத்து அதிக அளவில் அணிகலன்களை உருவாக்கியுள்ளனர்.

நாளடைவில் கொங்குப் பகுதியில் கிடைத்த கற்களுடன் ஆப்கானிஸ்தானில் இருந்து லேடீஸ் சூலி, குஜராத்தில் இருந்து கார்னீலியன் என்ற சூது பவளம், இலங்கையில் இருந்து பூனைக்கண் மணி ஆகியவற்றை இறக்குமதி செய்து புதிய புதிய அணிகலன்களைக் கலைநயத்துடன் உருவாக்கி வந்துள்ளனர்.

**பானை ஓட்டு எழுத்துக்களும், தமிழ் - பிராமி எழுத்துக்களும்**

இங்கு அகழாய்வு செய்யப்பட்ட போது கிடைக்கப்பட்ட பானை ஓடுகளின் மீது அ,ஆ,இ,ஈ என்ற தமிழ் மொழியின் முதல் நான்கு உயிரெழுத்துக்கள் பிராமி வடிவத்தில் எழுதப்பட்டுள்ளன. இதில் ஆ,இ என்ற எழுத்துக்களின் பிராமி வரி வடிவங்கள் முதல் முறையாகத் தமிழகத்தில் கிடைத்துள்ளன.

உத்திரப்பிரதேச மாநிலத்தின் மத்திய கங்கைச் சமவெளி பகுதியில் இருந்து வணிகர்களும், கைவினைஞர்களும் இங்கு வந்துள்ளதை தமிழ் மயப்படுத்தப்பட்ட பிராகிருத மொழி கலந்து ஆட்கள் பெயர்களும், வணிகர்கள் பெயர்களும் உறுதிப்படுத்துகிறது. இங்கு

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

150 க்கும் மேற்பட்ட தமிழ் பிராமி எழுத்துக்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. சில மண்பாண்டங்களில் ஸ்வஸ்திக் மற்றும் பல்வேறு குறியீடுகள் உள்ளன.

கங்கை சமவெளி பகுதி பண்பாட்டிற்கே உரித்தான வடகத்திய கருப்புநிற மண்பாண்டங்கள் இங்கு கிடைத்துள்ளது. இத்தகைய மண்பாண்டங்கள் கங்கை சமவெளியில் கி.மு 6-ம் நூற்றாண்டிற்கும், கி.மு 2 ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட பகுதியில் பயன்படுத்தப்பட்டவை. கொடுமணலில் கிடைத்த இந்த மண்பாண்டம் கி.மு 3 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியை சேர்ந்தது என்று ஆய்வில் கண்டறியப்பட்டுள்ளது. இதே போல் சுடுமண் முத்திரை ஒன்றும் கிடைத்துள்ளது.

பானை ஓடுகளில் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துக்கள், அதிந்தை, மாகந்தை, குவிரன்,சுமனன், சம்பன், ஸந்தைவேளி, பன்னன், பாகன், ஆதன் என்ற பெயர் பொறித்த மண்பாண்டங்கள் தமிழர்கள் 2500 ஆண்டுகளுக்கு முன்பாகவே எழுத்தறிவு பெற்று மிகச்சிறந்த சமூகமாக விளங்கியிருக்க வேண்டும் என்பதை இச்சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன.

**நாணயங்கள்**

கொடுமணல் மேற்பரப்பில் கிடைத்த 'டைபீரியஸ்' வெள்ளிக்காசு (கி.பி 14-35) மற்றும் கி.மு 27- கி.பி 14 அகஸ்டஸ் மன்னன் காசு முதலான ரோமானிய மன்னர்களின் பொன், வெள்ளி, செம்புக் காசுகள் கிடைத்துள்ளது. இவை ஈரோடு கலைமகள் பள்ளியில் அருங்காட்சியகத்தில் இடம்பெறுகிறது. ரோமானியர் உருவம் பொறித்த சுடுமண் தலையும் கொடுமணலில் கிடைத்துள்ளது. இதுவும் அருங்காட்சியகத்தில் உள்ளது.

"பொன்னொடு வந்து கறியொட பெயரும்
வளங்கெழு முசிறி" (அகம்- 149 பாடல்)

எனப் புலவர் தாயங்கண்ணனார் அகநானூற்றில் கூறியுள்ளதை மெய்ப்பிக்கும் வகையில் ஆரிஸ், தினார், யவனர் காசுகள் கிடைத்துள்ளன.

A coin is a place of metal bearing the stamp of authority guaranteeing its face value (காசு அல்லது நாணயம் என்பது ஒரு சிறு உலோகத்துண்டு; ஆட்சியாளரின் செல்லுபடி ஆகும். குறியீட்டையும், மதிப்பையும் கொண்டது) என நாணய அறிஞர்கள் (Numismatists) கூறுவர். நாணயங்கள் அச்சிடும் இடத்துக்கு Mint என ஆங்கிலம் வழங்கும். தமிழில் தங்க சாலை, கம்பட்டம், அஃகசாலை என நாணயச் சாலைக்கும் பல பெயர்களால் அழைக்கப்படும் வழக்கு உண்டு.

**கல்திட்டைகளும், பதுக்கைகளும்**

போரில் மடிந்த வீரர்களுக்குக் கல்திட்டைகளும், பதுக்கைகளும் அமைக்கப்பட்டிருந்தன. தரையைத் தோண்டி சிறிது நிலத்திற்கடியிலோ அல்லது முழுவதும் நிலத்திற்குள்ளாகவோ இருக்குமாறு 'பிணக்குழி"யை அமைப்பர். பின் நன்கு செதுக்கப்பட்ட கருங்கற்பட்டைகளைக் கொண்டு குழியைச் சுற்றிலும் கற்சுவர்கள் எடுப்பர். ஈமப்பொருட்களை குழியில் போட்டபின் கருங்கற் பட்டைகளால் மூடி அதன்மேல் கூழாங்கற்களைப் பரப்பி பின்னர் மண்ணால் குழியை மூடிவிடுவர். இதனுள் இறந்தவர்களின் உடலைத் தாழிக்குள் வைத்து மூடிவிடுவர். இது புதைபொருள் ஆய்வாளர்கள் கண்டுள்ள கற்பதுக்கைகளின் அமைப்பாகும்.

"கொடுவிற் காலிவர் கணையிடத் தொலைந்தோர்
படுகளத்து உயர்ந்த மயிர்த்தலை வீழ்ந்தோர்
எண்ணுவரம் பளியா உவலிடு பதுக்கைச்
சுரங்கெழு கவலை" (அகம்-109)

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

என்ற அகப்பாடலில் பாலை நிலத்தில் கள்வர்களின் அம்புபட்டு இறந்தோருக்கும், போரில் வீரமரணம் அடைந்தவர்களுக்கும் பதுக்கைகள் அமைக்கப்பட்டிருந்ததை அறிய முடிகிறது. இப்பதுக்கைக் குழிகள் கொங்கு நாட்டுப் பகுதிகளிலும் கிடைத்துள்ளதை ஆய்வாளர்கள் வெளிப்படுத்தியுள்ளனர். கொங்கு நாட்டில் ஊதியூர்க்கு அருகில் மறவர்பாளையம், கொடுமணல் போன்ற ஊர்களில் கல் பதுக்கைக்குழிகள் காணப்படுகின்றன.

**முதுமக்கட்தாழி**

பழங்காலத் தமிழ் மக்கள் இறந்தவர்களைப் பெரிய மண் தாழிக்குள் வைத்து மூடிப் புதைத்து வந்தனர். குழிக்குள் தாழியை வைத்து தாழியைச் சுற்றிலும் வட்டமாகக் கற்களை வைத்து மண் கொண்டு மூடிவிடுவது ஒருவகை (கெய்ா்ன்). மற்றொரு வகையானது சதுரமான நான்கு பக்கமும் செங்குத்தாகப் பலகைகளை நிறுத்தி தாழியை அதற்குள் வைத்துப் பலகைக் கல்லால் மூடி மண் கொண்டு மூடி விடுவது (டால்மென்) ஆகும்.இத்தாழிக்கு 'முதுமக்கட்தாழி' என்றும், குழிக்கு 'மாண்டவர்குழி' என்றும் பெயர். மாண்டவர்குழி என்பதையே பலர் தவறாக பாண்டவர்குழி (குள்ளமானவர்கள்) என்றும் கூறுவதாக தூரன் நல்.நடராஜன் குறிப்பிடுவார். அத்தாழியில் மாண்டவர்க்கு விருப்பமான பொருள்களையும் உடன் வைப்பர். தாழிக்குள் மட்டுமின்றி கற்பெட்டிக்குள்ளும் அப்பொருட்களை வைப்பதுண்டு. அவற்றில் கத்தி, குத்தீட்டி, மரப்பிடி கொண்ட ஈட்டி, அம்பு, மண்வெட்டி முதலான இரும்பு கருவிகளும், கிண்ணம், செம்பு, கெண்டி, தண்டி, கரண்டி, சாடி, சலங்கை, வளையல், மாலை முதலிய வெண்கலக் கருவிகளும் இருந்துள்ளது.

**தொகுப்புரை**

- சங்க காலத்தில் 'கொடுமணம்' என்று அழைக்கப்பட்ட இவ்வூர் இப்பொழுது கொடுமணல் என வழங்கப்பட்டு வருகிறது. இதனை தொல்லியல் அகழாய்வுகள் மூலம் வெளிப்படுத்துகின்றன.
- கொடுமணல் என்ற இச்சிற்றூர் சங்க காலத்தில் மிகச் சிறந்த தொழிற்கூடங்களைக் கொண்ட தொழில் நகரமாகவும், உள்நாட்டு, வெளிநாட்டு வணிக உறவுகளைக் கொண்ட வணிக நகரமாகவும், எழுத்தறிவு பெற்ற சமூகமாகவும், பொருளாதார நிலையில் மேம்பட்ட சமூகமாகவும் விளங்கியிருக்க வேண்டும் என்பதை அகழ்வாய்வின் மூலம் வெளிக்கொணரப்பட்ட சான்றுகள் உணர்த்துகின்றன.
- சிறந்த தொழில் நுட்பங்கள் கொண்ட அணிகலன்கள் தயாரிப்புத் தொழிற்சாலைகள் இயங்கி உள்ளன.
- விலையுயர்ந்த கற்களைக் கொண்டு உருவாக்கப்பட்ட தொழிற்கூடங்கள் இருந்துள்ளன.
- கொடுமணல் பகுதி 2500 ஆண்டுகளுக்கு முன் தொழில் நகரமாக சிறந்து விளங்கியுள்ளது.
- கொடுமணலில் வாழ்ந்த தமிழர்கள் முசிறி துறைமுகம் மூலமாக ரோமானியர்களுடனும், வட இந்தியாவின் மத்திய கங்கைச் சமவெளிப் பகுதியில் வாழ்ந்த மக்களுடனும் வாணிபத் தொடர்பு வைத்திருந்ததற்கான ஆதாரங்கள் கிடைத்துள்ளன.
- சிவப்பு, கருப்பு மண்பாண்டங்களும், தமிழ்- பிராமி எழுத்து வடிவங்களும், ஸ்வஸ்திக் குறியீடுகளும் மண்பாண்டங்களில் காணப்படுகிறது.
- ஈமக்காட்டில் இறந்தோரைப் புதைக்கும் முதுமக்கட்தாழியும், கல்திட்டைகளும் காணப்படுகின்றன. இதனருகில் நெடுங்கல்(நடுகல்) காணப்படுகிறது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019
Available at: www.ijtlls.com

❖ இத்தகைய சங்க இலக்கிய தொன்மையும், வரலாற்றுச் சிறப்பும் உடைய கொடுமணலில் அருங்காட்சியகம் உருவாக்கி, சுற்றுலாத் தலமாக மாற்ற அரசாங்கம் முன்வர வேண்டும். மேலும் இங்கு தொல்லியல் துறையினர் ஆய்வு மேற்கொண்டு அறிவியல் சாாந்த கரியமிலக்(கார்பன் 14) காலக்கணிப்பை உறுதி செய்திட வேண்டும். இது இனி வரும் இளம் தலைமுறையினருக்கு நம் பண்பாட்டையும், நாகரிகத்தையும் பறைசாற்றும் சான்றாக 'கொடுமணல்'எனும் ஊர் அமையும்.

### பார்வை நூல்கள்

1. ஞா.ஸ்டீபன் - தொல்காப்பியமும் இளவரைவியல் கவிதையியலும்
2. வாலசுந்தரக்கவிராயர் - கம்பநாத சுவாமிகள், கொங்குமண்டல சதகங்கள்
3. நடராஜன். நல். கொங்கு வேளாளர் வரலாறு
4. சங்கஇலக்கியம் -அகநானூறு- பதிற்றுப்பத்து
5. கலைமகள் கல்வி நிலையம் - வைரவிழா மலர்

### கொடுமணல் கள ஆய்வு தகவலாளர்கள்

பு.ராமச்சந்திரன் - கொடுமணல்
சக்திவேல் - உதவிப் பேராசிரியர், BET கல்லூரி, நத்தக்காடையூர்
மஞ்சு - பாண்டியன் நகர்










E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# கல்வெட்டுகளும், செப்பேடுகளும் ஓர் ஆய்வு
# An Analysis on Culverts and Copper Plates

**சி.தெபொராள்,** முனைவர் பட்ட ஆய்வாளர்
வரலாற்றுத்துறை, அரசு கலைக்கல்லூரி, மேலூர்.

## Abstract

*The article tells about the classic history of the Tamil people and their custom of edictind culverts. The general messages are erected as culverts in the classic society.The kings inscribed copper plates for indicating their feats, glory, donation and other philosophical acts. Hence, the study makes way to understand the culverts and copper plates from consistent sources.*

**Keywords:** Analysis, Culverts, Copper Plates

### முன்னுரை

நம் நாட்டின் தொன்மை வரலாற்றைப் பற்றி அறிந்து கொள்ள உதவும் தொல்லியல் சான்றுகளில் ஒன்று கல்வெட்டுகள் ஆகும். கோவில் முதலிய பொதுக் கட்டிடங்களின் சுவர்களிலும் பாறைகளின் மீதும், கல் தூண்களிலும் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டதைப் பல இடங்களில் காணலாம். அவ்வாறு எழுதப்பட்டிருப்பது தான் சிலாசாசனம் அல்லது கல்வெட்டு எனப்படும். பண்டைக்கால கல்வெட்டு எழுத்துக்களை அறிந்து அவற்றின் பொருளை விளக்கும் கலையே கல்வெட்டியல் எனப்படும். கல்வெட்டுகள் நம்நாட்டு வரலாற்று ஆராய்ச்சிக்கு முக்கியமான முதல்நிலைச் சான்றுகளாகப் பயன்படுகின்றன. பண்டைய மனிதனின் வரலாற்று அறிவைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.[1]

நம்நாட்டில் 2300 ஆண்டுகளுக்கு முன் செப்பு பட்டயங்களில் எழுதும் பழக்கம் வழக்கத்தில் இருந்தது. கோவில் மற்றும் பிராமணர்களுக்கு அரசர்கள் நில தானம் செய்வதற்கான ஆவணமாகவே பெரும்பாலான செப்பேடுகள் உள்ளன. தானம் அளிக்கும் மன்னனுக்கு ஓலைச்சுவடிதானம் பெறுவோருக்கு செப்பேடு பொதுமக்கள் பார்வைக்கு கல்வெட்டு என மூன்று விதங்களில் நிலதானம் குறித்த ஆவணங்கள் பதியப்பட்டுள்ளன.

### செப்பேடுகள் பொறிக்கும்முறை

முதுகுடுமி செப்பேட்டால் 700 ஆண்டுகளுக்குமுன் வழங்கப்பட்ட நிலதானத்துக்கான ஆவணத்தை காட்டி களப்பிர் காலத்திற்கு பின் மீண்டும் நிலம் பெற்ற செய்தி அறிய முடிகிறது. அதன்மூல செப்பேடு கிடைத்தால் அதுவே பழமையானதாக இருக்கும். சோழர்களின் ஆட்சியின் முதலாம் பராந்தகன் முதல் மூன்றாம் நாகராஜன் வரை மிக நேர்த்தியான தகடுகளில் அழகான எழுத்துக்களுடன் துல்லியமான எல்லைகளை குறிக்கும் செப்பேடுகள் பொறிக்கப்பட்டுள்ளன.

செப்பேடுகள் அரச பரம்பரையைப் பற்றி அறிய உதவும் ஆவணங்களாக உள்ளன. புதுப்பிக்கப்படாத செப்பேடுகள் அதிகளவில் உள்ளதால் ஆய்வாளர்கள் அவற்றை பதிப்பிக்கும் முயற்சியில் இறங்க வேண்டுவது ஒவ்வொரு வரலாற்று ஆய்வாளர்களின் தலையாய கடமை ஆகும்.[2]

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

இந்தியாவில் கல்வெட்டுகளைப் படித்தறிந்து, வரலாற்றுச் சான்றுகளாக அவற்றை உருவாக்கி அவைகளின் முக்கியத்துவத்தை நமக்கு அறிவுறுத்திய பெருமை மேலைநாட்டவரையேசாரும், அவர்களில் முக்கியமானவர்கள் கேம்ஸ்பிரின் செப், ராபர்ட்சீல்.

**கல்வெட்டின் வளர்ச்சி**

கி.பி.ஏழாம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதி வரை தமிழ்நாட்டில் ஆட்சி புரிந்த பல்லவ அரசர்கள் முதலில் கருங்கற்களால் கோவில்களைக் கட்டினர். அவற்றைக் காலத்தால் அழியாக் கலைப்படைப்புச் சின்னங்களாக ஆக்கினர். அவற்றைக் காலத்தால் அழியாக் கலைப்படைப்புச் சின்னங்களாக ஆக்கினர். பின்னர் ஆட்சி புரிந்த சோழர்கள், பாண்டியர்கள் ஆகியோரும் கற்கோவில்களை எழுப்பித்தனர். இந்தக் கோவில்கள் எல்லாம் கலைப்படைப்புகளின் சின்னங்களாக மட்டும் அமையாமல் சமய வளர்ச்சியின் மையங்களாகத் திகழ்ந்தன. இக்கோவில்களை தினசரி வழிபாடும் திங்கள் விழாக்களும் ஆண்டு விழாக்களும் அணி செய்தன. இந்த விழாக்கள் சிறப்பாக அமைய அரசர்கள் பொன்னையும் பொருளையும் கொடையாக வழங்கினர். இந்த செய்திகளைச் செப்பேடுகளில் பொறித்த அந்த கோவில்களுக்குக் கொடுத்தனர்.[3]

**செப்பேடுகளின் வகைகள்**

- பள்ளன் கோவில் செப்பேடுகள்
- கரம் செப்பேடுகள்
- கேள்விக்குடி செப்பேடுகள்
- தளவாய்புரம் செப்பேடுகள்
- கரந்தைச் செப்பேடுகள்

**பள்ளன் கோவில் செப்பேடுகள்**

இந்த செப்பேடு பல்லவ அரசன் சிம்மவர்மன் தன்னுடைய ஆட்சியின் ஆறாம் ஆண்டில் அளித்த தானத்தை இந்த செப்பேடு கூறுகிறது. இந்த செப்பேடுகள் காலம் கி.பி.550 ஆகும். பள்ளன் கோவில் செப்பேடுகள் முத்திரையுடன் கூடிய செப்பு வளையத்தில் கோர்க்கப்பட்ட ஐந்து ஏடுகளை உடையது. இந்த ஐந்து ஏடுகள் இடதுபுறத்தில் துவாரம் இடப்பட்டு செம்பு வளையத்தில் கோர்க்கப்பட்ட அந்த வளையத்தின் இருமுனைகளும் அடி பருத்து தலைசிறுத்து ஒரு மணியின் உருவத்தில் உள்ள முகப்பின் தலையில் பொருத்தப்பட்டுள்ளது. இந்த செப்பேடுகளில் முதல் ஏடும், கடைசி ஏடும் உட்புறத்தில் மட்டுமே எழுதப்பட்டுள்ளது. மொத்தம் 64 வரிகளில் சாசனம் எழுதப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டில் கிடைக்கும் மற்ற செப்பேட்டு சாசனங்களில் காணப்படுவது போலவே இந்த சாசனமும் சமஸ்கிருதம், தமிழ் ஆகிய இருபகுதிகளைக் கொண்டது. கி.பி.6ம் நூற்றாண்டிலேயே எவ்வளவு தெளிவாக ஆட்சி தமிழில் செய்யப்பட்டது என்பதற்கு இந்த செப்பேடு எடுத்துக்காட்டாகும்.[4]

**கூரம் செப்பேடுகள்**

பல்லவ மன்னன் முதலாம் நரசிம்மவர்மனின் பேரனும் இரண்டாம் மகேந்திரவர்மனின் மகனும் ஆன முதலாம் பரமேசுவர மன்னரால் அளிக்கப்பட்ட ஆணையை கூரம் செப்பேடு கூறுகிறது. இப்செப்பேட்டின் காலம் ஏழாம் நூற்றாண்டின் இடைபகுதியாகும். கி.பி.675 வருடத்தைச் சார்ந்தது. கூரம் செப்பேட்டின் முதற்பகுதி சமஸ்கிருதத்திலும் பிற்பகுதி தமிழ் மொழியிலும் பொறிக்கப்பட்டுள்ளது. இது செங்கற்பட்டு மாவட்டம் காஞ்சிபுரத்தின் பக்கத்திலுள்ள கூரம் என்ற ஊரில் இது கிடைக்கப்பபெற்றது. கூரம் செப்பேடுகள் ஒரு

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

வளையத்தில் கோர்க்கப்பட்ட ஏழு மெல்லிய செப்பேடுகளைக் கொண்டது. கடைசி ஏட்டில் ஒரு பாதியே நமக்கு கிடைத்துள்ளது. இன்னும் முதல் ஏடு, ஐந்தாம், ஆறாம் ஏடு பாசி பிடித்த அழுக்கடைந்து உள்ளது. இதில் ரிீபத்தின் உருவம் காணப்படுகிறது. இதனை ஆராய்ச்சி செய்தவர் டாக்டர் ஹில்ட்ஸ் என்பவர் ஆவார்.[5]

**கேள்விக்குடி செப்பேடுகள்**

இவை சங்க காலப் பாண்டியர் வரலாற்றையும் இடைக்காலப் பாண்டியர் வரலாற்றையும் அறிய உதவும் சான்றுகளுள் வேள்விக்குடி செப்பேடுகள் மிகவும் சிறப்பு வாய்ந்தவையாகும். இது பாண்டிய மன்னன் பராந்தக் நெடுஞ்சடயனின் மூன்றாவது ஆட்சியாண்டில் அதாவது கி.பி.768-ல் பொறிக்கப்பட்டுள்ளன. இது தமிழ் சமஸ்கிருதம் ஆகிய இருபகுதிகளைக் கொண்டுள்ளது. தமிழ்ப்பகுதி வட்டெழுத்திலும் சமஸ்கிருதப் பகுதி கிரந்த எழுத்திலும் எழுதப்பட்டுள்ளன.

இந்த வேள்விக்குடி சாசனம் பத்து ஏடுகளைக் கொண்டது. இதன் மூலப்பிரதி லண்டனில் உள்ள பிரிட்டி மியூசியத்தில் பாதுகாக்கப்பட்டு வருகிறது. இந்த சாசனத்தில் காணப்படும் வேள்விக்குடி என்ற ஊர் மதுரை மாவட்டம் சோழவந்தான் அருகே இருந்ததாகக் கருதப்படுகிறது. எனவே இந்த படிகளை இந்திய இலாகாவிற்கு அனுப்பி வைக்கப்பட்டது.[6]

**முடிவுரை**

இவ்வாறு கல்வெட்டுகளும், செப்பேடுகளும் தமிழர்களின் பாரம்பரியத்தையும் இந்திய கலாச்சாரத்தை ஒருங்கிணைக்க கூடியதாக உள்ளன. கல் தோன்றி மண் தோன்றும் முன்னே தோன்றியது தமிழ்மொழி. அத்தகைய தமிழையும் தமிழ் மண்ணையும் மேன்மைப்படுத்தும் விதமாக அக்காலத்து செப்பேடுகளும் கல்வெட்டுகளும் இருக்கின்றன. மன்னர்கள் அரசவம்சங்கள் அழிந்தாலும் அழிய புகழினை இக்கல்வெட்டும், செப்பேடுகளும் நமக்கு அளிக்கின்றன. செப்பேடுகள் பல காலத்தால் அழிந்தாலும் நமது கலாச்சாரத்தினை போற்றி வரலாறும் என்னும் உயிரினைப் உயிர்கொடுத்து தொன்மை எங்களது மேன்மை என போற்றுவோமாக.

**நூல்குறிப்பு**

1. வேதிசெல்வம், தமிழக வரலாறும் பண்பாடும், சென்னை, 2009, பக்.93
2. தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும் - ஆ.இராமகிருட்டிணன், மதுரை, 2014, பக்.29.
3. தமிழக வரலாறு சங்க காலம் முதல் 2010, தர்மராஜ், இராஜபாளையம், பக்.73
4. முற்கால தமிழ்நாட்டு வரலாறு, முனைவர் கே.வெங்கடேசன், இராஜபாளையம், 2012, பக்.105.
5. தமிழக வரலாறு மக்களும், பண்பாடும், கே.கே.பிள்ளை, சென்னை, 2009, பக். 468.
6. தமிழகத்தில் பெருங்கற்காலப் பண்பாடு, முனைவர், தி.சுப்பிரமணியன். மதுரை – 2011, பக்.16-17.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# சங்க இக்கியத்தில் தமிழர் வாழ்வியல்
# The Lifestyle of Tamil People in Sangam Literature

**ச.தேவதிருவருள்,** கற்க கசடற டி.என்.பி.எஸ்.சி, பயிலகம்,
சங்கராபுரம், கள்ளக்குறிச்சி மாவட்டம்- 606401.

## Abstract

*The paper extends a brief study on the lifestyle of the Tamil people lived in the Sangam times. Their lives are very rich with moral ethics and valuable tradition and cultural norms. Those people lives are highly recorded in the Sangam literature. Hence, the study helps to know the Tamil people's cultural ethics and informations of Tamil Culture through the sangam classical verses.*

**Keywords:** Lifestyle, Tamil People, Sangam Literature

தமிழரின் தனிப்பெரும் சிறப்புகளில் உலகம் வியக்கும் உயர்ந்த அடையாளம் சங்க இலக்கியம் அவை வேறெந்த மொழிகளுக்கும் இல்லாத இலக்கண, இலக்கிய செல்வங்களாய் வரலாற்றுக்கு முன்தோன்றிய விழுமிங்களாய் அறியப்படுகிறது. மொழியின் வளமை இனத்தின் பெருமை. பண்பாட்டின் வலிமையை பறைசாற்றி பார்போற்ற நிமிர்ந்து நிற்கிறதென்றால், அது தமிழர்களுக்கு தலைமுறை தாண்டிய பெருமை எனலாம், வீரத்தின் நேர்மையை, அன்பின் அடர்த்தியை அகிலம் வியக்க விளக்குவது நம் தலைமுறைப் பெருமையாகும். எது எப்படியோ தமிழையும் உலகம் வியக்க வியாபித்து நின்ற வானமாய் சங்கத்தமிழ் மற்றவர்களையும் வியப்பூட்டுகிறது. அதன் பன்முகத்தன்மையின் சிறப்புகளை ஆய்ந்து விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம்.

**தமிழரின் சான்றான்மை**

அறிவிற் சிறந்தவர்களை அகிலம் போற்றும் அதனால்தான் அறிவுடையார் எல்லாம் உடையார் என்றார் வள்ளுவர். அப்படி அறிவுடையோர்கள் அறிவைத்தேடி தன்னை சான்றோர்களாக்கிட முயலுவது போன்று மற்றவர்கள் சான்றோர்களைத் தேடி தன்னை அவரிடம் ஒப்படைத்து அவர்களின் ஆலோசனைப்படி தன்னை வழிநடத்தி வாழ்கிறவர்கள் குறையற்ற மேன்மையடைவர். எனவேதான் சாதாரன மனிதர்கள் சான்றோர்களின் உதவியை நாடுகிறார்களோ இல்லையோ, நாட்டை ஆளும் அரசர்களுக்கு கண்களாய் எவர் இருக்க வேண்டுமென்றால் சான்றோர்கள்தான் என்கிறார் வள்ளுவர். அப்படியே சாதாரன நம்மைப் போன்றோர்களுக்கும், எது அறிய செயலாய் அமைந்திட வேண்டுமெனில் சான்றோர்களை நாடிச்சென்று அவர்களோடு நீடித்த உறவை வளர்த்து அவர்களின் நன்மதிப்பை பெற்று வாழ்ந்திடும் வாழ்வையே நம்முடைய அரிய செயல்களில் எல்லாம் அரியது என்கிறார். அதன் வழிநின்ற சங்கப்புலவர் **கபிலரும்** சான்றோர்களின் சார்புணர்வையும் அவர்களை நாடி வாழவேண்டுமென்பதையும் அறிவுறுத்துகிறார்.

"நாடி கட்பின் அல்லது
நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே" (நற்றிணை-32)

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

என்ற பாடலின் மூலம் நன்மை தீமைகளை ஆய்ந்துணர்ந்து சான்றோர்களை நாமேத்தேடிச் செல்லவேண்டுமெனவும், நம்மைச் சூழ்ந்துள்ளவர்களிடம் எதனைக் குறித்தும் ஆராய்ந்து செயல்படக்கூடாது என்ற நுண்ணிய உளவியல் அரசியலையும் ஆய்ந்து அறிவுறுத்தியுள்ளார், இதன்வழிதான் தொல்காப்பிமும் கற்றாரை கற்றாரே காமுறுவர் எனவும், நல்லாரை பார்ப்பதுவும் நன்றே, நல்லார்சொல் கேட்பதுவும் நன்றே என மூதுரையும் அறிவின் மேன்மையையும், சான்றோர்களின் சிறப்பினையும் உலகிற்கு உதாரணம் கூறின.

**அய்தீகத்தை அகற்றி அறிவியலை நம்பினர்**

சில கிராமங்களில் இன்றும் வீட்டைவீட்டு பணியின் கராணமாகவோ அல்லது வேறு ஏதேனும் காரணமாகவோ செல்லுகிற போது எதிரே கணவனை இழந்த பெண்கள் மற்றும் மூதாட்டிகளை காணும்போது மீண்டும் வீட்டிற்கே திரும்பிவிடுவது அல்லது சற்று நேரம் தாமதித்து செல்வது என அய்தீகம் பார்ப்போர் படித்தோர் மத்தியிலும் இருப்பது இயல்புதான். சங்ககாலத்தில் இதற்கும் மாறாய் வாழ்ந்திருக்கின்ற செய்திகள் விதிவிலக்காய்தானிருக்கிறது. ‘உன்னம்’ என்பது ஒருவகை மரம், எந்த ஒரு செயலைச் செய்வதற்கு முன் அம்மரத்தை தமிழர்கள் பார்த்தனர், உன்னமரம் பசுமையாக தழைத்துத்திருந்தால் தாங்களின் பணி வெற்றியும், வதங்கிக் காணப்பட்டால் தோல்வி என அன்று அய்தீக வழியில் சிலர் வாழ்ந்தனர். இம்மரபை மாற்றவேண்டி மன்னன் எவ்வழியே மக்களும் அவ்வழியே என்பதற்கிணங்க, போருக்காக பிறநாட்டை நோக்கிப்படை கிளம்பிடும் முன் உன்ன மரத்தின் நிலையைப் பார்த்தப் பிறகே படை புறப்படும். இந்நிலையைத் தொல்காப்பியர் ‘உன்னநிலை’ என்கிறார். உன்னமரம் வாடித்தோன்றினாலும் கவலையுறாது சென்று வெற்றியோடு திரும்புவது பாரியின் சிறப்பியல்பு, உன்னம் கூறிய நிமித்தத்தை பாரிவென்றான். பாரியைப்போலவே செல்வக் கடுங்கோ வாழியாதனும் உன்னத்துப் பகைவனாக இருந்தான் இதனை

“பொன்னின் அன்ன பூவின் சிறியிலைப்
புன்கால் உன்னத்துப் பகைவன் எம்கோ” (பதிற்றுப்பத்து 61:5-6)

என செல்வக் கடுங்கோ வாழியாதனையும் கபிலர் பாராட்டுகின்றார்.

இதுமட்டுமின்றி சங்ககாலத்தில் தமிழர்களை பின்பற்றிய பார்ப்பனர்களாய் வாழ்ந்தனரேயன்றி, பார்ப்பனரைப் பின்பற்றிய தழமிழர்களாய் யாருமில்லை என்பதே சங்கச்சிறப்பு, அதன் சான்றாய் பண்பாட்டுத்தளத்தில் காதல்மணம் என்பது இயற்கை மணமாகவும், தலைவன் தன் காதலை பஞ்ச பூதங்களுள் ஒன்றான நீரின் சாட்சியாய் உறுதிப்படுத்தினான். பிறவிகள்தோறும் தொடர்ந்துவரும் தமது உறவினைத் தலைவி உணர்ந்து கொள்ளும் அகத்துணர் காட்சியை நினைவு கூர்ந்தான். இத்தகைய மேன்மையான காதலே சங்ககாலத்துக் களவுக் காதலாக இருந்தது. இன்றைய காதலைப்போல் ‘அகமணமுறை’ சாதிக்குள் மணம் புரிந்தும், இயற்கைக்கு மாறாய் சாதியைச் சாட்சியாய் நிறுத்தி நிலைபெறச் செய்தலும் தமிழரின் சங்ககால சான்றுகளல்ல, சாதியச்சாயமென்பது இடைக்கால ஆரியர்களால் புகுத்தி இயற்கைக் காதலை சாதித் திருமணமாக்கி தமிழரை தலைகுனியைச் செய்தது. சனாதனத்தின் சூட்சுமமேயன்றி தமிழரின் சாட்சியமன்று. இந்திய மனித ஆயுள் 90-ஐக் கடந்து 100-ஐத் தொட்டதற்கு சங்ககால சாதிமறுத்த இயற்கைக் காதலால் தானேயொழிய இன்றைய சாதிக்குள் மணம்புரியும் சிறுமை வாழ்வியலாலல்ல, மனிதஆயுள் குறைந்ததற்கு உணவு மாற்றமட்டுமல்ல, திருமணத்தில் பண்பாட்டு மாற்றமும் ஒரு காரணம். பௌத்தப் பண்பாட்டில் வாழ்ந்த இந்திய மக்கள் அன்றைக்கு 90-ஐக் கடந்து 100-ஐத் தொட்டு வாழ்ந்திருந்தனர். இன்றைக்கு உலக மக்களின் சராசரி ஆயுட்கால பட்டியலில் இந்தியாவில் 60 வயது ஜப்பானில் 85 வயது எனவும் வரலாறும்,சுகாதார

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

நிறுவனமும் அறிவித்ததற்குக் காரணம் இங்கிருந்து பௌத்தம் வெளியேற்றப்பட்ட பண்பாட்டு நெருக்கடியேயாகும்.

**அகம் வெற்றிபெற்று மணமுடிவுக்கு சென்றவுடன்**

1. தலைவியின் பெற்றோர்தலைவியின் கையைப் பிடித்துத் தலைவனின் கையில் தருதல்
2. திருமணத்திற்குக் கூடியிருக்கும் அனைவர் முன்னிலையிலும் பலர் அறியத் தலைவியின் கையைத் தலைவன் பற்றுதல், திருமணமென இந்த இரண்டு நிகழ்வுகளே சங்ககாலத்தில் நாடறி நன்மணம் எனப்போற்றப்பட்டன. திருமணத்தின் முக்கிய நிகழ்வே இதுமட்டும்தான், தலைவியின் கையைத் தலைவன் பற்றினான் என்றால் திருமணம் நடந்து முடிந்தது என்று பொருளாகும். பண்டையத் திருமணத்தில் கைப்பற்றும் நிகழ்வினைத் தவிர தீ வளத்தல், வேதம் ஓதுதல், தீ வலம் வருதல், தீவளர்க்கும் பார்ப்பான் என எந்த ஆர்யச் சடங்குகளும் இருக்கவில்லை, முக்கியமாக இன்றைய நாளைப்போல திருமணத்தில் பெண்களுக்கு ஆடவர் தாலி கட்டும் சடங்கு, சங்க காலத்தில் இல்லை என்பதை கூர்ந்து நோக்க வேண்டும். அதில் சாதிக்குள் (அகமணம்) திருமணம் என்பது முதல் தாலிகட்டுதல் வரை இன்று நிலவும் அனைத்துச்சடங்குகளும் ஆரியர்களால் தமிழருக்குள் பிற்காலத்தில் நிகழ்ந்தனவே. இதில் கூர்ந்து நோக்கவேண்டியது குறிஞ்சிப்பாட்டுப் பாடிய கபிலரும் பாாப்பனரே. ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழரின் வாழ்வியல் முறைகளைக் கூறுவதற்காகவே கபிலர் எழுதிய நூல் குறிஞ்சிப்பாட்டு. ஆரியராகிய கபிலர், ஆரியச் சடங்குகள் தமிழரின் திருமண முறையில் கலந்திருப்பின் ஆரிய மன்னன் பிரகத்தனுக்கு எடுத்துக் கூறாமல் விட்டிருப்பாரா? எனச் சிந்தித்தல் வேண்டும்.

**வீரம் விளைந்த தமிழர்**

சங்ககாலத் தமிழர் அகமும், புறமுமாக வாழ்கிறபோது காதலில் கற்பையும், தேகத்தில் வீரத்தையும் கொண்டு வாழ்வதையே விரும்பி ஏற்றுள்ளனர்.

“கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு
முன்தோன்றி மூத்தக்குடி தமிழ்க்குடி” (பு.வெ.மா, கரந்தை :14)

கல்தோன்றி அக்கல்லானது பஞ்ச பூதங்களால் வேதி வினைக்குட்பட்டு மண்ணாக உருமாற்றம் பொறுவதற்குள்ளாகவே பிறந்த தமிழ்க்குடி வீரவாளைபெற்ற இனமாக வாழ்ந்தனரென மேற்கூறியபாடல் விளக்குகிறது.

**அதியமான் நெடுமான் அஞ்சியின் வீரம்**

தினம் தினம் எட்டுத் தேர்களைச் செய்யும் தச்சன், மாதம் முழுவதும் கவனம் செலுத்தி செய்த தேர்க்கால்கள் போன்ற வலிமையானவன் அதியமான் அவனிடம் போரிடும் ‘பகைவர்களே சாக்கிரதை!’ என அச்சமூட்டுகிறார் ஔவையார் இதை

“களம்புகல் ஓம்புமின் தெவ்வீர், போரெதிர்ந்து
எம்முளும் உளன் ஒரு பொருள் : வைகல்
எண்தேர் செய்யும் தச்சன்
திங்கள் வலித்த கால் அன்னோன்” (புறம் - 87)

எனும் புறநானூற்று பாடலின் மூலம் எடுத்துரைக்கிறார்.

**புலி இருந்த குகைபோன்ற வயிறு**

நான் பெற்றமகன் எந்த திசையில்? எந்த ஊரில்? எங்கு இருக்கிறான் என்றுகூட தெரியாது. இதோ! புலி தங்கியிருந்து போன குகைபோன்ற என் வயிறு இங்கே. என்மகன்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

ஏதாவது போர்க்களத்தில் இருப்பான் என்றாள் ஒரு சங்கத்தாய். அவள் அக்காலத்தை வீரயுகமாக மாற்றிய பெருமைக்கு உரியவள், அவளின் வீரம் செரிந்த எண்ணம்.

"புலிசேர்ந்து போகிய கல்லளை போல
ஈன்ற வயிறோ இதுவே;
தோன்றுவன் மாதோ போர்க் களத்தானே!" (புறம் - 86)

என வெளிப்பட்டு உரைக்களானாள்.

**வாளில் கீறி அடக்கம் செய்தல்**

கற்பினிப் பெண்ணுக்கு குழந்தை மரித்துப் பிறந்தாலும், குழந்தையாக உருக்கொள்ளாமல் தசைப்பிண்டமாகப் பிறந்தலும் இவன் கோழையன்று. வீரன் என்னும் பொருளில் குழந்தையின் உடலில் வாளால் கீரியப் பின்பு அடக்கம் செய்தனர். சங்க காலத்தில் வீரம் செழித்துக் காணப்பட்டனர். ஆகவேதான்

"குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்
'ஆள் அன்று' என்று வாளில் தப்பார்" (புறம் - 74)

என்னும் வீரச் சூழல் கானப்பட்டது.

**சங்கத்தமிழர் குடி இன்று தாழ்ந்த குடியானது:**

தமிழர்களின் மரபில் சங்க காலத்தில் எல்லோரும் மதிக்கக்கூடிய நான்கு தமிழ்க்குடிகள் மட்டும் இருந்தன. அவர்களில் ஒருகுடி மட்டும் எப்படி தாழ்ந்த சாதியாய் வர்ண கட்டமைப்பில் சிக்கினார்களென்றால்? ஆரியக் கொள்கை பல்லவர்கள் காலத்திற்கு முன்பு பரவியபோது நான்கு குடிகளும் ரிக்வேத சிந்தனையின் மாயையில் சிக்குண்டு தமிழர் மரபை மறந்து பார்ப்பனிய கலப்புச் சிந்தனையை ஏற்காத ஓர் தமிழ்க்குடி மற்றத் தமிழர்க் குடிகளால் புறக்கணிக்கப்பட்ட சேரியின் அடையாளத்தோடு நாதியற்றோராய் வாழும் பண்பாட்டில் பௌத்தம் ஏற்று பஞ்சமர்களானார்கள். பஞ்சமர்கள்- ஐந்து கொள்கையுடையோர், 1. புலால் மறுத்தல், 2. மது அருந்தாமை,3. திருடாமை, 4. தேவையற்ற காமம் கொள்ளாமை, 5. பொய்க்கூறாமை போன்ற கோட்பாட்டில் நாட்டம் கொண்டு வர்ணப் பாகுபாட்டைவிட்டு மனிதர்களுக்குள் மனிதரை பிரித்துப் பார்க்கும் சாதி இழிவை உதறி வெளியேறியதால் சாதியடையாளம் சுமந்த மற்ற தமிழ்க்குடிகள் சாதியற்றோரை 'தாழ்ந்த சாதி' என்கிற பழக்கத்தைத் தொடர்ந்து ஊக்குவித்து தங்களை உயர்ந்தோர்களாய் கட்டமைத்து சாதிக்குள் சாதி அகமண திருமணத்தில் மூழ்கி சாதி இந்துக்களானார்கள், அவற்றைத்தான் புறநானூறு ஆரியர் வருகைக்குப் பிறகு தமிழர்களிடம் உயர்வு-தாழ்வு ஏற்பட்டிருக்கலாம். ஆனால், சங்ககாலத்திற்கு முன் தொழிலின் அடிப்படையில் தான் மனிதர்கள் பகுக்கப்பட்டடிருந்தனர் என்பதை,

"பாணன், பறையன், துடியன், கடம்பன்
இந்நான் கல்லது குடியும் இல்லை" (புறநானூறு : 335)

கூறி, இந்நான்கு குடிகளும் போர்ச்செய்யும் செயலோடு தொடர்புற்றிருந்தார்கள் என்பதையும் சான்றாக்குகிறது.

**சங்க காலமும் பார்பனர்களும்**

சங்க இலக்கியங்களில் ஐயர், ஐயங்கார், என்ற சொல் பயன்படுத்தவில்லை மாறாக அந்தனர், பார்பார், எனப் பயன்படுத்தியுள்ளனர்.

"அறுதொழில் அந்தணர் அறம்புரிந் தெடுத்த
தீயொடு விளங்கும் நாடன்" (புறம் - 397)
அழல் புறந்தரூஉம் அந்தணர் - (புறம்)

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

"ஒதல் வேட்டல் அவைபிறர்ச் செய்தல்
ஈதல் ஏற்றல் என்று ஆறு புரிந்து ஒழுகும்
அறம்குரி அந்தணர்" (பதிற்றுபத்து - 24)

ஆகிய சான்றுகளால் அறுதொழில் உடைய அந்தணர்களைப் பற்றிய செய்திகளை அறிகிறோம். வேதத்தையும், வேதாந்தத்தையும் பார்ப்பவர்கள் என்பது பொருள் பார்ப்பான் என்றசொல் பிராமணன் என்ற சொல்லின் திரிபாகும் என்பார் ந.சுப்பிரமணியன். பார்ப்பான் என்ற சொல்லுக்கு வேர்ச்சொல் பார்ப்பு என்பதாகும். இந்த சொல்லுக்கு இளமை, குஞ்சு, குட்டி என்பது பொருள். பார்ப்பும் பறழும் பறப்பவற்றிளமை (தொல், மரபு, 4) என்பது தொல்காப்பியம். எனவே இது பிராமணன் என்ற சொல்லின் திரிபு என்பதை ஏற்றுக் கொள்ள முடியாது, விவாதத்திற்குரிய தொல்காப்பிய மரபியல் நான்கு இடங்களில் இச்சொல்லைப் பறவைகள், ஊர்வன, குரங்கு ஆகியவற்றின் குஞ்சுகளையும் குட்டிகளையும் குறிக்கப் பயன்படுத்துகிறது சங்கப்பாடல்களிலும்.

யாமைப் பாப்பு (குறுந் 152)
தன் பார்ப்புத் தின்னும் அன்பில் முதலை (ஐங் 41)
மேற்கவட்டிருந்த பார்ப்பினங்கள் (அகம் 31)
பார்ப்புடை மந்திய மலை (குறுந் 276)

பார்ப்பார் என்ற சொல்லுக்கு வேர்ச்சொல்லின்படி இளையர் என்பதே பொருளாகும் இப்பொருளை ஏற்றுக் கொள்வதனால் அடுத்து ஒரு கேள்வி எழுகிறது. பார்ப்பார் யாருக்கு இளையர்? அவருக்கு மூத்தவர் யார்? பிராமணரின் தமிழக வருகைக்கு முன்னர் தமிழகத்துக் கோவில்களில் பூசை செய்யும் குருமார்களாக யார் இருந்தார்கள் என்பதே அக்கேள்வி, இவ்விரு கேள்விகளைப் பார்ப்பதற்கு முன், சங்கப் பாடல்களில் பார்ப்பனர் வேதத்தைக் காக்கவும், அரசனைக் காக்கவும், நாட்டின் நன்மைக் கருதியும் வேள்விக் கடன் ஆற்றுபவர்களாகவே உள்ளனர். கோயில் பூசை செய்வோராக எங்குமே காணப்படவில்லை. பார்ப்பணரல்லாத குடும்பத்திற்கு அவர்கள் புரோகிதராக இருந்த செய்தியையும் முதன் முதலாக மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட எனவரும் சிலப்பதிகார அடிகளால்தான் அறிகிறோம். எனவே பெருந் தெய்வக் கோயில்களில் (திருமால், சிவன்) பார்பனர் அல்லாதார் மூலத் திருமேனியைத் தொட்டுப் பூசைசெய்யும் வழக்கம் இல்லை. பெருந்தெய்வம் அல்லாத சிறுதெய்வக் கோயில்களில் சடங்கியலான தொல்லெச்சங்கள் மூலம் இன்றும் தாழ்த்தப்பட்ட சாதியராகக் கருதப்படுவோரில் சில சாதியார் அக்காலத்தில் கோயில் பூசை செய்பவராக இருந்ததை அறிய முடிகிறது. இவ்வுண்மையை முதன்முதலாக 1874-ல் டபிள்யூ, ஜே. வால்கௌஸ் என்ற ஆராய்ச்சியாளர் தொட்டுக்காட்டினர். இவர்களுள் குறிப்பிட்டுச் சொல்லத் தகுந்தவர் பறையர்கள் ஆவர். சங்க இலக்கியத்தில் பறையர்கள் மதிக்கத்தக்க இடத்தைப் பெற்றவராகத் தெரிகிறது. துடியர்களைப் போல இழிசனர்களாக எங்கும் குறிக்கப்படவில்லை என்று அனுமந்தன் குறிப்பிடுகிறார். சங்க காலத்தில் மதச் சடங்குகளை செய்தவர்களில் பறையர்களும் உண்டு என்று ஜார்ஜ் எல்,ஹார்ட் குறிப்பிடுகிறார். தூய்மை, தீட்டு, இவைப் பற்றிய கோட்பாடுகள் பிராமணர் வருகையினால்தான் தமிழ் நாட்டில் இடம் பெற்றன என்கிறார். இன்னும் தமிழ்நாடு முழுவதும் 'மாரியம்மன்' என்ற தெய்வத்தின் கணவராக பறையர்களே கருதப்படுகின்றனர். பல இடங்களில் மாரியம்மன் கோயில் திருவிழா தொடங்கும் போது பறையர்க்கு காப்புக்கட்டும் வழக்கம் நடைமுறையில் இருந்து வருகிறது.

திருவாரூர் தியாகராசர் கோயில் திருவிழாவின்போது இறைவனின் திருவீதி உலாவில் முன்னதாக யானை மீது அமர்ந்து ஒரு பறையர் கொடிபிடித்துச் செல்லும் வழக்கம் உண்டு,

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

உள்ளூர் புராண மரபுகளின்படி அக்கோயிலின் பிராமண அர்ச்சகர்கள் நண்பகற்பொழுதில் ஒரு நாழிகைநேரம் (24 நிமிடம்) பறையர்களாக மாறிவிடுவதாக ஒரு செய்தி வழங்கி வருகிறது. நண்பகல் கழிந்தபின் மீண்டும் ஒருமுறை அவர்கள் குளித்துவிட்டுப் பிராமணராவார்கள், இப் பிராமணப் பிரிவினர்க்கு மத்யானப் பறையர் என்ற பெயர் வழங்குகிறது. பேரூர் புராணம் "முன்னர்ப் பறையனான நீ இப்பொழுது பன்னனும் ஆனாய்" என்று சிவபெருமானைக் குறிப்பிடுகிறது. பேரூர்க் கோயிலில் 'நாற்று நடவுத்திருவிழா' என்ற பெயரில் இன்றும் ஒரு திருவிழா நடந்து வருகிறது. தென் மாவட்டங்களில் சிறுவர்கள் பனம்பழம் உண்ணும்போது வேடிக்கையாகப் பனம்பழத்தின் ஒருமுனைப் 'பாப்பான்முனை' என்னும் மற்றோர் முனைப் 'பறையன் முனை' என்றும் கேளிசெய்து நகையாடும் வழக்கம் உள்ளது. இந்தப் பழம் பற்றிய குறியீடு இருசாதியாரும் ஒரு தொழிற் களத்தில் இருந்ததைக் குறிப்பதாகும் தவிர "பார்ப்பானுக்கு மூப்பு பறையன் கேட்பார் இல்லாமல் கீழ்சாதியானான்" என்ற ஔவையின் சொல்லால் தென்மாவட்டங்களில் மற்ற சாதியினரால், பெருக வழங்கும் ஒரு சொல்லடையாகும். கேட்பதற்கு ஆளில்லாவிட்டால் நிலை இழப்பு ஏற்படும் என்ற பொருளில் இது வழங்கி வருகிறது. இவை ஒரு காலத்தில் பறையர் பெற்றிருந்த சமூக உயர்வுக்கான சான்றுகளாகும் பிராமண புரோகிதர்க்கும், பறைப் புரோகிதர்க்கும் இடையிலான வேறுபாடு (மொழி தவிர புலால் உண்ணலும், இரத்தப் பலியிடுதலும்தான்) வேதகாலத்துப் பிராமணர் வேள்விகளில் ஏராளமான உயிரினங்களைப் பலிகொடுத்துள்ளனர் தமிழ்நாட்டிலும், புலால் உண்ட பிராமணராகச் சங்கப் புலவர் கபிலரை (புறம் 113) நாம் காண்கிறோம்.

கி.மு. 6-ம் நூற்றாண்டில் எழுந்த சமண, பௌத்த மதத்தின் செல்வாக்கே பிராமணர்களைப் புலால் உண்ணுவதிலிருந்து தடுத்து நிறுத்தியது இன்றும் புலால் உய்யும் பழம் மரபின் தொல்லெச்சமாக ஆந்திரத்தில் (கர்நூல் மாவட்டம் கம்மம் தாலுகா) 'மாதங்கி' (mathangi) வழிபாட்டில் பிராமணர்கள் தங்கள் வீட்டில் எருமைக் கறி சமைத்து மாதிகருக்குப் பரிமாறுவதும், அதே நேரத்தில் மாதிகர் ஆட்டுக் கறியைப் பரிமாறுவதும் பிராமணர் உண்பதும் ஆண்டுக்கொரு முறை சடங்கு நிகழ்ச்சியாக நடத்தப்படுகிறது. (மாதிகர் ஆந்திரத்தில் ஒடுக்கப்பட்ட சாதியர்) மேற்குறித்த தொல்லெச்சங்கள் யாவும் பிராமணர் வருகைக்கு முன்னரே புரோகிதராகப் பறையர்கள் இருந்தார்களென சங்க இலக்கிய வரலாற்று உண்மை உணர்த்துகிறது.

**பிறர் துன்பதிற்கு வருந்துதல்**

"நெடிய மொழிதலும் கடிய ஆர்தலும்
மென்கட் செல்வம் செல்வமென்பதுவே" (நற்றினை -210 ,5-9)

என்று பட்டம் பதவி பெற்று ஆடம்பர வாழ்க்கை என்பது உயர்ந்ததல்ல. தன்னைச் சார்வந்தவருக்குத் துன்பம் வருமானால் அதற்கு வருந்தும் உள்ளமே செல்வத்தைவிட உயர்ந்தது என்பதைக் காட்டுகிறது. இலக்கியச் சான்றின் வழி தமிழர்களின் நுட்பமான பண்பாட்டு வரலாற்றுப்புலம் கிடைக்கிறது. தமிழர்களின் காலக்கண்ணாடியாகவும், களத்தில் முன்னோடியாகவும் விளங்கும் சான்றுகள் இவையடுத்து வேறில்லை என்பதற்கு மேலும் அகம்,புறம் என்னும் பத்துப்பாட்டும், எட்டுத்தொகையும் முழுமையாகவும் ஆழமாகவும் தமிழர்களாகிய நாம் கற்றறிந்து காப்பது நம் கடமையாகும்.

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**அடிக்குறிப்புகள்**

1. ஔவை சு. துரைச்சாமிப்பிள்ளை, முனைவர்.கதிர்முருகு - சங்க இலக்கியம் மூலமும் உரையும், பதிற்றுப்பத்து, சாரதா பதிப்பகம், சென்னை - 600014.
2. ஔவை சு. துரைச்சாமிப்பிள்ளை, முனைவர்.கதிர்முருகு - சங்க இலக்கியம் மூலமும் உரையும், நற்றிணை, சாரதா பதிப்பகம், சென்னை - 600014.
3. உ.வே. சாமிநாதையர் - புறநானூறு மூலமும் உரையும், உ.வே.சா.பதிப்பு, சென்னை, ஆறாம் பதிப்பு - 1963.
4. தமிழர் பண்பாடும், நாகரிகமும், (பெரியார் பல்கலைக் கழகம் பாடநூல்)
5. பண்பாட்டு அசைவுகள் - தொ.பரமசிவன்.

**E-ISSN: 2581-7140**

**Special Issue : Vol. 1, April-2019** **Available at: www.ijtlls.com**

# தொல்லியல் காட்டும் வைகை நிதி நாகரிகம்
# The Evidences of Archeology on Vaigai Civilization

**ரா. தேவிஸ்ரீ,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
மதுரை காமராஜர் பல்கலைக்கழகம், மதுரை- 21

## Abstract

*The paper deals on the facts related to the evidences of archaeological sources on Vaigai civilization. Vaigai river is on the banks of the world famed city Madurai. It is in the heart of Tamil nadu. This Madurai is the third capital established by the Pandian kings after meeting great deluges. Once Vaigai was also ferocious and flows always. Due to the floods of Vaigai many of the settlements of the Tamils are raided away by the waters. At present many of such sites are being found and the culture of those people belong to them seems more then 2500 years. Therefore, The study traces the Vaigai Civilization with the help of archaeological evidences.*

**Keywords:** Evidence, Archeology, Vaigai, Tamil Civilization

**முன்னுரை**

தமிழர்களின் வரலாறு பழைய கற்காலம் முதல் தொடங்குகிறது. தமிழகத்தில் மனித இனம் சுமார் 20,000 ஆண்டுகளுக்கு முன்பிருந்து வாழ்ந்திருக்கிறது என்பதற்கு கிடைத்துள்ள தொல்லியல் தடயங்களே சான்று. குறிப்பாக பண்டைய நாகரிகங்கள் அனைத்தும் ஆற்றங்கரைகளிலேயே ஏற்பட்டுள்ளது என்பதற்கு பல சான்றுகள் கிடைத்துள்ளன. உதாரணமாக, நைல் நதி நாகரிகம், சிந்து சமவெளி நாகரிகம் மற்றும் பல.

வைகையாற்றங் கரையில் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே மனிதர்கள் வாழ்ந்துள்ளனர் என்பதை தொல்லியல் சான்றுகளே எடுத்துரைக்கின்றன. வைகை நதிக்கரையில் தமிழர்களின் சிறப்பான நாகரிகம் செழித்து வளர்ந்து வந்துள்ளது என்பதை வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே கிடைத்துள்ள தொல்லியல் சான்றுகளும், வைகை நதிக்கரையில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாராய்ச்சியின் முடிவுகளும் மற்றும் வைகை நதிப் பற்றிய சங்க இலக்கியப் பாடல்களும், கல்வெட்டுகளும், செப்பேடுகளும் பறைசாற்றுகின்றன.

**வைகை நதி நாகரிகம் : வரலாற்றுக்கு முந்தைய காலம் மற்றும் ஆரம்ப வரலாற்று காலம்**

மனித இனத்தின் தோற்றம் முதல் கிடைக்கும் வாழ்வியல் எச்சங்களை அடிப்படைச் சான்றுகளாகக் கொண்டே, தொல்லியல் என்னும் அறிவுப்புலத்தின் மூலம், வரலாறு எழுதப்படுகிறது. மனித வாழ்வின் எச்சங்கள் மண்ணின் மேற்பரப்பு ஆய்விலும் (Exploration), அகழ்வாய்வுகள் (Excavation) தொல்எச்சங்கள் (Archaeological Remains) எனப் பல வடிவங்களில் கிடைக்கிறது. அதிமனிதன் கற்கால வாழ்வில் கையாண்ட கற்கருவிகள், செம்பு, இரும்புக் கருவிகள், குகை, பாறை ஓவியங்கள், புதைமேடுகள், கோயில்கள், மண்டபங்கள் இவைதவிர எழுத்தறிவு பெற்றபின்பு மனிதன் எழுதிவைத்த பானை ஓட்டுப் பொறிப்புகள்,

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

குறியீடுகள், எழுத்து வடிவங்கள், கல்வெட்டுகள், செப்பேடுகள் போன்ற ஆவணங்களும் வரலாற்றை எழுதுவதற்குத் துணைநிற்கின்றன.

பாண்டிய நாட்டுக்கும், பாண்டிய மன்னனுக்கும் பெருமை தந்து நின்றது வைகையாறு அது பாண்டிய நாட்டிற்கு அழகினையும், செல்வங்களையும் வழங்கியது. அத்தகைய வைகையாறு, தேனி மாவட்டத்தின் வருஷநாடு மலையில் உருவாகி, கம்பம் பள்ளத்தாக்கு வழியாக பாய்ந்து, மேகமலை அருகே சுருளி ஆறுடன் இணைகிறது. மேலும் கூடாம்பாறை அருவி, பொம்மக்கா வாய்க்கால், துவாரகா அருவி மற்றும் பிருந்தா ஆறு ஆகியவை வைகையாற்றுடன் இணைகின்றன. வருஷநாடு மலையின் தென்சரிவில், வைகையுடன், அருணாஅருவி, வெள்ளிமலை ஆறு, வசந்தா ஆறு மற்றும் சந்தனகாவு அருவி மற்றும் ஏலமலை ஆறு ஆகியவை கிழக்குச்சரிவில் இணைகின்றன.

பழநிமலைத் தொடரில் வைகையுடன், மஞ்சளாறு, வரட்டாறு, இருட்டாறு மற்றும் மருதாறு அகியவை இணைகின்றன. சிறுமலையிலிருந்து சாத்தையாறு வைகையுடன் இணைகிறது. அழகர்மலையில் உருவாகும் உப்பாறு இறுதியாக வைகையுடன் இணைந்து ராமநாதபுரம் வழியாக பாய்ந்து, வங்காளவிரிகுடாவில் ஆத்தங்கரை எனும் இடத்தில் கடலில் சங்கமிக்கிறது.

வைகை ஆறு, பல்வேறு காலங்களில் பல்வேறு பெயர்களில் வழங்கப்பட்டுள்ளதை, இலக்கியக்குறிப்புகள் தெளிவுப்படுத்துகின்றன. ஜடாவர்மன் குலசேகரப் பாண்டியனின் திருப்புவனம் செப்பேடுகள், வைகையை 'ஸ்ரீவல்லபப்பேராறு' என்று குறிக்கின்றது. நாயக்கர் ஆட்சிக்காலத்தில் வைகையாறு, தெலுங்கில், திப்பரேவு, சரித்திரேவு, கொங்கரேவு, ரியல்ரேவு, கோத்தில்ரேவு என வழங்கப்பட்டதாக குறிப்புகள் உள்ளன.

வைகை நதியின் இருமருங்கிலும் வைகைநதி நாகரிகத்தை வரலாற்றில் பறைசாற்றும் விதமாக, தொல்லியல் எச்சங்கள், பலநூற்றுக்கணக்கில் கிடைத்துள்ளது. குறிப்பாக, வரலாறு முந்தைய கால தொல்லியில் எச்சங்களான, தொல்பழங்கால கல்லறைகள் பல இடங்களில் கிடைத்துள்ளன. அவற்றுள் மிகச்சிலஇ உதாரணமாக: தேனியில், அணைக்கரைபட்டி, கண்டமனூர், புலிமான்கோபை சிவகங்கை மாவட்டத்தில், அன்னவாசல், கொந்தகை, லாடனேந்தல், திருப்பாசேத்தி, திருப்புவனம் மற்றும் பல இடங்களிலும், வரலாற்றுக்கு முந்தைய காலத்துத் தொல்லியில் சான்றுகள் கிடைத்துள்ளன.

**சங்ககாலம்**

வைகை நதிக்கரையில், சங்ககாலத்தை சிறப்பாக உணர்த்தும் வகையில், முதற்சங்கம், இடைசங்கம் மற்றும் கடைச்சங்கம் அமைத்து, தமிழ் வளர்க்கப்பட்டதை சங்க இலக்கிய நூல்களான, பரிபாடல், மதுரைகாஞ்சி, சிலப்பதிகாரம் போன்றவை, வைகை நதிப்பற்றிய சிறப்பனை எடுத்துரைக்கின்றன. உதாரணமாக, பரிபாடலில், வைகை நதிப்பற்றிய பலபாடல்கள் இடம் பெற்றுள்ளன.

"வையை உடைந்த மடை அடத்தக்கண்ணும்" (பரிபாடல் 6 : 82)

இவ்வரிகள், பெண்ணின், மன எண்ணங்களை, மடைத்திறந்த வைகை நதி வெள்ளத்தோடு ஒப்பிட்டுக் குறிப்பிட்டுள்ளார். மற்றொரு பரிபாடல் பாடலில்,

"இன்பமும் கவினும் அழுங்கல் மூதூர்
நன்பல நன்பல நன்பல வையை
நின்புகழ் கொள்ளாதிம் மலர்தலை உலகே" (பரிபாடல் 12 : 100-102)

என்று வைகை ஆற்றின் வளம் மற்றும் அது வாரி வழங்கும் நலங்களைப் பற்றிய சிறப்புகளையும் எடுத்துக்காட்டுகின்றது. மாங்குடி மருதனார், மதுரைக்காஞ்சியில்,

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

"வையை அன்ன வழங்குடை வாயில்" (மதுரைக்காஞ்சி 352 – 356)
மதுரையின் வீதிகள், வைகை ஆற்றைப் போல் பரந்து விரிந்து காணப்பட்டதாக உவமையுடன் எடுத்துரைக்கிறார். சங்ககாலத்திற்கு பிந்தைய கால இரட்டைக் காப்பியங்களில் ஒன்றான, சிலப்பதிகாரத்தில், மதுரைக் காண்டத்தில் வைகைப் பற்றிய செய்திகளை சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார். (எ.கா) "வையை என்ற பொய்யாக் குலக்கொடி" (169-172 புரன்சேரி, மதுரை, சிலப்..) வைகை ஆற்றின் வளத்தினைப் பற்றிச் சிறப்பாக எடுத்துக் காட்டியுள்ளார். வைகை ஆற்றின் கரையில் அமைந்துள்ள நகரங்களைப் பற்றிய குறிப்புகளும் தமிழ் இலக்கியங்களில் குறிப்பிட்டுள்ளன. உதாரணமாக, குள்ளபுரம், தென்கரை, குருவித்துறை, கொடிமங்கலம் மற்றும் திருவேடகம், தேனூர், சோழவந்தான் பற்றிய குறிப்புகளும் இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன.

**நாணயங்கள்**

வைகையாற்றில் கிடைத்த பழங்கால நாணயங்களைக் கொண்டு, கி.மு. 3-ம் நூற்றாண்டுக்கு முன்பிருந்தே, பாண்டியர் தலைநகராகிய மதுரை, அரசியல், சமயம், வணிக முக்கியத்துவம் வாய்ந்த நகரமாகத் திகழ்ந்ததை உறுதிசெய்கிறது. மதுரையைச் சார்ந்த வைகையாற்றில், உள்நாட்டு மற்றும் வெளிநாட்டு பழங்கால நாணயங்கள் கிடைத்துள்ளன. ரோமானியர் கால நாணயங்கள், கி.மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த பெருவழுதி என்ற பெயர் பொறித்த சங்ககால பாண்டிய நாணயங்களும் மௌரியர்காலத்து வடநாட்டு முத்திரை குத்தப்பட்ட வெள்ளிக் காசுகளும், ஆந்திர மாநிலத்தை ஆண்ட சாதவாகனர் நாணயங்களும் வைகை ஆற்றில் இருந்து கிடைக்கப் பெற்றுள்ளன.[1]

**அகழ்வாராய்ச்சிகள்**

வைகை நதிக் கரையில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாராய்ச்சிகள், வைகை நதிக் கரையில் சிறப்பான நாகரிகத்தை கொண்டிருந்தை உலகிற்கு எடுத்துரைக்கிறது.

இதுவரையில், வைகை நதிக் கரையோரம், சிறியதும், பெரிய அளவிளுமான அகழ்வாய்வுகள் நடத்தப்பட்டுள்ளன, அனுப்பானடி அகழ்வாய்வு, 1887 –ல் நடத்தப்பட்டு, பெருங்கற்காலத்து சுவடுகள் இருப்பதை கண்டறிந்து வெளிகொணர்ந்தனர். மதுரையின் தென்பகுதியில் அமைந்துள்ள, பழங்காநத்தத்தில், சிலப்பதிகாரத்தில், இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ள, கோவலன் பொட்டல் அமைந்துள்ளது. 1980 –ம் ஆண்டு நடைபெற்ற அகழ்வாய்வில், பெருங்கற்கால நாகரிகம் இருந்ததற்கான சான்றுகள் கிடைக்கப்பெற்றன. மீன் சின்னம் பொறித்த தாமிர நாணயமும், விலை மதிப்புமிக்க மணிகளும் மற்றும் தமிழ்பிராமி எழுத்துகள் பொறித்த, மட்பாண்டங்களும் கிடைத்துள்ளன.

அழகன்குளம் அகழ்வாய்வில் பலவகைப்பட்ட தொல்லியல் மிச்சங்கள் கண்டெடுக்கப்பட்டன. அவற்றுள் குறிப்பிடத்தக்க சில: பலவகைப்பட்ட பானை ஓடுகள் குறிப்பாக, கருப்பு சிவப்பு நிற பானை ஓடுகள், ரௌலட்டு வகைபானை ஓடுகள் மற்றும் வீட்டு உபயோகப் பொருட்கள் பல வடிவங்களிலும், பல்வேறு வகைகளிலும் கிடைத்துள்ளது. எழுத்துகள் பொறிக்கப்பட்ட மட்பாண்டகலங்களும் கிடைக்கப் பெற்றன. குறிப்பாக அழகன்குளம் அகழ்வாய்வில், மத்தியத்தரைக்கடல் பகுதியைச் சேர்ந்த ஆம்போரா வகை குடுவைகளில், ஆலிவ் எண்ணெய் மற்றும் ஒயின் எனும் மதுவகை கொண்டு வந்ததற்கான சான்றுகள் அதிக அளவில் கிடைத்துள்ளன.

மற்றொரு சிறப்பாக, அழகன்குளம் அகழ்வாய்வில், முத்திரைகள் பொறிக்கப்பட்ட மட்கலங்கள் அதிகளவில் கிடைக்கப் பெற்றுள்ளன. குறிப்பாக, சூரியன், மலை, மீன், அம்பு, ஏணி, கணிதக் குறியீடுகளான, சதுரம், வட்டம் மற்றும் படகுக் குறியீடு, அழகன்குளத்தில்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

ரோமானியர்களுடனான கடல்வழி வாணிபம் கிமு 5ம் நூற்றாண்டிலிருந்து, 3ம் நூற்றாண்டு வரை சிறப்பாக இருந்ததை எடுத்துரைக்கின்றன. எனவே அழகன்குளம் பாண்டியர்களின் சிறந்த வாணிபத்துறைமுகமாக விளங்கியது என்பதில் சிறிதும் ஐயமில்லை. மேலும், 10ம், 11ம் நூற்றாண்டைச் சேர்ந்த சீன நாட்டு செலடன் வகை மட்கலங்கள் கிடைத்துள்ளதைக் கொண்டு, சீன நாட்டு வாணிபமும் அந்த காலகட்டத்தில் செழிந்தோங்கி இருந்ததை அறியமுடிகிறது.

அதிக எண்ணிக்கையில் பழங்காலப் பொருட்கள் கிடைத்துள்ளன மற்றும் அதிக அளவில், சங்க கால பாண்டியர்களின் நாணயங்களும், ரோமானியநாணயங்களும் கிடைத்துள்ளன மற்றும் சமீபத்தில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வில் சங்கு கொண்டுத் தயாரிக்கப்படும் பொருட்களின் தொழிற்கூட தொல்லியல் பொருட்கள் பெருமளவில் கிடைத்துள்ளது. வைகை நதியின் முகத்துவாரத்தில் அமைந்துள்ள அழகன்குளம், பாண்டியர் கால, காலச்சாரம், பண்பாடு மற்றும் ரோம், இலங்கை, கிழக்கு ஆசிய நாடுகளுமான, வாணிபத் தொடர்பையும் உள்ளங்கை நெல்லிக்கனிப் போல, தொல்லியல் சான்றுகளோடு எடுத்துக்காட்டுகிறது.

தமிழகத்தில் சோழர், சேர வேந்தர்களில் தலைநகரங்கள் அகழ்வாய்வு செய்யப்பட்ட போதும், சங்ககால மதுரை நகரம் எங்கிருந்தது என்ற வினாவிற்கான விடையை அண்மையில் கீழடியில் நடைபெற்ற அகழ்வாய்வின் முடிவுகள் வெளிப்படுத்தியுள்ளன. சிவகங்கை மாவட்டத்தில் அமைந்துள்ள, கீழடி வைகையாற்றின் தென்கரையிலுள்ள, கொந்தகை, மணலூர் போன்ற பல்வேறு வரலாற்றிடங்களால் சூழப்பட்டிருக்கிறது. நான்கு கட்டங்களாக நடைபெற்ற அகழ்வாய்வில், பல்வேறு பழங்காலப் பொருட்கள் கிடைக்கப் பெற்றுள்ளன.

செங்கல் கட்டுமானங்கள், செங்கற்களால் கட்டமைத்த நீர்த்தேக்கத் தொட்டி, சுடுமண் சக்கரம், ஏராளமான செம்பு மற்றும் இரும்புப் பொருட்கள் கிடைத்துள்ளன. இங்கு பல்வகைப்பட்ட பழங்கால தொல்லியல் பொருட்கள் கிடைத்துள்ளன. குறிப்பாக தந்தப்பொருட்கள், சுடுமண் பொருட்கள், உலோகப்பொருட்கள், கண்ணாடிமணிப் பொருட்கள், மணிகளிலான பொருட்கள், முத்துக்கள்,, கண்ணாடிப் பொருட்கள், கிளிஞ்சல் பொருட்கள், எலும்பிலான பொருட்கள், கல்பொருட்கள், மான்கொம்புகள், சோழிகள் போன்றவை கிடைத்துள்ளன.

கீழடி அகழாய்வில் மூன்று அடுக்குகளிலும் வெவ்வேறு காலகட்டத்தைச் சேர்ந்த பானைகள் கிடைத்துள்ளன. அவற்றுள், சுமார் 70க்கும் மேற்பட்ட தமிழி (தமிழ்பிராமி) எழுத்துகளும், சுமார் 600 ஓடுகளில் கீறல் கோடுகளும் கிடைத்துள்ளன. குறிப்பாக, அம்பின் வடிவம், ஏணி, மீன், ஸ்வஸ்திகா, திரிசூலம், சூரியன், வண்டிச்சக்கரம், இலை ஆகியவை இடம் பெற்றுள்ளன. சில பானை ஓடுகளில், சங்கத்திற்கு முந்தைய காலப் பெயர்களான, திசன், ஆதன், இயதன் மற்றும் உதிரன் போன்ற பெயர்கள் பொரிக்கப்பட்டுள்ளன.

கீழடி அகழாய்வில் கிடைக்கப் பெற்ற பொருட்கள் மற்றும் கட்டுமானங்கள் இவற்றின் அடிப்படையில் அக்காலகட்டத்தில் மிக வளமையான ஊராக இப்பகுதி இருந்துள்ளதை அறியமுடிகிறது. இவ்வூர் வேளாண்மை, மற்றும் உலோக உலைகள் கிடைத்துள்ளதைக் கொண்டு பல்வேறு தொழில் நுணுக்கம், கலை மற்றும் விஞ்ஞான அறிவு, கிரேக்க மற்றும் ரோமாபுரி நாணயங்கள் பெருமளவில் கிடைத்துள்ளதைக் கொண்டு, கீழடி சிறந்த வாணிபத் தளமாகவும் விளங்கியுள்ளதை அறியலாம்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**கல்வெட்டுகள் மற்றும் கோயில்கலை**

கட்டக்கலை சங்ககாலத்திலிருந்தே சிறந்தோங்கி வளர்ந்திருக்கிறது. சங்க காலத்திற்குப் பின்னர் தமிழகத்தை ஆட்சிபுரிந்த பல்லவர், சோழர், பாண்டியர், விஜயநகர, நாயக்க மன்னர்கள், மராட்டிய மன்னர்கள், சேதுபதி மன்னர்கள் போன்றோரும் தொடர்ந்து கட்டக்கலை வளர்ச்சிக்குப் பெரிதும் தொண்டு செய்திருக்கிறார்கள் என்பதை கல்வெட்டுச் செய்திகள் மற்றும் கோயில்கள் மூலம் அறியமுடிகிறது. திராவிடக் கட்டக்கலை, பாண்டியர்கள் காலத்தில் செழித்தோங்கி காணப்பட்டது. மேலும் வைகை நதிக்கரையில், முற்காலப் பாண்டியர்கள் மற்றும் பிற்கால பாண்டியர்களின் காலத்தை சேர்ந்த பல கோயில்கள் இன்றும் அவர்களது புகழைப் பறைசாற்றுகின்றன.

வைகை நதிக் கரையில் அமைந்துள்ள வரலாற்று சிறப்புமிக்க கோயில்களின் பட்டியல் பின்வருமாறு:

| எண் | ஊரின் பெயர் | மாவட்டம் | கோயிலின் பெயர் |
|---|---|---|---|
| 1 | ஜம்புலிபுத்தூர் | தேனி | கதலிநரசிங்கப் பெருமாள் கோயில் |
| 2 | குள்ளபுரம் | தேனி | உத்தண்ட சௌந்தரராஜப்பெருமாள் கோயில் |
| 3 | மேலமங்கலம் | தேனி | மாயமன்மாரி ஈஸ்வரம் |
| 4 | சோழவந்தான் | மதுரை | ஜனகப்பெருமாள் கோயில் |
| 5 | விக்கிரமங்கலம் | மதுரை | மதுரோதயீஸ்வரம் கோயில் |
| 6 | குருவித்துறை | மதுரை | சித்திரவல்லபப் பெருமாள் கோயில் |
| 7 | தென்கரை | மதுரை | மூலநாதஸ்வாமி கோயில் |
| 8 | முதுரை | மதுரை | ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோயில் |
| 9 | முதுரை | மதுரை | திருவாப்புடையார் கோயில் |
| 10 | திருப்பரங்குன்றம் | மதுரை | சுப்ரமணியசுவாமி கோயில் |
| 11 | முதுரை | மதுரை | கூடல் அழகர் ெருமாள் கோயில் |
| 12 | திருப்புவனம் | சிவகங்கை | பூவனநாதர் கோயில் |
| 13 | வேம்பத்தூர் | சிவகங்கை | ஸ்ரீ சுந்தரராஜ பெருமாள் கோயில் |
| 14 | மானாமதுரை | சிவகங்கை | வீர அழகர் பெருமாள் கோயில் |
| 15 | பரமக்குடி | சிவகங்கை | ஸ்ரீ சுந்தரராஜ பெருமாள் கோயில் |

**வைகையைப் பற்றிய கல்வெட்டு செய்திகள்**

பாண்டியர்கள் பாசனத்திற்கு ஆற்றிய அருங்கொடை குறித்து மிகவும் சிறப்பித்துக் கூறும், மிகப்பழமையான கல்வெட்டாக பாண்டிய மன்னன் அரிகேசரி என்றழைக்கப்பட்ட செழியன் சேந்தனின் கல்வெட்டு அமைகிறது. இக்கல்வெட்டில், வைகைக் கரையில் ஒருமதகுகட்டி, அதிலிருந்து அரிகேசரி என்ற பெயரில் ஒரு கால்வெட்டி அதனை ஒரு காட்டாற்றுடன் சேர்த்து ஒரு நீர்த்தேக்கம் உருவாக்கி சாணாடு, பருத்திக்குடி நாடு வரை குளங்கள், கண்மாய்களுக்கு பாசனத்திற்கு நீர் வழங்கியுள்ளதைத் தெரிவிக்கிறது.

கி.பி. 12ம் நூற்றாண்டில் மன்னன் ஸ்ரீவல்லப பாண்டியனின் ஆட்சியில் அதிகாரியாகத் திகழ்ந்த தொண்டை மண்டலத்து புலியூர்க் கோட்டத்து மாங்காடு நாட்டைச் சேர்ந்த சோழ முத்தரையன் என்பவர் மன்னரின் பதினோராவது ஆட்சியாண்டில், தனக்கு சொந்தமான நிலங்களை குருவித்துறை பெருமாள் கோயிலுக்கு, தானமாக வழங்கி, இந்த நிலத்திற்குத் தேவையான பாசனநீரைப் பெறுவதற்காக வைகையிலிருந்து பிரிந்து சென்ற பராக்கிரம பாண்டியப்பேராறு எனும் கால்வாய்க்கு மேல் மற்றொரு கால்வாயை உருவாக்குகிறார். இந்த கால்வாய் பாசனமுறை, ஏற்கனவே, பாண்டியன்கால்வாய் மூலம் பாசனம் பெற்ற நிலங்களைப்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

பாதிப்புக்குள்ளாக்கியது. இதனை சோழாந்தக சதுர்வேதி மங்கலத்து ஏரிசபை மறுத்தது. இதற்குத் தீர்வாக, பாண்டிய மன்னன் “காலுக்கு மேல் கால் கல்லலாகாது” என்று தீர்ப்புக் கூறியதாக கூறப்படும் கல்வெட்டுச் செய்தி, இன்றளவும், குருவித்துறை சித்திரரதஸ்ரீவல்லபர் கோயிலில் காணலாம்.

மேலும், பராக்கிரம பாண்டியன் காலத்தில், குருவித்துறை அருகே, வைகையாற்றின் குறுக்கே 12ம் நூற்றாண்டில் ஒரு கல்லணை உருவாக்கப்பட்டது அம்மன்னனின் பெயராலேயே “பராக்கிரம பாண்டியன் கல்லணை” என்றும் வழங்கப்பட்டு வருகிறது. இவ்வாறு வைகைநதி பற்றிய கல்வெட்டு செய்திகளும், அக்கால சூழலை அறிந்து கொள்ள உறுதுணையாக நிற்கின்றது.

**முடிவுரை**

வருஷநாடு மலையில் உருவாகி, ஆற்றங்கரையில், வங்காள விரிகுடாவில் சங்கமிக்கும் வரையில், வைகைநதி வெள்ளநீரை மட்டுமல்ல, பல வரலாற்று அடிச்சுவடுகளையும் சுமந்து கொண்டு தான் செல்கிறது. நமக்கு கிடைத்துள்ள, தொல்லியல், வரலாற்று சான்றுகளைக் கொண்டு, வைகைநதியை ஒட்டி, செழிப்பான, வளமிக்க நாகரிகம் தொன்றுதொட்டு வந்து கொண்டிருக்கிறது, என்பதை தெளிவாக எடுத்துரைகின்றன. கிறிஸ்தவ கலை மற்றும் தொல்லியலாளரான அருட்தந்தை ஹெராஸ் ஞ.து. என்பவர் தன்னுடைய “பழந்தமிழரின் வரலாறும், இலக்கியமும்” என்ற நூலில், “சிந்து சமவெளி நாகரிகம் தன் எல்லையை, தெற்கே வைகைநதி வரை விரித்துள்ளது என்று குறிப்பிடுகிறார். இன்றளவும், வைகைநதி, தன்னகத்தே, சிறப்பான பண்பாடு, நாகரிகம், கலை மற்றும் பராம்பரித்தை பல நூற்றாண்டுகள் கடந்தும் எதிர்கால சந்ததியினாருக்கு எடுத்துச் செல்கிறது என்றால் அது மிகையன்று. அத்தகைய சிறப்புகளைக் கொண்ட வைகைநதியை, மாசுபடுத்தாமல், அதன் வரலாற்றையும், கலாச்சார பராம்பரியத்தையும் எதிர்வரும் சந்ததியினருக்கும் எடுத்துச்செல்லும் கடமை நம் ஒவ்வொருவரையும் சார்ந்தது.

**பார்வை நூல்கள்**

1. இராமகிருட்டிணன்.ஆ. *தமிழக வரலாறும் பண்பாடும்*, சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை- 625 001.
2. காசிநாதன். நடன. *தமிழர் தெய்வங்கள்*, தென்றல் நிலையம், சிதம்பரம் -608 001.
3. தட்சிணாமூர்த்தி.அ. *தமிழர் நாகரிகமும் பண்பாடும்*, யாழ் வெளியீடு, சென்னை -600040.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# தொல்லியல் பதிவுகளில் ஏறுதழுவுதல்
# Taming of the Bull (Jallikattu) in Archaeological Evidences

**ப.தேன்மொழி,** முனைவர்பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை,
பச்சையப்பன் கல்லூரி, சென்னை-30.

## Abstract

*The Sangam literature, which has appeared three thousand years ago, has been written by the sangam poets. The Sangam writers have identified clues about climbing on the bulls and taming of it. The study of this finds the archeological evidences of the matters relatd to Bull taming and the culture of bravery.*

**Keywords:** Taming, Bull, Jallikattu, Archaeological Evidences

தமிழ் சமூகம் தோன்றியது முதல் கால்நடைகளுக்கு அளிக்கப்பட்டு வரும் முக்கியத்துவம் குறித்த பல அரிய தகவல்கள் கிடைக்கப் பெற்றுள்ளன. புதிய கற்காலம் முதல் நிலையாக ஓரிடத்தில் தங்கி, வேளாண்மை பணிக்காக மாடு, எருமை, ஆடு, கோழி ஆகிய கால்நடைச் செல்வங்களை முன்னோர்கள் வளர்க்கத்தொடங்கினர். ஓய்வு நேரத்தில் தங்களுக்கும், தாங்கள் வழிபடும் இறைவனுக்கும் வாகனமாக விளங்கும் காளைகளுடன் ஏறுதழுவுதல், நடத்தினர் என்பதற்கான இலக்கண, இலக்கிய, தொல்லியல் சான்றுகள் கிடைத்துள்ளன. அவைகளில் பாறை ஓவியங்கள், கல்முத்திரை, நடுகற்கள், கோயில் சிற்பங்கள், நாணயங்கள் மற்றும் சுவரோவியங்கள் ஆகியவற்றை ஆதாராமாக கொண்டு ஏறுதழுவுதலை தொல்லியல் நோக்கில் ஆராயும் வகையில் இக்கட்டுரை அமைகிறது.

**தொல்லியல்**

ஆதிகாலத்தைப் பற்றிய அறிவியல் என்ற வகையில் தொல்லியல் என்பது பெரும்பாலும் பூமிக்குள் புதையுண்டு மறைந்து கிடக்கும் அல்லது மேற்பரப்பில் காணப்படும் மனித இனத்தோடான பொருள்களையும், அவர்களுக்கான பயன்பாட்டுக் கருவிகளையும் முன்வைத்து ஆராயும் ஆய்வியல் துறையாகிறது. "தொன்மையான வரலாற்றை வெளிப்படக் காட்டும் இலக்கியங்கள், பிற ஆவணங்கள், கல்வெட்டுகள், செப்பேடுகள், நாணயங்கள் ஆகியவற்றின் தோற்றத்துக்கு முன்னர் வாழ்ந்த மக்களின் வாழ்க்கைமுறை, பண்பாடு, பழக்க வழக்கங்கள், நாகரீகநம்பிக்கைகள் ஆகியவற்றைப் பற்றி, அறிய இத்தொல்லியல் ஆய்வு துணைசெய்கிறது."[1] (முருகன்.ப.முனைவர், செ.இ.ப-460) அவ்வகையில் சங்க இலக்கியங்கள் குறிப்பிடும் சங்க காலம் மற்றும் அதற்கு முன்னதாக வாழ்ந்த சாதாரண மக்களின் வாழ்க்கை முறைகளும், அவர்கள் விட்டுச் சென்ற எச்சங்களும் முக்கியத்துவம் பெறுகின்றன.

**ஏறுதழுவுதல்**

மாடுகளின் இனத்தில் ஆண்மாடு 'ஏறு' எனப்பட்டது. முல்லை மக்களின் வாழ்வின் இன்றியமையாத நிகழ்வாக 'ஏறுதழுவுதல்' இருந்துள்ளன. ஒவ்வொரு வீட்டிலும் ஏறுகளும் பசுக்களும் வளர்க்கப்பட்டன. கறவைமாடுகள் பால் பெறுவதற்கும், காளை மாடுகள் ஏறுதழுதவுதலுக்கும் வளர்க்கப்பட்டன. "இல்லறம் நடத்த ஒருவன் தகுதியுடையவன் என்பதை 'ஏறுதழுவுதலே' நிர்ணயித்தது. ஒரு வீட்டில் பெண்குழந்தை பிறந்தவுடன் இளங்காளையும்

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கூடவே வளர்க்கப்பட்டது. அப்பெண் திருமணப்பருவம் அடைந்தவுடன் அக்காளை ஏறுதழுவுதலில் பங்கேற்கும் அக்காளையை வெற்றிக் கொண்டவன், அப்பெண்ணை மணப்பான்."[2] (முருகன்.ப.முனைவர்,செ.இ.ப-327) பழந்தமிழர்களிடத்தில் இத்தகைய பண்பாடுகளை கொண்டிருந்தனர்.

**விழா நிகழுமிடம்**

ஏறுதழுவுதல் தமிழகத்தில், குறிப்பாக முல்லை நிலங்களில் விழாவாகவே கொண்டாடப்பட்டுள்ளன. உடல்திறன் போட்டியாக இது நிகழ்த்தப்பட்டதால் பறையடித்து அறிவிக்கப்பட்டது. சங்க இலக்கியங்களில் ஒன்றான கலித்தொகையில் சோழன் நல்லுருத்திரனால் எழுதப்பட்ட முல்லைக்கலியில் அமைந்துள்ள பாடல்கள் ஏறுதழுவுதல் பற்றிய செய்திகளை விளக்கமாக விளக்கியுள்ளது. ஏறுகளை அடைத்துவைப்பதற்காக 'தொழு' அமைக்கப்பட்டது. பார்வையாளர்களுக்காக பரண் அமைக்கப்பட்டன. "சாற்றுள் பெடையன்னார் பக பூத்து நோக்கும் வாயெல்லா மிடைபெறி னேராத் தனகத்து"[3] (அண்ணாமலை சுப.முனைவர், முல்லைகலி, ப-393) காளைகளின் கொம்புகள் பிறைகள் போன்றிருந்தன. ஆடவரும் மகளிரும் இக்காட்சிகளை நேரடியாக கண்டு மகிழ்ந்தனர். இத்தகைய பதிவுகளை தொன்மையான நோக்கில் நோக்கத்தக்கது.

**பாறை ஓவியங்கள்**

பழங்கால பாறை ஓவியங்களை தொல்லியல் ஆய்வாளர்கள் இனங்கண்டுள்ளனர். அவ்வோவியங்கள் வாயிலாக ஏறுதழுவுதல் நிகழ்வு என்று அரிதியிட்டு கூறா முடியாது. மாடுகளை அடக்க முயலும் காட்சிகள் எனலாம். வேட்டைச் சமூகமாக இருந்த மனித இனம் அடுத்த கட்ட வாழ்வை நோக்கி நகர்கிறது. பழைய கற்காலத்தில் இருந்து புதிய கற்காலம் உருவாகின்றது. வேட்டையோடு மட்டும் இல்லாமல் வனத்தில் உள்ள நாய், மாடு, ஆடு போன்றவற்றை பழக்கப்படுத்தி வீட்டு விலங்காக மாற்றும் முயற்சியில் இறங்குகிறான். மற்ற பிராணிகள் போல் மாடுகளைப் பழக்கப்படுத்துவது எளிதல்ல. மேலும் மாட்டின் பயன்பாடு அதிகம். ஆகையால் ஆரம்ப காலகட்டங்களில் கடும் போராட்டங்களுக்கு இடையில்தான் வனத்திலுள்ள மாடுகளை பழக்கப்படுத்திருக்க வேண்டும். இக்காட்சிகள் தமிழகத்தில் நீலகிரி(கரிக்கையூர்), மதுரை(அணைப்பட்டி), திண்டுக்கல்(தட்டகுழிக்காடு), போன்ற இடங்களில் உள்ள பாறை ஓவியங்கள் மாட்டோடு மனிதர்கள் எதிர்கொள்ளும் பல்வேறு நிகழ்வுகளை பதிவு செய்துள்ளன.

"பாறை தொல்லியல் வரலாற்று அறிஞர் காந்திராஜன் அவர்களால் 2004-இல் நீலகிரி மாவட்டம் கோத்தகிரி அருகில் கரிக்கையூரில் கண்டறியப்பட்ட பாறை ஓவியங்களில் ஏறுதழுவுதலைக் குறிக்கும் ஓவியம் காணப்படுவதாக குறிப்பிட்டுள்ளார். இதன் காலம் கி.மு.2000-1500 ஆக இருக்கலாம் என்கிறார்"[4] (பாவெல் பாரதி, ஏறு.சல்லி.தொ.ப.அ,ப-46) இப்பாறையில் கூரிய கொம்புகளும் சிலிர்த்த திமில்களும் கொண்ட மூன்று எருதுகளைப் பலர் கூடி விரட்டுவது போன்ற ஓவியம் வரையப்பட்டிருப்பதை கவனிக்கப்பட வேண்டியது என்பதை சுட்டிக்காட்டியுள்ளார். இதேபோல மதுரை திண்டுக்கல் சாலை உசிலம்பட்டிக்கு அருகே கல்லூத்து மேட்டுப்பட்டியில் திமிலுடன் கூடிய ஒரு காளையை மனிதன் ஒருவன் அடக்க விரட்டுவது போன்ற ஓவியமும் அவரால் கண்டறியப்பட்டுள்ளது.

புதுச்சேரி பல்கலைக்கழக ஆய்வாளா பாலமுருகன் அவர்களால், "தேனிமாவட்டம் மயிலாடும் பாறைக்கு அருகில் அருகவெளியில் உள்ள சித்திரக்கல் புடவில் திமிலுடன் கூடிய காளையின் ஓவியம் கண்டறியப்பட்டது"[5] (பாவெல் பாரதி, ஏறு. சல்லி.தொ.ப.அ,ப47) இவை அனைத்தும் ஏறுதழுவலுக்கும் தமிழனுக்குமான பழம் தொடர்பை பறைசாற்றுகிறது.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

**கல்முத்திரை**

பழந்தமிழ் இலக்கியங்களிலும் சிந்துவெளி நாகரித்திலும் ஏறுதழுவல் நிகழ்ந்தற்கான சான்றுகள் உள்ளன. கொல்லக்கூடிய காளையைத் தழுவிப் போரிட்டு அடக்குவதால் ‘கொல்லேறு தழுவுதல்’ என்று பழந்தமிழ் இலக்கியங்கள் சிறப்பித்துக் கூறப்படுகிறது. இத்தகைய சிறப்பினையுடைய ஏறுதழுவுதல் பற்றிய கல்முத்திரை சான்றுகள் உள்ளன. அவை,

“புதுதில்லி தேசிய அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ள மாடு அனையும் கல்முத்திரை மொகஞ்சதாராவில் 1930-இல் கண்டறிப்பட்டது.”[6] (பாவெல் பாரதி, ஏறு. சல்லி. தொ. ப-அ, ப-4) இவ்வருங்காட்சியத்தில் பாதுகாக்கப்படுகின்ற சிந்துவெளி நாகரிகம் சார்ந்த முத்திரை ஒன்றில், ஒரு காளை உருவமும் அதை அடக்க முயலும் வீரனை அக்காளை தூக்கி எறிவதும் உயிரோட்டமான விதத்தில் சித்தரிக்கப்பட்டுள்ளது. “சிந்து சமவெளி அகழ்வாய்வுகளில் கண்டறியப்பட்ட சுடுமண் முத்திரைகளில், காங்கயம் காளைகளின் திமில் இருப்பது வியப்பில் ஆழ்த்தியது. முன்பு மன்னர்கள் வெளியிட்ட தங்கம் மற்றும் வெள்ளி நாணயங்களில் காளை முத்திரை பதிக்கபட்டுள்ளது. இதிலிருந்து கி.மு.2000 ஆண்டு அளவிலேயே ஏறுதழுவல் வழக்கத்தில் இருந்துள்ளன.”[7] (தின இந்து-திங்கள், ஜனவரி 23, 2017) இது குறித்து ஆய்வு செய்த ஐராவதம் மகாதேவன் போன்ற அறிஞர்கள் இது ஏறுதழுவுதலைக் குறிக்கும் சின்னம் என்பதை தெளிவுப்படுத்தியுள்ளனர்.

**நடுகற்கள்**

நடுகற்கள் போரிலோ, சண்டையிலோ மாண்ட ஒரு வீரனுக்காக வைக்கப்படுவதாகும். இதனால் இதனை வீரக்கற்கள் என்றும் அழைக்கும் வழக்கம் உள்ளது. நடுகல் இறந்த வீரனின் குடும்பத்தைச் சார்ந்தவராலேயே நடப்படுகிறது. இறந்தவர்கள் எதற்காக இறந்தார் என்ற காரணத்தை அதில் சொல்வதுடன் பல வரலாற்றுப் பண்பாட்டுக் குறிப்புகளையும் கல்வெட்டாகச் செதுக்கி வைக்கின்றனர். இதனால் நடுகற்கள் சமூக வரலாற்றுடன் பண்பாட்டுத் தரவுகளைத் தரும் சான்றுகளாகவும் திகழ்கின்றன.

“நடுகற்கள் பல்வேறு காரணங்களுக்காக வீரர்களுக்கு வைக்கப்படுகின்றன. போரில் இறந்த வீரனுக்கு மட்டுமல்லாமல் பிற வீரச் செயல்களைப் புரிந்த இறந்த வீரர்களுக்கும் நடுகல் வைக்கும் மரபு தமிழகத்தில் இருந்துள்ளது.”[8] (இளங்கோ.சி.தொ.த.வ.ப.ஆ,ப-47) என்பதை புலப்படுத்துகிறது.

“நடுகற்களுள் பலவகை உண்டு. அவை, புலியோடு போராடி மாண்டவருக்கு எடுக்கப்பட்ட கல், புலிக்குத்திக்கல், யானைக் குத்திக் கல் என பலவகையும் உண்டு. அவற்றுள், எருது பொருதார் கல்லும் இடம்பெறும். இதில் காளையின் கொம்புகளைத் தன் கைகளால் பிடித்துப் போரிடும் வீரனின் படைப்பு சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது”[9] (மகாராசன், ஏறு.வே.உ.நி.ப.வ.ப-39)

மதுரை செக்கானூரணி அருகே உள்ள சொரிக்கான்பட்டியில் மாடுபிடி வீரர் ஒருவருக்கு கோயில் உள்ளது. “அவ்வீரனின் பெயர் அழகத்தேவர். சுக்கிரத்தேவர் என்பவரின் காளையை அடக்குபவர்க்குத் தனது மகளையும், சொத்தையும் தருவதாக அறிவித்தார். போட்டியில் அவ்வீரன் வென்றுவிட்டான். காளையை அடக்கும்போது அவருக்கு காயம் ஏற்பட்டது. காயம் ஏற்பட்டுள்ளதால் உயிர் பிழைத்தால், பொன்னும், பொருளும் தருகிறேன் என்றார் சுக்கிரத்தேவர். சூழ்ச்சி செய்து மருத்துவரிடம் கள்ளிப்பாலை கொடுத்துக் காயத்தில் தடவி அழகத்தேவரை கொல்கிறார்.”[10] (தினமலர், சென்னை பதிப்பு, 18-02-2011) இதனை அறிந்த

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

ஊர்மக்கள் அவ்வீரனின் நினைவைப் போற்றும் வகையில், காளையை அழகத்தேவர் அடக்குவது போன்ற சிலையை வடித்து வணங்கி வருகின்றனர்.

இதுபோன்று சிறந்த வீரர்களும், காளைகளும் வழிபாட்டிற்கு உரியவர்களாகப் போற்றப்படுகின்றனர். தற்போதுகூட அலங்காநல்லூரில் உள்ள சல்லிக்கட்டுப் பேரவை தலைவருடைய அப்பு என்ற காளைக்கு நினைவு சின்னம் அமைக்கப்பட்டுள்ளது. தமிழகத்தில் காளைகளுக்கும், உயிர்நீத்த வீரர்களுக்கும் கோயில் கட்டி வழிபடும் வழக்கம் இருந்து வருவது நடுகல் சான்றுகளால் அறியப்படுகிறது. மேலும், நம் நாட்டில் பலபகுதிகளில் கண்டறிப்பட்டுள்ள நடுகற்கள், ஏறுதழுவலைக் குறித்த படைப்புகளையும் குறிப்புகளையும் தருகின்றன. பல்வேறு கல்வெட்டு செய்திகளும் ஏறுதழுவல் பற்றி பதிவு செய்துள்ளன.

**முடிவுரை**

'பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகல்' என்னும் கலித்தொகை வரிகளுக்கேற்ப, காலம் காலமாக தனக்குத்தானே உருவாக்கிக் கொண்ட பழக்கவழக்கங்களும் பண்பாட்டில் அடங்கும். இப்படிப்பட்ட தொன்மையான வழக்கங்களில் ஒன்றுதான் ஏறுதழுவல் ஆகும். மேலும், தமிழனின் பெருமையை உலகிற்கு பறைசாற்றுவது தொன்மையான இலக்கண இலக்கியங்கள். இதற்கு தொல்லியல் ஆய்வுகளும் வலுசேர்க்கின்றன. தமிழனின் பாரம்பரிய விளையாட்டு ஏறுதழுவுதல் தொன்மையானது என்றும் அதன் தொடர்ச்சியை இன்றும் நம்மால் கண்டு உணரவும் முடிகிறது என்பதை பதிவுசெய்து இக்கட்டுரை நிறைவு பெறுகிறது.

**பார்வை நூல்கள்**

1. பாவெல் பாரதி, ஏறுதழுவல் சல்லிக்கட்டு தொன்மை-பண்பாடு-அரசியல், வெளியீடு-கருத்துப்பட்டறை, மதுரை – 625 006, இரண்டாம் பதிப்பு – ஜனவரி, 2017
2. மகாராசன், ஏறுதழுவுதல்: வேளாண் உற்பத்தியின் நிகழ்த்துப் பண்பாடும் வரலாறும், அடவி பதிப்பகம், திருவண்ணாமலை – 606 806, முதற்பதிப்பு ஜனவரி 2017
3. முருகன்.ப.முனைவர், செவ்வியல் இலக்கியங்கள் பன்முகப் பார்வை-தொகு-1,2, கங்காராணி பதிப்பகம், சென்னை – 600 074, பதிப்பு மார்ச் 2017
4. இளங்கோ.சி, தொல்தமிழர் வரலாறும் பண்பாட்டு ஆய்வுகளும், அலைகள் வெளியீட்டகம், சென்னை – 600 089, இரண்டாம் பதிப்பு 2018.
5. தின இந்து, சென்னை பதிப்பு, திங்கள், ஜனவரி நாள் 23
6. தினமலர், சென்னை பதிப்பு, 18-02-2011

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

# கல்வெட்டும் செப்பேடும்
# The Culverts and The Copper Plates

**திருக்குறள் தூதர் சு.நடராசன்,**
உலக திருக்குறள் மைய பொருளாளர், கீழ்க்கட்டளை, சென்னை - 600 117.

## Abstract

*The Tamil culture is reveales as much more through the culverts and Copper plates. There are enormous evidences regarding to the edicts. still they are preserved in the musems. Hence, the study of this finds the archeological evidences of the matters relatd to culverts and copper plates.*

**Keywords:** Culverts, Copper Plates, Tamil Culure

**நுழைவாயில்**

கல் தோன்றி மண் தோன்றா காலத்து முன் தோன்றிய மூத்தக்குடி தமிழ்குடி என்பார்கள் அறிஞர்கள். எழுதுகோல் மை கண்டுபிடிக்காதக் காலத்தில் பனை ஓலைகளிலும் கல்லிலும் செப்பேடுகளிலும் முக்கியமான செய்திகளை எழுதி பாதுகாத்தார்கள்; வரலாறு ஆக்கினார்கள் நம் முன்னோர்கள். அப்படி அவர்கள் செய்யவில்லை என்றால் இன்று நமக்கு அரிய செய்திகள், வரலாறுகள் கிடைக்காமல் போயிருக்கும்.

**கல்வெட்டுகள்**

கல்வெட்டுகளில் காலத்தால் முற்பட்டது பழமையானவை பிராமி எழுத்து வடிவில் கிடைக்கின்றன. திருப்பரங்குன்றம், பிள்ளையார்பட்டி, சித்தன்னவாசல், புகலூர், சிங்கவரம் முதலிய இடங்களில் பிராமி எழுத்தில் அமைந்து தமிழக வரலாற்றுக் கல்வெட்டுகள் கிடைக்கின்றன. பல்லவர்கள் கிரந்த எழுத்து முறையில் வெட்டி வைத்து கல்வெட்டுகளை மாமல்லபுரம், மகேந்ரவாடி, பல்லாவரம், மேலச்சேரி, மண்டகப்பட்டு, வளவனூர், திருச்சி, வல்லம் முதலிய இடங்களில் காண்பதாக அறிஞர்கள் எழுதிவைத்துள்ளார்கள். வெளிநாடுகளிலும், தமிழகத்திற்கு வடக்கிலும் கிடைத்த கல்வெட்டுகளும், தமிழக வரலாற்றை அறிய துணைபுரிகின்றன.

கி.மு.மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்த அசோகரின் கல்வெட்டு, அவரது பேரரசின் தெற்கு எல்லைக்கு அப்பால் சோழர், பாண்டியர், சத்தியபுத்திரர், கேரள புத்திரர் ஆகிய மன்னர்கள் ஆண்டு வந்ததைக் குறிப்பிடுகின்றது. இவை சோழ, பாண்டியர் தன்னுரிமையோடு விளங்கிய ஆட்சிசெய்தியை நமக்கு உணர்த்துகின்றன.

நம் காலத்தில் ஆலயங்களுக்கோ பிற அறச்செயல்களுக்கோ நாம் பத்திதரம் எழுதி சார்பதிவாளர் அலுவலகத்தில் பதிவு செய்கிறோம். பொதுவாக நமக்கு கிடைத்துள்ள கல்வெட்டுகளும் செப்பேடுகளும் அத்தகைய கொடை பதிவுகளாகவே இருக்கின்றன. அவை ஓர் அரசனோ அல்லது செல்வம் படைத்தவனோ அல்லது பிள்ளைகள் இல்லாதவனோ, பிள்ளைகள் ஒழுக்ககேடாக செயல்பட்டாலோ அந்த சொத்துக்களை ஆலயத்துக்கோ அல்லது பொது நல சேவை செய்யும் நிர்வாகத்துக்கோ தந்த கொடை விவரத்தையே கூறுகின்றது. நிலம் பொருள், அணிகலன், அல்லது பணமாகவோ அந்த நன்கொடை அமைந்துள்ளது என்பதை கல்வெட்டு செப்பேடுகளில் பதிவு செய்துள்ளார்கள் முன்னோர்கள்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கி.மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த காரவேலனின் சாசனம் ஒன்று இருப்பதாக தெரிகின்றது. ஏடுகளில் பார்க்க முடிகின்றது. அது கலிங்கநாட்டின் பாதுகாப்பிற்குத் தமிழக அரசுகள் அச்சுறுத்தலாக விளங்குவதை வெளியிட்டு இருக்கின்றது. இதை தவிர சிங்களம், ஜாவா, சுமத்ரா, பர்மா நாட்டு கல்வெட்டுகள் சோழர் வரலாற்றை நாம் அறிய துணைபுரிகின்றன. கல்வெட்டுகள் ஒரு மதம் பெற்றிருந்த செல்வாக்கையும் குறிக்கின்ற சான்றுகளாகின்றன.

திருப்பரங்குன்றம், பிள்ளையார்பட்டி, சித்தனவாசல் புகலூர், சிங்கவரம் ஆகிய இடங்களில் கிடைத்த கல்வெட்டுகளும் சமண பௌத்ததுறவிகளின் பாறைப்படு வகைகளில் காணப்படும் அத்தகையான இவற்றில் பிராமி எழுத்து வடிவில் தமிழ்மொழியில் வரையப்பட்டுள்ளதாக ஏட்டில் பார்க்க முடிகின்றது. அதே சமயம் மாமல்லபுரம் மகேந்ரவாடி, பல்லாவரம், மேலச்சேரி, மண்டகப்பட்டு, வளவனூர், திருச்சி, வல்லம் முதலான இடங்களில் கிடைத்த கல்வெட்டுகளில் பல்லவர்களின் கிரகந்த எழுத்து முறையும், பாண்டியர்களின் வட்டெழுத்து முறையும் காணக்கிடைக்கின்றன. எழுத்து வடிவம் வேறாகக் காணப்பட்டாலும் மொழி தமிழே என்பது அறிஞர்களின் கருத்தாகும்.

இராசராச சோழன் காலம் கல்வெட்டில் முன்னேரிய காலமாகக் கருதலாம். காரணம் அரசனது புகழ்பாடும் மெய்கீர்த்திகள் அவற்றில் இடம் பெறலாயிற்று ஒவ்வொரு மன்னனுக்கும் அவனுக்குரிய மெய்கீர்த்தி தனியாக இருந்ததால் காலமயக்கம் ஏற்படவில்லை எளிதாக புரிந்துக் கொள்ள முடிந்தது. இத்தகைய கல்வெட்டுகள் தஞ்சை பெரியகோயில், திருமுக்கூடல், உத்திரமேரூர், திருவெற்றியூர் ஆகிய இடங்களில் காணக்கிடைக்கின்றன. கல்வெட்டுகள் பெரும்பாலும் ஆலயங்களில் தான் கிடைத்துள்ளன. ஆலயசுவர், தூண், கல்தளம், பாறைகள் படுகைகள் ஆகியவற்றில் இவை காணப்படுகின்றன. சமண முனிவர்களும், பௌத்த முனிவர்களும் வாழ்ந்த குகைகளில் கல்வெட்டுகள் சிலகண்டறியப்பட்டுள்ளதாக ஏடுகளில்பார்க்க முடிகின்றது.

முதல் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டுகள் மிகவும் குறைவு கி.பி.500க்குப் பிறகே தமிழகமெங்கும் கல்வெட்டுகள் காணப்படுகின்றது. ஒன்பதாம் நூற்றாண்டு கால அளவில் மிகுதியான கல்வெட்டுகள் கண்டறியப்பட்டாலும் 10-12ஆம் நூற்றாண்டுக்காலமே கல்வெட்டுகளின் பொற்காலம் என்று கூறலாம் கிட்டதட்ட 30,000 கல்வெட்டுகள் கிடைத்துள்ளன எனினும் அவற்றில் பெரும்பாலானவை பதிப்பிக்கப்படவில்லை. இந்தியாவில் கிடைத்துள்ள கல்வெட்டுகளில் தமிழகத்தைச் சார்ந்தவையே மிகுதியாகும்.

**செப்பேடுகள்**

செப்பேடுகளில் பல தமிழ் வடமொழி என இருமொழிகளிலும் அமைந்துள்ளன. செப்பேடு எழுத காரணமான நோக்கமும், உள்ளுறைச் செய்தியும் தமிழிலும், தெய்வம் அல்லது மன்னர் வாழ்த்தும் வடமொழியிலும் இடம் பெற்றுள்ளன. அவர்கள் செப்பேடுகளில் எழுதியதற்கு முக்கிய காரணம் அந்தக் காலத்தில் பெரும்பாலும் நீர் நிலை அதிகம் உள்ள இடத்திலேயே தலைமை இடம் இருந்துள்ளதாக தெரிகிறது. அதிக மழைப் பெய்து வெள்ளத்தில் மூழ்கினாலும் செப்பேடு எழுத்து அழியாது கடற்கோலால் மூழ்கடிக்கப்பட்டாலும் செப்பேடு அதில் உள்ள எழுத்துக்கள் பாதுகாப்பாக இருக்கும் என்பதால் செப்பேடை பயன்படுத்தி முக்கியமான செய்திகளைப் பாதுகாத்துள்ளனர்.

**தமிழ் பிராமி கல்வெட்டுகள்**

திராவிட மொழிகளில் குறிப்பாகத் தமிழ்மொழியில் பல்லாயிரக்கணக்கான கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இவற்றுள் மிகப்பழமையானவை பிராமிக் கல்வெட்டுகளாகும்.

E-ISSN: 2581-7140

Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

இக்கல்வெட்டுகள் கி.பி.மூன்றாம் நுற்றாண்டைச் சார்ந்தவை என்பர். இக்கல்வெட்டுகளைக் கீழிவளைவு, மருகால் தலை, திருவாதவூர், ஆணைமலை, அழகர்மலை, மேட்டுப்பட்டி, சித்தன்னவாசல், விக்ரமங்கலம் போன்றபல இடங்களில் காணலாம்.

அசோகர் பயன்படுத்திய பிராமி எழுத்துக்களைத் தென்னிந்திய மொழிகளுக்கேற்ப மாற்றியமைத்தே தென்னிந்திய பிராமி என்பர். பொதுவாகத் தமிழ் நாட்டில் கிடைக்கும் கல்வெட்டுகள் தமிழ் கிரகந்தம் வட்டெழுத்து ஆகிய மூன்று வகை எழுத்துகளால் ஆகியவையாகும்.

குகை கல்வெட்டுகள் பிராமி எழுத்துக்களால் ஆனவை. கிரகந்த எழுத்துகளாலும் தமிழ் எழுத்துகளாலும் ஆகிய கல்வெட்டுகள் கி.பி.6ஆவது நூற்றாண்டு முதல் கிடைக்கின்றன பிராமிக் கல்வெட்டுகளை அடுத்துத் தமிழ்நாட்டில் கிடைப்பது திருநாதர் குன்று கல்வெட்டாகும். தமிழ் எழுத்துகளாலான இக்கல்வெட்டு கி.பி.5ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும்.

இக்கல்வெட்டுகளெல்லாம் தமிழ் மொழியின் வளர்ச்சியையும் பேச்சு மொழியின் சாயலைக் காட்டுவனவாக உள்ளன.

**தமிழ்மொழி ஆய்வும் கல்வெட்டுகளும்**

இலக்கிய மொழிக்கும் கல்வெட்டுகளில் காணப்படும் மொழிக்குமிடையே பல வேற்றுமைகள் உண்டு. இலக்கிய மொழியில் ஏறாத பல பேச்சு வழக்குகளைக் கல்வெட்டு மொழியில் காணலாம். இக்கல்வெட்டுகளைக் கொண்டு தமிழ்மொழி வரலாற்றைச் சிறந்த முறையில் உருவாக்கலாம்.

**பேச்சுவழக்கும், கல்வெட்டு ஆய்வும்**

தமிழ்மொழியை இலக்கிய வழக்கு பேச்சு வழக்கு என இருவகையாகப் பகுக்கலாம். கல்வெட்டு வழக்கு பேச்சு வழக்கோடு ஒத்தமைவது தமிழ் அறிஞர்கள் இலக்கிய வழக்குதான் உயர்ந்தது என்றும் பேச்சு வழக்கு உயர்ந்தது அல்ல என்றும் நீண்டகாலமாக எண்ணினர். இதன் விளைவாகப் பேச்சு வழக்கும் இலக்கிய வழக்கும் தனி, தனி வரலாறு உடையன. ஒன்றின் தாக்கத்தை மற்றதில் காணலாம். இவ்விரண்டையும் ஆராய்ந்தால் தான் தமிழ் மொழி வரலாறு முழுமை அடையும்.

**மொழியியலும் கல்வெட்டு ஆய்வும்**

பி.சி.சாப்ரா அவர்களும், டி.ஸி.சர்கார் அவர்களும மொழியியலுக்குக் கல்வெட்டுகளின் இன்றியமையாமையை முதன் முதலில் உணர்ந்தார் தமிழ் மொழியைப் பொருத்தளவில் கல்வெட்டுகளின் முக்கியத்தை முதலில் உணர்ந்தவர் தெ.பொ.மீனாட்சி சுந்தரனார் ஆவார். கே. கணபதிபிள்ளை அவர்கள் தான் முதன் முதலில் தமது முனைவர்பட்ட ஆய்வுக்கு கி.பி.7ஆம் 8ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுத் தமிழை ஆய்வு செய்தார். ஜெயக்குமாரி எம்.லிட் ஆய்வுக்காக 7ஆம் நூற்றாண்டில் இருந்து 11ஆம் நூற்றாண்டு வரையுள்ள காலப்பகுதிக் கல்வெட்டுகளை மொழியியல் கண்ணோட்டத்தில் ஆய்வு செய்தார். செ.வை.சண்முகம் தமது முனைவர்பட்ட ஆய்வுக்கு 14ஆம் நூற்றாண்டு வரையுள்ள கல்வெட்டுத்தமிழை ஆய்வு செய்துள்ளார்.

பன்னீர் செல்வம் தமது முனைவர் பட்ட ஆய்விற்குக்கு கி.பி.7-8-9ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளை மொழியியல் கண்ணோட்டத்தில் ஆய்வு செய்தார். கி.பி.800-920ஆம் ஆண்டு வரையுள்ள கல்வெட்டுத் தமிழையும், சடாவர்ம சுந்தரபாண்டியன் மாறவர்மன் குலசேகரன் காலத்திய கல்வெட்டுகளையும் மொழியியல் கண்ணோட்டத்தில் ஆராய்ந்துள்ளார் வேலுப்பிள்ளை. இதைத் தவிர சாசனமும் தமிழும் என்ற தலைப்பிலும், ஆய்வு செய்துள்ளார்.

E-ISSN: 2581-7140
Special Issue : Vol. 1, April-2019 Available at: www.ijtlls.com

கார்த்திகேயன் முனைவர் பட்ட ஆய்வுக்குக் கி.பி.900-1050 ஆம் ஆண்டு வரையான கல்வெட்டுகளை மொழியியல் கண்ணோட்டத்தில் ஆராய்ந்துள்ளார்கள். ச.அகத்தியலிங்கமும், செ.வை.சண்முகமும் இணைந்து கி.பி.1250 – 1350 ஆம் ஆண்டிற்கு இடைப்பட்ட காலப் பகுதிக் கல்வெட்டுகளை மொழியியல் கண்ணோட்டத்தில் ஆராய்ந்துள்ளார்.

**கல்வெட்டுகள் எழுதப்பட்ட முறைமைகள்**

கல்வெட்டுகள் பேச்சுதமிழில் அமைந்துள்ளன. கல்வெட்டுகளை வெட்டியவர்கள் அக்காலத்தில் பேச்சை எப்படி கேட்டார்களோ அப்படியே செதிக்கியுள்ளார்கள். கல்வெட்டு மொழியில் இடைச் செருக்கல் இல்லை. எக்கால கல்வெட்டு என்பதை நிர்ணயித்துவிட்டால் அது அக்கால வழக்கு எனக் கொள்ளலாம். காலத்தை நிர்ணயிக்க முடியாத கல்வெட்டு செப்பேடுகள் முதலியவற்றிற்கு மொழியியல் கூறுகளை அடிப்படையாகக் கொண்டு, காலத்தை நிர்ணயிக்கலாம். இரண்டு உயிர் எழுத்துக்கள் உடம்படுமெய் இல்லாது எழுதப்படும் முறை கல்வெட்டுகளில் காணப்படுகின்றன என்கிறார்கள் அறிஞர்கள்.

**முடிவுரை**

ஆதிகாலம் வரை இக்காலம் வரை கல்வெட்டுகள் செப்பேடுகள் முழுவதும் ஆய்வாளர்களிடம் கிடைத்து விட்டது என்று கூறமுடியாது. இன்னும் கிடைக்க வேண்டியதும் உண்டு என்பதை உணர வேண்டும். இவைகள் உலகம் முழுவதிலும் எங்கோ இருக்கக் கூடும். ஏன் என்றால் தமிழர்கள் உலகம் முழுவதும் தொழில் முறையிலும், இடம் பெயர்ந்தும் வாழ்கின்றார்கள். வெளிநாட்டு வணிகர்களிடமும் ஆதாரம் இருக்கலாம். ஆகையால் செப்பேடுகளையும் கல்வெட்டுகளையும் முழுமையாக ஆராய்ந்து விடுவது என்பது எளிதான செயல் அல்ல.

**நூல்கள்**

1. இராமகிருட்டிணன்.ஆ. *தமிழக வரலாறும் பண்பாடும்*, சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை-625 001.
2. காசிநாதன். நடன. *தமிழர் தெய்வங்கள்*, தென்றல் நிலையம், சிதம்பரம் -608 001.